# கம்பன்

# ஆய்வடங்கல்



ச. சிவகாமி

தமிழ்ப் பதிப்பகம் — சென்னை. 20

# கம்பன் ஆய்வடங்கல்

ச. சிவகாமி, எம். ஏ.,
ஆய்வாளர்.
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே.'

**தமிழ்ப் பதிப்பகம்**
2, கால்வாய்க்கரைச் சாலை,
கஸ்தூரிபாய் நகர்,
அடையாறு, சென்னை 20.

# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | — | Kamban Ayvuatankal |
| Author | — | S. Sivakami, Research Scholar, International Institute of Tamil Studies, Adaiyaru, Madras-20. |
| Language | — | Tamil and English |
| Edition | — | First |
| Date of Publication | — | May 1978 |
| Copy right holder | — | Tamil Patippakam |
| Paper used | — | 15.2 Double demy |
| Size of the book | — | 22.5 × 18.5 cms. |
| Printing types used | — | 8, 10 pt. |
| Number of pages | — | |
| Number of Copies Printed | — | 2000 |
| Printer | — | Oppuravu Acchagam |
| Binding | — | Cardboard |
| Price | — | 15 Rupees |
| Publisher | — | Tamil Patippakam, 2, Canal Bank Road, Kasturibai Nagar, Adaiyaru, Madras-20. |
| Subject | — | Annotated Bibliography on Kamban, |

The paper used for this book was supplied by the Government of India at concessional rates.

# அணிந்துரை

கம்பன் ஒரு மகா கவி. அவன் கவிதை தமிழர்களுக்கு மட்டும் உரியதன்று. இந்தியர்களுக்கும் உரியது. ஏன்? உலகோர்க்கே உரியது. உலக மகா கவிகள் என்று விரல்விட்டு எண்ணக் கூடியவர்களுள் அவனும் ஒருவன்.

கம்பனைப்பற்றி ஆய்வுகள் தொடங்கிப் பல ஆண்டுகள் ஆகின்றன. நான் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் இருந்த போது கம்பன் கண்ட உயிரினங்கள், கம்பனில் தாவரங்கள், கம்பனில் தாமரை, அனுமன் – ஆய்வும் வழிபாடும், கம்பனில் பெண்பாத்திரங்கள் போன்ற ஆய்வேடுகள் பொருட் கட்டுரைகளாக வெளிவந்தன. சில அச்சிலும் வந்துள்ளன. அப்பொழுதிருந்தே கம்பனுக்கு ஓர் ஆய்வடங்கல் செய்ய வேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. அதன் விளைவே இந் நூல்.

ஒரு நூல் பற்றிய பதிப்புகள், கட்டுரைகள், நூல்கள், பொருட்கட்டுரைகள் இவைகளை முழுமையாகப்பார்த்து விரிவான விளக்கத்தினை (Annotated Bibliography) முதன் முதலாகத் தந்தது கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைதான், சிலப்பதிகாரம் பற்றிய ஆய்வடங்கலை என் மேற்பார்வையில் திரு. இரா. காசிராசன் 1973இல் செய்தார். அதுவெளி வந்தபின்பு பல ஆய் வடங்கல்கள் வந்துள்ளன. இவ் வாய்வடங்கல்கள் கட்டுரை எழுது வோருக்கும் ஆய்வு செய்வோருக்கும் பொதுநிலையில் கற்போருக் கும் மிகுதியாகத் துணைபுரியும். அரைத்த மாவையே அரைத்துக் கொண்டிருப்போருக்கு எச்சரிக்கை செய்யும்.

இவ் வாய்வடங்கல் கம்பனைப் பற்றி அறிந்துகொள்ள பெரிதும் துணைபுரியும், இவ் வாய்வடங்கலை மிகத் தெளிவாக, இதுவரை வந்துள்ள எல்லாப் பதிப்புகளையும், கட்டுரைகளையும், நூல்களை யும், பொருட்கட்டுரைகளையும், மூன்றுண்டு காலமாகப் படித்துத் தம் கருத்துகளையும் சேர்த்து தந்துள்ள செல்வி ச. சிவகாமியை மிகவும் பாராட்டிப் போற்றுகிறேன். அவர் இது போன்ற பல நல்ல பயனுடைய தமிழ்நூல்களை இனியும் தருவார் என்று எதிர் பார்க்கிறேன்; வாழ்த்து கிறேன்.

கம்பனைத் தமிழகத்தில் சிலர் குத்தகைக்கு எடுத்துக் கொண்டுள்ளதாக நினைத்துக் கொண்டு தகுதியுடையவர்களை அழைக்காது கருத்தரங்குகளும், கவியரங்குகளும் நடத்தி வருவதை நினைக்கும் பொழுது மிகுந்த வருத்தமாகவே இருக்கின்றது. இருப்பினும் கம்பன் எல்லாத் தமிழர்க்கும்,

மனிதர்க்கும் உரியவன் என்ற முறையில் தான் இவ் வாய்வடங்கல் கொண்டு வரப்பட்டுள்ளது. அதனால், அனைவரும் பயன்படுத்த வேண்டும் என்பது எங்கள்வேண்டுகோள்.

இந் நூல் பல சூழ்நிலைகளால் மிகவும் காலம் தாழ்த்தி வருகிறது. இருப்பினும், வெளி வருவதில் பெரு மகிழ்ச்சியடைகிறேன்.

அன்பன்

**ச. வே, சுப்பிரமணியன்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# நன்றியுரை

இவ் வாய்வடங்கல் பலரின் இனிய உதவியுடன் செய்யப்பட்டுள்ளது. அவர்கள் என்றென்றும் என் நினைவில் நிற்றற்குரியர். பல அரிய நூல்களைக் கொடுத்துதவிய மறைமலையடிகள் நூலகர் உயர்திரு. முத்துக்குமாரசுவாமி அவர்கட்கு என் வணக்கங்கலந்த நன்றியை அன்புடன் காணிக்கையாக்குகிறேன். கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையினின்றும் கிடைத்த நூல்களினின்றும் குறிப்புகள் எடுத்துக் கொடுத்துதவிய என் சகோதரி டாக்டர். லீ. ருத்ஜாய் அவர்களுக்கு என் இதயங்கலந்த நன்றியுடையேன். மேலும், தங்கள் துறையில் உள்ள நூல்களைப் பற்றிய குறிப்பெடுக்க உதவிய மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத்தலைவர், டாக்டர். முத்துசண்முகம்பிள்ளை அவர்கட்கும், லேடிடோக் கல்லூரி ஆசிரியை திருமதி இரகுபதி சுவாமிநாதன் அவர்கட்கும் பாத்திமா கல்லூரி ஆசிரியை திருமதி பாத்திமா அவர்கட்கும் மதுரை மீனாட்சி அரசினர் பெண்கள் கல்லூரி ஆசிரியை திருமதி தனம்மாள் அவர்கட்கும் மற்றும் உ. வே. சா. நூல்நிலையத்தாருக்கும் என் உளங்கலந்த நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன். அச்சுப் படிகளைத் திருத்தியுதவிய ஆய்வாளர் திரு. அன்பழகன் அவர் கட்கும், மேல் அட்டைப்படம் வரைந்துதவிய ஆய்வாளர் திரு, மதியழகன் அவர்கட்கும் அன்பான நன்றியை உரிமையாக்குகிறேன். சிறந்த முறையில் அச்சிட்டுத் தந்த ஒப்புறவு அச்சகத்தாருக்கும் என் நன்றி.

இந் நூலின் தோற்றத்திற்கும் அரங்கேற்றத்திற்கும் மூல காரணமாய் அமைபவர் எனது பெருமதிப்பிற்குரிய பேராசிரியர், தன் உயர்வைவிடத் தன் மாணவர்களின் உயர்வைப்பெரிதாய்க் கருதும், அதற்கு ஆவன செய்யும் உயர்பண்பாளர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியனார் அவர்கள். அவ்வப்பொழுது ஊக்கமளித்து, தேவையான பொழுதெல்லாம் தேவையான சிறந்த கருத்துக்களை வழங்கி, தேவையான மாற்றங்களைச் செய்து இந் நூலைச் செம்மைப்படுத்தி, இதுவரையில் எந்த ஆசிரியரும் செய்திராத புதுமையினை – தம் மாணவியின் நூலினை வெளியிட்டு, அணிந்துரையும் அளித்துள்ள அன்னாரின் சிறப்பினை நன்றி என்ற மூன்றெழுத்தில் அடக்குதல் பொருந்தா. எனவே, இந்நூலின் சிறப்புகளுக்கெல்லாம் காரணமான அன்னாருக்கு என் தாழ்மையான வணக்கங்களைக் கூறி, வாழ்த்துகள் வேண்டி அமைவன்.

இவண்

**ச. சிவகாமி**

# வாயில்

காலத்தால் அழியாக் கம்பன் காவியத்தைக் காலமின்மை யால் சுவைக்க முடியாதோர்க்கு அதன் சுவையைச் சிறிதள வாவது உணர்த்த வேண்டும் என்ற விருப்போடும் ஆய்வாளர்கள் தங்கள் காலத்தைச் சேமிக்கும் பொருட்டும், ஆய்வு செய்த வற்றைக் கட்டுரையாகவோ. நூல் வடிவிலோ தரும்பொழுது அதில் பழமையின்றிப் புதுக்கருத்துகளே பெருகிவர வேண்டும் என்ற நோக்கத்துடனும், எழுந்தது இந்நூல், இவ் வர்ய்வடங்கல் இதுவரை வெளிவந்த கட்டுரை நூல்கள் அனைத்தும் அடங்கப்பெற்றது, என்று கூறமுடியாதெனினும் முழுமையும் தர முயன்றுள்ளது எனலாம்.

இத் தொகுப்பு, பொருள் அடிப்படையில் அமைதல் நலம் என்ற நோக்கில் பகுத்து அமைக்கப்பட்டுள்ளது. பதிப்புகள், மிகைப்பாடல்கள், சுருக்கம், வசனம் மொழிப்பெயர்ப்புகள், கம்பன் வரலாறு, கால ஆராய்ச்சி, பாத்திரங்கள் என இப் பகுப்பு நிலைத் தொடர்கின்றது. பாத்திரங்களின் அகர வரிசையின்படி அவைபற்றிய கட்டுரைகளும் நூல்களும் அடுக்கப்பட்டுள்ளன. ஒவ்வோர் உட்பிரிவின் ஆரம்பத்திலும். அவை பற்றிய சிறு குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. இந் நூலுக்குச் சுவை கூட்டு வான்வேண்டித் தேவையான இடங்களில் தொகுத்தவற்றிற்குச் சிறு விமர்சனங்களும் உள. இவை ஆசிரியரின் கருத்துகளுக் குரியனவே அன்றித் தனிநபரை விமரிசிப்பனவல்ல.

இதில் இடம் பெற்றுள்ள நூல்கள், நாடகங்கள், கட்டுரைகள், கவிதைகள் அனைத்தும் முழுமையாகப் படிக்கப்பட்டு மிகச் சுருங்கிய அளவில் கருத்துகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. ஒரே கருத்துகள் திரும்பத் திரும்ப வருமிடங்களில் பெரும்பாலும் அவை தவிர்க்கப்பட்டுள்ளன. ஆசிரியருடன் கருத்து மாறுபடு மிடங்கள் சான்றுகாட்டிச் சுட்டப்பட்டுள்ளன. கதை நிகழ்ச் சிகளை மட்டுமே நவில்வதாக உள்ளவை வெறுமனே சுட்டப் பட்டுள்ளன. தொகுப்பில் வாக்கிய முடிவில் ஆங்காங்கே காணப்படும் எண்கள் அக் கருத்து எடுத்த நூலுள் காணப்படும் பக்க எண்ணைக் குடுப்பிடும்.

பொது நிலையில் கம்பன் பற்றிய ஆய்வுகளை நோக்குழி, கம்பன் வரலாறு, காலம்பற்றிய முடிந்த முடிவுகள் இல்லை. வரலாற்றில் கற்பனையே மிகுந்துள்ளது. கம்பன் காவியம் பிற

மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள தெனினும் அவை பகுதிபகுதியாக உள்ளனவேயன்றி முழுமையாக மொழிபெயர்க்கப்படாமை ஒரு குறைபாடே. கம்பனைப் பெரும்பாலும் வான்மீகியுடனும், மற்றும் துளசியுடனும் சிறுபான்மை மேலை நாட்டுப் புகழ்வாய்ந்த புலவர்களுடனும் ஒப்பிடுதல் காணப்படுகிறது. தமிழ் இலக்கியத்துள் பெரும்பாலும் திருக்குறளுடனே அதிகமாக ஒப்பிடப்படுகிறது. பிற இலக்கியங்களுடன் ஒப்பிட்டுள்ள போதிலும் அவை மிகச்சிறு அளவே. எனவே, ஒப்பியல் ஆய்வு முறையில் இராமகாதை ஆரம்ப நிலையிலேயே உள்ளது. ஆகவே விரிந்த அளவில் இவ்வாய்வுத் தேவைப்படுகிறது.

வ. வே. சு. ஐயர், எஸ். வையாபுரிப்பிள்ளை, நாமக்கல் கவிஞர். வெ. இராமலிங்கம் பிள்ளை, வெ. ப. சு. முதலியார் அ. ச. ஞானசம்பந்தம், எஸ். இராமகிருஷ்ணன், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் முதலியோரைக் குறிப்பிடத்தக்கக் கம்பன் திறனாய்வாளர்களாகக் கருதலாம். மற்றும் பலர் உளர்.

இங்கு ஒரு மாபெரும் குறைபாடு சுட்டுதல் தேவையாகிறது. அஃது காப்பியத் தலைவன் காகுத்தனுக்கும், அவனுக்கு உறுதுணையாயிருந்த இலக்குவனுக்கும் ஒரு திறனாய்வு நூல் (அறிந்த வரையில்) இன்மையேயாம். இதனைத் தமிழறிஞர் உலகம் விரைவில் அகற்ற வேண்டும் என்ற விருப்புடன்தான் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. பொதுவாகப் பாத்திரங்கள் பற்றிய திறனாய்வில், பாத்திரத்தின் திறனை ஒரு கூறுபாட்டில் மட்டும் ஆய்வனவாக உள்ளனவே தவிர முழுமையாக ஆய்வு செய்யப் பட்டுள்ளமை ஒருசில பாத்திரங்களுக்கு மட்டுமேயாம். அவற்றுள்ளும் தலைமைப் பாத்திரங்கள் பல விடுபட்டுள்ளமை வருந்துதற்குரியது. கம்பன் காவியம் விரிந்த அளவில் உள்ளமை இவ்விடருக்குக் காரணம் போலும்

கதை நிகழ்ச்சிகளை மட்டும் சுட்டிச்செல்லுதல், பழையகருத்துகளையே திரும்பவும் கூறுதல், புதிய கருத்துகளை யுரைத்தல், உண்மைக்குப் புறம்பானவற்றை நவில்தல் என இத்திறனாய்வுகள் அமைந்துள்ளன. பழைய கருத்துகளையே மறுபடியும் மறுபடியும் பேசுதல் என்பது தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று. இதனால், கம்பனின் திறனாய்வு வளர்ச்சித் தடைபடுகிறது எனில், ஐயமில்லை, உண்மைக்குப் புறம்பானவற்றை எழுதுதலையும் முற்றிலுமாகக் களைதல்வேணடும். எனினும், அதனைப் பிறர் மறுத்துரைப்பதால் திறனாய்வு வளர்ச்சிக்கு மிகச்சிறுபான்மை அது உதவுகிறது.

இப்படிப்பட்டத் தவறுகளால் கம்பனின் உண்மை நிலையைத் தெளிவாக, விரிவாக எடுத்தியம்ப வேண்டும் என்ற நல்லெண்ணம் பிறருக்குத் தோன்றி அதன்மூலம் பலசிறந்த நூல்கள். கட்டுரைகள் வர ஏதுவாகின்றது. ஆயின், பிழைபட்ட எண்ணங்களை வாசகர் இடையில் உலவவிடுதல் தவறேயாம். இங்குச் சான்றாக நாமக்கல் கவிஞரின் 'காந்தியடிகளும் கம்பநாட்டாழ்வாரும்' எனும் நூலுக்கு மறுப்புரையாக, 'கம்பரும் காந்தீயமும்', ஆத்தானக் கவிஞர் ஆராய்ச்சி சரியா? என்ற ஒரு கட்டுரை எழுந்துள்ளமையைக் காட்டலாம். இவ்வாறே 'இராவணேசுவரன்' எனும் நூலுள் எழுந்துள்ள கருத்துகளுக்கும் விடை காணுதல் வேண்டும். இதனால், கம்பனை உள்ளவாறே உணர வழியேற்படும்.

முடிவாகக் கூறுமிடத்து, கம்பன் வரலாறு, காலம் பற்றிய முரண்பாடுகள் நீங்கி உண்மையான அவன் வரலாற்றினையும் வாழ்ந்த கால எல்லையினையும் அறுதியிடல் வேண்டும். தமிழுக்குக் கதியாக விளங்கும் கம்பரைப் பற்றிய ஓர் தெளிந்த அறிவு உறுதியாகத் தேவை. கம்பனுக்குப் பல சிறந்த திறனாய்வு நூல்களும் கட்டுரைகளும் உள்ளபோதிலும், ஒப்பியல் பாத்திரப் படைப்பு, கவித்திறன் என வகைப்படுத்தி நோக்குங்கால் கம்பன் பற்றிய திறனாய்வில் சிறிதளவுகூடத் திருப்தி எழுவதில்லை. இத்திறனாய்வு இன்னும் ஆரம்பநிலையிலேயே கூறியது கூறலாகவே இருக்கிறது. இதனை ஆழ்ந்து சிந்தித்தால் நாம் வருத்தத்துடன் ஒப்புக்கொள்ளவேண்டியஉண்மை இது என்றும், இதனைத்தவிர்க்க விரைந்து செயல்பட வேண்டியதன் அவசியமும் புலனாகும். 'இராமகாதை' கம்பன் நமக்களித்த அரும்பெரும் சுரங்கம். அக்கவிச் சக்கரவர்த்திக்கு நாம் திறனாய்வு என்னும் வளமையைக் காட்டாது அதில் வறுமையைக் காட்டுவது நன்றன்று எனவே கம்பனை இலக்கியத் திறனாய்வின் பல வழிகளையும் கையாண்டு சிறப்புற ஆய்ந்து, பாத்திரப் படைப்பினையும், பிறநலன்களையும் வெளிப்படுத்திக் கொணர்ந்து அவற்றைத் திறம்பட ஒளிவீசச் செய்வது தமிழறிஞர்களின் கடமை.

இலக்கிய இன்பம் செறிந்த காவியக் கடலான கம்பனமுதை, கற்றவர் மற்றவர் அனைவரும் சுவைக்கும்படி செய்தல் ஒருவர் இருவரால் முடியக்கூடியதன்று பலரால் நிறைவேற்றப்பட வேண்டியதாகும். எனவே, இக் கோரிக்கைத் தமிழறிஞர்முன் சமர்ப்பிக்கப்படுகிறது. இவ்வெண்ணம் ஈடேறுங்கால் இந் நூல் தான் பிறந்ததன் பயனைப்பெற்றதாகும். சேக்ஸ்பியர், மில்ட்டன், ஹோமர் போன்றோருடன் ஒப்பவைத்துப் பேசப்படும் கம்பன், அவர்களைப் போன்ற பிறநாட்டறிஞர்களாலும் 'உலகமகாகவி'

என்று போற்றிப்புகழப்படல் வேண்டும் என்ற உண்மையான ஆவலின் விளைவே இக்கோரிக்கை.

கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்ப்பதைத் தன் வாழ்க்கை நோக்கமாகக் கொண்ட உயர்திரு. சா. கணேசன் அவர்கள் நடத்திவரும் 'கம்பன் விழா' எல்லா நிலைகளிலும் பாராட்டத்தக்கது. கம்பன் விழா நிகழ்ச்சிகள் அனைத்தும் அச்சில் வருமானால் மிகவும் பயனுக இருக்கும். இது சென்னை போன்ற பிற இடங்களில் நடக்கும் கம்பன் விழாக்களுக்கும் பொருந்தும்.

இங்குப் பக்க எண்களுடன் கூடியிருக்கும் தலைப்புகள் கட்டுரைகளைக் குறிக்கும். தலைப்பின் கீழே அக்கட்டுரை எடுக்கப்பட்ட நூலின் பெயர், ஆசிரியர் பெயர் முதலிய விபரங்கள் உள்ளன. முழுமையான நூலாயின் ஆசிரியரின் பெயர் தனித்துக் கொடுக்கப் பட்டுள்ளது. நாடகம், கவிதை, பொருட்கட்டுரை போன்றன அவ்வவ் விடங்களில் சுட்டப்பட்டுள்ளன, *, ℅ எனும் குறியீடுகள் முறையே Dissertation on Tamilology, Tamil Research Through Journals எனும் நூல்களிலிருந்து எடுக்கப்பட்டன என்பதனைக் குறிக்கும்.

# உள்ளே

# கம்பராமாயணப் பதிப்புகள்

தமிழில் முதன் முதலில் அச்சான நூல் 'டௌட்ரிஞ கிரிஸ்டா' (Doutrina Christa) என்பதாகும். இது கி. பி. 1578-இல் அச்சிடப்பட்டது.

கம்பராமாயணம் முதன்முதலில் கி. பி. 1842இல் ஒரு சிறுபகுதி மட்டும் (பிரகலாதன் சரித்திரம் என்கிற நரசிங்க விஜையம்) பதிப்பிக்கப்பட்டது. கல்விக் களஞ்சிய அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட இந்நூலின் பதிப்பாசிரியர் யார் என்பது தெரியவில்லை. இதன் பின்னர் பாலகாண்டத்தை 1843இல் திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பித்தார். தமிழின் முதலச்சு நூலுக்கும் கம்பனின் முதல் அச்சுப் பதிப்பிற்குமிடையே சுமார் மூன்று நூற்றாண்டுக்கால இடைவெளி காண்கிறோம். கம்பன் காவியம் அளவில் மிகப் பெரிதாய் இருந்தமையும், அச்சிற் பதிப்பிக்கும் வசதிகள் அக்காலச் சூழலில் மிகக் குறைவாய் அமைந்திருந்தமையும் இதற்குக் காரணங்களாய்க் கொள்வது பொருந்தும். கம்பன் நூல் பெரும்பான்மையும் பகுதி பகுதியாகவே பதிப்பிக்கப்பட்டுள்ளமை இதனை வலியுறுத்தும்.

1842க்குப்பின் கம்பன் பதிப்புகள் ஓரளவிற்கு அதிகமாக வந்துள்ளன. இன்று நமக்குக் கிடைக்கும் பதிப்புகளின் எண்ணிக்கை 64 ஆகும். இவற்றுள் 9 பதிப்புகளே முழுமையானவைகளாக உள்ளன. நமக்குக் கிடைப்பனவற்றுள் முதல் முழுமையான பதிப்பு 1914இல் வெளிவந்த அ. இரங்கசாமி முதலியார் & சன்ஸ் பதிப்பாகும். இது திருமயிலை சண்முகம் பிள்ளையின் பதிப்பினைப் பின்பற்றி வந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் கம்பனுக்குத் திருமயிலை சண்முகம் பிள்ளையின் முழுமையான பதிப்பு ஒன்றும் இருந்தது என்பது தெளிவு. ஆனால் இவரின் பதிப்பு முழுமையாக இன்று இல்லை.

புங்கத்தூர் கந்தசாமி முதலியாரின் வெளியீடாகக் கம்பராமாயணத்தின் பால, ஆரணிய, கிட்கிந்தா, சுந்தர, யுத்த காண்டங்கள் கிடைக்கின்றன. இவர் பால, ஆரணிய காண்டங்

களைக் காண்டங்களின் அடிப்படையில் கம்பனை முதலில் பதிப்பித்த திரு. வேங்கட முதலியாரைப் பின்பற்றிப் பதிப்பித்துள்ளார். இவ்வாசிரியர் முதல் மூன்று காண்டங்களைப் பதிப்பித்ததாக மர்ரே ராஜம் வெளியீட்டின் முன்னுரையால் அறிகின்றோம். ஆயின் அயோத்தியா காண்டத்தின் இவர் பதிப்பு நமக்குக் கிடைக்கவில்லை. எனினும் இப்பதிப்பைக் கொண்டு புங்கத்தூர் கந்தசாமி முதலியார் தானும் அயோத்தியா காண்டத்தினைப் பதிப்பித்திருக்கலாம். இவ்வூகம் உண்மையாயின் கம்பனுக்கு முழுமையான பதிப்பொன்று 1863-18௦4இல் இருந்தது எனக் கொள்ளலாம். சென்னை ராஜதானிப் பாடசாலைப் புத்தகச் சங்கத்தார் பால, அயோத்தியா, ஆரணிய, கிட்கிந்தா காண்டங்களைப் பதிப்பித்துள்ளனர். இவர்களும் முழுமையாகப் பதிப்பித்திருப்பார்களா என எண்ணின் விடைகாண சரியான குறிப்புகளில்லை. இவை தவிர 1886இல் கம்பராமாயணம் இருபகுதியாகப் பதிப்பிக்கப்பட்டதாக மயிலை. சீனி. வேங்கடசாமி (பத்தொன்பதாம் நூற்றுண்டில் தமிழிலக்கியம், பக். 389) கூறியுள்ளார். அதுபற்றிய விபரம் தெரியவில்லை.

மிக அதிகமான பதிப்புகள் பாலகாண்டத்திற்கு உள. (23) பிற காண்டங்கள் முறையே 17 (அயோத்தி), 15 (ஆரணிய), 17 (கிட்கிந்தா), 14 (சுந்தர), 14 (யுத்த) பதிப்புகளைப் பெற்றுள்ளன. ஒருவரின் பதிப்பினைப் பின்பற்றி மற்றவரும் பதிப்பிக்கும் போக்கும் ஆரம்பநிலையில் காணப்படுகிறது. புங்கத்தூர் கந்தசாமி முதலியார் போன்று சுப்புராய முதலியாரும், சுப்புராய பிள்ளையும் இணைந்து பாலகாண்டத்தினைத் திரு. வேங்கட முதலியாரின் பதிப்பினைக் கொண்டு பதிப்பித்துள்ளனர். இராசகோபால பிள்ளை ஆரணிய காண்டத்தினை, திரு. வேங்கட முதலியாரும், சேமங்கலம் நாராயணசாமி முதலியாரும் இணைந்து பதிப்பித்தப் பிரதிக்கிணங்கப் பதிப்பித்துள்ளார்.

சங்க இலக்கியங்கள், குறள், சிலம்பு, சிந்தாமணி போன்று கம்பனுக்கு ஓர் பழைய உரை இல்லையெனத் தெரிகிறது. கம்பனுக்கு முதன்முதலில் உரையுடன் அச்சாகிய பெருமை முதலில் அச்சான நூலுக்கே கிடைக்கிறது. இச்சிறு நூலுக்கு வீரராகவ முதலியார் உரையெழுதியுள்ளார். பின் எழுந்த பதிப்புகள் சில அரும்பதவுரை, குறிப்புரை, பதவுரை போன்றவற்றுடன் தோன்றின. அரும்பதவுரை, குறிப்புரை உள்ள நூல்கள் எல்லா அரும்பதங்களுக்கும் உரை நவில்கின்றன எனக் கூறமுடியாது. மிகச்சிறிதளவே அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கூறுகின்றன. மொத்தப்பதிப்புகளில் 41 பதிப்புகள் உரையுடன்

கூடியன. அவற்றுள் 16 பதிப்புகள் அரும்பதவுரை, குறிப்புரை கூறுவன. ஏனையன விரிவான உரைகளைத் தருகின்றன.

முழுமைப் பதிப்புகளில் ராஜம் பதிப்பு மூலம் மட்டும் கொண்டதாக அமைகிறது. வெ. நா. ஸ்ரீநிவாஸய்யங்கார் பதிப்பில் பால, ஆரணிய காண்டங்கள் குறிப்புரை கொண்டுள்ளன. ஏனைய மூலம்மட்டுமே. அ. இரங்கசாமி முதலியார் & சன்ஸ் தி.சி. பார்த்தசாரதி ஐயங்கார், கம்பன் கழகம் பதிப்புகள் அரும்பதவுரை கொண்டுள்ளன. டி. கே. சியின் பதிப்பு, முதல்பகுதி அரும்பதவுரையாகவும், 2, 3ஆம் பகுதிகள் பதவுரை கொண்டும் அமைகின்றன. ஏனை வை. மு. கோ, உ. வே. சா; அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பதிப்புகள் விரிவான விளக்கமான உரைகளைத் தந்துள்ளன.

காண்ட அளவில் 1861இல் பாலகாண்டத்திற்கு எழுந்த உரையே முதல் உரையெனக் கொள்ளலாம். இதன் உரையாசிரியர் யாரெனத் தெரியவில்லை. சுந்தரகாண்டத்திற்கு 1854இல் வி. கோவிந்தப் பிள்ளையும், 1889இல் அயோத்தியாகாண்டத்திற்குச் சேஷசாஸ்திரியும் உரையெழுதியுள்ளனர். 1922இல் வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர், சே. கிருஷ்ணமாசாரியர், வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியர் ஆகியோர் இணைந்து உரை செய்துள்ளனர். சோடசாவதனம் சுப்பராய செட்டியார் 1904இல் அயோத்தியா காண்டத்திற்கு உரையெழுதியுள்ளார். திருமயிலை. சண்முகம் பிள்ளை உரையும் அதற்கு உண்டு. இவர்களைக் குறிப்பிடத்தக்கப் பழைய உரையாசிரியர்களாகக் கொள்ளலாம். வை. மு. கோபல கிருஷ்ணமாசாரியாரின் உரையே முதன் முதலில் கம்பனுக்கு முழுமையான விரிவான உரையாகும்.

பிற இலக்கியங்களைக் காட்டிலும் கம்பராமாயணத்துக்கே மிகுதியாகப் பாடபேதங்களும் இடைச் செருகல்களும் இருப்பதை அதன் பதிப்புகள் சுட்டுகின்றன. உ. வே. சா; அண்ணாமலை, ராஜம், கம்பன் கழகம் முதலிய பதிப்புகளைப் பார்த்தால் இது தெளிவாகும். இவற்றிற்கிடையேகூடப் படல எண்ணிக்கைகள், பாடல் எண்ணிக்கைகள் வேறுபட்டு அமைகின்றன. சான்றாக, சந்திர சயிலப் படலம் என்றொரு படலம், ராஜம், கம்பன் கழகப் பதிப்புகளில் காணப்படுவது, பிற உ. வே. சா; வை மு. கோ; அண்ணாமலைப் பதிப்புகளில் இல்லை. பாலகாண்டம் ராஜம் பதிப்பில் 24 படலங்களும், கம்பன் கழகப் பதிப்பில் 23 படலங்களும் பிறவற்றில் 22 படலங்களும் என உள்ளது. குலமுறை கிளத்துப் படலம் ராஜம் பதிப்பில் வரலாற்றுப்படலம் என அமைந்துள்ளது. இப்படிப்பட்ட மாறுபாடுகள் மிக அதிகமாக

உள்ளன. கம்பனின் மொத்தப் பாடல் எண்ணிக்கையை வ. வே. சு. ஐயர் - 10569, உ. வே. சா. - 10418, அண்ணாமலை-10533, கம்பன் கழகம் - 10368 எனக் கூறுகின்றன. டி. கே. சி. 1514 பாடல் களைத்தான் கம்பன் பாடல்களாகத் தருகின்றார். ஒரு பதிப்பில் கம்பன் பாடலாகக் கூறப்படுவது மற்றொரு பதிப்பில் மிகைப் பாடலாகவும் கொள்ளப்பட்டுள்ளது. பொது நிலையில் நோக் கினும்; ஒவ்வொரு காண்டத்திலும் அமைந்துள்ள படல எண்ணிக்கையும், படலப் பெயர்களும், படலத்தின் தொடக்கச் செய்யுட்களும், முடிவு செய்யுட்களும் பெரும்பாலான பிரதிகளில் வெவ்வேறு வகையில் உள்ளன. ஒரு பிரதியில் ஒரு படலமாகக் காட்டப்படுவது மற்றொரு பிரதியில் இரண்டாகவோ, மூன் றாகவோ பிரிந்து காணப்படுகிறது என்று ராஜம் பதிப்பின் முன்னுரையில் (பக். 9) காணப்படுவது முற்றிலும் சரியே.

கம்பன் காவியத்தில் இத்துணை மாறுபாடுகள் நிகழ்ந்ததற்கு முதல் காரணம் இது மக்கள் இலக்கியமாக விளங்கி வந்துள் ளமையே யாகும். பலர் இராமாயணப் பிரசங்கத்தையே தம் வாழ்க்கைத் தொழிலாக மேற்கொண்டிருந்தனர். பொது மக்களை இன்புறுத்தும் பொருட்டுச் சில நூதனக் கதைகளையும், நகைச் சுவையான செய்திகளையும் இடையிடையே இவர்கள் இணைக்க லாயினர். மேலும் வான்மீகத்திலுள்ள சில கதைகள் கம்பனில் இல்லாதிருப்பது குறையென எண்ணி வடமொழிப் பயிற்சியுள்ள சிலர் சில பகுதிகளைச் செய்யுள் வடிவில் சேர்த்திருக்கக் கூடும். பிற்காலத்தில் வெள்ளியம்பலத் தம்பிரான் என்பவர் சில புதிய பாடல்களைப் புகுத்தினார் என்றும் புலவர்கள் கூறியுள்ளனர். (பால காண்டம்: முன்னுரை, பக். 8) என்று ராஜம் பதிப்பில் காணப்படும் கருத்து சிந்தித்தற்குரித்தே. இக்காலத்துப்போல் அக்காலத்து அச்சின்மையால் ஒன்றைப் பார்த்து ஒன்றாகப் பல பிரதிகள் செய்யப்படுமிடத்து எழுதுவோர் யாவரும் தக்க நல் லறிவு வாய்ந்தவராக இராமை பற்றி உள்ளதையுள்ளபடியே படித்து எழுதுவது அருமையாதலும், அறிஞர் பிரதி செய்யினும் ஒவ்வோரிடத்து மூலப் பிரதிக்கு வேறாக ஒரு சொல்லுள்ள விடத்து வேறொரு சொல் எழுத்தில் வந்து விடுவது முதலியன இயல்பேயாதலும், ஏட்டுப் பிரதிகளைப் படிக்கும் அறிஞரும் படித்துச் செல்கையில் ஓரெழுத்தை மற்றொரு எழுத்தாக மாறு படக் கருதிப் படித்தலும், படிப்போர்கள் தத்தமது அறிவுக்கு ஏற்பச் சிற்சில விடத்து இவ்வண்ணமிருப்பின் நலமென்று கருதித் திருத்துவதும் பாட பேதங்கள் மிகுவதற்குக் காரணமாக வை. மு. கோ (அயோத்திய காண்டம்: 1928, பக். 7) கூறுவதும் ஏற்புடைத்தே.

இடைச் செருகல்களை நீக்கும் முறையை ராஜம் பதிப்பினர், பழம் பிரதிகள் பலவற்றில் இல்லாது சில பிரதிகளில் மட்டும் காணப்படுகின்ற பாடல்களையும் கதைக்குத் தொடர்பில்லாது இடைப் பிறவரலாக உள்ள கவிகளையும் பிற்காலத்தில் சேர்க்கப் பெற்றவை என எளிதில் ஊகித்து விலக்கலாம் எனக் கூறுகின்றனர். (பால காண்டம்: முன்னுரை, பக்.9) தி. த. கனகசுந்தரம் பிள்ளை வெளியிட்ட பால காண்டப் பதிப்பிலும், வாணி விலாசத்தில் வெளிவந்த கிட்கிந்தா காண்டப் பதிப்பிலும் மிகைப் பாடல்கள் தனியே எடுத்துக் காட்டப்பட்டுள்ளமை அறிகிறோம். (Ibid.) பாட பேதங்கள் சில பழம் பிரதிகளில் சுட்டப்பட்டுள்ளமையை உள்ளே உள்ள விளக்கங்களில் காணலாம். இன்று கிடைப்பனவற்றுள் குறிப்பிடத்தக்கனவாகக் கருதப்படும் வை. மு. கோ, ராஜம்., உ. வே. சா, அண்ணாமலை, கம்பன் கழகம் முதலிய பதிப்புகளில் மிகைப் பாடல்கள் பெருமளவில் எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. அண்ணாமலை, பதிப்புகளில் மிகச் சிறப்பாக, விரிந்த அளவில் பாட பேதங்கள் விளக்கப் பட்டுள்ளன.

பொது நிலையில் உ. வே. சா, அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்புகள் சிறந்த பதிப்புகளாக உள்ளன. கம்பனை முழுமையாக ஒரே பகுதியில் அச்சிட்டு வெளியிட்ட பெருமையைக் கம்பன் கழகத்தினர் கொள்கின்றனர்.

இங்குப் பதிப்புகள் வெளியிடப்பட்ட கால வரிசையில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆண்டுகள் தெரியப்படாதனவற்றுள் சில ஆசிரியர் பெயர்கொண்டு அவ்வற்றிற்குரிய இடத்தினை ஊகித்து அமைக்கப்பட்டுள்ளன. அவ்வாறு அமைக்க முடியாதன இறுதியில் இணைக்கப்பட்டுள்ளன. நூலின் பெயரின் கீழ், பதிப்பித்தவரின் பெயர், இடம், காலம், நூலின் பக்கங்களின் எண்ணிக்கை, விலை ஆகியன குறிக்கப்பட்டுள்ளன. நூலைப் பற்றிய குறிப்புகள் அதன்பின் அமைந்துள்ளன. பதிப்பிக்கப் பட்ட இடத்துடன் இணைந்து காணப்படும் பெயர்கள் வெளியீட்டாளரைக் குறிக்கும்.*

*பழைய பதிப்புகளில் வெளியீட்டாளர்கள் பதிப்பித்தவர்களாகவும், உண்மைப் பதிப்பாசிரியர்கள், பரிசோதித்தவர், பார்வையிட்டவர் போன்ற சொற்களாலும் குறிக்கப் பட்டனர்.

**1. பிரகலாதன் சரித்திரம் என்கிற நரசிங்க விஜையம்**

கல்விக்களஞ்சிய அச்சுக்கூடம், 1842, 72, வீரராகவ முதலியார் உரை.

**2. பாலகாண்டம்—மூலம்** (முதல் அச்சுப் பதிப்பு)

திரு. வேங்கடாசல முதலியார். 1843; 218,
பிழைதிருத்தம் கொடுத்துள்ளார்.

**3. ஸ்ரீமத் கம்பராமாயணம்—ஆரணிய காண்டம்**

திரு. வேங்கடாசல முதலியார் (முதல் 600 பாடல்கள்) சேமங்கலம் நாராயணசாமி முதலியார் (பின்பகுதி) சரஸ்வதி அச்சுக்கூடம்; 1844; 19-0; 156.

14 பிரதிகள் கொண்டு அச்சிடப்பட்டதாகக் குறிப்புள்ளது. பிழைதிருத்தம் உண்டு. 1920 ஆம்ஆண்டுப் பதிப்பினை இராச கோபால பிள்ளை மேற்பார்வை செய்துள்ளார்

**4. ஸ்ரீமத் கம்பராமாயணம்—பாலகாண்டம்**

வித்வான் சுப்பராய முதலியார் + வித்வான் சுப்பராய பிள்ளை, ம. சபாபதி முதலியாரது கல்விவிளக்க அச்சுக்கூடம்; 1857, 1858, 179.

திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பினைப் பின்பற்றியது.

**5. ஸ்ரீமத் கம்பராமாயணம்—சுந்தரகாண்டம்**

இராசகோபாலப் பிள்ளை, ம. சபாபதிமுதலியாரது கல்வி விளக்க அச்சுக் கூடம்; 1859, 171.

**6. கம்பராமாயணம்—பாலகாண்டத்திற்கு உரைபாடம்**

எஸ். கிருஷ்ணசாமி முதலியார், முத்தமிழ் விளக்க அச்சுக் கூடம்; சன. 1861, 3 + 433.

தி. விசாகப்பெருமாளையர், பொன்னம்பல முதலியார், சந்திர சேகர கவிராஜ பண்டிதர், சுப்புராய பிள்ளை, அண்ணுசாமி முதலியார், வ. ஆதிமூல முதலியார், வீராசாமி செட்டியார் ஆகியோர் உரைச்சிறப்புப் பாயிரம் தந்துள்ளனர். பதவுரை, குறிப்புரை, இலக்கணக்குறிப்பு, விரிவுரை முதலியன உள. சி. சபாபதி முதலியார், சி. ராஜகோபால பிள்ளை இவர்களின் உதவியுடன் பதிப்பிக்கப்பட்டது.

**7. ஸ்ரீமத் கம்பராமாயணம்—கிட்கிந்தா காண்டம்**

கோ. இராசகோபால பிள்ளை, முத்தியாலு நாயகரது வாணி நிகேதன வச்சுக்கூடம், ஆற்காடு; 1862, 135.

பிழைதிருத்தம் அமைந்துள்ளது.

**8. ஆரணிய காண்டம்**

புங்கத்தூர், கந்தசாமி முதலியார், வாணி நிகேதனவச்சுக் கூடம்; 1863, 153.

திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பினைப் பின்பற்றியது பிழைதிருத்தம் உண்டு.

**9. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - யுத்த காண்டம்**

வி. கோவிந்த பிள்ளை, புங்கத்தூர் கந்தசாமி முதலியாரால் களாநிதி அச்சுக்கூடம்; 1863; 266+243.

இரு பகுதியாகப் பிரித்து அச்சிடப்பட்டுள்ளது. இதே பதிப்பின் சில பிரதிகளில் இத்துடன் உத்தர காண்டமும் (156 பக்கம்) மூன்றும் பகுதியாக இணைக்கப்பட்டுள்ளது.

**10. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் பால காண்டம்**

புங்கத்தூர். கந்தசாமி முதலியார், ம. சபாபதி முதலியாரது கல்வி விளக்க அச்சுக்கூடம்; 1864; 179.

திரு. வேங்கடாசல முதலியார் பதிப்பினைப் பின்பற்றியது.

**11. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் கிஷ்கிந்தா காண்டம்**

வி. கோவிந்த பிள்ளை, புங்கத்தூர் கந்தசாமி முதலியாரால் கல்விவிளக்க அச்சுக் கூடம்; சென்னை; 1864; 126.

**12. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் சுந்தர காண்டம்**

வி. கோவிந்த பிள்ளை, புங்கத்தூர். கந்தசாமி முதலியாரால் கல்விவிளக்க அச்சுக்கூடம்; 1864; 171.

**13. கம்பராமாயணம் - ஆரணிய காண்டம்**

இராசகோபால பிள்ளை, இராமாநுசுலு நாயகரது ஸ்ரீநிகேதன அச்சுக்கூடம்; 1870; 136.

திரு. வேங்கடாசல முதலியார்+சேமங்கலம். நாராயணசாமி முதலியார் பதிப்பினைப் பின்பற்றியது.

41. **ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - ஆரணிய காண்டம்**

*சேமங்கலம். நாராயணசாமி முதலியார்,* 1870; 136.

15. **ஸ்ரீமத் கம்பராமாயணம் சுந்தர காண்டம்** (மூலமும் உரையும்)

*ஏழுமலைப் பிள்ளை, விவேகவிளக்க அச்சுக்கூடம்; புரசைப் பாக்கம்; மூ. ப.* 1871; 403, *வி. கோவிந்த பிள்ளை உரை.*

*பதவுரை, விளக்கவுரை, பிழைதிருத்தம் உள்ளன.*

16. **கம்பராமாயணம் - பால காண்டம்**

*சென்னை ராஜதானிப் பாடசாலைப் புத்தகச் சங்கம். கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடம்; சென்னை;* 1878.

*படலங்களின் கதைச் சுருக்கம் கூறப்பட்டுள்ளது.*

17. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்**

*கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடம்;* 1883?; 95-183

*கங்கைப் படலம் முதல் கிளை கண்டு நீங்கு படலம் ஈறாக உள்ளது. ஒவ்வொரு படலத்தின் முன்னும் கதைச் சுருக்கம் உள்ளது.*

18. **கம்பராமாயணம் - ஆரணிய காண்டம்**

*சென்னை ராஜதானிப் பாடசாலைப் புத்தகச் சங்கம், கி. க. அ. சங்கத்தாரது அச்சுக் கூடம்;* 1885; 188.

*படலங்களின் கதைச் சுருக்கம் உள.*

19. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்**

*சென்னை ராஜதானிப் பாடசாலைப் புத்தகச் சங்கம், கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடம்; சென்னை;* 1886; 183.

*படலங்களின் கதைச் சுருக்கம் உண்டு.*

20. **கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்**

*சென்னை ராஜதானிப் பாடசாலைப் புத்தகச் சங்கம், கி. க. அ. சங்கத்தாரது அச்சுக்கூடம்;* 1888; 169.

*படலங்களின் கதைச் சுருக்கத்துடன் அரும்பதங்களுக்கு உரையும் உள்ளது.*

21. **ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - அயோத்தியா காண்டம்** (மூலமும் உரையும்)

*ஆதிகலாநிதி அச்சுக்கூடம், சென்னை;* 1889; 301.

சேஷசாஸ்திரி உரை.

சில விடங்களில் பதவுரையாகவும் சிலவிடங்களில் பொழிப் புரையாகவும் உள்ளது.

**22. ஸ்ரீமத் கம்பராமாயணம் - ஆரணிய காண்டம்**

எம். ஆர். கந்தசாமிக் கவிராயர், அல்பினியன் அச்சுக்கூடம்; சென்னை; 1900; 8+553; ரூ3 அணு 8.

எம். ஆர். கந்தசாமிக் கவிராயர்+எஸ். வெங்கடராயுலு நாயுடு உரை. மு. ரா. அருணாசலக் கவிராயர் பரிசோதித்தார்.

பதவுரை, கருத்துரை, தேவையான இடங்களில் குறிப்பு கள் உள. பிழைதிருத்தம் உண்டு. இவ்வுரையாசிரியர்களால் அயோத்தியா, பால, சுந்தர காண்டங்கள் உரையுடன் பதிப்பிக்கப் பட்டமை முகவுரையால் தெரிய வருகிறது.

**23. கம்பராமாயணம் - பால காண்டம்**

க. வ. திருவேங்கட நாயடு, மு. சண்முக முதலியாரால் பண்டிதமித்திரயந்தர சாலை; 1902; 172.

நூலின் ஆரம்பத்தில் காப்புகள், தனியன்கள், நூலின் பயன் ஆகியன உள.

**24. ஸ்ரீ ராமாயண பால காண்டம்** (மூலமும் உரையும்)

ஸ்ரீபத்மநாப விலாச அச்சுக்கூடம், 1904, 1915, 1922; 519.

இராமசாமி நாயுடு உரை.

கம்பர் சரித்திரம், பாலகாண்ட விஷயத்திறம், செய்யுளக ராதி உள. கம்பர் 8 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியைச் சேர்ந் தவர். ஔவை, புகழேந்தி, ஒட்டக்கூத்தர் முதலியோரின் சம காலத்தவர். பதவுரை, குறிப்புரை, இலக்கணக் குறிப்பு ஆகியன அடங்கியது. தேவையான இடங்களில் சூசனைகளும், விஷயத் தொடக்கமும் ஸ்ரீநிவாச முதலியார் இணைத்துள்ளார். இந்நூலை மேற்பார்வையிட்டவர் குப்புசாமி நாயுடு.

**25. ஸ்ரீமத் கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (மூலமும் உரையும்)

தக்கோலம் இராமசாமி நாயுடு, ஸ்ரீலட்சுமி நாராயண விலாச அச்சுக்கூடம்; 1904; ரூ. 3.80

தி. க. சோடசாவதானம் சுப்பராய செட்டியார் உரை.

பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்பு உள.

26. **ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம்** (பம்பை—துந்துபிப்படலம்)

ஜூன் 1907; 138; என். பொன்னம்பலப் பிள்ளை உரை.

வி. குமாரசாமி முன்னுரை (ஆங்கிலம்) வழங்கியுள்ளார். பொழிப்புரை, குறிப்புரை, பாடபேதம், இலக்கணக் குறிப்பு ஆகியன உண்டு.

27. **கம்ப ராமாயணம் - சுந்தர காண்டம்**

பி. ஆர். கிருஷ்ணமாசாரியார்; ஸ்ரீவாணி விலாஸ் பிரஸ்; ஸ்ரீரங்கம்; 1907; 102+279.

கதைச் சுருக்கம், செய்யுளகராதி முதலியன உள. ஜே. கே. பாலசுப்பிரமணியன் முன்னுரை (ஆங்கிலம்) தந்துள்ளார். படலப் பெயர்களிடையே அதிகமான வேறுபாடுளது.

28. **இராமாவதாரவுரை**

செந்தமிழ்: தொகுதி 7, 1908—1909; 20—29, 72.

ரா. இராகவையங்கார் உரை.

கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம் முதலிய பாடல்களுக்கு உரை, அரும்பதவுரை, மேற்கோள் கூறுகிறார். (முற்றுப் பெறவில்லை)

29. **ஸ்ரீமத் கம்பராமாயணம் அயோத்தியா காண்டம்**

அ. சுந்தரநாத பிள்ளை, சிதம்பர முதலியாரது வித்தியாரத்நாகர அச்சியந்திர சாலை; சென்னை; 1911; 160.

அருஞ்சொற் பொருள், குறிப்புகள் உள.

30. **ஸ்ரீமத் கம்பராமாயணம் - உயுத்த காண்டம்**

அ. சுந்தரநாதம் பிள்ளை, சிதம்பர முதலியாரது வித்தியாரத்நாகர அச்சுக்கூடம்; சென்னை; 1911; 579+200.

நாகபாசப் படலத்தின் இடையே 243—266 எண் பாடல்களுக்குப் பதவுரை, விளக்கவுரை தருகிறார். பிறவற்றிற்கு அரும்பதவுரை உளது. உத்தர காண்டத்தினையும் கம்பர் அருளியதாக இதனுள் இணைத்துள்ளார்.

31. **கம்ப ராமாயணம்**

அ. இரங்கசாமி முதலியார் & சன்ஸ், பூமகள் விலாச அச்சுக்கூடம்; 1914; 661+776.

திருமயிலை. சண்முகம் பிள்ளையின் பதிப்பினைப் பின்பற்றி இரு பகுதிகளாக அமைந்துள்ளது. பால - சுந்தர காண்டங்கள் முதல் பகுதியிலும், யுத்த, உத்தர காண்டங்கள் பின் பகுதியிலும் உள்ளன. அரும்பதவுரை, இலக்கணக் குறிப்பு தந்துள்ளார்.

### 32. ஸ்ரீ கம்ப ராமாயணம்

தி. சி. பார்த்தசாரதி அய்யங்கார், பூ மகள் விலாச அச்சுக் கூடம்; சென்னை; 1914–1928, 661+576.

பால - சுந்தர காண்டங்கள் ஒரு பகுதியாகவும், யுத்த, உத்தர (ஒட்டக்கூத்தர்) காண்டங்கள் இரண்டாம் பகுதியாகவும் உள்ளன. அரும்பதவுரை காணப்படுகிறது.

### 33. இராமாயணம் - பாலகாண்டம்

1918, 274; ரூ. 2. குமாரசுவாமிப் பிள்ளை + கனகசுந்தரம் பிள்ளை உரை.

முகவுரையில் கம்பர் உவச்சர் குலத்தவர், ஆதித்தர் புதல்வர், 9 ஆம் நூற்றுண்டினர் என்ற குறிப்பும், செய்யுள் நடை பற்றிய சிறு விளக்கமும் உள்ளன. அரும்பதவுரையும், பாட்டு முதற் குறிப்பகராதியும் உண்டு.

### 34. கம்ப ராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம்

கணேச அச்சுக்கூடம், 1922; 10+787; ரூ. 4. 50.

வை. மு. சடகோபராமாநுஜாசாரியார் + சே. கிருஷ்ணமாசாரியார் + வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார் உரை.

கம்பர் நான்காம் வருணத்தைச் சார்ந்தவர் என்பது ஆசிரியர்களின் துணிபு. இக் காண்டத்தின் கதையும் கம்ப ராமாயணம் பற்றிய ஓர் பொது நிலை விளக்கமும் உள. உரை விரிவான உரையாக அமைந்துள்ளது.

### 35. பால காண்டம்

நமசிவாய முதலியார், நிரஞ்சன விலாச அச்சுக்கூடம்; சென்னை; 1924; 190.

குறிப்புகள் இடையிடையே உண்டு. திருமயிலை. சண்முகம் பிள்ளை பார்வையிட்டுள்ளார்.

### 36. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம்

திருமயிலை. சண்முகம் பிள்ளை, நமச்சிவாய முதலியாரால் நிரஞ்சன விலாச அச்சியந்திர சாலை; சென்னை; 1925; 164.

குறிப்புரை கூறியுள்ளார்.

**37. கம்ப ராமாயணம் - அயோத்தியா காண்டம்**

பக். 516; திருமயிலை. சண்முகம் பிள்ளை உரை.

இராமசாமி நாயுடு, சிவஞானம் பிள்ளை, சபாபதி முதலியார், நமச்சிவாய முதலியார் ஆகியோர் சிறப்புக் கவிகள் தந்துள்ளனர். பதவுரை, விளக்கவுரை உள.

**38. ஸ்ரீ கம்ப ராமாயணம்**

வை. மு. நரசிம்மன், வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் கம்பெனி, 17, தெளிசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

வை. மு. கோபால கிருஷ்ணமாச்சார்யார் உரை.

பால காண்டம்: 1926; 8ம் ப. 1973; 13+971; ரூ. 15

அயோத்தியா காண்டம்: 1928; 1935; 8+852+96; ரூ. 5

ஆரணிய காண்டம்: 8ம் ப. 1970; 7+831; ரூ. 15

கிட்கிந்தா காண்டம்: 5ம் ப. 1967; 796; ரூ. 15

சுந்தர காண்டம்: 8ம் ப. 1970; 6+972; ரூ. 15

யுத்த காண்டம் - 1: 6ம். ப. 1970; 12+1064; ரூ. 15

யுத்த காண்டம் - 2: 1932, 6ம். ப. 1971; 996+150; ரூ. 15

பதவுரை, விசேடவுரை உள. பாடபேதம், இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப் பகுதி, மேற்கோள் முதலியன காட்டுகிறார். நூலாசிரியர் வரலாறு, சிறப்பு, காலம் பற்றிய பிறர் கூற்று கூறுகிறார். நூன்முகம், செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பதவகராதி, பிழைதிருத்தம் முதலியனவும் உண்டு.

**39. கம்ப ராமாயணம் - ஆரணிய காண்டம்**

வை. மு. கோ; 1936; 831; ரூ 4. வை. மு. சடகோபராமாநுஜாச்சார்யார்+சே. கிருஷ்ணமாச்சார்யர் உரை.

பதவுரை, குறிப்புரையாக உளது. பிழைதிருத்தம் செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பதவகராதி முதலியனவடங்கியது.

**40. கம்ப ராமாயணம் - கிஷ்கிந்தா காண்டம்**

1—105 பக்; வை. மு. சடகோப ராமாநுஜாசார்யர்+கே. கிருஷ்ணமாச்சாரியர்+கொ. கோவிந்தாசாரியர் உரை.

கம்பர், கம்ப ராமாயணம், கிட்கிந்தா காண்டம் பற்றி ஓர் முன்னுரை, பதவுரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்பு உண்டு.

பம்பை முதல் துந்துபிப் படலம் வரை உளது. இந் நூலுள் பிற இலக்கியங்களும் உள்ளது. நூலின் பெயர் தெரியவில்லை.

41. **கம்ப ராமாயணம்** (ஆழ்வார் திருநகரிப் பிரதிகளின் படி)

வெளியீடு. வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்.

முதல் பகுதி:- விலை ரூ. 8.

பால காண்டம் (முதல் ஏழு படலங்கள்): எஸ். வையாபுரிப் பிள்ளை + பி. என். அப்புஸ்வாமி ஐயர், 1937, 99. (பாடபேதம், அரும்பதவுரை)

பால காண்டம்: மு. இராகவையங்கார், 1942, 7+189+16, (செய்யுள் முதற் குறிப்பகராதி, குறிப்புரை)

அயோத்தியா காண்டம்: பக்ஷிராஜையங்கார்; 1944; 164

ஆரண்ய காண்டம்: பக்ஷிராஜையங்கார்; 1944; 162 (செய்யுண் முதற் குறிப்பகராதி, குறிப்புரை)

இரண்டாம் பகுதி:- விலை ரூ. 2.50

கிட்கிந்தா, சுந்தர காண்டங்கள்: பக்ஷிராஜையங்கார்; 150+164+4.

மூன்றும் பகுதி:-

யுத்த காண்டம்: பக்ஷிராஜையங்கார்; 1954; 560. (சுவாமி பரமானந்தா முன்னுரை, பிழைதிருத்தம்)

பொதுநிலையில் படலப் பெயர்களிடையே அதிகமான வேறுபாடு காணபபடுகிறது. உத்தர காண்டமும், கம்பராமாயணமாக இச்சுவடி கொண்டுள்ளதால் தனியே பதிப்பிக்கப்பட்டுள்ளது.
உத்தர காண்டம்: தி. கே. இராமானுஜையங்கார்; பிப். 1968;
9+172+9.

42. **கம்ப ராமாயணம் - சுந்தர காண்டம்**

ஆர். ஜீ. அச்சுக்கூடம், சென்னை;

1939, 6+961; ரூ. 5., வை. மு. சடகோபராமானுஜாசாரியர் + சே. கிருஷ்ணமாசார்யர் + வை. மு. கோபால கிருஷ்ணமாசார்யர் உரை.

இக்காண்டத்தில் ஆச்சார்யன் செய்ய வேண்டிய செயல் தெரிவிக்கப்படுகிறது. அதாவது உடலிற் சிறையுண்டு கிடக்குஞ் சேதநனுக்கு எம்பெருமான் திறத்து உணர்வைப் பிறப்பித்துப் பின்னர் ஞானவானுன அச்சேதநனை அங்கீகரிக்குமாறு பகவானுக்கு அறிவித்தலாகும் என நூன்முகத்தில் கூறியுள்ளனர். பாடபேதங்கள் சிலவும், சுந்தர காண்டத்தில் உள்ள கருத்து

கள் சிலவும் கூறப்பட்டுள்ளன. செய்யுண் முதற்குறிப்பகராதி, அரும்பதவகராதி முதலியனவும் உண்டு.

43. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - பால காண்டம் (திருவவதாரப் படலம் முடிய)

எஸ். கலியாண சுந்தர ஐயர், உ. வே. சா. நூல் நிலையம்; 1946; 151.

அரும்பத உரை, விசேடக் குறிப்பு, மேற்கோள், வான்மீகியுடன் வேறுபாடு, பாடபேதம், செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி ஆகியன உள.

44. கம்பராமாயணம் பால காண்டம்

எஸ். கலியாண சுந்தர ஐயர், உ. வே. சா. நூல்நிலையம்; 1949; 8+538; ரூ. 6

குறிப்புரை, இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப் பகுதிகள், வான்மீகியுடன் வேறுபாடு, பாடபேதம், பிழைதிருத்தம் உள.

45. ஸ்ரீமத் கம்ப ராமாயணம்

உ. வே. சா. நூல் நிலையம்; திருவான்மியூர், சென்னை.

பால காண்டம் : அக். 1967, 18+1238; ரூ. 12

அயோத்தியா-1 : சன. 1972, 8+528; ரூ. 12

,, -2 : சூன் 1972, 7+529—1024; ரூ. 12

ஆரணிய : 1959, 26+1131; ரூ. 12

கிட்கிந்தா : 1961, 28+1027; ரூ, 12

சுந்தர : 1957, 40+1044; ரூ. 12

யுத்த - 1 : 1962, 1250; ரூ. 12

,, 2 : 1962, 1096; ரூ. 12

,, 3 : 1963, 1191; ரூ. 12

,, 4 : 1963, 19+983; ரூ. 12

இப் பதிப்பு பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப் பகுதி, மேற்கோள், பாடபேதம், புராண வரலாறுகள், காப்பியத்திற் கண்ட அறிவுரைகள், மூதுரைகள் முதலியன பெற்று இலங்குகின்றது. முன் பகுதியில் நூன்முகம், பதிப்புரை அமைய, பின்பகுதியில் செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பத

முதலியவற்றின் அகராதி, பிழைதிருத்தம் ஆகியன அடங்கி யுள்ளன. 'கதைப்போக்கில் இவர் கையாளும் செய்திகள் பலவற் றிற்கு அத்யாத்ம ராமாயணம் ஆதாரமானதென்பது புலனு கின்றது. அத்தகைய விடங்கள் ஆங்காங்கே விசேடவுரையில் காட்டப் பெற்றுள்ளன', என்று பால காண்ட முகவுரையில் காணப்படுகிறது.

### 46. ஸ்ரீமத் கம்ப ராமாயணம் - அயோத்தியா காண்டம்

ஸ்ரீமதி ருக்மணி தேவி, உ. வே. சா. நூல் நிலையம்; சென்னை; மு. ப. 1951; 10+474+35; ரூ. 6. 50.

குறிப்புரை, மேற்கோள், வான்மீகி வேறுபாடு, பாட பேதங் கள், செய்யுள் முதற் குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி உள.

### 47. கம்பர் தரும் ராமாயணம்

டி. கே. சிதம்பரனார், பொதிகைமலைப் பதிப்பகம்; திருக் குற்றாலம். 1953-1955, ரூ. 6.

முதல் பகுதி : பால, அயோத்தியா, காண்டங்கள் : 37+640. (அரும்பதவுரை)

2-ம் பகுதி : ஆரணிய, கிட்கிந்தா காண்டங்கள் : 16+550 (பதவுரை)

3-ம் பகுதி : சுந்தர, யுத்த காண்டங்கள் : 12+570. (பதவுரை)

இரண்டாம் பகுதியில் கடவுள் தத்துவம் பற்றிய கட்டுரை யொன்றும், மூன்றும் பகுதியில் ராஜாஜியின் முன்னுரையும் அமைந்துள்ளன. பாடல்களுக்கு அவற்றின் சந்தம் பற்றியக் குறிப்புள்ளது. அனுபந்தத்தில் திருத்தங்களும் பாட்டு முதற் குறிப்பகராதியும் அமைந்துள்ளன.

### 48. கம்ப ராமாயணம்

அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலைநகர்; சிதம்பரம்.

| | | |
|---|---|---|
| சுந்தரகாண்டம் | - 1 : | 1955; 1963; 32+512+384; ரூ. 10.25 |
| ,, | - 2 : | 1956; 5+460+310; |
| பால | - 1 : | 1957; 7+652+317; ரூ 6 |
| ,, | - 2 : | 1958; 2+588+312; ரூ. 6 |

| | | |
|---|---|---|
| அயோத்தியா | - 1 : | 1959; 10+631+285; ரூ. 6 |
| ,, | - 2 : | 1960; 4+497+244; ரூ. 6 |
| ஆரணிய | - 1 : | 1963; 4+550+271; ரூ. 6 |
| ,, | - 2 : | 1964; 6+653+319; ரூ. 6 |
| கிட்கிந்தா | - 1 : | 1965; 18+651+315; ரூ. 6 |
| ,, | - 2 : | 1967; 5+485+283; ரூ. 6 |
| யுத்த | - 1 : | 1968; 6+819+377; ரூ. 7 |
| ,, | - 2 : | 1969; 6+788+446; ரூ. 10 |
| ,, | - 3 : | 1970; 6+694+393; ரூ. 12 |
| ,, | - 4 : | 1970; 6+668+445; ரூ. 10 |
| ,, | - 5 : | 1970; 6+734+499; ரூ. 10 |
| ,, | - 6 : | 1970; 9+907+485; ரூ. 15 |

உரை பொழிப்புரையாகவும், குறிப்புரையாகவும் உள்ளது. மேற்கோள், இலக்கணக் குறிப்பு, இடைச் செருகல்கள், பாடலுள் காணப்படும் கதைகள் முதலியன உள. ஒவ்வொரு படலத்தின் ஆரம்பத்திலும் கதை நிகழ்ச்சி, பாத்திரங்கள் பற்றிய சிறு குறிப்புகள், கவிநயம் சிறந்த பகுதிகள் வான்மீகியுடன் வேறுபடுமிடங்கள் முதலியன சுட்டப்படுகின்றன. பிற் சேர்க்கையாக ஒவ்வொரு பாடலுக்கும் உள்ள பாட வேறுபாடுகள் தெளிவாக, விரிவாகக் காட்டப்பட்டுள்ளன. பாட்டு முதற் குறிப்பகராதியும் உண்டு. சுந்தர காண்டத்தின் முன்னுரையில் கம்பரின் காலம், வரலாறு, நூல் பற்றிய சிறு ஆய்வு உள்ளது. கம்பரின் காலமாகப் பத்தாம் நூற்றாண்டின் இறுதி சுட்டப்படுகின்றது. இவர்கள் முதன்முதலில் சுந்தர காண்டத்தினைப் பதிப்பித்துத் தொடர்ந்து பிறவற்றைப் பதிப்பித்துள்ளனர்.

49. **கும்பகர்ணன் வதைப்படலம்** (1-170 பாடல்கள்)

கழகம்; மு. ப. சன. 1956; 12+192; செ. ரெ. இராமசாமிப் பிள்ளை உரை.

பதவுரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்பு, பிறவேண்டும் விளக்கங்கள், மேற்கோள் முதலியன உள. கம்பர் சைவர் என்றும், 12ஆம் நூற்றாண்டினர் என்றும் கூறுவர். அருஞ்சொற் பொருள் அகரவரிசை, பாட்டு முதற் குறிப்பகராதி மாதிரி வினாக் கள் உண்டு.

50. உயுத்த காண்டம்—கும்பகருணன் வதைப்படலம் (1-171 பாடல்கள்)

வட இலங்கைத் தமிழ் நூற் பதிப்பகம்; சுன்னாகம்; 1956; 10+157; ரூ. 2. இ. நமசிவாய தேசிகர் + வ. நடராஜன் உரை.

இராமாயண வரலாறு, கதைச் சுருக்கம், நூலின் முன்னால் உள. உரை, கொண்டு கூட்டு, பொருள், விளக்கம் என மூன்று பிரிவாகவுள்ளது. விளக்கவுரையில் பொருள் விளக்கம், நயம், இலக்கணக் குறிப்புக்கள், கதைத் தொடர்புகள் முதலியன உண்டு, அநுபந்தத்தில் தொகுப்புக் குறிப்புகள், கதாப்பாத்திரக் குணவியல்பு, கதாப்பாத்திரப் பெயரகராதி, மாதிரிகை அப்பியாச வினாக்கள் ஆகியன இடம் பெறுகின்றன,

51. கும்பகர்ணன் வதைப்படலம் (1-170 பாடல்கள்)

பைந்தமிழ்ப் பண்ணை, யாழ்பாணம்; 1956; 8+149; ரூ. 2. சி. ஆறுமுகம் + நா. சிவபாத சுந்தரன் உரை.

முன்னுரையில் கம்பர் வைணவர் என்றும், 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தவர் என்றும் கூறியுள்ளனர். கும்பகர்ணன், இராவணன், மாலியவான், மகோதரன், விபீடணன் ஆகியோரின் பாத்திர இயல்பும், இப்படலத்துள் இடம்பெறும் கதையும் கூறியுள்ளனர். உரை பொழிப்புரையாக உள்ளது. பாடல்களுக்கு இடையே பொருள் விளக்கத் தலைப்புகள் உள. சிறப்புரையும் அருஞ்சொற் பொருளும் உண்டு.

52. கம்ப ராமாயணம் (இராமாவதாரம்)

எஸ். ராஜம், 5, தம்புச்செட்டித் தெரு, சென்னை-1. மு. ப., 1958-59

| | | |
|---|---|---|
| பாலகாண்டம் | : | 1958; 226. |
| அயோத்தியா | : | 1958; 179. |
| ஆரணிய | : | 1958; 181. |
| கிட்கிந்தா | : | 1958; 158. |
| சுந்தர | : | 1958; 208. |
| யுத்த — 1 | : | 1959; 37+123+15. |
| ,, — 2 | : | 1959; 125-298+16-29. |
| ,, — 3 | : | 1959: 299-464+30-42. |
| ,, — 4 | : | 1959; 465-561+43-124. |

பாலகாண்டத்தின் ஆரம்பத்தில் பதிப்புரையில் இராமாயணத்தின் தோற்றம், கம்பன் சிறப்பு, பதிப்புமுறை பற்றிக்

கூறப்பட்டுள்ளது. கம்பனில் காண்டப் பிரிவினை படலப் பாகு பாடு முதலியன எல்லாம் ஆசிரியர் காலத்திற்குப் பிற்பட்டே எழுந்திருத்தல் கூடும். மிகப் பிற்பட்ட காலத்தில் வழக்கில் புகுந்த சந்தக் குழிப்புகளைக் கம்பன் பாடல்களுக்கு ஏற்றி, உரைத்தல் சிறிதும் பொருந்தாது [9] போன்ற குறிப்புகள் காணப்படுகின்றன. ஒவ்வொரு படலத்திலும் நடக்கும் நிகழ்ச்சிகள் சிறு குறிப்புகளாக முன்பகுதியில் தரப்பட்டுள்ளது. இறுதிப் பகுதியில் மிகைப் பாடல்கள் தனியாகக் காட்டப் பட்டுள்ளன. பாடல் முதற் குறிப்பகராதி ஒன்றும் உள்ளது. நீ. கந்தசாமிப் பிள்ளை, சா. கணேசன், பொ. நா. அப்புஸ்வாமி, வி. மு. சுப்பிரமணியம், மு. சண்முகம் ஆகியோர் இதன் பதிப் பாசிரியர்களாவர்.

**53. கம்பராமாயணம்** (பால, அயோத்தியா காண்டங்கள்)

கு. அழகிரிசாமி; சக்தி காரியாலயம்; ஆயிரம் விளக்கு; சென்னை. மு. ப. ஏப். 1958 (மலிவுப் பதிப்பு); 456; ரூ. 2.

முன்னுரை, ஆய்வு நோக்கிலமைந்த கம்பர் வரலாறு, கதைச் சுருக்கம், பாட்டு முதற் குறிப்பகராதி, அரும்பத உரை அகராதி ஆகியன உள.

**54. கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்** (1—7 படலங்கள்)

கழகம்; மு. ப. மே. 1965, 125; ரூ. 3.75 ம. இராசமாணிக்கம் உரை.

கம்பரைத் திருமாலுக்குத் தொண்டு செய்து வரும் குடியில் பிறந்தவர், 12ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியினர், வெகுளியின் எல்லையாகவும், வீரத்தின் எல்லையாகவும் நகைச்சுவையைக் காட்டும் இயல்பினர்[5] என்று அறிமுகப்படுத்துகிறார். செய்யுள் முதற் குறிப்பகரவரிசை உண்டு.

**55. கம்பராமாயணம் சுந்தர -காண்டம்**

கு. அழகிரிசாமி, தமிழ்ப் புத்தகாலயம்; 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை - 5; மு. ப. ஜூலை. 1965. (மலிவுப்பதிப்பு); 269; ரூ2.

முன்னுரையில் வான்மீகியிலிருந்து வேறுபடும் ஏழு இடங் களையும் பெயர்க் காரணமாக மூன்று கருத்துகளையும் கூறு கிறார். முதல் நான்கு காண்டங்களின் கதைச் சுருக்கத்தைக் கூறிப்பின் படல வாரியாகக் கதை நிகழ்ச்சிகளைக் கூறுகிறார். அரும்பதங்களுக்கு உரையும், விளக்கமும் அடிக்குறிப்பில் உள.

56. **கம்பராமாயணம்** (இராமாவதாரம்)

கம்பன் கழகம், 795, அண்ணாநகர், சென்னை; மு. ப. 1976, இ. ப. 1977; 63+1824, ரூ. 75.

பதிப்புரை, படல அடைவு, பொருள்மாலை, மிகைப் பாடல்கள், படல அகராதி, பாடல் முதற் குறிப்பகராதி உள. அந்தந்தப் படலங்களின் நிகழ்ச்சிகள் பற்றிய குறிப்பினைப் பொருள் மாலையில் அமைத்துள்ளனர். அரும்பதங்களுக்கு உரை கூறியுள்ளனர். கம்பநாடன் இயற்றிய இராமாயணம் எண்ணிய சகாப்தம் எண்ணூற்று ஏழில் தோன்றியதாகக் குறிப்பிட்டுள்ளனர்.

57. **பாலகாண்டம்** (மூலமும் உரையும்)

கம்பநாடர் (காரைக் குடியிலிருந்து வெளிவரும் மாதாந்த ராமாயண சஞ்சிகை - ஆசிரியர் மோ. வே. கோவிந்தராஜையங்கார்)

பதவுரையும் குறிப்புரையும் கொண்ட 22 பாடல்கள் உள்ளன.

58. **கம்பராமாயணம்** - பால காண்டம்

184 பக்.

எதிர்கொள் படலம் முதல் பரசுராமப் படலம் வரை பொழிப்புரையுடன் விளங்குகிறது. ஆரம்பத்தில் கம்பர் பற்றியும் நூல் பற்றியும் சிறு முன்னுரை உள்ளது.

59. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (கங்கைப் படலம் - கிளைகண்டு நீங்கு படலம்)

88 பக்.

60. **ஸ்ரீமத் கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்**

154 பக்.

61. **கம்பராமாயணம் கிட்கிந்தா காண்டம்** (பம்பைப்படலம் - மராமரப்படலம்)

91 பக்.

பொழிப்புரை, குறிப்புரை, இலக்கணக் குறிப்பு உண்டு.

62. **ஸ்ரீமத் கம்ப ராமாயணம் கிட்கிந்தா காண்டம்**

சி. த. முத்தையா பிள்ளை; 119.
பாட வேறுபாடு சில இடங்களில் சுட்டப்பட்டுள்ளது.

### 63. கம்பராமாயணம் - கிட்கிந்தா காண்டம்

முனுசாமி முதலியார், கணேசா அச்சகம், வெப்பேரி, சென்னை; 488.

பதவுரை, விளக்கவுரை உண்டு. கம்பன் வரலாறும், கம்ப ராமாயணம் பற்றிய ஒரு சிறு அறிமுகமும் உள்ளன.

### 64. கம்பராமாயணம் - யுத்தகாண்டம்

309 - 574 பக்.

மகரக் கண்ணன் வதைப்படலம் முதல் விடை கொடுத்த படலம் வரை அரும்பதவுரையுடன் உள்ளது.

## மிகைப்பாடல்கள்

மிகைப்பாடல்கள் என்று இங்குச் சுட்டப்படுவன, ஆரம்ப கால நிலையில் ஏற்பட்ட கம்பன் பதிப்புகளில் காணப்படாத ஆயின் ஏட்டுப்பிரதிகளில் காணப்படும் பாடல்களைத் தொகுத்துக் கூறப்படுவனவாகும். இவை செந்தமிழ்த் தொகுதிகளில் காணப் படுகின்றன. இத் தொகுப்புகள் கம்பன் பாடல்கள் தான் என்ற துணிபில் ஏற்பட்டவை. இத் தொகுப்புகளுக்கும் கம்பன் பதிப்புகளான, ராஜம், வை. மு. கோ., உ. வே. சா., அண்ணு மலை, கம்பன் கழகம் போன்ற பதிப்புகளில் காணப்படும் மிகைப் பாடல்களுக்கும் வேறுபாடுண்டு. அவை கம்பன் பாடல்க ளன்று என்ற துணிபில் தனித்து அமைக்கப்பட்டனவாகும். இம் மிகைப் பாடல்கள் கம்பன் பதிப்புகளுடன் தொடர்புடையன வாய் அமைந்திருத்தலின் பதிப்புகளைத் தொடர்ந்து அமைக்கப் பட்டுள்ளன.

### 65. இராமாவதாரச் செய்யுட் பாடாந்தரம்

செந்தமிழ், தொகுதி. 2, 3, சி. கணேசையர், 1903—1905.

1903 வரை வெளிவந்துள்ள அச்சுப் பிரதிகளில் இல்லாத ஏட்டுப் பிரதியில் காணப்படும் செய்யுட்களைத் தொகுத்து, காண்டம், படலம் வாரியாகத் தருகிறார். அவற்றின் பாடபேதங் களையும் கூறி அவை பொருந்தாமையைச் சுட்டுகிறார். இத் தொடர் முற்றுப் பெறவில்லை.

**66. கம்பராமாயண ஆராய்ச்சி**

*செந்தமிழ்: தொகுதி 5, பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியர்; 1906 —1907, 449—455*

கம்பராமாயண அச்சுப் பதிப்பில் இல்லாத, பல ஏட்டுப் பிரதிகளில் காணப்படும் அயோத்தியா காண்ட செய்யுட்கள் சில கம்பன் கவியாகவே இருக்கவேண்டும் என்னும் துணிபில் இங்குக் கூறியுள்ளார். படலத்தின் பெயர், எப்பாட்டின் பின் இடம்பெற வேண்டும் என்பனவற்றைத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

**67. கம்பராமாயணம்**

*செந்தமிழ்: தொகுதி 6. அ. க. வைத்தியலிங்க உபாத்தியாயர், 1907—1908; 126—129.*

ஏடுகளில் காணப்படும் அச்சில் வராத செய்யுட்களைத் தொகுத்துத் தருகிறார். தொகுப்பு முற்றுப் பெறவில்லை.

**68. கம்பராமாயணத்தின் விகற்பம்**

*செந்தமிழ்: தொகுதி 16. எம். ஜுலியன்வின்சும், 1917—1918, 313—314.*

அச்சில் வராத ஓலைச் சுவடியில் உள்ள, கையடைப் படலத்தின் இறுதியில் அமையும் 9 செய்யுட்களைக் கூறுகிறார்.

**69. கம்பராமாயணம்**

*செந்தமிழ்: தொகுதி 18, ந. சந்திரசேகரன், 1919—1920; 11—14.*

கம்பராமாயணத்துள் கும்பகருணன் சரிதம் கூறும் பாடல்கள் 'இமயப் படலம்' என்னும் பகுதியில் ஒட்டக்கூத்தர் உத்தர காண்டத்துள் கூறப்பட்டதற்கு ஏற்ப ஒரு சுவடியில் அமைந்துள்ளதாகக் கூறி அப்பாடல்களைக் கொடுத்துள்ளார்.

**சுருக்கம்**

கம்பன் காவியத்தில் தேவையான கதைப் பகுதிகளை மட்டும் கொண்டு, வருணனை போன்ற பகுதிகளை நீக்கிச் சுருக்கமாக அமைந்துள்ள கம்பன் பதிப்புகள் இங்குத் தரப்பட்டுள்ளன. இத்தகைய சுருக்கங்கள் (28) அனைத்தும் அரும்பதவுரையுடனோ அன்றி விரிவான உரையுடனோ அமைந்துள்ளன. சிறு பகுதி

களுக்கு மட்டும், காண்டங்கள் அடிப்படையில், காவியம் முழுமைக்கும் என இச் சுருக்கங்கள் அமைந்துள்ளன. வெ. ப. சுப்பிரமணிய முதலியாரின் கம்பராமாயண சாரங்கள், கம்பன் காவியம் முழுமைக்கும் அமைந்த சிறந்த சுருக்கங்களாகும். எஸ். நல்லபெருமாளின் கம்பன் காவிய சாரங்களும் (பால, அயோத்தியா காண்டங்கள்) சிறப்பாக அமைந்துள்ளன. அ. சே. சுந்தரராஜனின் கம்பர் கவிதைக் கோவை மூன்று பகுதி களாக அமைந்துள்ளது. ஆயின் இரண்டாம், மூன்றும் பகுதிகளே கிடைத்துள்ளன. சொ. முருகப்பன் (இராமகாதை-பாலகாண்டம், அயோத்தியா காண்டம்), சாமி. சிதம்பரனார் (கம்பராமாயணம் - தொகுப்பு), பி. ஜி. கருத்திருமன் (கம்பர் கவியும் கருத்தும்), கவித்தலம் துரைசாமி மூப்பனார் (ஸ்ரீமத் கம்பராமாயண அருங் கவி விளக்கம்) ஆகியோரின் நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

**70. சுந்தர காண்டம் - கடல் தாவுப் படலம் (உரை)**

*விவேகபாநு: தொகுதி 4, 1905.*

குறிப்பிட்டப் பாடல்களாகத் தொகுத்து, பொழிப்புரையும் குறிப்புரையும் தரப்பட்டுள்ளன.

**71. இராமாவதார செய்யுட் பாடந்தரமும் அரும்பத விளக்கமும்**

*செந்தமிழ்: தொகுதி 9, 10, சி. கணேசையர், 1910—1912 372—377; 460—465;*

கடல் தாண் படலம் (12 பாடல்கள்) மந்திரப் படலம் (13 பாடல்கள்) ஆகியவற்றுக்கு உரை தருகிறார்.

**72. கம்பராமாயணம் - பால காண்டம் (சுருக்கம்)**

*ராமசாமி நாயுடு சன்ஸ்; 1920; 134; அ 10*

3?0 பாடல்களைக் கொண்டு இச் சுருக்கத்தினை அமைத்துள் ளார். பாடல்களுக்கிடையில் தொடர்பினை உரைநடை மூலம் ஏற்படுத்துகிறார். பின் பகுதியில் குறிப்புகளில், பாடல்களுக்கு அரும்பத உரை கூறுகிறார். முதனினைப்பகராதியும் பிழைதிருத்த மும் உண்டு.

**73. கம்பராமாயணச் சுருக்கம் - அயோத்தியா காண்டம்**

*இ. ப. 1926; 225; அ 14.*

411 பாடல்களால் சுருக்கத்தை அமைத்துள்ளார். பாடல் களுக்கிடையே கதைத் தொடர்ச்சியை உரைநடையில் அமைத் துள்ளார். பின் பகுதியில் சுருக்கத்துள் எடுத்தாண்ட பாடல்

களுக்கு அரும்பத உரை கூறுகிறர். முதனினைப்பகராதி, பிழை திருத்தம் ஆகியவையும் உண்டு.

74. **கம்பராமாயணச் சுருக்கம் (ஆரணிய காண்டம்)**

சி. குமாரசாமி நாயுடு & சன்ஸ்; சென்னை; 1926; 156+196; அ௱ 12.

குறிப்பில் கம்பர் உவச்சர் குலம் என்றும் கி. பி. 885 முன் வாழ்ந்தவர் என்றும் கூறுகிறர். உரைநடையின் இடையே சேர்க்கப்பட்டுள்ளப் பாடல்களின் அரும்பதங்களுக்கு உரை. இலக்கணக் குறிப்பு முதலியன கொடுக்கப்பட்டுள்ளன.

75. **கம்பராமாயணம்.**

கலாநிலையம்: தொகுதி 1—7, தி. என். சேஷாசலம், 1928—1934.

பாலகாண்டம் முதல் கிட்கிந்தா காண்டம் அரசியற் படலம் வரை அமைந்துள்ளது. ஒவ்வொரு இதழிலும் தொடர்ச்சியாகக் கூறிச் செல்கிறர். ஒவ்வொரு இதழிலும் ஒவ்வொரு கட்டுரையாக, அக் கட்டுரைகட்குத் தனித் தலைப்புகள் இட்டுள்ளார். அக் கட்டுரைக்குளடங்கும் கதையைக் கூறி இடையிடையே பாடல்களைக் கொடுத்து அவற்றுக்கு உரையும் தருகிறர். நயத்தினையும் எடுத்துக்காட்டுகிறர்.

76. **கம்பராமாயண சாரம் (தொகுதி—1)**
**(பால. அயோத்தியா காண்டங்கள்)**

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்,

(பதிப்பாசிரியர்) கு. அருணைசலக் கவுண்டர்; வெ. ப. சு. நூல் நிலையம், மதுரைத் திரவியம் தாயுமானவர் இந்துக்கல்லூரி, திருநெல்வேலி-1. மு. ப. 1936; இ. ப. 1953; 26+218+197+5; ரூ 7, 8

நூல் பால காண்டம், அயோத்தியா காண்டம் என இரு பிரிவுகளாக உள்ளது. வெளியீட்டுரை (எஸ். இராமசாமிக் கோனர்), பதிப்புரை (கு. அருணைசலக் கவுண்டர்), முகவுரை (வே. சாமிநாதையர்) Introduction (Swami Vipulananda) முன்னுரை 13 பக், பாட்டு முதற் குறிப்பகராதி முதலியன அமைந்துள்ளன,

நூல் எளிமையும், தெளிவும், குறைந்த நேரத்தில் கம்பனைப் படிக்கக் கூடிய நல்வாய்ப்பும் கொண்டது. கம்பனின் சுவைகளை நயங்களை நன்ருக எடுத்துக் காட்டுகிறர்.

**77. கம்பராமாயண சாரம் (தொகுதி 2)**

**(ஆரணிய, கிட்கிந்தா சுந்தர காண்டங்கள்,)**

*வெ. ப. சுப்பிரமணிய முதலியார்*

(பதிப்பாசிரியர்) கு. அருணசலக் கவுண்டர், வெ. ப. சு. நூல் நிலையம். மு. ப. 1936; இ. ப. 1955; 175+169+215; ரூ. 3, 3-50; (கார்லிகோ.)

மூன்று காண்டங்களுக்கும் தனித்தனியாகப் பொருளடக்கம். படல அட்டவணை, பாட்டு முதற்குறிப்பகராதி கொடுத்துள்ளார், முந்நூல் போன்றே இதுவும் சுவையுடனுள்ளது.

**78. கம்பர் கவிதைக் கோவை. (தொகுதி-2)**

**கிட்கிந்தா—சுந்தர காண்டம்**

*அ. சே. சுந்தரராஜன்*

1952; 136; ரூ. 2-50.

சிறந்த கவிதைகளைத்தொகுத்து அப்பாடல்களுக்குப்பதவுரையாக உரை கூறியுள்ளார். ஒவ்வொரு தலைப்பின் போதும் சிறு விளக்கம் முன்னுரை போன்று அமைத்துள்ளார். தான் தேர்ந்தெடுத்துள்ள பாடல்களுக்கு, படலம், பாடல் எண் முதலியன தந்துள்ளார். இந்நூலுள் 190 பாடல்கள் உள்ளன. சு. நடேச பிள்ளை முன்னுரை வழங்கியுள்ளார். 18 கட்டுரைகள் உள.

**79. கம்பர் கவிதைக் கோவை—தொகுதி-3. (யுத்தகாண்டம்)**

*அ. சே. சுந்தரராஜன்.*

1952; 286; ரூ. 2-50.

23 கட்டுரைகள் மொத்தம் 404 பாடல்கள் உள்ளன.

**80. கம்பராமாயண சாரம் (மூன்றும் பகுதி) யுத்த காண்டம்**

*வெ. ப. சுப்பிரமணிய முதலியார்.*

(பதிப்பாசிரியர்) கு. அருணசலக் கவுண்டர்; வெ. ப. சு. நூல் நிலையம்; மு. ப. 1953; 19+599 ரூ. 7, 7-50.

வெளியீட்டுரை (S. ராமசாமிக் கோனர்), பதிப்புரை (கு. அருணசலக் கவுண்டர்), முகவுரை (உ. வே. சாமிநாதையர்;) Introduction (Swami Vipulananda) முன்னுரை, பாட்டு முதற்குறிப்பு ஆகியன அமைந்துள்ளன.

சிறுசிறு பகுதிகளாகத் துணைத் தலைப்புகளுடன் ஒவ்வொரு படலம் படலமாகக் கூறுகிறார். அடிக்குறிப்பில் உரை பேதத்தினைக் காட்டுகிறார். பாடல்களுக்குப் பொருள், பாடபேதம், பதங்களுக்கு உரை, பாடலின் சிறப்பிற்குச் சிலவிடங்களில் மேற்கோள் ஆகியவை தருகிறார்.

81. **இராமகாதை—பாலகாண்டம்**

சொ. முருகப்பன்

கம்பர் பதிப்பகம்; மகளிர் இல்லம்; அமராவதி புதூர்; மு. ப. 1953; 48+386+15; ரூ. 5.

முகவுரை 6 பக். (மு. கதிரேசச் செட்டியார்) அணிந்துரை 7 பக். (எஸ். வி. பி) முன்னுரை 10 பக். கதைச் சுருக்கம் 14 பக். கதா பாத்திரங்கள் 5 பக். படல அட்டவணை 1 பக் (17 படலங்கள்) சிறப்புப்பாயிரம் 6 பக், நூல் 386 பக், குற்றியலுகர விளக்கம் 2 பக். பாடல்களில் காணப்படும் பிற கதைக் குறிப்புகள். 6 பக், பாட்டு முதற் குறிப்பகராதி 7 பக். என நூல் அமைந்துள்ளது.

கிளைக் கதைகள் பற்றிய செய்தியைக் குறைத்துள்ளார். பழைய இலக்கியங்களிலிருந்து மேற்கோள், ஒவ்வொரு படலத்திலும் உள்ள கதை, கதாப்பாத்திரங்களைப் பற்றிய ஓர் சிறு அறிமுகம் தருகிறார். பாடல் உரையின் கீழ்த் தேவையான விளக்கமும் தருகிறார். அடிக்குறிப்பில் அரிய பதங்களுக்கு உரை தருகிறார். பாடல்களில் காணப்படும கதைக் குறிப்புகளையும், அவை வரும் பாடல்களின் எண்களையும் தொகுத்துக் கூறி அக்கதையையும் சுருக்கமாகக் கூறியுள்ளார். கதைத் தொடர்பு விடாதபடி பாடல்களைத் தொகுத்துள்ளார். ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்புத் தந்துள்ளார். சில இடங்களில் புத்துரையும் வழங்கியுள்ளார். எளிமையான உரைநடையிலமைந்துள்ளது. கம்பனைப் படித்துச் சுவைக்கச் சிறந்த நூல்.

82. **சித்திர ராமாயணம்—பிரகலாத சரித்திரம்**

ஆனந்தவிகடன்; பி. ஸ்ரீ; 1954, ஜூலை முதல் தொடர்ந்து 24 இதழ்களில்

பாடல்களைத் தொகுத்து, அப்பாடல்களுக்கு உரையும், தேவையான இடங்களில் கதைத் தொடர்ச்சியை உரைநடையிலும், உட்தலைப்புகள் இட்டுத் தருகிறார்.

விபீஷணசரணாகதி, அனுமன் தூது, யுத்தகாண்ட நிகழ்ச்சிகள் முதலியவற்றையும் சித்திர ராமாயணமாகக் கொடுத்துள்ளார். அவற்றின் தொடக்கமும் முடிவும் அறியமுடியவில்லை.

**83. இராமகாதை—அயோத்தியா காண்டம்**

சொ. முருகப்பன்.

கம்பர் பதிப்பகம்; மு. ப. 1956; 637, ரூ. 7-50

ராய. சொ. அவர்கள் இந்நூலுக்கு முன்னுரை வழங்கியுள்ளனர். கதைச் சுருக்கம், கதை மாந்தர் பற்றிய சிறுகுறிப்பு, பாடல்களில் காணப்படும் கதைக் குறிப்புகள், பாட்டு முதற் குறிப்பகராதி முதலியன நூலின் முடிவில் உள்ளன. உரை பொழிப்புரையாகவும் தேவையான இடங்களில் விளக்கவுரையாகவும் அமைந்துள்ளது. அரிய சொற்களுக்குப் பொருளும் கூறப்பட்டுள்ளது.

**84. கம்பராயணம் (தொகுப்பு)**

சாமி. சிதம்பரனர்.

என். சி. பி. எச். பிரைவேட் லிமிடெட், 6. நல்லதம்பிச் செட்டி தெரு, சென்னை-2; மு. ப. 1962; 16+214+48

முன்னுரை (மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை) அணிந்துரை (கோ. சங்கரராசன்.) பதிப்புரை (சிவகாமு சிதம்பரனர்) பாட்டு முதற் குறிப்பகராதி உள. 3949 பாடல்கள் உள்ளன. படலங்களில் இடையே உட்தலைப்புத்தருகிருர். அடிக்குறிப்பில் ஒவ்வொரு பாடலுக்கும் அரிய பதங்களுக்குப் பொருள் கொடுக்கிருர்.

**85. கம்பர் கவியும் கருத்தும்**

பி. ஜீ. கருத்திருமன்,

தமிழ்ப் புத்தகாலயம்; 576. பைகிராப்ட்ஸ் ரோடு; சென்னை-5; மு. ப. அக். 1963; இ. ப. டிச. 1968; 593+14; ரூ. 12-50.

டாக்டர். எஸ். ராதா கிருஷ்ணன், கே. காமராஜ், டாக்டர் சி. பி. ராமஸ்வாமி ஐயர், அ. கந்தசாமி பிள்ளை, கி. வா. ஜ., நாமக்கல் கவிஞர்; பெ. தூரன்; சி. சுப்பிரமணியம் முதலியோரின் அணிந்துரைகள் நூலை அணி செய்கின்றன.

கம்பர் ஓர் அறிமுகம் (17—80), பால காண்டம் (81—144), அயோத்தியா காண்டம் (145—220), ஆரணிய காண்டம் (221—280), கிட்கிந்தா காண்டம் (281—3.0), சுந்தர காண்டம் (331—401), யுத்த காண்டம் (401—593 , பாட்டு முதற் குறிப்பகராதியும் உண்டு.

'தியாக விநோதன் தெய்வப் பொன்னி நாடு' என்ற பாடலைக் கொண்டு தியாக விநோதன் மூன்றுங் குலோத்துங்கனே அவன்

காலமாகிய 1178—1216தான் கம்பர் காலம். (21) வெண்ணெய் நல்லூரில் சடையப்ப வள்ளலின் கொடையால் இராமாயணம் பாடினர். (23) அவர் 72 ஆண்டுகள் வாழ்ந்திருப்பார் என்று கூறலாம். (25) உலகச் சூழ்நிலையில் அரசியலிலும், மதத்திலும் சமரச நோக்குடன் மறுமலர்ச்சி காண விழைந்தார். (27) மக்கள் சமநிலையுடன் பொருளாதார சமூக வாழ்வில் சுதந்திரமாக வாழ் வதுதான் நல்ல அரசியல்முறை என்பதை எடுத்துக் காட்டிய கம்பர், அவ்வரசியலை எவ்வாறு அமைக்க முடியும் என்பதையும் விளக்குகின்ருர். (29) ஆங்கில இலக்கியத்துடன் ஒப்பமைந்துள்ள கம்பராமாயணப் பகுதிகளையும் சுட்டியுள்ளார். கம்பனில் காணப் படும் சிறந்த உவமைகளைக் காட்டுகிருர். இராமன் இன்பத்துள் இன்பம் விழையவில்லை. ஆகவே துன்பத்துள் துன்பம் உறவில்லை. மனித இனம் முழுவதும் இக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதே கம்பரின் உயர் லட்சியமாகும். காப்பியத்தின் சிறப்பான காட்சிகள் சிலவற்றையும் விளக்கியுள்ளார். விதி பற்றிய கம்பர் கொள்கையாக, விதிக்கும் மதிக்கும் நடக்கும் போராட்டத்தில் விதியே வெல்லும் என்பதே என்றுரைக்கிருர். விதி பற்றி கம்பனில் வரும் இடங்களைச் சுட்டுகிருர். ஒவ்வொரு காப்பியப் பாத்திரங்கள் பற்றியும், சிறு குறிப்புத் தருகிருர். சேவையுணர்ச்சி, கற்புடைமை பற்றியும் பேசுகிருர். படல வாரி யாகப் பாடல்களைத் தொகுத்து அவற்றுக்குக் கருத்துரையும் அரும்பத உரையும் கூறுகிருர். மொத்தப் பாடல்கள் 1008. உரை தெளிவாகவும் எளிமையாகவும் உள்ளது. சுருங்கிய நிலையில் கம்பனைப் படிக்கச் சிறந்த நூல் இந்நூல்.

**86. கம்பராமாயண சாரம் - அயேத்தியா காண்டம்**

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

வெ. ப. சு. நூல் நிலையம், 1969;13+221; ரூ. 4.

உரிமையுரை 1 பக். முன்னுரை 13 பக். நூல் 221 பக்.

முன்னுரையில் மலையாளக் கோவில்களில் கம்பராமாயண பிரசங்கம் செய்யப்படுவதையும் அதற்கு மானியம் வழங்குவதை யும், தெலுங்கில் சுந்தர காண்டம் மொழிபெயர்க்கப் பட்டுள்ள தையும் கூறுகிருர். 12 படலங்கள் உள்ளன. கதைத் தொடர்ச்சி யில் தேர்ந்தெடுக்கப்பட்ட கவிதைகளைப் புகுத்தி அவற்றிற்கு விளக்கவுரையும் மேற்கோளும் தருகிருர்.

**87. கம்பராமாயண சாரம் - ஆரணிய காண்டம்**

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

வெ. ப. சு. நூல் நிலையம்; 1969; 213; ரூ.4

ச. சோமசுந்தரம் அவர்களின் முகவுரையுடன் கூடியது. நான்கு பக்கங்களுக்குக் கம்பனின் சிறப்புப் பற்றிக் கூறுகிறார். சாரத்தின் அரிய பதங்களுக்குப் பொருள் அடிக் குறிப்பில் தருகிறார். உட்தலைப்புகள் இட்டுக் கதையைக் கூறிச் செல்கின்றார். சுவர்க்க நீக்கத்தோடு கம்பன் கவியை ஒப்பிட்டுச் சீதையிடம் இராவணன் உரையாடுவதைக் கவிதை வடிவில் தந்துள்ளார். (166—167) ஓசை நயம்பட உரைநடையைப் பல இடங்களில் அமைத்துள்ளார். 'அட! முட்டாள்! என் செய்திட்டாய்! உன் வாழ்வைச் சுட்டாய்! கிளையோடு கெட்டாய்! இவளை விட்டால் பிழைப்பாய்! இல்லா விட்டால் இறப்பாய்! துட்டா...' (176) கம்பன் பாடல்களில் வரும் உவமைகளையும் ஆங்காங்கே தன் உரைநடையில் அமைத்து நடையைச் சிறப்புச் செய்துள்ளார்.

சடாயு வீழ்ந்த பின் இராவணன் தேரில் சீதை மயங்குதலை, 'சீதையின் துன்ப மிகுதியை இச் சமயத்தில் இதற்கதிகமாக வருணித்தால் வாசகர் மனம் தாங்க மாட்டாமல் சலித்து விடுமென்று கம்பர் இங்கே அவள் துன்ப உணர்வு தொலையும்படி அறிவு மயங்குதற்கேற்ற ஏது எடுத்துக்கூறி, ஒருவர் இறந்து விடாமல் எவ்வளவு துன்பமடையக் கூடுமோ, அவ்வளவு துன்பமடைந்தபோது அயர்ந்து அறிவு மயங்குதல் இயற்கை நிகழ்ச்சியாயிருக்கும் உண்மை புலப்பட, அவள் அறிவு மயங்கி வீழ்ந்தாளென்ற உயரிய கவித்துவம் ஊன்றி நோக்குதற்குரியது (181) என்று பாராட்டியுள்ளார். வடமொழிச் சொற்களை எதுகை மோனைக்குப் பயன்படுத்தி அதற்குப் பொருளும் கூறியுள்ளார். 'அட்டதிக்கும் உற்று அட்ட பாலரை (எட்டுக் காவலர்) அடர்த்து வெற்றி பெற்ற வீரனே'. (63) சூர்ப்பம் (முறம்—சுளகு) போலும் நகத்தையுடையவளென்றும் பொருள் உள்ள சூர்ப்பணகா என்ற வடசொல் தமிழில் சூர்ப்பநகையென வழங்குவது தவறெனக் கொண்டு ஓர் உரையாசிரியர் சூர்ப்பணகையெனத் திருத்திப் பதிப்பித்திருக்கிறார். தவறாயினும் நெடுங்காலம் ஆன்றோராட்சிப் பட்டுவிட்ட சொற்களை அவ்வாறே ஆளுதலே தகுதியாகத் தோன்றுகிறது (37) என்று பெயராராய்ச்சியும் செய்கிறார்.

கம்பராமாயணச் சுருக்க நூல்களில் இந்நூல் மிகச் சிறந்த இடத்தை வகித்துப் பல அரிய கருத்துகளையும் வழங்குகிறது.

88. **கம்பராமாயண சாரம் - சுந்தர காண்டம்**
**(காட்சி, நிந்தனை, திருவடி தொழுத படலங்கள்)**

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

வெ. ப. சு. நூல்நிலையம்; 1969; 77, ரூ. 2.

ச. சோமசுந்தரம் முன்னுரை வழங்கியிருக்கிறார். அணிநயம், சிறப்பு, பாடபேதம், மேற்கோள், உரை வேறுபாடு முதலியன குறிப்பிடுகிறார். சீதையின் துக்க நிலையைத் தென்னிசன் பாடலோடு ஒப்பிடுகிறார். 'இன்றிறந்தன, நாளையிறந்தன' எனும் பாடலுக்கு, இன்று இரங்குவாய் என்று எண்ணியிருந்த நாட்களும், நாளை நாளை இரங்குவாய் என்று எதிர்பார்த்திருந்த நாட்களும் கழிந்தன, என உரை தருகிறார்.

'குன்று நீயெடுத்த நாடன் சேவடிக் கொழுந்தா உன்னை வென்றவன்' என்னும் பாடலில் உள்ள சேவடிக் கொழுந்து என்பதற்கு ஆசிரியர் கூறியுள்ள விளக்கம் சிறப்பாயுள்ளது, ...கொழுந்து கொம்பு கொடிகளின் முடிவில் தோன்றும் இளந் தளிர். அதுபோலப் பாதத்தின் முடிவில் விரல் இருத்தலைப் பாவனையிற் கொண்டு செந்தீயொத்த சிவந்த திருமேனியுடைய சிவபரஞ்சோதியின் சிவந்த பாதத்தின் முடிவில் செந்தீக் கொழுந்து போலத் திகழும் செவ்விரலைச் சீதை 'சேவடிக் கொழுந்து' எனச் செப்பினுளென்ற நயம் பாராட்டற்பாலது. வேத முடிவில் உள்ளவனென்பது குறிக்கும் 'மறைக் கொழுந்து' என்ற பெயர் சிவநாமங்களுடன் ஒன்றாயிருத்தல் இங்கே நினைவு கூரத் தக்கது.(32)

89. **கம்பராமாயண இன்கவித்திரட்டு-பால கண்டம் (உரையுடன்)**

வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

செந்தமிழில் வெளியிடப்பட்ட பின் நூலாகத் தொகுக்கப் பட்டது. 210 பாடல்கள் அடங்கியுள்ளன. கருத்துரையில் தேவையான விளக்கங்கள் தருகிறார். குறிப்புரை, மேற்கோள் ஆகியவையும் உண்டு.

90. **கம்பன் காவிய சாரம் (பால காண்டம்)**

எஸ். நல்லபெருமாள்

வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17, மு. ப. 1973, விலை ரூ. 7 பக். 12+8+238

இந்நூல் பால காண்டத்தின் சுருக்கப் பதிப்பு வெளியீடாக அமைந்துள்ளது. அவையடக்கம், ஆற்றுப்படலம், நாட்டுப் படலம், நகரப்படலம், அரசியற்படலம், திரு அவதாரம், கையடைப்படலம், தாடகை வதைப்படலம், வேள்விப்படலம், அகலிகைப்படலம், மிதிலைக் காட்சிப்படலம், குலமுறை கிளத்து படலம், கார்முகப்படலம், எழுச்சிப்படலம், வரைக்காட்சிப் படலம், பூக்கொய்படலம், நீர் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம், எதிர்கொள் படலம், உலாவியற் படலம், கோலங்காண்

படலம், கடிமணப் படலம், பரசுராமப் படலம், பால காண்டம்—ஒரு கண்ணோட்டம் என்னும் தலைப்புகளைக் கொண்டமைகிறது. நூலின் முன்னர் கம்பனைப் பற்றியும் கம்பராமாயணத்தைப் பற்றியும் வெளிவந்துள்ள புகழுரைகளில் சில தொகுக்கப் பட்டுள்ளன. படலவாரியாக அமைந்து கதைச் சுருக்கமும், பாடல்களுக்கு உரையும், மேற்கோளுமாகவே இந்நூல் அமைந்துள்ளது. சில படலங்களுக்கு ஓரிரு வரிகளில் படலச்சுருக்கமும் தரப்படுகின்றது. டென்னிசன், மில்டன், ஷேக்ஸ்பியர், ஹோமர், சர். பிலிப் சிட்னி, எஸ். டானியல், கேம்பல், எட்மண்ட் ஸ்பென்சர், ஐன்ஸ்டீன், காளிதாசர், விகடநிதம்பா, விஷ்ணு பிரம்மசாரி, தேவர், இளங்கோ, புகழேந்தி, ஜெயங்கொண்டார், ச. து. சு. யோகியார், ஆகியோரின் பாடற் கருத்துகளும், மனுஸ்மிருதி, ரிக்வேதக் கருத்துக்களும் சீறாப்புராணம், பெரிய திருமொழி, நன்னூல், ஆசியஜோதி, குற்றாலக் குறவஞ்சி, குமாரசம்பவம், நளவெண்பா, தஞ்சைவாணன் கோவை, திவ்ய பிரபந்தம் ஆகியவற்றின் கருத்துகளும் மேற்கோள்களாகத் தருவது சிறப்புடையது. சில படலங்களைக் காட்சிகளாகப் பிரித்தும் தரப்படுகின்றது—வரைக்காட்சிப் படலம், நீர் விளையாட்டுப் படலம். சில தொடர்களுக்கு விளக்கங்களும் தரப்படுகின்றன.

## 91. கம்பர்—1000

அ. கு. ஆதித்தர்.

தமிழ் வளர்ச்சி மன்றம், சென்னை-1; 1974; 202; ரூ. 8.

ஒவ்வொரு காண்டத்திலிருந்தும் பாடல்களைத் தொகுத்துள்ளார். (100+200+200+100+100+300) படலவாரியாகத் தொகுத்து அரும்பத உரை வழங்கியுள்ளார். பாடல்களுக்கிடையே உள்ள கதைத் தொடர்பினையும் கூறியுள்ளார். இரணியப் படலம் தந்து இறையியல் அளித்தார் கம்பர். கம்பனைப் படிக்கும் போதே கால்கைகள் நடித்து நிற்கும் என்பது குறிப்பிடத்தக்கது என்கிறார். கம்பனைப் பற்றிய ஓர் சிறிய அறிமுகத்தைப் பாயிரமாகத் தந்துள்ளார். தொகுப்பாளர் பாயிரம், ஓம்படை முதலியனவும் உண்டு. செய்யுள் முதற் குறிப்பகராதியும் பிழைதிருத்தமும் தந்துள்ளார். டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம் முன்னுரை வழங்கியுள்ளார்.

## 92. கம்பர் காவிய சாரம் (அயோத்தியா காண்டம்)

எஸ். நல்லபெருமாள், வானதி பதிப்பகம்; மு. ப. பிப். 1977; 299; ரூ. 10

மு. மு. இஸ்மாயில் முன்னுரை வழங்கியுள்ளார். படல வாரியாகப் பாடல்களும், பொருளும் நயமும் இடையிட்டுக் காவிய சாரத்தை அமைத்துள்ளார்.

தசரதன் கைகேயியிடம் இரக்கும்போது, 'கண்ணே வேண்டு மெனினும் பெறுவாயேல்' என்பதில் பெண்தன்மைக்கு இயையப் பெற விரும்ப மாட்டாய் என்ற குறிப்பும், 'மண்ணே கொள் நீ' என்று சொல்வதில் பரதன் கொள்ளமாட்டான் என்ற கருத்தும் தொனிக்கிறது, மற்றைய வரத்தைப் பின்னுல் கூட (62) கேட்டு விடாதே என்ற குறிப்பும் தோன்ற, 'மறந்துவிடு' என்கிருன். கம்பன் காணும் கோசலம், அயோத்தி, கங்கை இவைகள் சோழ நாடாய், தஞ்சையாய், காவிரியாய்த் திகழுகின்றன. (78) இராமனது வடிவைமையோ, மரகதமோ...என வருணிப்பதில்; மை—நிறம், மரகதம்—நிறம்+ஒளி, கடல்—நிறம்+ஒளி+தன்மை, முகில்—நிறம்+ஒளி+தன்மை+அசைவு எனக் கூறிப் பின் விரிவாக விளக்கம் தருகிருர்.(170)

கம்பன் முன் கூறியிருப்பவற்ருேடு தொடர்புபடுத்தியும், (16, 84, 138) வடமொழி, மலையாளம், ஆங்கிலம், இந்தி, கன்னடம் (15, 16, 92, 19, 28, 57, 59, 65, 69) போன்ற பிற மொழி இலக்கியங்களுடன் தொடர்புபடுத்தியும் முற்கால, பிற்கால, தற்காலக் கவிஞர்களுடன் தொடர்புபடுத்தியும் கம்பனின் நயம் காட்டுவது சிறப்பாயுள்ளது.

**93. ஸ்ரீமத் கம்பராமாயணக் கருப்பொருள்** (மூலமும் உரையும்)
பக். 121

உ. வே. தி. ஈ. ஸ்ரீநிவாச ராகவாசாரியர், கோ. இராசகோபல பிள்ளை, ரா. ஸ்ரீநிவாச முதலியார் ஆகியோர் உரைச் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளனர். இராமயணத்தை மிகச் சுருங்கிய அளவில் தொகுத்து அப்பாடல்களுக்கு பொழிப்புரை, குறிப்புரை கொடுத்துள்ளார்.

**94. சீதாகல்யாணம்** (தொகுப்பு)

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்.
கம்பன் கழகம், காரைக்குடி, 71, ரூ. 75

கம்பராமாயணம் 1-4, இராமாயணக் கதை 5-10, கடவுள் வணக்கம் 11, அவையடக்கம் 12-13. சரயுநதி 14, கோசலநாடு 15-17, அயோத்திநகரம் 18-19, தசரதனது அரசியல் 20-21, இராமனது அவதாரம் 22, இராம இலக்குமணரை விசுவாமித்திரர் அடைக்கலமாகப் பெறுதல் 23-26, தாடகை வதை

27-30, இராமன் விசுவாமித்திரர் வேள்வி காத்தல் 31-32, அகலிகை சாப விமோசனம் 33-34, மிதிலா நகரத்தை இராம லக்குமணர் காணுதல் 35-45, விசுவாமித்திரர் இராமனது குல மரபு கூறுவது 46-48, இராமன் வில்லொடித்தது 49-56 தசரதன் பரிவாரங்களுடன் மிதிலைக்குப் புறப்படல் 57-62, இராமன் உலா வருதல் 63-65, சீதைக்கு அலங்காரம் செய்தல் 66-68, சீதா கல்யாணம் 69-71.

பாலகாண்டத்தில் ஆரம்பம் முதல் சீதையின் திருமணம் முடிய உள்ள பாடல்களில் மிக்கச் சுவையுடைய பாடல்கள் நூற்றைத் தொகுத்து அவற்றுக்கு உரையெழுதிச் செல்கிறார்.

95. **கம்பராமாயணம் (சுருக்கம்) பாலகாண்டம்**

*(பிரசுரிப்பது) வ. வெ. சு. ஐயர், கம்பநிலையம், புதுச்சேரி 47+212.*

*முன்னுரை: தி. வெ. சேஷகிரி அய்யர், முகவுரை: வ. வெ. சு. ஐயர்*

முகவுரையில் கம்பன் ஜாதியில் உவச்சன், காளிகோயில் பூசாரி, தகப்பன் ஆதித்தன், ஏரெழுபது முதல் நூல். ஒட்டக் கூத்தன் பாடியதாகக் கூறப்படும் 'இன்றைக்கோ கம்பன் இறந்த நாள்' எனும் பாடலில் உள்ள அரத்தால் கம்பன் இறக்க, கூத்தர் அதனை மாற்றி 'கம்பன் எழுந்த நாள்' என்று படிக்கக் கம்பன் உயிர் பெற்றெழுந்ததாக ஒரு கதை உண்டு (21) ஒட்டக்கூத்தர் சமகாலத்தவரன்று. கலிங்கத்துப்பரணிக்கு முற்பட்டது கம்பராமாயணம். கம்பன் 10ஆம் நூற். முற்பட்டவர் என்பன போன்ற செய்திகள் அடங்கியுள்ளன. பாடபேதங்கள், அரும் பொருள் விளக்கம், சில இலக்கணக் குறிப்புகள், பதப்பிரிவினை விளக்கம், அருஞ்சொல் அகராதி முதலியனவும் உள்ளன.

97. **ஸ்ரீமத் கம்பராமாயண அருங்கவி விளக்கம்**

*கவித்தலம். துரைசாமி மூப்பனார், மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை*

இலக்குமணப் பிள்ளை, யாழ்ப்பாணம் தமோதரம் பிள்ளை, மு. வை. ஐயாத்துரை ஐயர், நாராயணசாமி பிள்ளை, புதுவை ஏ. வே. இராமநுஜ நாவலர், கோ. இராஜகோபலப் பிள்ளை ஆகியோர் முகவுரை வழங்கியுள்ளனர். கம்பநாட்டாழ்வார் சரித்திரச் சுருக்கத்தில் கம்பர் கம்பநாடுடையவர். ஒட்டக்கூத்தர் காலத்தவர் என்று கூறுகிறார்.

ஆறு காண்டங்களில் மொத்தம் 1033 பாடல்களைத் தொகுத்து அவற்றுக்குப் பதவுரை கூறியுள்ளார். ஒவ்வொரு காண்டத்திலும் எடுத்த பாடல்களுக்கு அக்காண்டங்களின் முடிவில் செய்யுளகராதி கொடுத்துள்ளார்.

97. **கம்பராமாயணம்**
பக். 1—229
அரும்பதங்களுக்கு உரையுடன் கூடிய சுருக்கமாகும்.

**வசனம்**

கம்பன் வாக்கினைப் படித்தின்புற முடியாதோர்க்கு உதவும் நோக்கில் இவ்வசனங்கள் அமைந்துள்ளன. 27 வசன நூல்கள் கிடைத்துள்ளன. சிறுவர்களுக்கும் (கி. மா. பக்தவத்சலன்—இராமாயணக் கதைகள்) இளைஞர்களுக்கும் (சொ. முருகேச முதலியார்—இளைஞர்க்கான கம்பராமாயணக் கதை) ஏற்றவகையில் இவ்வசனங்கள் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. நாடக வடிவில் தெ. துரைசாமி அமைத்துள்ளார். (கம்பநாடகம்) ஸ்ரீமத் கம்பராமாயண வசன சங்கிரகம் என்றொருநூல் (ந. ப. விலை ரூ. 4) வெளிவந்ததை ஆனந்தபோதினி ஒன்றின் விளம்பரத்தால் அறியமுடிகிறது. ந. கி. இராமசாமியின் 'கோசலை நாட்டு வள்ளல்' திரைப்படம் ஒன்றினுக்கு நேர்முக வருணனை செய்வது போன்ற அமைப்பில் புதுமையாக அமைந்துள்ளது. பொதுநிலையில் பெரும்பான்மை வசன நூல்கள் கம்பனை உரைநடையில் தருவதாகவே அமைகிறது. திருமுருக கிருபானந்தவாரியார் (கம்பராமாயண விரிவுரை) மு. ரா. கந்தசாமிக் கவிராயர் (இராமகாதை)நா. சி. இராமசாமி ஆகியோர் தங்கள் நூல்களில் தங்களின் எண்ணங்களையும் கலந்து சுவைபடத் தருகின்றனர். வசன நூல்கள் வான்மீகத்தையும் கம்பனுடன் இணைத்துக் கூறும் போக்குக் காணப்படுகிறது. (முத்தையா முதலியார்—இராமாயணசாரம், சுவாமி சித்பவானந்தர்—அறம் வளர்த்த நம்பி, இ. மா. பக்தவத்சலன்-இராமாயணக் கதைகள்) உத்தரகாண்டத்திற்கும் சு. அ. இராமசாமிப் புலவர், திருச்சிற்றம்பலத் தேசிகர் ஆகியோர் வசனம் அமைத்துள்ளனர்.

98. **ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்** (யுத்த காண்டம்)
வீராசாமி முதலியார் + மன்ருரு முதலியார் + இராசகோபால பிள்ளை, முனிசாமி முதலியாரது மெய்ஞ்ஞான சூரியோதய விலாச அச்சுக் கூடம், 1864.
க—3

அ. சுப்பராய பிள்ளை, கேசவ சுப்பராய முதலியார், இராம சாமி நாயக்கர் ஆகியோர் சாத்துக் கவிகள் வழங்கியுள்ளனர்' படலவாரியாக வசனம் அமைந்துள்ளது. பிற்சேர்க்கையாக ஸ்ரீமத் ராமாயண அரங்கேற்றச் சுருக்கம் உள்ளது.

99. **ஸ்ரீமத் கம்பராமாயண வசனம் (பால—சுந்தர காண்டம்)**
(பதிப்பாசிரியர்) ப. மு. செல்வராஜ முதலியார், 1891, 470
படலவாரியாக வசனம் உள்ளது.

100. **இராமாயண ஸாரம்**

முத்தையா முதலியார்
ஸி. குமாரசாமி நாயுடு அன் ஸன்ஸ், சென்னை, மு. ப. 1923, 136, அணா 12

முகவுரை 3-31, இளமைப் பருவமும் திருமணச் சிறப்பும் 32-61, நாடு துறந்து காடுபுகுதல் 61-95, சகோதர வாஞ்சை 91-136.

ஜடாயுவைக் கண்டது வரை எழுதியுள்ளார். கம்பனையும் வால்மீகியையும் இணைத்துக் கதை கூறுகிறார்' உட்தலைப்புகள் இட்டு மேற்கோளும் காட்டிச் செல்கிறார். செய்யுள் முதற் குறிப்பகராதி கொடுத்துள்ளார்.

101. **ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்** (முதல் பாகம்) **(பால—சுந்தர காண்டம்)**

திருச்சிற்றம்பல தேசிகர்
பி. இரத்தின நாயகர் சன்ஸ், 1950, 641, ரூ. 15

ஸ்ரீமத் ராமாயண அரங்கேற்றச் சுருக்கம் (அரங்கேற்ற நிகழ்ச்சிகள்) ஸ்ரீமத் ராமாயண வைபவ சங்கிரகம் இவை முதலில் அமைந்துள்ளன. படலவாரியாக, கம்பராமாயணத்தைக் கதை வடிவில் கூறியுள்ளார் மிக எளிய நடையில்.

102. **அறம் வளர்த்த நம்பி**

சுவாமி சித்பவானந்தர்
தபோவனப் பிரசுராலயம்; திருப்பராய்த்துறை; நா. ப. 1954; 62.

புத்ரோத்தமன் (1—15), வாலி தொடுத்த வழக்கு (15—38), ராமராவண யுத்தம் (38—62)

இராமன் பிறப்பு முதல் காடேகியது வரையிலான கதை நிகழ்ச்சிகளை வால்மீகி, கம்பர் வழி கூறுகிறார். இடையிடையே அறக் கருத்துகளைக் கூறிச் செல்கிறார். இராவணனுக்கு அழச் செய்பவன் என்ற பொருள் கூறி, அவன் பத்துத் தலைகளைக் கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து என்று கூறுகிறார்.

103. **ஸ்ரீமத் கம்பராமாயண வசனம்** —இரண்டாம் பாகம்
(உயுத்த - உத்தர காண்டம்)

திருச்சிற்றம்பல தேசிகர்

திருமகள் விலாச அச்சியந்திர சாலை; சென்னை; 1956; 822; ரூ. 12

உத்தர காண்டத்தையும் கம்பர் இயற்றியதாகக் கொண்டமைக்குக் காரணங்கள் இல்லை.

104. **கம்பராமாயண வசனம்** (முதல் பகுதி)
**பால - சுந்தர காண்டங்கள்**

திரு. சு. அ. இராமசாமிப் புலவர்

கழகம்; மு. ப. 1956; இ. ப. 1967; 17+516+3; ரூ. 5

பதிப்புரை (கழகத்தார்) கம்பர் வரலாறு, கம்பராமாயண சிறப்பு, நூல் அரங்கேற்றம், நூற்பயன், பாட்டு முதற் குறிப்பு அகரவரிசை முதலியன உள.

105. **கம்பராமாயண வசனம்** - (இரண்டாம் பகுதி)
**(உயுத்த, உத்தர காண்டம்)**

திரு. சு. அ. இராமசாமிப் புலவர்

கழகம், மு. ப. 1956; 9+419

பதிப்புரை, நூலுள் வந்துள்ள கம்பராமாயணப் பாடல்களின் முதற் குறிப்பு அகரவரிசை அமைந்துள்ளன. ஒவ்வொரு படலம் படலமாகக் கதை கூறுகிறார். சிறு சிறு உட் தலைப்புகளையும் கொடுக்கிறார். பாடல்களைப் பயன்படுத்தும் பொழுதும் அதன் உரைகளைக் கூறிவிட்டே பாடல்களைக் கூறுகிறார். கதையை அப்படியே கூறிக்கொண்டு வருகிறார். உத்தர காண்டத்தையும் இத்துடன் சேர்த்திருப்பதற்குக் காரணம் கூறவில்லை.

106. **ஸ்ரீ கம்பராமாயணம் வசனம்** (முதற் பகுதி)

மே. வீ. வேணுகோபால பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், 135, பவழக்காரத் தெரு; சென்னை - 11, மு. ப. 1958; 320; ரூ. 1-50

பால காண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம் முதலியவற்றுக்குப் படல வாரியாக வசனம் கூறியுள்ளார். சித. இராமநாதன் பதிப்புரை வழங்கியுள்ளார்.

107. **இராமாயணக் கதைகள்** (முதற் புத்தகம்)

கி. மா. பக்தவத்சலன்

வள்ளுவர் பண்ணை; பிராட்வே; சென்னை - 1; மு. ப. 1961; இ. ப. 1964; 2+62; ரூ. 1

கோசலநாடு (5—1.) எல்லாம் நன்மைக்கே (16—24) தாடகை வந்தாள் (25—34) மூவடி மண் (35—42) கல்லானாள் (42—45)

சொன்னால் அடங்கி வந்த மனம் (46—66) முதலிய கதைகள் கொண்டது.

தசரதன் நிலை, ஆட்சிச் சிறப்பு, கலைக்கோட்டு முனிவர் வரலாறு, யாகம் நடந்தது, குழந்தைகள் பிறந்து வளர்ந்தது ஆகியன முதல் கதையில் பேசப்படுகிறது. அடுத்த கதையில் விசுவாமித்திரர் இராமனைக் கேட்கத் தயரதன் மறுத்தது, பின் அனுப்பியது இடம் பெற்றுள்ளது. தாடகை வரலாறும் வதமும், கோமதி நதியின் வரலாறும் தாடகை வந்தாளில் இடம் பெற்றுள்ளது. மூவடி மண்ணில் சோலையின் வரலாறு, யாக சாலையைக் காத்து நின்றது, மாரீசன் சுபாகுவுடன் போர், மிதிலை நோக்கிச் சென்றது ஆகியவை கூறப்பட்டுள்ளது. அகலிகையின் சாப விமோசனம் கல்லானளில் காணப்படுகிறது. சீதையைக் கண்டது, இராமன் முன்னோர் வரலாறு, சிபி, சதுரன், பகீரதன், இரகு முதலியோர் வரலாறும், வில்லை ஒடித்து திருமணம் புரிந்தது, பரசுராமனை வென்றது, அயோத்தி வந்தது ஆகியவை இறுதிக் கதையுள் அடங்கியுள்ளது.

முன்னுரையில் சிறுவர் இலக்கியம் என்று கூறியுள்ளதற்கு ஏற்ப எளிய நடையில் அமைந்துள்ளது. பாடல் தொடர்களையும், கம்பர் சொற்களையும் அப்படியே பயன்படுத்தியுள்ளார். வான்மீகி, கம்பர் இருவர் கூற்றுகளையும் இணைத்தே கதை கூறுகிறார். தாரை, அகலிகை, சீதையின் காதல் மணம் ஆகியவற்றைக் கம்பரின் வழியிலேயே கூறியுள்ளார். சிறுவர்களுக்குப் பயன்படும்படி அமைத்துள்ள ஆசிரியரின் இம் முயற்சி வரவேற்கத் தக்கது.

**108. இராமாயணக் கதைகள்** (இரண்டாம் புத்தகம்)

கி. மா. பக்தவத்சலன்

வள்ளுவர் பண்ணை. மு. ப. 1961; இ. ப. 1964; 2+66; ரூ. 1

மந்தரை சூழ்ச்சி (5—19) கேட்டது கொடுத்தான் (20—26) அரசர் கட்டளை (27—37) தசரதன் செய்த தவறு (38—43) வனம் சென்றான் (44—50) ஆளவும் உளன் பரதன் (51—59) ஐந்து பேர் (60—64) சித்திரகூடம் (65—70) முதலிய கதைகள்.

தசரதன் ராமனுக்கு முடிசூட்ட முடிவு பண்ணியது, நகர் அழகுபடுத்தியது, கூனி அறிந்து கைகேயியின் மனத்தை மாற்றியது ஆகியவை மந்திரை சூழ்ச்சிக் கதையாகும். அடுத்த கதையில் கைகேயி தயரதனிடம் பிடிவாதம் பிடித்து வரம் பெற்றது இடம் பெற்றுள்ளது. சுமந்திரர் இராமனை அழைத்து வரக் கட்டளை, இராமன் வருவது, கைகேயி காடு செல் எனல், கோசலையை இராமன் சந்தித்தது, இலக்குவன் சினம், இராமன் அடக்கியது, கோசலை கைகேயி அரண்மனை அடைந்தது, வசிட்டர்

கைகேயியிடம் வேண்டியது ஆகியவை 'அரசர் கட்டளை' கதை நிகழ்ச்சியாகும். தசரதன் தான் பெற்ற சாபத்தினைக் கூறியது. இராமனுடன் இலக்குவன் வனம் சென்றது ஆகியவை அடுத்த கதையாகும். சீதை அறிந்து தானும் உடன் வருவேன் என்று உடன் வந்தது, அயோத்தி நகர மக்களும் உடன் வரல், நடு இரவில் தேர் திரும்ப மூவரும் வனம் சென்றது வனம் சென்றானில் இடம் பெறுகிறது. தசரதன் இறப்பு, பரதன் கோசல நாடு வந்தது, நிகழ்ந்ததை அறிந்தது, தசரதன் ஈமச் சடங்கு நடந்தது, பரதன் கங்கை யடைந்தது ஆகியவை அடுத்த கதை நிகழ்ச்சி களாகும். 'ஐந்து பேரி'ல் குகன் இராமனைச் சந்தித்துத் தன் அன்பை வெளியிட்டதும், இராமன் சித்திரக் கூடம் சென்றதும், பரதன் குகனைச் சந்தித்து கங்கையைக் கடந்ததும் நவிலப்படு கிறது. இராமன் தங்கியிருந்தது, பரதனைக் கண்டு இலக்குவன் வெகுண்டது, இராமன் அமைதிப்படுத்தியது, பரதனை அனுப்பி விட்டு இராமன் தண்டகாரண்யம் சென்றது வரை இறுதிக் கதையில் கூறப்பட்டுள்ளது.

**109. இராமாயணக் கதைகள்** (மூன்றாம் புத்தகம்)

கி. மா. பக்தவத்சலன்

வள்ளுவர் பண்ணை; மு. ப. 1961; இ. ப. 1964; 2+62; ரூ. 1

ஆசைவலை (5—13) வஞ்சனையால் வெல்லுவோம் (14—23) மாயமான் (24—27) பொய் வேடம் (28—37) வீணைக் கொடியோன் (38—41) வானர வீரர் (42—55) கடலைத் தாண்டினான் (56—66) ஆகிய கதைகள் அடங்கியது.

விராதனை வதைத்தது, தாண்டக வனத்தில் முனிவர் களுக்குக் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்தது, அகத்தியரைக் கண்டது, பஞ்சவடி சென்று சடாயுவைக் கண்டது, சூர்ப்பனகை மோகித்து அங்கம் பங்கமானது ஆகியவை முதல் கதையிலும், கரன் முதலியோரை வதைத்தது, சூர்ப்பனகை இராவணனிடம் சென்று செய்தி யறிவித்தது, இராவணன் தன் மாமன் மாரீச னுடன் இணைந்து சதித்திட்டம் வகுத்தது ஆகியவை அடுத்த கதையிலும் இடம் பெற்றுள்ளது. மாயமானைத் துரத்திச் சென்ற இராமன் அதனைக் கொன்று திரும்பியது மாயமானில் இடம் பெற்றுள்ளது. இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றதும், சடாயு போரும், சீதை சிறையும் அடுத்த கதையாகும். சடாயு மரணம், கவந்தன் வீழ்ச்சி, சவரியைக் கண்டது வீணைக் கொடி யோனில் பேசப்பட்டுள்ளது. பம்பைப் பொய்கையில் இராமன் வருந்தியது, அனுமனைக் கண்டது, சுக்கிரீவனுடன் நட்புக் கொண்டது வானர வீரர் கதை நிகழ்ச்சியாகும். கடலைத்தாண்டி னானில் கார்கால வருத்தம், இலக்குவன் கிட்கிந்தை சென்றது,

படையுடன் இராமனைக் கண்டது, அனுமனை அனுப்பியது, சம்பாதியைக் கண்டது, இலங்கை சென்றது ஆகிய நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றது.

**110. இராமாயணக் கதைகள்** (நான்காம் புத்தகம்)

கி. மா. பக்தவத்சலன்

வள்ளுவர் பண்ணை, மு. ப. 1961; இ. ப. 1964; 2+62, ரூ. 1

சோகவனம் (5—16) கவலைவிட்டு இருங்கள் (17—22) கண்டேன் சீதையை (23—28) வீபீடணன் (29—39) அடைக்கலம் (40—44) தூது தோற்றது (45—51) இன்று போய் நாளை வா (52—60) வெற்றி முழக்கம் (61—66) முதலிய கதைகள் கொண்டது.

அனுமன் சீதையைக் காண்டல், இராவணன் சீதையின் துயர்நிலை, 'சோகவனத்'தின் கதை நிகழ்ச்சியாகும். சீதை—அனுமன் உரையாடல், சூடாமணியைப் பெற்றுக் கொண்டது அடுத்த கதையாகும். அசோகவன அழிவும், போர், இந்திரசித்தால் கட்டுண்டது, இலங்கைத் தீக்கிரை, அனுமன் மீண்டது, சேனை கடலை வந்தடைந்தது ஆகியவை அடுத்த கதை நிகழ்ச்சிகளாகும். 'விபீடணன்' கதையில் இராவணன் ஆலோசனை, விபீடணன் அறிவுரை, இரணியன் வதை, விபீடணன் அவையை விட்டு வெளியேறியது ஆகியவை இடம் பெற்றுள்ளது. இராமன் ஆலோசனை செய்து விபீடணனை அடைக்கலமாக ஏற்றுக் கொண்டது அடைக்கலமாகும். நளன் அணை கட்டியது, இராவணன் ஆலோசனை மண்டபத்தில் ஆலோசனை செய்தது, சுக்கிரீவன் இராவணனை அவமதித்துத் திரும்பியது, அங்கதன் தூது சென்று திரும்பியது ஆகியவை அடுத்த கதையின் நிகழ்ச்சிகளாகும். 'இன்று போய் நாளை வா'வில் முதல் நாள் போர், கும்பகர்ணன் போர் செய்தது, அடைக்கலமாக இசையாதது, மாயா சனகனைக் காட்டி இராவணன் சீதையை வருத்தியது, இந்திரசித்து பிரம்மாத்திரத்தைப் பயன்படுத்தியது, அனுமன் மருத்து மலை கொணர்ந்தது, இந்திரசித்து மாயா சீதையை வெட்டியது, இந்திரசித்து அழிந்தது, மூலப்படை அழிவு, இராவணன் அழிவு ஆகியவை கூறப்பட்டுள்ளன. சீதை வெற்றியறிந்து அனுமனிடம் மகிழ்ந்தது, தீக்குளித்தது, அனுமனை அயோத்தி அனுப்பியது, பட்டாபிஷேகம் ஆகியவை வெற்றி முழக்கத்தின் அடக்கமாகும்.

**111. கம்பராமாயண விரிவுரை** (முதல் பாகம்)

திருமுருக கிருபானந்தவாரியார்

(தொகுப்பு) வி. என். சாமி; கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்; 5/28 சி. மலையப்பன் தெரு; சென்னை - 1; 1965; 3+358

மோட்சமாகிய அயோத்தியில் மூலப் பிரகிருதியாகிய தசரத னிடத்தில் சுத்தமாயை, அசுத்தமாயை, மிச்ரமாயை என்ற மூன்று மனைவிகளில், சுத்த மாயையில் சுத்தாத்மா என்ற இராமபிரான் தோன்றினார். சிரவணமாகிய வசிட்டரிடத்தில் தேகேந்திரியங் களுக்குக் கோன் 'நான்' என்று உணர்ந்து, விஞ்ஞானமாகிய விஸ்வாமித்திரருடன் சென்று, மகமாயையாகிய தாடகையைச் சங்கரித்து, ஞானமாகிய வேள்விக் காவலை நடாத்தி, காமமாகிய மாரீசனை வென்று, குரோதமாகிய சுபாகுவைக் கொன்றார். அறியாமையாகிய கல்லைப் பெண்ணாக்கி, மமகாரமாகிய வில்லை ஒடித்து, ஆனந்தமாகிய சீதையை மணந்து, அகங்காரமாகிய பரசு ராமனை வாட்டி, தீர்க்க கோபமாகிய கூனியின் சொற் கேட்ட தன்னலமாகிய கைகேயி வேண்ட, தவமாகிய கானகஞ் சென்று, நிஷ்காம்யமாகிய குகனை நட்புக்கொண்டு, ஆசையாகிய கங்கா வெள்ளத்தைத் தாண்டி, உறுதியாகிய சித்ரகூட மலையில் தங்கினார். பக்தியாகிய பரதனுக்குப் பரஞானம், அபரஞான மாகிய பாதுகைகளை வழங்கி, விரோதமாகிய விராதனை வென்று, சமம்தமம், உபரதி, திதிக்ஷை முதலிய முனிவர்களுக்கு அருள் புரிந்து, பட்சமாகிய ஜடாயுவை நேசித்து மோகமாகிய சூர்ப்ப னகையை விரட்டினார். இராஜச குணமாகிய இராவணன் ஆனந்தத்தை அபகரிக்க, அதனைத் தேடிச் சென்று, அவித்தை யாகிய அயோமுகியை நீக்கி, கவலையாகிய கவந்தனை யகற்றி, நிர்விகல்பமாகிய சபரிக்கு முக்தி நல்கி, மெய்ஞ்ஞானமாகிய அநுமனைக் கொண்டு, அடங்காமையாகிய வாலியைக் கொன்று, பரிசுத்தமாகிய சுக்ரீவனுக்குப் பட்டங் கட்டி, மெய்ஞ்ஞானமாகிய அநுமனால் ஆனந்தமாகிய சீதையின் இருப்பிடத்தை யறிந்து பிறவியாகிய பெருங்கடலை அணைகட்டி, துர்க்குணங்களாகிய அசுரர்களைக் கொன்று, தாமத குணமாகிய கும்பகர்ணனையும், சபேந்திரியங்களாகிய பத்துத் தலைகளையுடைய ராசத குண மாகிய இராவணனையும் வதைத்து, சத்துவ குணமாகிய விபீஷண ருக்குப் பட்டங்கட்டி, ஆனந்தமாகிய சீதையைச் சிறை மீட்டு, மோட்சமாகிய அயோத்தியை அடைந்து, சுத்தாத்மாவாகிய இராமர் அரசாள்கிறார். இத்தகைய உட்பொருளைத் தன்னகத்தே கொண்டு உணர்த்துவது ஸ்ரீ ராமாயணம்(10) என்று ராமாயணத் திற்கு விளக்கம் கொடுத்துள்ளார்.

வீடணன் அடைக்கலம் வரை உள்ள இந்நூல் எளிய நடை யில் அமைந்துள்ளது. இடையிடையே பாடல்களும் உள. கி. வா. ஜகந்நாதன் முன்னுரை வழங்கியுள்ளார்.

112. **கம்பராமாயணம்** (இரண்டாம் பகுதி)

திருமுருக கிருபானந்தவாரியார்

(தொகுப்பு) வி. என். சாமி; கார்த்திகேயன் பப்ளிகேஷன்ஸ்; 1965; 5+288; ரூ. 3

இராவணன் ஒற்றர்களை விபீடணன் காட்டிக் கொடுத்தது முதல் இராம பட்டாபிசேகம் வரை கூறியுள்ளார். 'மனிதர்களின் உள்ளப்பாங்கை அறிந்து, அப் பொழுதப்பொழுது உலக அநுபவத்தேனைக் குழைத்து நகைச்சுவை எனும் ஏலப் பொடியைத் தூவி ஒரு பெருவிருந்தைப்போல விரிவுரை அமைந்துள்ளது' என்று கி. வா. ஜகந்நாதன் நூலின் முன்னுரையில் கூறியுள்ளது நூலுக்கு முற்றிலும் பொருத்தமானது.

113. **கம்பராமாயண வசனம்** (இரண்டாம் பகுதி)

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்; இ. ப. நவ. 1965; 322; ரூ. 5

கிஷ்கிந்தா, சுந்தர காண்டங்களின் கதையைக் கூறியுள்ளார். சித. இராமநாதன் பதிப்புரை கூறியுள்ளார்.

114. **கம்பராமாயண வசனம்** (மூன்றும் பகுதி)

மே. வீ. வேணுகோபால பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மு. ப. மார்ச் 1965; 297; ரூ. 5

யுத்த காண்டத்துள் கடல் காண் படலம் முதல் மாயா ஜனகப் படலம் வரை கூறியுள்ளார்.

115. **கம்பராமாயண வசனம்** (நான்காம் பகுதி)

மே. வீ. வேணுகோபால பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்; மு. ப. அக். 1965; 260; ரூ. 5

யுத்த காண்டத்துள் அதிகாயன் வதை முதல் படைக்காட்சிப் படலம் வரை கூறியுள்ளார்.

116. **கம்ப நாடகம்** (நாடகம்)

தெ. துரைசாமி, எம். ஏ.

அருளகம், 17, இராமானுசம் தெரு; கல்லுக்குழி; திருச்சி - 1. மு. ப. 1965; 3+330+2; ரூ. 5

அணிந்துரையைத் தி. சே. பாலசுப்பிரமணியம் தந்துள்ளார். நூல் மூன்று களமாக அமைந்துள்ளது.

முதல் களம் பால - ஆரணிய காண்ட கதை 42 காட்சிகள்; இரண்டாம் களம் சுந்தர காண்டம் வரை 31 காட்சிகள். மூன்றும் களம் - மிகுதி 43 காட்சிகள் என அமைந்துள்ளது. கதைப் பகுதிகள் எதுவும் விடுபடாமல், எளிய நடையில், கம்பரின்

சிறந்த சொற்ருெடர்களை அப்படியே பயன்படுத்தியுள்ளார். சுவை குன்ருமல் தெளிவாகக் கதை கூறிச் செல்கிருர்.

117. கம்பராமாயண வசனம் (ஐந்தாம் பகுதி)

மே. வீ. வேணுகோபால பிள்ளை

புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மு. ப. ஜூலை 1967; 225; ரூ. 5

யுத்த காண்டத்தின் பிற்பகுதி மூல பலவதை முதல் விடை கொடுத்த படலம் வரை கூறியுள்ளார். இவ் வசனம் முழுமையும் உரைநடையில் உள்ளது.

118. கம்பராமாயணக் கதைகள்

சு. லலிதாம்பாள் எம், ஏ., பி. டி.

வானதி பதிப்பகம்; தி. நகர்; சென்னை-17, மு. ப. ஜூலை 1969, 2+121, ரூ. 2

கலைக் கோட்டு முனிவர் வந்தார், கைவண்ணம் கண்டேன், மூவடி மண், பாகீரதி வந்தாள், கால்வண்ணம் கண்டேன், அரசர் முனிவரானுர், மழுவாளவன் வந்தான், வல்லமைக்கு ஒரு சோதனை, வென்றவர் யார் ?, இவள் தானு சீதை? முதலிய பத்து கதைகள் கொண்டது இந்நூல்.

பல அலுவல்களில் ஈடுபட்டு அல்லலுறும் பொதுமக்களுக்கு அவற்றை யெல்லாம் பிரித்துப் படித்தறிய வாய்ப்பும், பொழுதும், பொறுமையும் ஏது? அவற்றைப் பிரித்து எடுத்து எளிய உரை நடையில் ஆக்கித் தந்தால் அவர்கள் விருப்புடன் படித்துப் பயனும் இன்பமும் அடைவார்கள் என்பதனை நோக்கமாகக் கொண்டு இந்நூல் எழுந்துள்ளது.

முதல் கதையில் கலைக்கோட்டு முனிவர் வரலாறும், அவர் மூலம் தசரதன் யாகம் செய்ததும் கூறப்படுகிறது. அடுத்த கதையில் தாடகை வதத்தினைக் கூறுகிருர். கம்பரின் சிறந்த உவமைகளை ஆங்காங்கே ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமைக்கு இக்கதையில் உள்ள 'வைரக் குன்றிலுள்ள கல் போன்ற வலிமையுடைய அவ்வரக்கியின் மார்பிலே பாய்ந்து அங்கே தங்காமல் ஊடுருவிச் சென்றது. அச்செயல் கல்வியறிவில்லாத மூடர்களுக்குச் சான்ருேர்கள் போதிக்கும் உண்மைப் பொருள்கள் உள்ளத்தில் நிற்காமல் போய்விடுதலை ஒத்திருந்தது' என்பதைக் கூறலாம். மூவடி மண் மாவலி சரித்திரத்தையும், பாகீரதி வந்தாள்' கங்கையின் வரலாறும் கூறுகிறது. பகீரதப் பிரயத்தனம் என்று உலகோர் தன்னை முயற்சிக்கும் அதன் பயனுக்கும் ஓர் எடுத்துக் காட்டாகக் கூறும்படி செயலில் இறங்கினுன் பகீரதன் (45) கால் வண்ணம் கண்டேனில் அகலிகை சாபம் நீங்குதல் இடம் பெற்றுள்ளது. அரசர் முனிவரானுரில் விசுவாமித்திர முனிவர்

வரலாறு கூறுகிறார். மழுவாளவன் வந்தானில் பரசுராமர் கிரௌஞ்ச மலையைத் துளைத்தது. (74) இருபத்தொரு தலை முறை அரசர்களை வென்றது, (75) பரசுராம சேத்திரம் பற்றிய கதை, (76) இராமன் பரசுராமனை வென்றது முதலிய பரசுராமர் வரலாறு கூறப்படுகிறது. அடுத்த கதையான வல்லமைக்கு ஒரு சோதனையில் இராமன் மராமரம் துளைத்தது அறிவிக்கப்படு கிறது, இதில் 'இந்த மராமரங்கள் ஏழிலும் ஊடுருவிச் செல்லும்படியாக நீ அம்பு ஒன்றை எய்தால் வாலியைப் பற்றிய என் மனத் துன்பம் நீங்கும் உனது வலிமையும் விளங்கும்' என்று சுக்கிரீவன் கூறியதாகக் கூறுகிறார். (99) வென்றவர் யாரில், வாலி, சுக்கிரீவர் பற்றிப் பேசப்படுகிறது. தமையன் வீட்டுலகை விரைவில் எய்தவகை செய்தான் தம்பி, வீட்டுலகுக்கு நல்வழி யைத் தம்பிக்கு விளக்கிச் சொன்னான் தமையன். இதுவன்றோ சகோதர நேயம் என்று கூறும் ஆசிரியர் வாலிக்கும் சுக்கிரீவ னுக்கும் நடந்த போரில் வாலி மோட்சத்தை அடைந்தான் சுக்கிரீவன் அரசாட்சியை அடைந்தான் வென்றவர் யார்? (115) என்ற வினாவை எழுப்புகிறார். இறுதிக் கதையில் சுயம்பிரபையின் சாப விடையை விளக்கியுள்ளார்.

ஆசிரியர் தன் எண்ணத்தைப் பிரதிபலிக்கும் வகையில் எளியநடையில் இந்நூலை ஆக்கியுள்ளார்.

119. **ஸ்ரீராமகதா சாகரம்** (*சுந்தர காண்டம்*)

*வி. தியாகராஜன்*

*ராமகதா நிலையம், புதுக்கோட்டை, மு. ப.* 1971, 8+108

சுத்தானந்த பாரதி முகவுரை வழங்கியுள்ளார். சுந்தர குமாரனாகிய இராமனின் அழகை விவரிக்கும் பாடல்களைத் தன்னிடையே கொண்டதாயிருப்பதால் இப்பகுதிக்குச் சுந்தர காண்டம் எனப் பெயரிட்டனர். (3) சுந்தரகாண்டம், அலைகடல் கடந்த அன்பன் அனுமான், தேவி சீதையைத் தேடும் அனுமான், கற்பின் செல்வி, வீரன் மனைவியின் வீரவாசகம், மனமகிழ் வெய்திய மங்கை நல்லாள், சூளாமணி பெற்ற சூரன் அனுமான், அரக்கர் அழிவும் அமரர் களிப்பும், ஸ்ரீ ராமதூதன் அனுமான், கண்டேன் தேவியை ஆகிய தலைப்புகளின் கீழ், இக்காண்டக் கதையினைச் சுவைப்படச் சுருக்கிச் சொல்கிறார்.

120. **இளைஞர்க்கான கம்பராமாயணக் கதை**

*சொ. முருகேச முதலியார், கழகம், மு. ப. பிப்.* 1975, 2+140

பாலகாண்டம் 1-20, அயோத்தியா காண்டம் 21-43, ஆரணிய காண்டம் 43-58, கிட்கிந்தா காண்டம் 59-76, சுந்தர காண்டம் 77-100, உயுத்த காண்டம் 101-140.

கம்பராமாயணச் செய்யுட்களைப் படிப்பதற்கு முன் அதன் கதைப் பகுதிகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும். முதலில் கதையினைத் தெளிவாகத் தெரிந்து கொண்டால் அந்நூலினைக் கற்பதற்கு எண்ணம் உண்டாகும் என்று பதிப்புரையில் கூறியுள்ளமைக்கேற்ப உட் தலைப்புகள் இட்டு எளியநடையில் தெளிவாகக் கம்பன் கதை நிகழ்ச்சிகள் விடுபடாதவாறு சிறப்பாக அமைக்கப்பட்டுள்ளது.

**121. இராமகாதை** (இலக்கியச் சொற்பொழிவு)

மு. ரா. கந்தசாமிக் கவிராயர், பார்வதி பதிப்பகம்; 107, இராம லிங்கர் தெரு; அம்பா சமுத்திரம், மு. ப. மே. 1975, 215; ரூ. 6-25

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஆசியுரையும், கிருபானந்த வாரியார் அணிந்துரையும் வழங்கியுள்ளனர்.

இராமன் என்பதற்குத் தனது குணஞ் செயல்களால் மகிழ் விப்பவன் என்று பொருள் (1) வாயு, ருத்திரர் மாருதியாகவும், பிரமன் சாம்பவானுகவும் அவதரித்துள்ளதாகக் கூறுகிருர். (4) மந்தரை, இறுதியில் 'இந்நாடு உனக்குக் கன்னியா சுல்க மாகக் கிடைத்தது' (கெடுத்தொழிந்தனை) என்று கூறியே கைகேயியை மாற்றுகிருள்(51). வந்த நோக்கமாகிய இராவண வதத்தினை மறந்து வாலி இராவணனுடன் உறவு கொண்டதால் இராமன் மறைந்திருந்து தண்டித்தான் (142) வீடணன் என்ப தற்குப் பகைவர்க்கு அச்சம் தருபவன் என்பது பொருள். ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவன் (167) கும்பகர்ணன் - குடம் போன்ற காதுகளையுடையவன் (183) என்று பொருளுரைக்கிருர். இராமா வதாரம் முதல் ஸ்ரீராமர் பட்டாபிஷேகம் ஈருக 26 தலைப்புகளின் கீழ் இராமகாதையைக் கூறிச் செல்கிருர்.

**122. கம்பராமாயண வசனம்**

கம்பநாடர் (காரைக்குடியிலிருந்து வெளிவரும் மாதாந்த ராமாயண சஞ்சிகை. ஆசிரியர் மோ. வே. கோவிந்த ராஜையங்கார்)

திருவவதாரப் படலத்தின் கதை கூறப்பட்டுள்ளது.

**123. இராமாயண வசனச் சுருக்கம்**

இராமன் பிறப்பு தொடங்கி விசுவாமித்திரருடன் மிதிலை செல்வது வரை உள்ளது. புத்தகம் முழுமையாகக் கிடைக்க வில்லை.

**124. கோசலை நாட்டு வள்ளல்**

நா. சி. இராமசாமி

அகில உலகத்தமிழ் எழுத்தாளர் மன்றம்; சென்னை - 18; 3+235; ரூ. 4

தமிழ் எனும் அளப்பரும் சலதி, அமைப்பிதழ், எண்ணுதற்கு ஆக்குதற்கு அரிய வேள்வி, தாங்கரும் தவம், பாதுகம், அகத்தியம், வைத்தமாநிதி, கோசலை நாட்டு வள்ளல் என எட்டுத் தலைப்புகளின் கீழ்த் தன் கருத்துகளைத் தருகிறார்.

இராமாயணம் அகத்தியனார் இலக்கணத்திற்கு இலக்கியம். மெய்ப்பாட்டிற்கும் உவமைக்கும் எடுத்துக்காட்டு. விஞ்ஞானத்திற்கு விஞ்ஞானம். நுண்கலைகள் பலவற்றையும் கடைந்து எடுத்த அமுதம். அகத்திய மாமுனிவரே இராமாயணத்திற்கு மூல காரணர் என இராமாயணம் பல கோணங்களிலிருந்து படம் பிடித்துக் காட்டுகிறது(2). சான்று : தாடகை வரலாறு; அகத்தியப் படலமே இராம அவதாரத்தை முன் கூட்டியே நிர்ணயம் செய்கிறது. சோழ மன்னனைக் குறிப்பிடும் காவியமே இராமாயணம்(5). இது நம் உள்ளத்தைப் பண்படுத்தி நாடிய பொருளும் ஞானமும் புகழும் உண்டாக்கச் செய்கின்றது(9). இராமராச்சியம் என்பது விஞ்ஞானத்தினால் நிலைநாட்டப்பட்ட இராம சுதந்திர குடியரசு ஆகும்(13) என முதல் கட்டுரையை ஒரு முன்னுரையாக அமைக்கிறார். எண்ணுதற்கு ஆக்குதற்கு அரிய வேள்வி எனும் மூன்றாவது கட்டுரையிலிருந்தே இராமாயணக் கதையைக் கூறிச் செல்கிறார். பரதன் கேகயநாடு செல்வது வரையில் இதில் இடம் பெறுகிறது. மக்கள் எல்லாம் ஆண்டவனின் சாயல்கள். பண்பும் அன்பும் இயற்கையாகப் பெற்றவர்களாய் வாழவேண்டும் என்பதே நியதி. மக்கள் பாபிகளாயும் தீயவர்களாயும் வஞ்சகர்களாயும் மாறுவதற்குத் திரிபு உணர்ச்சியே காரணம். இயற்கையாகவே இக்குணங்கள் மனிதனிடம் இருப்பதற்கு இல்லை, இடையில் ஏற்பட்டவை. இது மறைய வேண்டியது. இயற்கை இதனை நிலைநாட்ட இராமாயணம் தோன்றுகிறது.(68) இராமருக்கு அரச பதவி ஏற்படாமல் செய்ய சூழ்நிலையைத் தருமமே முன் நின்று உண்டாக்குகிறது. தாயினும் நல்லாள் அன்னை கைகேயி இதனை நிறைவேற்றுகின்றாள்(73). வைணவத்தின் பெருமையை ஒளிவிடும்படிச் செய்த ஆண்டாள் கைகேயி(74). இராமன் தவசியாய் நின்ற கோலம் கந்தனை நம் முன் தோன்றச் செய்கிறது(79) எனத் 'தாங்கரும் தவம்' கட்டுரையில் மொழிகிறார். இராமன் காடு சென்றது வரை இதில் இடம் பெற்றுள்ளது. பாதுகம் எனும் அடுத்த கட்டுரையில் பரதன் நிலையைத் தற்கால உலகம், அரசு உணர வேண்டும். அப்பொழுதுதான் மறந்தும் பிறர்க்குக் கேடு நினைக்கா அமர வாழ்க்கையை நிலை நாட்ட முடியும்(93). பரதன் - இராமன் சந்திக்கும் காட்சி, வைணவத்தின் பெருமையைக் காட்டுகிறது (பொன்னும், பொருளும், போகமும் வேண்டிலேன், அன்பும், அறிவும், அறமும் வேண்டினேன்) பரதன் நடத்தும் ஆட்சி தன்நிறைவு பெற்ற

கிராம சுய ஆட்சி (99) என நவில்கிறார். பரதன் பாதுகையுடன் நாடு மீண்டது வரை இதில் இடம் பெற்றுள்ளது. கோசிகர் அகத்தியர் இருவரின் வேள்வியின் பயனாக மந்தரையும், சூர்ப்ப னகையும் தோன்றுகின்றனர் (129). சீதையும் தமிழும் ஒன்றெனப் பலவிடங்களில் கூறுகிறார். இராவணன் மாயையில் சிக்கி உழல் கிறான் (130) என அகத்தியம் எனும் அடுத்த கட்டுரையில் நவில் கிறார். மாயமானை இராமன் பின்சென்று அழித்தது வரை இதில் இடம் பெற்றுள்ளது. அனுமனின் பெருமைக்கு ஞாபகச் சின்ன மாக மகேந்திரகிரி ஓங்கி உயர்ந்து எழில் பெற்றுத் திகழ்கிறது (180). மீனாட்சி என்றாலும் மைதிலி என்றாலும் ஒன்றுதான் (204) என அடுத்த கட்டுரையில் கூறி இராமன் சேனை கடல் வரை வந்ததுடன் கட்டுரையை முடிக்கிறார். இறுதிக் கட்டுரை இராவண வதத்துடன் நிறைவு பெறுகிறது.

கம்பராமாயணக் கதையைத் திரைப்படம் ஒன்றினுக்கு நேர் முக வர்ணனை கொடுப்பதுபோன்ற நடையமைப்பில் தந்துள்ளார். பாத்திரங்களுக்குச் சிறப்பு விகுதி கொடுத்தே பேசுகிறார். கம்பரை முழுவதும் கம்பநாடுடை வள்ளல் என்றே கூறுகிறார்.

## மொழிபெயர்ப்புகள்

கம்பனுக்கு மலையாளம், வடமொழி, ஆங்கிலம், ஆகிய மொழி களில் மொழிபெயர்ப்புகளுள்ளன. இங்குக் காணப்படும் மொழி பெயர்ப்புகள் தவிர மலையாளத்தில் வசனம் ஒன்றும், ஜி. ராம கிருஷ்ணனின் செய்யுள் வடிவம் ஒன்றும் இருந்தமை எஸ். கே. நாயர் மலையாளத்தில் மொழிபெயர்த்துள்ள கம்பராமாயண பால காண்ட முதல் பகுதி முன்னுரையால் அறிய முடிகிறது. தெலுங் கில் சுந்தர காண்டம் மொழிபெயர்க்கப்பட்டமை வெ. ப. சு. முதலியாரின், 'கம்பராமாயண சாரம் - அயோத்தியா காண்டம்' முன்னுரை தெரிவிக்கிறது. மூலம், சுருக்கம், வசனம் ஆகியவை இணைந்து 12 மொழிபெயர்ப்புகள் உள. இவற்றுள் மலையாளத் தில் மட்டுமே செய்யுள் வடிவில் பால, அயோத்தியா, ஆரண்ய காண்டங்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பால காண்டம் வடமொழி, ஆங்கில மொழிகளிலும், அயோத்தியா காண்டம் ஆங்கிலத்திலும் செய்யுள் வடிவம் பெற்றுள்ளன. ஆங்கிலத்தில் இரணியன்வதைப்படலம், சீதாகல்யாணம் ஆகியனவும் சுருங்கிய வடிவில் செய்யுள் வடிவம் பெற்றுள்ளன. கம்ப ராமாயணம் முழுமைக்கும் வசன வடிவம் மலையாளமும் ஆங்கில

மும் பெற்றுள்ளன. வடமொழி பால காண்ட மொழி பெயர்ப்பும், வி. எஸ். முதலியாரின் ஆங்கில மொழிபெயர்ப்பும் கம்பன் வான்மீகியிடமிருந்து வேறுபடுமிடங்களைச் சுட்டுகின்றன.

125. **Kambaramayanam - Balakandam** (Malayalam)

S. K. Nayar

National Bookstall; Kottayam; 1963; 214; Rs. 6-50

126. **Kambaramayanam in Sanskrit (Balakandam)**

Siromani. S. N. Sriramadesikan

1964; Rs. 4-50

டாக்டர் சி. ப. ராமஸ்வாமி ஐயரின் முகவுரையுடன் கூடியது இந்நூல். முன்னுரையில் கம்பனும், வால்மீகியும் வேறுபடும் இடங்களைச் சுட்டியுள்ளார். 450 பாடல்கள் இதில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. மொழிபெயர்க்கப்பட்டுள்ள தமிழ்ப் பாடல்களையும் தந்துள்ளார். கதைத் தொடர்பு காணப் பாடல்களுக்கு உள் தலைப்புகள் கொடுத்துள்ளார்.

127. **Kambaramayanam - Balakandam - Vol. I**
**(A translation and transliteration in Malayalam)**

Dr. S. K. Nayar, M.A, Ph.D

Madras University; 1967; 19 + 466; Rs. 15

Forward is given by Mudaliar. In temple like Ettumanoor even today there is a record to show that there has been an endowment allotted to the study of Kambaramayanam. In what way the study was conducted there is still unknown. In Palghat district even today Kambaramayanam enjoys unstinted popularity through the medium of the institution of Tolpavakkuttu (olappamkuttu). Two attempts to render Kambaramayanam in Malayalam are noted. One is an abridged work in Prose, narrattng the story of Rama as dealt with in Kambaramayanam. The other one is in verse a small publication claiming the title kambaramayanam by one G. Ramakrishna. This is a verse to verse rendering. No verse has been left out and whatever version accepted in this work. Malayalam transliteration of the original work in Tamil also is given side by side with translation in order to fercilitate the Malayalam readers to compare the rendering with the original and also to show them how attractive and intimitable is the style of kamban and the beauty of his language. These are the news collected from the preface. An Appreciation is also given by S. Nallaperumal.

**128. Kambaramayanam Vol. II**
**(Ayodhya Kandam)**
**Translation and Transliteration in Malayalam.**
Dr. S. K. Nayar

University of Madras; 1969; Pages. 398; Rs. 15.

**129. The Ramayana As Told by Kamban** (The Ayodhya Canto)
C. Rajagopalachari

Unesco Collection of Representative works Indian Series; Sahitya Akademi; New Delhi; F. E 1961; Reprint 1970; 7+108+6.

Kamban's Ramayana is a lyric while valmiki's is an epic. He gives a brief outline of the story.

130. **Kambaramayanam vol. III (Aranya Kandam)**
**(Translation & Transliteration in Malayalan)**
Dr. S. K. Nayar

University of Madras; 1971; 3ö9; Rs. 15

131. **Kamba Ramayanam (Hiranya Vadai Padalam or The Slaying of Hiranya)**
V. Shanmuga Mudaliar

Tamil culture (Journal of the Academy of Tamil Culture) Vol VI No 2; Ap. 1957; 139-154;

This English translation is linked by the stor y in Prose.

132. **Kambaramayanam**

(A condensed Version in English Verse and Prose.) V. S. Mudaliar. Palaniappa Bros. First Edi. 1970. 333+2 Rs. 5

In April 1969 he published a small book of translation of selected stanzas of kamban. He gives some important changes of the story in Kamban from Valmiki. He also gives defenitions in necessary places. According to him Kamban lived in the 12th cent.

133.. **Kambaramayanam - Seeta Kalyanam (in English Verse)**
Bala Bharathi S. D. S. Yogi. Pages 5+10

56 Stanzas with Side Headings. In the preface he says, that Kamban wrote his immortal Ramayana in the 10 th cent. A. D. The poem on Kamban in the preface is:

KAMBAN! thow distant lonely star that shine Brighter than all revolving orbs of art, we need thee, come again have to part we will shrine thee above all other shrine. A Sacred sanctum where the soul may roam thine own society hath built this temple where fancy may find her native dimple Beauty her home and truth is highest dome. Master! let Rama Rajya dawn on earth Because today man is at war with man And Modern scientific miracles fan The flames of Ravana's murdering mirth. Beloved, Welcome to this soulful zest, For pease is the hostess and joy the guest.

134. **Kamban**

S. Maharajan

Sahitya Akademi; New Delhi; First Edi. 1972; 2+80; Rs. 2-50

The age of Kamban 9—11, Bala kanda 12—21, Ayodhya kanda 22—45, Aranya kanda 46—58, Kishkinda kanda 59—62, Sundra kanda 63—66, Yuddha kanda 67—76, Conclusion 77—80, Bibliography 81.

He describes the important places in every Canto. Shortly he tells the story of Ramayana. It will be useful for other language users. He also introduces the translation of Kamban at important places. Forward by Edward Lenders.

135. **The Ramayana**

(A shortened Modern Prose Version of the Indian Epic)

R. K. Narayanan

Indian Thought Publications; Mysore; 1973; 169+3; Rs. 6

Proloque 3—6, Rama's initiation 4—22, The Wedding 23—34, Two Promises Revived 35—64, Encounters in exile 65—74, The grand Tormentor 79—96, Vali 97—114, when the Rains Cease 115—130, Memento From Rama 131—134, Ravana in council 135—140, Across the ocean 141—144, The siege of Lanka 145—150, Rama and Ravana in Battle 151—160, Interlude 161—162, The Coronation 163—169, Epilogue 170—172, Glossary 173. He gives the list of characters with their Introduction.

136. **Kambaramayanam**

(Translation in Malayalam on Prose)

**Narayanan**

**393**; Rs. 2

கம்பன் கவிதைகளில் பிறர் பாடல்களும், பாட பேதங்களும் மலிந்துள்ளமை போன்று அவன் வரலாற்றிலும் பலவிதமான கதைகள் புகுந்துள்ளன. அவற்றிலிருந்து உண்மை வரலாற்றினை அறிவது சிரமமானதொன்றாக உள்ளது. கம்பனின் முழு வரலாற்றினைத் தருவதாகவோ, குறிப்பிட்ட கால வாழ்க்கையினைக் காட்டுவதாகவோ, குறிப்பிட்ட பண்பினை மட்டும் (நுணங்கிய கேள்வியும், வணங்கிய வாயும் - டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்) சுட்டுவதாகவோ, இயல்பினை (கம்பர் ஓர் ஏழை - கோனவகிழார்) இயம்புவதாகவோ இவை அமைந்துள்ளன. கம்பர் எழுத்தாணி தீட்டிய இடம், கம்பர் - திருநாள் போன்ற கட்டுரைகள் கம்பன் வாழ்வோடு இணைந்துள்ளமையின் இங்கு இணைக்கப்பட்டுள்ளன. கட்டுரைகள், நூல்கள், நாடகங்கள், கவிதை இணைந்து (33 எண்ணிக்கை) கம்பர் வரலாறு கூறுகின்றன. கு. அழகிரிசாமி (கவிச்சக்கரவர்த்தி); இரா. பழனிசாமி (கவிச்சக்கரவர்த்தி கம்பர்); அ. சீனிவாச ராகவன் (அவன் அமரன்) ஆகியோர் நாடகவடிவில் கம்பன் வரலாற்றினை அமைத்துள்ளனர். திறமை வாய்ந்த புகழ்பெற்ற கவிஞர்களைத் தெய்வத்துடன் இணைத்துப் பார்க்கும் வழக்கு கம்பன் வாழ்விலும் இடம் பெற்றுள்ளது. கம்பன், காளிதேவி, சரஸ்வதி ஆகிய தெய்வங்களின் அருள் பெற்றவனாகக் காட்டப்பட்டுள்ளான். முடியரசன் கம்பன் கதையைக் கவிதையாகத் தந்துள்ளார். (கம்பன் குரல்) கம்பன் வரலாறு கூறும் நூல்களுள் கவிச்சக்கரவர்த்தி கம்பர் வரலாறு (அ. கி. நாயுடு) குறிப்பிடத்தக்க நூலாகும். புலவர் மாரிமுத்து, கம்பர் காஞ்சிபுராணம், காஞ்சிபிள்ளைத் தமிழ், சோழக்குறவஞ்சிபோன்ற நூல்களையும் பாடியதாகக் கூறுகிறார்.

## 137. கம்பர் சரித்திரம் (94-107)

தமிழ் இலக்கியத் திரட்டு: யாழ்ப்பாணம் சதாசிவம் பிள்ளை, (தொகுப்பு) இராதாகிருஷ்ணையர், சீனிவாச வரதாசாரி அண்டு, கோ, சென்னை, 1895, ரூ. 1-25

கம்பநாட்டு அரசனின் புதல்வர். நாட்டில் ஏற்பட்ட கலகத்தால் தாய், பிடாரி பூசகனான ஓர் ஒச்சன் வீட்டில் அடைக்கலம் புக அங்குப் பிறந்தார். ஏழாவது பிராயத்தின் பின் சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப்பட்டுக் கல்வி பயின்றார்.(94) சடையப்ப வள்ளலின் வேண்டுகோளின்படி சோழனால் தூண்டப்பட்டு இராமாயணம் பாடினார்(95) கூத்தர் தான் பாடிய இராமாயணத்

தைக் கிழித்துக் கொண்டிருந்த பொழுது கம்பர் சென்று ஏழாவது காண்டத்தைத் தன் மற்றைய காண்டங்களுடன் அமைத்துக் கொள்ள வேண்டிப் பெற்றார்.(97) ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றினார். சேர அரசரிடத்தில் இருந்தபொழுது கம்பரைக் கவிழ்க்க நினைத்த சதிகாரப் புலவர்களை அவர்கள் மனைவியர் வேண்ட, அப்புலவர்களின் உயிரைக் காப்பாற்றினார்.

**138. கம்பர்**

இரா. இராகவையங்கார்,

செந்தமிழ்: தொகுதி 3, 1904-1905 1-12, 42-54, 77-87, 97-104-பக்.

தமிழ் நாவலர் சரிதை, தொண்டைமண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், சோழமண்டல சதகம் முதலிய நூல்களைக் கொண்டு கம்பர் வரலாறு கூறுகிறார் (முற்றுப் பெறவில்லை).

**139. கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதி**

தி. ஏ. ராஜரத்தினம் பிள்ளை,

கிறித்துவ இலக்கிய சங்கம், சென்னை; 1909; 27+71.

முன்னுரை ஆங்கிலத்தில் உள்ளது. சோழனுடன் மன வேறுபாடு கொண்டது முதல் சமாதானம் ஆனதுவரை கூறியுள்ளார். இறுதியில் தன் நூலில் கூறியுள்ள சொற்களுக்கு ஆங்கிலத்தில் விளக்கம் தந்துள்ளார்.

**140. கம்பர் (24-30)**

தமிழ் நாவலர் சரிதை: (பதிப்பு) சாமி தில்லை நடேச செட்டியார் (வெளியீடு) கி. கு. நாராயணசாமி முதலியார் இ. ப. 1916; அணா 8

கம்பர் பாடியதாகக் கூறப்படும் (அவரது வரலாறு காட்டும்) பாடல்களின் தொகுப்பு.

**141. கம்பன் (308-310)**

ஆனந்த போதினி; மஹாதேவன், பிப். 1922.

கம்பன் என்பது நரசிம்ம மூர்த்தியின் சாதாரணப் பெயர் என்று விளக்கியுள்ள செல்வக் கேசவராய முதலியாரின் கருத்துகளை இங்குத் தந்துள்ளார்.

**142. கம்பர் சரித்திரம்**

நெ. ரா. சுப்பிரமணிய சர்மா.

இ. மா. கோபாலகிருஷ்ண கோன்; மதுரை; 1922; 126, அணா 10

முன்னுரை 9-10, கம்பருடைய இளமைப்பருவம் 11-23 இராமாயணம் பாடியது 23-32, இராமாயண அரங்கேற்றம் 33-47, கம்பரும் சோழனும் 1, 2, 3. 48-54, 55-62, 63-72, கம்பர்

காலம் 73-78, கம்பர் இயற்றிய நூல்கள் 79-85, மரபும் மதமும் 86-92, கம்பரும் பிற புலவரும் 93-101, அம்பிகாபதியும் கம்பர் முடிவும் 102-110, முடிவுரை 111-115, செய்யுள் குறிப்புகள் 116-126. வி. முத்துசாமி ஐயரும், ம. கோபால கிருஷ்ணரும் முகவுரை வழங்கியுள்ளனர்.

கம்பரை மூவலூர் ஆதித்தன் என்னும் பிராமணர் மகன் என்பாரும் உளர். இல்லக்கிழத்தியின் பெயர் சிகர்த்தவல்லி சடையப்பர் கம்பர் இல்லத்திற்கு நெற் கூரையிட்டார். இதனால் அவர் வாழ்ந்த ஊர் கதிர்வேய் மங்கலமாயிற்று. (இப்பொழுது கதிராமங்கலம்) கம்பர் தாமே விருப்போடு பிறர் தூண்டுதலின்றி. இராமாயணம் பாடினார். 10516 பாடல்கள் பாடினார். நாளொன்றுக்கு 700 பாடல்கள் பாடினார் என்பது கற்பனை. ஆந்திர மொழிகள் சில, இராமாயணத்தில் கலந்திருப்பதால் ஆந்திர மொழியும் அறிந்தவர்(68). கம்பர் சேரனுடு செலல வில்லை. மதுரை சென்றார் என்றுரைப்பதே சரி. மதுரையில் கம்பர் இருந்தபோது நடந்ததாகக் கூறும் சம்பவங்கள் பெரும் பான்மை ஒத்துள்ளன. சரஸ்வதியிடம் சிலம்பைப் பெற்றதாகக் கூறுவதும் கற்பனை(91), 1120இல் பிறந்தார். கம்பர் முதலாம் பிரதாபகிருத்திரனிடம் சென்றார். சடகோபர் அந்தாதி, ஏரெழு பது, செம்பொற்சிலை எழுபது, திருக்கை வழக்கம், சரஸ்வதி அந்தாதி, இலக்குமி அந்தாதி முதலியன பாடியுள்ளார். வேளா ளர் இனத்தைச் சேர்ந்தவர் எனத் துணியலாம். கம்பருக்கும் தாதனுக்கும் மனவருத்தம் இருந்தது உண்மை. ஔவையார், புகழேந்தி, ஒட்டக்கூத்தர் முதலியோர் இவர் காலத்தில் வாழ்ந்த வர்கள். தண்டியலங்காரம் இயற்றிய தண்டி அம்பிகாபதியின் மகனுவார்(108). நூலின் இடையில் கூறப்பட்டுள்ள பாடல் களுக்குக் குறிப்புகள் வழங்கியுள்ளார்.

### 143. கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதி (128-150)

விநோதரச மஞ்சரி: அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார், S. இரத்தின நாயகர் ஸன்ஸ், திருமகள் விலாச அச்சியந்திர சாலை, சென்னை, 1937; ரூ. 2.

சோழ நாட்டில், 'தாசி பொன்னிக்கு அடிமை' என எழுதிய கதை, சோழன் அவையைவிட்டு வெளியேறி, சுவர் கட்டி கூலிக்கு நெல் பெற்றது, வேளாளனைப் பாடியது, சேரநாடு சென்றது, தன் ராமாயணத்திற்குப் பொருள் கூறியது, சேர அவைப்புலவர்கள் சதியை முறியடித்தது, நாமகளை வர வழைத்தது, பின் சேரன் அடைப்பக்காரனாக வர சோழநாடு திரும்பியது முதலியன கூறியுள்ளார்.

**144. கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியது** (151-226)

*விநோதரச மஞ்சரி : அஷ்டாவதானம் வீராசாமி செட்டியார்;*

*சோழன் கம்பனையும் ஒட்டக் கூத்தனையும் இராமாயணம் பாடச் சொன்னது, கம்பர் துமி என்ற சொல்லை வழக்குச் சொல்லாக நிரூபித்தது, ஒட்டக்கூத்தரிடம் உத்தர காண்டம் பெற்றது, நாளொன்றுக்கு 700 கவி வீதம் பாடியது, இறந்த குழந்தையை உயிர்ப்பித்து தில்லை மூவாயிரவர்களிடம் அரங் கேற்ற அனுமதி பெற்றது, பின் கருமான், தாசி இவர்களிடம் சம்மதம் பெற்றது, அம்பிகாபதியிடம் அனுமதி பெற்றது, சடகோபரந்தாதி பாடியது, விறகு வெட்டிப் பாட்டிற்குப் பொருளுரைத்தது. அரங்கேற்றம், அரங்கேற்றத்தின் போது நடந்த சில விசித்திர நிகழ்ச்சிகள் முதலியவற்றை நவின்றுள் ளார்.*

**145. கம்பர்** (46-97)

*புலவர் கதை (இரண்டாம் பாகம்) : மணி. திருநாவுக்கரசு முதலியார், பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,* 1939; 10 அணா.

*கூவத்தில் வாழும் ஊரினர் பாடல் வேண்ட அது வாணியன் தாதன் ஊரானதால் மறுத்து, பின் அம்மக்கள் செய்த உப சாரத்தினால் மனம்மாறிப் பாடினார்*(60). *வல்லியெனும் கணிகை யின்பால் விருப்புற்று அவளுடன் தங்கி இராமாயணம் பாடி னார். கம்பர் பாடும் போது, காளிதேவி தீப்பந்தம் பிடித்து நின்றாள் எனும் இவற்றுடன் கம்பர் கதையைக் கூறுகிறார்.*

**146. கம்பன் மேடு**(687-690)

*ஆனந்த போதினி : கே. அப்துல் காதிர், ஏப்.* 1940

*திருவழுந்தூரில் கம்பன் வாழ்ந்த இடமாகக் கூறப்படும் கம்பன் மேடு என்ற பகுதியைக் கண்டு வந்ததாகக்கூறி அதற் கான கதையைக் கூறுகிறார்.*

**147. கமபர் திருநாள்** (150–170)

*தமிழ்ச்சுடர் மணிகள் : எஸ். வையாபுரிப்பிள்ளை, பாரி நிலையம்* 59, *பிராட்வே, சென்னை*-1, மு. ப. 1949; இ.ப. 1952, மூ. ப. 1959; ரூ. 6,

*கம்பனது வாழ்வின் முதல் பகுதி காவிய அமைப்பில் கழிந் திருக்கும்*(158). *தளர்ச்சியடைந்த பொழுது சடையப்பர் ஊக்க, கவித்துவ ஆவேசம் நிரம்பி உணர்வு மயமாய்க் கம்பர் பெரு மான் விளங்கிய சமயங்களில் இராமாயணம் பாடப் பெற்ற தாகும்*(164). *கம்பரது நாயக நாயகிகளுக்குத் திருமணப் பெரு விழா நடந்ததாகக் கூறும் பங்குனி யுத்தரத்தின் மறுதினமாகிய பங்குனி யத்தர நாளே மிகுந்த பொருத்த முடைய சுபதினமாகக்*

கருதப்பட்டது. ஸ்ரீரங்கநாதரது திருச்சந்நிதியே அரங்கேற்றத் திற்குரிய இடமாயிற்று. கம்பர் காவியத்தை அரங்கேற்றிய திருநாளை இங்குக் குறிப்பிட்டு வர்ணிக்கிறார்.

148. சடையப்ப வள்ளலும் கம்பரும்

கு. பாலசுந்தர முதலியார்

லோடஸ் பப்ளிஷர்ஸ், சென்னை, 1951; 114, ரூ. 1. 50.

புறவுரை, சடையப்ப வள்ளலும் கம்பரும் 1–12, தோற்ற மும் வாழ்வும் 13–22, கம்பரை ஆஸ்தான புலவராக்குதல் 23–27, சோழ மன்னவன் பொறாமை 28–36, கம்பர் பாண்டியனை அடைதல் 37–49 கம்பர் வள்ளலாரைக் காணல் 50-56, ஆயிரத் தில் ஒருவர் 57–88, சடையப்பர் வழங்கிய சன்மானம் 89–97, வள்ளலார் வாழ்ந்துப் பெறல் 98-114.

கம்பர் காலம் 9ம் நூற். எண்ணிய சகாப்தம் எண்ணூற் றேழின் மேல்) ஆதித்தன் என்னும் அரசனுடைய புதல்வர் கம்பர். கல்வி கற்றுக் கொடுத்தவர் சடையப்பர். ஏரெழுபது பாடி அரங்கேற்றினார். கம்பநாட்டைக் கம்பருக்குக் கொடுத்து அவரை ஆஸ்தானப் புலவராக்கினான் சோழன். கவிச்சக்கர வர்த்தி எனும் பட்டமும் கொடுத்தான். அதற்கு நன்றியாகக் கம்பர் மும்மணிக் கோவை பாடினார். சடையப்பரிடம் கொண்ட பொறாமையைச் சோழன் கம்பர் மீது செலுத்தி அவரைத் தாக்கினான். சோழனிடம் கோபித்துப் பாண்டிய நாடு சென்ற கம்பர் பாண்டியன் செருக்கழியும்படி கலைமகளை வேண்டிச் சடையப்ப வள்ளலின் ஊரில் சுடுகாட்டை இந்திர லோக மாகக் காட்சியளிக்கச் செய்தார். கம்பர் அம்பிகாபதிக்குக் கூறிய தாக உள்ள சளசள, களகள; கொளகொள, கிளுகிளு என்ற நான்கு வார்த்தைகளை 'வளநகர் முனிவரன் வருமுன்', 'வளையமர்' முன் கையோர் மயிலனாள்' 'அண்ட மூலத்துக் கப்பாலழியும்', 'அண்டத்தளவு மலையப் பகர்ந்தழைத்தான்' ஆகிய பாடல்களில் காட்டுகிறார். திருவரங்கத்தில் அரங்கேற்றிய பின் சடையப்பர் விருப்பத்திற்கிணங்க அவர் இல்லத்திலும் அரங்கேற்றப்பட்டது. 4000 மரக்கால் சன்னச்சம்பா நெல் சடையப்பர் ஆண்டுதோறும் வழங்கினார். இறுதியாக இராமாயணத்துள் காணப்பெறும் சடையப்பரைப் புகழ்ந்துள்ள பாடல்களைத் தொகுத்து அவற்றுக்கு விளக்கம் தருகிறார்.

149. கம்பர் (86—91)

தமிழ்ப் புலவர் சரித்திரம்: குமாரசாமிப் புலவர் (கு. முத்து குமாரசாமிப் பிள்ளையின் குறிப்புகளும் சேர்ந்தது), புலவரகம், மயிலணி—சுன்னாகம், 1951; ரூ. 5

கம்பர் 1120-1200 ஆண்டுகளில் வாழ்ந்தவர். வைணவர். அகளங்க சோழன் (அமலன் இராமாயணத்தில்) அவைப்புலவர். கொங்குநாட்டின் சிறுமையை நோக்கி அதனைக் கனவிலும் காண லாகாது என்று பாடியவர். திருவேகம்பமுடையார் என்ற மறு பெயரும் உண்டு.

**150. கம்பர் ஓர் ஏழை (173-177)**

*கல்விக் கழகக் கட்டுரை (புதுவைக் கல்விக் கழகத்தின் வெள்ளி விழா மலர்) கோவைகிழார், 1951.*

'எல்லோரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே இல்லாரும் இல்லை; உடையார்களும் இல்லை', ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்', ஏழை ஒருவன் தன் சிறுவயலைக் காத்தாற் போல தசரதன் தன் அரசை ஓம்பினான், 'கடன்பட்டார் போலக் கலங்கினான் இலங்கை வேந்தன்' எனும் கம்பர் கூற்றுகள் அவர் ஏழ்மை இன்னது என்பதை அறிந்தவர் என்பதைக் காட்டக் கூடியதே என்கிறார்.

**151. கம்பர்**

*பாரதி பாடிய பாவலர் : ஆர். ஸ்ரீனிவாஸன், கலைமகள், மு. ப. ஆக. 1957.*

*கம்பர் வரலாறும் காவியச் சிறப்பும் கூறுகிறார்.*

**152. கம்பன் (57-72)**

*வழிபாடு : மா. இராசமாணிக்கனார், செல்வி பதிப்பகம், காரைக் குடி, மு. ப. நவ. 1957; ரூ. 2*

வறுமை காரணமாகத் தாய் தந்தையரால் வெறுக்கப் பட்டான். தாண்டக முனிவர்கள் இராமனை வரவேற்ற காட்சி கம்பனின் இளமை வாழ்வின் காட்சி(66). விருந்தோம்பல் பண்பினைச் சீதை மூலம் காட்டுகிறான். நன்றிமறவாதவன், இயற்கையில் ஈடுபாடுள்ளவன், உலகியல்பு அறிந்தவன் கம்பன். உணர்ச்சிகளை வெளிப்படுத்துபவன். (முடி சூடப் போவதறிந்த அயோத்தி மகிழ்ச்சி, இராமனைப் பிரிந்த அயோத்தி துன்பம்) சோகச் சுவையில் நகைச்சுவை கெடாது பாடுகின்ற பண்புடை யவன். (பூ அழுத, பறவைகள் அழுதன) கம்பன் இலக்கியம் மனதைச் செம்மைப்படுத்துமாதலால் படியுங்கள் என்று கூறுகிறார்.

**153. கம்பர் (49-86)**

*பாரதி பாடிய பாவலர்: வித்துவான் ஆர். சீனிவாசன் கலைமகள் காரியாலயம்; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. 1957; ரூ. 1-75*

சோழநாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவழுந்தூரில் உவச்சர் குலத்தைச் சேர்ந்த ஆதித்தன் மகன் கம்பர். தாய் தந்தையரை இழக்கவே சடையப்பரிடம் அடைக்கலம் புகுந்தார். சடையப்பர் வேண்ட ஏர்எழுபது பாடினர். தன் விருப்பத்தால் இராமாயணம் பாடி திருவரங்கத்தில் அரங்கேற்றினர். நாகபாசப் படலம் பாட, சிதம்பர தீட்சதர் மகன் மீண்டான். இரணியன் வதைப் படலத்தின் போது நரசிங்க உருவம் சிரித்தது. கவிச் சக்கரவர்த்தி பட்டம் பெற்றார். சரசுவதியந்தாதி, திருக்கை வழக்கம் பாடினர். கம்பர் பற்றிய சிறப்பு மொழிகள் கூறி அவரின் நன்றி மறவாமையையும் காட்டுகிறார். கம்பர் விதியின் வலிமையையும், பெண்மையைக் கடவுளாகவும் காட்டுகிறார். கம்பர் பெயர்க் காரணங்களைக் கூறுகிறார். பாத்திரப்படைப்பில் முரண்பாடின்மை, உரையாடல் சிறப்பு, செய்ந்நன்றிக்கு முதலிடம், சில நீதிகள் போன்றவற்றைக் கம்பரின் படைப்புப் பற்றிக் கூறும் பொழுது கூறுகிறார். கம்பர் பற்றிய செவிவழிச் செய்திகளையும் கூறுகிறார்.

**154. கம்பர்** (60-81)

*தமிழ்ப் புலவர்கள் : வித்துவான் மு. இரத்தின தேசிகர், அல்லயன்ஸ் கம்பெனி; தபால்பெட்டி எண்: 617; மயிலாப்பூர்; சென்னை-4. மு. ப. 1960; ரூ. 1-50*

மன்னராயினும் அவரிடம் குற்றம் காணும்பொழுது அஞ்சாது கண்டித்துரைக்கும் ஆற்றல் கம்பரிடம் இருந்தது(60). எனும் ஆசிரியர் கம்பர் சோழநாடு விட்டுச் செல்வதற்கு நேர்ந்த நிகழ்ச்சி, வேலிகட்டி நிலைத்து நிற்கச்செய்து நெல் கூலி பெற்றது, சேரனிடம் அடைப்பைத் தொழில் மேற்கொண்டது, அவைப் புலவராக மாறியது, சரஸ்வதியருள் பெற்றுச் சேரனை அடைப்பக் காரணக்கியது, கம்பரின் பணிப்பெண் விடுகதை கூறி சோமாசிப் புலவரைத் தடுமாறச் செய்தது முதலியன கூறுகிறார்.

**155. கம்பன் குரல்** (176-181) கவிதை

*முடியரசன் கவிதைகள், தமிழண்ணல் (தொகு), பாரிநிலையம்; இ. ப. மே. 1961; ரூ. 4*

கம்பனே தன் வரலாறு கூறுவது போல் கவிதையை அமைத்துள்ளார். பொன்னி நதிக்கு அடிமை என்றதைப் பிறர் தாசி பொன்னிக்கு அடிமை என மாற்றி விட்டார்கள்(177). கம்பனை இப்பொழுது வளர்த்து வருபவர்களாக டி. கே. சி, காரைப் பதியார், கணேசர், முருகப்பன் ஆகியோரைக் குறிப்பிடுகிறார்(179). அண்ணாதுரையார் செய்த செயலால் தமிழுலகம் கம்பனை முறையாகப் புரிந்து கொண்டு புகழ்வதாகக் கூறுகிறார் (180).

**156. கம்பர் 57-77**

தமிழ் தந்த கவியமுதம்: கு. அழகிரிசாமி, தமிழ்ப் புத்தகாலயம்; 393, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-14; மு. ப. ஆக. 1962; ரூ. 5-50

வேளாளரைப் புகழ்ந்தது, சோழனிடம் தனக்கு வேறிடம் இல்லையோ எனக் கேட்டது, பாண்டியனும் பாண்டியன் மனைவியும் கம்பர் அமர்ந்திருந்த சிவிகையைத் தூக்கி வந்தமை, அறம் தாங்கும் அரசாகத் தொண்டை நாட்டைப் பாராட்டியது, ராட்டினம், அனுதைகளும் கௌரவமாக உழைத்துப் பிழைக்க உதவும் சாதனமாக இருப்பதனைப் பாராட்டிப் பாடியது, வாணனுடைய புகழ் கூறியது முதலியனவும், கம்பர் பாடியதாகக் கூறப்படும் தனிப்பாடல்கள் சிலவற்றினைத் தொகுத்து அவற்றிற்கு விளக்கமும் கூறிச் செல்கிறுர்.

**157. கவிச்சக்கரவர்த்தி கம்பர்வரலாறு**

பண்டிதர் அ. கி. நாயுடு

முப்பால் நிலையம்; 40 அ, கிரியம்மன் வீதி; பூளைமேடு (அஞ்சல்) கோவை-4; 1963, 4+135; ரூ 2.

'கம்பர் பிறந்த ஊர் திருவழுந்தூர் முதல் கம்பரும் காவியமும்' வரை, 47 தலைப்புகளின் கீழ் தம் கருத்துகளைக் கூறுகிறுர்.

கம்பர் காலம் 12ஆம் நூற். கம்பர் நிகழ்வின் ஆண்டுகள் 1110-1175 ஆகும். இராமகாதை பாடி முடித்தபொழுது 55 வயது. அரங்கேற்றமானது 55வது வயதில். இறந்தபொழுது 65 வயது. அவரது ஊர் திருவழுந்தூர். தந்தை பெயர் ஆதித்தன். தமது முன்னேர் நாட்டின் பெயர் பெற்றுர். பல இடங்களில் காப்பியத்தில் வடுமொழிகளை வைத்துள்ளார் என்று மூங்கையால் பேசலுற்றுன் (பால: நாட்டுப்படலம்) முதலிய பின்னிரு சான்றுகள் தருகிறுர். ஏன் மலையாளி, கன்னடர் என்று குறிப்பிடக்கூடாது என்பதனையும் அச்சான்றுகளைக் கொண்டு விளக்குகிறுர். இதனுல் வடுகர் என முடிவு செய்கிறுர். வேளாளர் (கம்பவார்) குலத்தவர். அதிலும் ராயர் குலத்தினர் என்று வரலாற்றினையும் சான்றுகக் காட்டுகிறுர். கம்பர் சோழனிடம் செல்லாமல் சடையப்ப வள்ளலிடம் சென்றதற்கு ஏழு காரணங்கள் கூறுகிறுர். சரராமன் (சடையப்பன்) ஒரு மனைவியுடன் வாழும் வரம்புடையவன்(11) என்பதும் ஒரு காரணம். கம்பர் 'மும்மணிக்கோவை'யை வெண்ணெய்த்திரிகர்த்தராயன் சடையப்பர் மீது பாடினுர். ஏரெழுபதில் முதல் ஆறு பாடல்கள் கம்பர் பாடியதல்ல. கம்பனைச் சோழன் குலோத்துங்கன் இரு முறை அழைத்த போதும் அவனைப்பாடவில்லை. பாண்டியன்

மாறவர்மனைப் பாடினார். தம் இனத்தைச் சேர்ந்த வல்லியம்மை என்பவரைக் காதலித்து மணம் புரிந்தார். வடுகமொழியில் இலக்கணம் 10 ஆம் நூற். பின் ஏற்பட்டதால் அதில் பாடவில்லை. கம்பர் ராமகாதைக்கு முன் காவிய அமைப்பில் ஒரு காவியமும் இல்லாததால் கம்பராமாயணம் ஆதிகாவியத்தை முதல் நூலாகக் கொண்டது. கம்பராமாயணத்தில் வரும் சோழர் பெயர் பொதுப் பெயரேயாம். அம்பிப்பதியை சைவர்தாம், கம்பரைச் சைவர் என்று கூறவேண்டுமென்பதற்காக அம்பிகாபதி என மாற்றினர். இராசராசன் தன்னைப் பாடாததால் நாடு கடத்தப்பட்ட கம்பரை வரவழைத்து புலியை ஏவிக்கொல்ல முயற்சித்தான். கம்பர் தம் பாடலால் தடுக்கவே, புலியைக் கொல்வான் போல் கம்பர் மீது அம்பெய்தான்(102). கம்பர் மறைந்தது நாட்டரசன் கோட்டையிலன்று என்பதற்கு எட்டுக்காரணங்கள் காட்டுகிறார். கம்பர், 'கடவுள் அவதாரம் எடுப்பதில்லை' எனும் சைவசித்தாந்தக் கொள்கையை மறுத்துக், 'கடவுள் அவதாரம் செய்வார்', எனும் வைணவச் சித்தாந்தத்தை நிலைநாட்டியவர். இராமநாமப் பெருமை, ஓம் நமோநாராயணாய பெருமை கூறுவதாலும், சிவனை வழிபடும் இராவணனே, 'வேதமுதல்வன் இராமன்' என்பதாலும் அவர் வைணவர். நாராயணனே பரம்பொருள், விசிட்டாத்வைதம் என்பவற்றில் கம்பர்க்குடன்பாடாகும்.

இவர் தம் வரலாற்றுக் கருத்துகளுக்கு அடிப்படையாகத் தமிழ் நாவலர் சரிதை, சோழ மண்டல சதகம், தனிப் பாடல் திரட்டுஆகியவற்றையும் துணையாகக் கொண்டுள்ளார். கம்பர் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளுக்கு அப்பொழுதைய வயதினைக் குறிப்பிட்டுள்ளார். பிறர் கருத்துகளையும் தொகுத்துக் கூறி அவற்றை மறுப்பதால் பிறர் கருத்துகளையும் அறிய வாய்ப்பேற்படுகிறது. மாறான கருத்துகளைக் கூறுபவர்களை விளையாட்டுச்சிறார், காடுகளைக்காவல் காக்கும் காட்டுப்பிள்ளைகள், மனவுணர்விலா மாக்கள், வழிப்போக்கர் என்றெல்லாம் கூறுகிறார்.

158. **கவிச்சக்கரவர்த்தி** (நாடகம்)

கு. அழகிரிசாமி

தமிழ்ப்புத்தகாலயம்; சென்னை-5; மு. ப. 1963. 24+220 ரூ. 4.

இந்நாடக நூல் 3 அங்கங்களைக் கொண்டது. முதல் அங்கம் 21 காட்சிகளையும் இரண்டாம் அங்கம் 14 காட்சிகளையும், மூன்றும் அங்கம் 3 காட்சிகளையும் கொண்டமைகின்றது. இந்நூல் ஆசிரியரின் முதல் மேடை நாடகம். கம்பரின் பெருமைக்கும், சரித்திர உணர்ச்சிக்கும், இலககிய ரசனைக்கும் ஏற்ற செய்திகளையும் கதைகளையும் ஆசிரியர் இங்குப் பயன்படுத்தி

யுள்ளார். இந்நாடகம் கம்பர் காலம் 12ஆம் நூற்றுண்டு என வைத்துக் கொண்டு எழுதப்பட்டது. எனவே குலோத்துங்கன், அமைச்சன் பல்லவராயன், நேமிநாதம், வச்சணந்தி மாலை ஆசிரியரான குணவீர பண்டிதர், பாரசவன், பொன்னன் முதலிய வர்கள் இந்நாடகத்துப் பாத்திரங்களாக அமைந்துள்ளனர். இவை மட்டுமன்றி குலோத்துங்கன் செய்த போர்கள். திரிபுவனத்தில் கம்ப ஹரேஸ்வரர் ஆலயம் கட்டியது போன்ற உண்மையான சரித்திரச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன. கூத்தரைக் கிழவராகவும் கம்பரை இளைஞராகவும் இந்நூலாசிரியர் சித்தரித்துள்ளார். அம்பிகாபதியின் கதையும் ஈண்டு இடம் பெற்றுள்ளது. ஆசிரியரின் கற்பனைப் பாத்திரங்களும் ஈண்டு உளர் 37க்கும் மேற்பட்ட பாத்திரங்கள் இங்குக் காணப்படுகின்றனர்.

**159. நுணங்கிய கேள்வியும் வணங்கிய வாயும்** (49-52)

இலக்கிய நினைவுகள்; டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்; பாரி நிலையம்; மு. ப. நவ. 1964 ரூ. 1-50.

'நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய வாயினர் ஆதல் அரிது' என்னும் திருக்குறளை எடுத்துக் காட்டி, கம்பன் அவையடக்கப் பாடல்களையும் விளக்கிக் காட்டிக் கம்பன் வணங்கிய வாயினை உடையவன் ஆதலால் நுணங்கிய கேள்வியான் என்கிருர்.

**160. கவிச்சக்கரவர்த்தி கம்பர்**(நாடகம்)

இரா. பழனிசாமி

மல்லிகைப் பதிப்பகம்; தியாகராய நகர்; சென்னை-17; மு. ப. 1965; 2+129; ரூ.3.

இந்நாடக நூல் 43 காட்சிகள் கொண்டது.

கம்பரைத் திருவழுந்தூர் கோயில் பூசாரியாகக் காட்டுகிருர். இவரது மனைவி தருமவல்லி, ஏரெழுபது கம்பர் பாடியது ஆகும்(15). காளியின் அருளால் கவிச்சக்கரவர்த்தியானுர்.(20) காளியைப் பாடி காவிரியில் ஏற்பட்ட வெள்ளத்தை வற்றவைத்தார்(22). வாணியன் தாதன், ஒட்டக்கூத்தர் முதலியோரை உடன் வாழ்ந்த புலவர்களாகக் காட்டுகிருர். இவருடைய ஆசிரியர் மூவலூர் ஆதித்தர்.(33) கம்பநாடு சோழனால் கம்பனுக்குப் பரிசாக அளிக்கப்பட்டது(40). பாடல் ஒன்றுக்கு ஆயிரம் பொன் வாங்கினுர்(43). பாண்டிய நாடு சென்றபோது சமண, பௌத்த ராமாயணங்களைக் கேட்டார்.(50) கம்பர் சைவர்.(61) விறகு வெட்டியின் பாடலுக்குப் பொருள் சொன்னது, இறந்த குழந்தையை நாகபாசப் படலப் பாடல் பாடி உயிர்ப்பித்தது, தில்லை மூவாயிரவர்களிடம் இராமாயண அரங்கேற்றத்திற்கு ஒப்புதல்

வாங்கியது, இராஜராஜனின் காமத்திற்குக் கம்பர் மகள் காவேரி பலியானது முதலியவற்றையும் சுட்டுகிறார். சைவ, வைணவ பூசல்களை ஒழிக்க ஏற்ற கதையாக இராமாவதாரத்தை எழுதினார். இராஜராஜன் தன்னை எழுத்தாணியால் தாக்க வந்த கம்பரை அம்பால் கொன்றான். இந்நாடகம் எளிய நடையில் அமைந்துள்ளது. கம்பர் திறனறிந்து ஒட்டக் கூத்தர் மதிக்கிறார். வாணியன் தாதனே பொறாமை கொள்கிறான் எனும்படி கதை அமைத்துள்ளார்.

**161. கம்பர் கதை**

புலவர். நாக சண்முகம்

அழகுப் பதிப்பகம்; காரைக்குடி; 1966; 1+76 ரூ. 1-50

கம்பரின் பிறப்பு, தாயின் மேல் ஆணை, வாக்குப் பலித்தது, வள்ளல் வந்தார், அரசவைப் புலவர், அரசரின் ஆசை, கலைமகளின் கருணை, இராமாயண அரங்கேற்றம், மண்ணும் பொன்னும், பொன்னிக்குக் கம்பர் அடிமை, கம்பரின் சபதம், கம்பரின் துன்பம், அடைப்பைக்காரர் புலவர் ஆனார், தம்பி வந்து சேர்ந்தான், கம்பரின் வெற்றி ஆகிய தலைப்புகளின் கீழ் தம் கருத்துகளைத் தருகிறார்.

கம்பநாட்டினைச் சேர்ந்த ஆதித்தரைத் தீயவர் கொலை புரிய அவர் மனைவி குணவதி நாடுவிட்டகன்று திருவழுந்தூர் காளி கோயிலில் கம்பநாடரைப் பெற்றார். காளி கோயில் பூசாரி கம்பரை வளர்த்தார். நன்கு பயின்று கல்வியில் மேம்படுவதாகத் தாய்க்கு ஆணை தந்தார். கம்பங் கொல்லையைக் காவல் காக்கும் போது அரசியல் அதிகாரி குதிரையைக் காளியை வேண்டி இறக்கச் செய்து, பின் பிழைக்க வைத்து அதனால் பரிசு பெற்றார். சடையப்ப வள்ளலை, ஆதித்தனாரின் நண்பரைச் சந்தித்தார். அவர் சோழ நாட்டில் அரசனிடம் அழைத்துச் சென்றார். அங்கு அரசவைப் புலவர் ஆனார். சடையப்ப வள்ளலுடன் தங்கினார். இராமாயணம் பாட கம்பரையும் ஒட்டக் கூத்தரையும் அரசன் தூண்டினான். கலைமகள் அருளால் 'துமி' என்ற சொல்லை மக்கள் வழக்கில் ஒட்டக்கூத்தருக்கும் அரசனுக்கும் காட்டினார். சிதம்பர தீட்சிதர்கள் ஒப்புதல் பெற்று, சடகோபரந்தாதி பாடி இராமாயண அரங்கேற்றம் நடத்தினார். பிறகு வெட்டியைப் புலவனாக்கினார். இதன் பின் அரசியின் தோழியின் வாயிலாகக் கம்பரை, 'தாசி பொன்னிக்குக் கம்பன் அடிமை' என்று எழுதித் தரச் செய்து, அதனைக் கொண்டு கம்பரை அவமானப்படச் செய்ய நினைத்துச் சோழன் தானே அடைந்தான். கோபம் கொண்ட கம்பர், 'மீண்டும் உன் நாட்டிற்கு வந்தால் ஒரு அரசனை அடிமையாகக் கூட்டி வருவேன்' என்று சபதமிட்டு வெளியேறி

சேர அரசனிடம் அடைப்பக்காரரானூர். ஒருநாள் சபையில் கம்பராமாயணப் பாடலுக்கு விளக்கம் கூறி அரசவைப் புலவர் ஆனூர். பின் நாவிதனை அண்ணனுகக் கொண்டு, கலைமகள் அருளால் சிலம்பு பெற்று அரசனுக்கு உண்மையை உணர்த்தி அவைப் புலவர்களின் சூழ்ச்சியை அம்பலப்படுத்தினூர். இறுதியில் அச்சேரனையே அடைப்பக் காரனுக்கிக் கொண்டுவந்து சோழனிடம் தம் சபதத்தை நிறைவேற்றினூர்.

162. **புனல் நாடு ஈன்ற பாவலன்** (102—113)

இலக்கியம் படைத்த மேதைகள்; புலவர் அரசுமணி
அருணேதயம்; இராயப்பேட்டை; சென்னை - 14; மு. ப. ஆக. 1967; ரூ. 3

பாரதி, பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் போன்ரோரின் புகழ் மொழிகள், கம்பன் பெயர்க் காரணங்கள், பிறப்பு, சடையப்ப வள்ளலிடம் ஆதரவு, இராமாயணம் பாடிய கதை, அரங்கேற்றம் முதலியன கூறுகிருர்.

163. **சுற்றுலாவில் சுழன்றவை** (114—128)

இலக்கியம் படைத்த மேதைகள்: புலவர் அரசுமணி

சோழனுடன் மனவேறுபாடு கொண்டு பிரிந்தது, வழி நடைத் துன்பங்கள், உழவன், வ. சீராமன், தம்பிபுகான், தச்சன், சிங்கன், அச்சுதன், வாணன் ஆகியோரைப் பாடியது, சேரநாடு சென்று சோணுடு திரும்பியது முதலியவை இடம் பெற்றுள்ளன.

164. **சோகத்தின் விளிம்பில் கம்பன்** (129—149)

இலக்கியம் படைத்த மேதைகள்: புலவர் அரசுமணி

மகன் அம்பிகாபதியைச் சோழன் கொன்றது, கம்பர் பின்னும் சோழநாடகன்று பட்ட இன்னல்கள், பிரதாபருத்திரனை அடைப்பக்காரனுக்கியது, யானையைக் காட்டிச் சோழன் கம்பரைக் கொன்றது ஆகியவற்றை இக்கட்டுரையுள் கூறியுள்ளார்.

165. **கம்பன் எழுத்தாணி தீட்டிய இடம்** (49—57)

அறிவியல் பூங்கா: பிலோ இருதயநாத்; இளங்கோ பதிப்பகம்; சென்னை - 17; மு. ப. ஏப். 1968; ரூ. 2-50

கம்பன் தூசி மாமண்டூர் வழியாகச் சென்றபோது தன்னுடைய எழுத்தாணியைக் கூராக்கிக் கொள்ள, சிங்கன் என்பான் வைத்திருந்த உலைக்களத்திற்குச் சென்றதாக அவரே இயற்றியுள்ள கவி ஒன்று சான்று பகருகிறது(54). (ஆழியான் ஆழி அரன் மழுத்தா என்பான்) நாட்டரசன் கோட்டையிலுள்ள கம்பனுடைய சமாதி, 'கம்பன் வீட்டுச் செட்டியார்' என்ற காரணப் பெயர் கொண்ட ஒரு குடும்பத்தாரின் மேற்பார்வையில் உள்ளது(56).

166. கம்பர்

புலவர் மாரிமுத்து

வள்ளுவர் பண்ணை; 9, 2வது மெயின் ரோடு; சி. ஐ. டி. நகர்; சென்னை - 35; மு. ப. 1970; பக். 78; ரூ. 1-75

கவியும் கவிஞனும் 5—9, ஊரும் பேரும் 10—15, பிறப்பும் வளர்ப்பும் 16—21, கம்பரும் சடையப்பரும் 22—25, இளமையும் கல்விப் பயிற்சியும் 26—31, நட்பும் துறவும் 32—41, இராமாயண மும் அரங்கேற்றமும் 42—48, கம்பரும் வான்மீகியும் 49—52, நூற் பயிற்சியும் பிற நூல்களும் 53—57, சமயமும் காலமும் 58—62, சொல்லும் பொருளும் 63—70, குணமும் பெருமையும் 71—78.

ஊர் திருவழுந்தூர். பெயர்க்காரணம் ஒன்பது கூறி, கம்பர் என்பது இயற்பெயரே எனத் தம் முடிவு கூறுகிறார்(15). தந்தையார் பெயர் ஆதித்தர். குலம் தெரியவில்லை. அன்னையும், தந்தையும் இறந்து பட, சடையப்பரிடம் அடைக்கலம் புகுந்தார். சடையப்பர் மூலமாகச் சோழனின் நட்பைப் பெற்றார். ஒட்டக் கூத்தர் சூழ்ச்சியால் கம்பரைச் சோழன் இகழ, சோழ நாட்டை விட்டு ஓரங்கல் பிரதாபருத்திரனைச் சார்ந்து அவனைத் தமக்கு அடைப்பக்காரனாகக் கொண்டு சோணாடு திரும்பினார். திருவெண் ணெய் நல்லூரில் அமைக்கப்பட்ட திருவரங்கரின் சிலைக்கு முன் னிருந்து தம் நூலை அரங்கேற்றினார்(48). பிற நூற் கருத்துகள் கம்பனில் இடம் பெற்றுள்ளவற்றுள் சிலவற்றைச் சுட்டி அவரது அகன்ற கல்வியறிவைக் காட்டுகிறார். சடகோபர் அந்தாதி, இலக்குமி அந்தாதி, சரசுவதி அந்தாதி, ஏரெழுபது, சிலை யெழுபது, காஞ்சி புராணம், காஞ்சி பிள்ளைத்தமிழ், சோழக் குறவஞ்சி, திருக்கை வழக்கம், முதலான நூல்களையும் ஓரகராதி யையும் கம்பர் இயற்றினார் என்பர். இவையன்றி இராமா யணத்தை உரைநடையிலும், சில தனிப் பாடல்களையும் எழுதி யுள்ளதாகக் கூறுகின்றனர். இவற்றுள் சடகோபர் அந்தாதி யில் மட்டுமே ஓரளவு கம்பரின் செய்யுள்நடை புலப்படுகிறது. சரசுவதி அந்தாதி சேரன் அவையில் கலைமகளருளால் அவள் சிறப்பைப் பெறப் பாடப் பட்டதாகவும் மற்றவை அவர் பாடல் அன்று என்றும் கூறுவர். காஞ்சிபுராணம், காஞ்சி பிள்ளைத் தமிழ், சோழக் குறவஞ்சி, அகராதி, இராமாயண உரைநடை முதலியவை அழிந்துபட்டன(57). கம்பர் வைணவர்(58). கம்பர் 12ஆம் நூற்றாண்டிற்கும், 13ஆம் நூற்றாண்டிற்கும் இடைப் பட்டவர். 'கண்ணே வேண்டும் எனினும் ஈயக்கடவேன்', 'மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ' எனும் பாடல் களின் நயத்தை மிக அழகாக விரிவாக எடுத்துரைக்கின்றார். கம்பர் பிறர் கருத்துக்கு மதிப்புக் கொடுக்கும் தன்மையும், உலகியலறிவும் மிக்கவர். எந்நிலையிலும் நிலைகுலையாதவர்(72).

நூலின் கண் காணப்படும் அவரின் பிற பண்புகளையும் செய்ந் நன்றி மறவாமை, தமிழ்ப்பற்று, நாட்டுப்பற்று. கல்விப்பற்று, பணிவு போன்றவற்றையும் காட்டுகின்றார்.

167. **கம்பர்** (22—41)

முப்பெரும் புலவர்: எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி; ஜியார்ஜ் டவுன்; சென்னை; 5½ அணா

கம்பர் 13ஆம் நூற். சேர்ந்தவர். முதன் முதல் சரஸ்வதியந் தாதி பாடினார். பின் ஏரெழுபது, இராமாயணம் பாடினார். இறைவன் கூற்றின்படி சடகோபரந்தாதி பாடினார். சோழனால் இறுதியில் கொல்லப்பட்டார். புதியன இல்லை.

168. **கம்பர்** (35—54)

பன்னிரு புலவர் சரித்திரம்

10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். நாதமுனிகள் காலத்தில் அரங்கேற்றம் நடந்தது. கவிநயம் காட்டும் சில இராமாயணப் பாடல்களையும் தந்துள்ளார்.

169. **அவன் அமரன்** (கம்பனைப் பற்றிய நாடகம்)

அ. சீனிவாசராகவன் எம்.ஏ.,

நவயுகப் பிரசுராலயம்; சென்னை; பக் 3+26; ரூ. 25

அம்பிகாபதி சோழன் மகளை விரும்பியதற்குக் கம்பரே மரண தண்டனையைச் சோழன் குடிப்புகழ்காக்க, நீதியை நிலைநாட்ட நவில்கிறார் (21). கம்பராமாயண அரங்கேற்றத்தின் பின் சில ஆண்டுகள் கழித்து அதே நாளில் மறைந்தார். கம்பர் மகனை நினைந்து வருந்திப் படுக்கையில் வீழ்ந்து இறந்ததாகக் காட்டிப் பின் நாட்டரசன் கோட்டையில் விழா எடுப்பதாகக் காட்டி அவன் அமரனாகி விட்டான் என்கிறார். இடையிடையே பாடல் களும் உண்டு. இந்நாடகம் திருச்சி வானொலியில் ஒலி பரப்பப் பட்டது.

170. **Date of Kambar** (94—97)

நுண்பொருள் மலர்; Soma Sundara Desiker, 1937

He gives the ideas of Mahavidvan R. Ragava Iyengar, Selvakesavaraya Mudaliyar and V. V. S. Iyer and also the points for the 12th cent. theory and 9th cent. theory. Then he says the conclusion that Kamban must have lived in the latter part of the ninth cent. (97) and long before Ottakkthar and Pukalendiar.

கால ஆராய்ச்சி ஒரு முடிந்த நிலையினை எய்தாமல் கம்பன் காலம் கி. பி. 9; 10; 12ஆம் நூற்றுண்டு என மூன்று கால நிலைகளில் கூறப்படுகிறது. இங்குப் பன்னிருவர் கருத்துகள் இடம் பெறுகின்றன. சோமசுந்தர தேசிகர் 9ஆம் நூற்றுண்டு என, மு. கோவிந்தசாமி; சி. வை. சதாசிவ பண்டாரத்தார், தெ. பொ. மீ. ஆகியோர் 10ஆம் நூற்றுண்டு என்கின்றனர். ரா. இராகவையங்கார், எஸ். வி. பி, தி. பொ. பழனியப்ப பிள்ளை, மா. இராசமாணிக்கனுர், மு. கோவிந்தசாமி போன்ருேர் 12ஆம் நூற்றுண்டு என்று முடிவு செய்துள்ளனர். ஆசிரியர் பெயரறியப்படாத பொருட் கட்டுரையொன்றும் 12ஆம் நூற்றுண்டையே கூறுகிறது. தெ. பொ. மீ. கம்பன் காலத்தை அறுதியிடு முறையினையும் நவின்றுள்ளார். ஏ. சி. பால்நாடாரின் கட்டுரையும், ஆசிரியர் பெயரறியப்படாத மற்ருெரு கட்டுரையும் முடிவு பெருதநிலையிலுள்ளன. ஏ. சி. பால்நாடாரின் கட்டுரையில் கம்பனுக்குக் கிடைத்துள்ள ஏட்டுப்பிரதிகளில் முதன்மையான கி. பி. 1578ஆம் ஆண்டிற்குரிய பிரதியினைக் கூறுகிருர். இக் கட்டுரைகள், ஆசிரியர் முடிவு செய்துள்ள காலத்தினையும், எழுந்த காலத்தினையும் அடிப்படையாகக் கொண்டு வகை செய்யப்பட்டுள்ளன. முடிவுபெருக் கட்டுரைகள் இறுதியில் உள. இக்கட்டுரையாசிரியர்கள் தவிர ஏனையோரும் தங்கள் எழுத்துகளில் கம்பன் காலம் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். ஆங்காங்கே அவை சுட்டப்பட்டுள்ளன. கம்பன் காலத்திற்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்துள்ள கட்டுரைகள் இங்குள.

**171. கம்பர் காலம் (21-29)**

*இலக்கியக்காலம்: மு. கோவிந்தசாமி பி. ஓ. எல் (ஆனர்ஸ்); பாரி நிலையம்; 1956; ரூ. 1-75*

10ஆம் நூற். முற்பட்டவர். நூல் குறிப்பிட்ட சோழன் பெயரைக் குறிக்கவில்லை. ஆகவே சிறப்பற்ற சோழனின் காலத்தவர். கம்பர் பாடல்களில் சில தெலுங்குச் சொற்கள் பயில்கின்றன. கம்பரின் முதல் சில நூல்கள் சோழன் அவையில் அரங்கேறவில்லை. ராயரும் சடையப்பரும் தனியாகவே அரங்கேற்றக் கேட்டுள்ளனர்(22). ஆதித்தன் என்ற பெயர் அக் காலத்தே மிகுதியாக வழங்கி வந்துள்ளது(23). சடகோபரந்தாதி பாடியதால் நம்மாழ்வார் காலத்தை ஒட்டியே வாழ்ந்திருக்க வேண்டும்(24). சோழனுக்கு அவச்சொல் கூறியது உண்மையாக இருக்கலாம் என்பதனை இராசராசனுக்கு முற்பட்ட சோழர் இளையிரண்டனுள் கம்பர் காலத்தே யரசாண்ட அக்கிளை உத்தமசோழ

னுடன் அழிந்துவிடுகிறது. சகாப்தம் எண்ணூற்றேழின் மேல் என்னும் குறிப்புப் பொருத்தமே. உலாவியற் படலத்தில் வரும் 47, 48, 49ஆம் எண்ணுள்ள பாடல்களும் இக்கூற்றை வலி யுறுத்துவதை விளக்கி 9ஆம் நூற். பிற்பகுதி, 10ஆம் நூற். முற்பகுதி என்கிறார்.

172. **கம்பர் காலம்** (21-25)

இலக்கிய ஆராய்ச்சியும், கல் வெட்டுக்களும்: தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் தொல்காப்பியர் நூலகம், ஜானிஜான் தெரு, சென்னை-14. மு. ப. ஜூன் 1961; ரூ. 3

கம்பநாடு என்றொரு நாடு இருந்தது என்பதற்குக் கல் வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் சிறிதும் ஆதாரமின்மையால் 'எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல்' என்றும் பாடல் பழமையானதும், உண்மை உரைப்பதும் அன்று என்று மறுக் கிறார். அகச்சான்றாகக்கருதப்படும் தியாகவிநோதன் என்னும் தொடர் மூன்றாங் குலோத்துங்க சோழனையன்றிப் பிறரையும் குறிக்கும். மற்றொரு சான்றான, 'ஆயிரத்து நூற்றொழித்த' என்பதும் பொருந்தாக் கூற்று. பிலம்புக்கு நீங்கு படலத்திலுள்ள புவிபுகழ் சென்னி பேரமலன்' என்னும் பாடலில் உள்ள அமலன் கி. பி. 970—985 வரை ஆண்ட உத்தம சோழனைக் குறிக்க வாய்ப்புண்டு. உத்தமன் என்பதனையே கம்பர் அமலன் என்னும் பரியாயப் பெயரால் குறித்திருத்தல் வேண்டும். எனவே கம்பர் காலம் 10ஆம் நூற். பிற்பகுதி. சயங்கொண்டார், ஒட்டக் கூத்தர், கச்சியப்ப முனிவர் இவர்கட்கு முற்பட்டவர்.

173. **A plea for fixing the age fo Kamban**(172—176)

ஆய்வுக் கோவை: T. P. Meenakshisundaram, அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சார்பு வெளியீடு; 1971, ரூ. 15

He says that through philosophical, religious, geographical and knowledge one may find the age of Kamban. A historical dictionary giving the meanings of words with respective dates will help us a great deal. Modern Linguistics especially historical linguistics can also help us to fix the age of Kamban. Taken alone no one field may be always conclusive but all taken together may ultimately help us to fix the age of Kamban, this way of approach helping us further to know more about Kamban and his immortal work. He also says that he was biased in favour of the simple categorical assertion of 'Enniya Sakaptam Ennurrelu'.

**174. கம்பர் காலம் (171-181)**

செந்தமிழ்: தொகுதி-3. ரா. இராகவையங்கார், 1904-1905.

பிறந்தது 1120க்குப் பின். விக்கிரம சோழனின் இறுதி யாட்சிக் காலத்தில் வாழ்ந்தவர். 1197க்கு முன் பிரதாபருத்திரன் அடைப்பைத் தொழில் புரிந்தான். முதலாம் உருத்திரனுடைய அரசாட்சியின் இறுதிக் காலம் கம்பரின் இறுதிக்காலம். இராமா யணம் பாடி அரங்கேற்றியது இராசராசன் காலம். இராமா யணம் பாடி முடித்ததற்கும் அரங்கேற்றத்திற்கும் இடைப்பட்ட காலம் 7 ஆண்டுகள். கம்பர் காலம் 1120-1200 என முடிவு செய்கிறார்.

**175. கம்பர் காலம் (127-149)**

தமிழ்ச்சுடர் மணிகள்: எஸ். வி. பி.

பாரிநிலையம்; மு. ப. 1949; இ. ப. 1952; மூ. ப. 1959; ரூ. 6

வைணவ சமய சரிதத்திற்கும், தமிழ் இலக்கிய சரித்திரத் திற்கும், தமிழ்நாட்டுச் சரித்திரத்திற்கும் 'எண்ணிய சகாப்தம்' என்ற செய்யுள் இயல்பான பொருளில் முரண்பாடாகவுள்ளது. எனவே இது சான்றாகாது(132). இப்பேரிதிகாசத்தைப் பாடி முடித்தது கி. பி. 1178இல் என்றும் அரங்கேற்றி முடித்தது கி. பி. 1185-ல் என்றும் கொள்ளுதல் பொருந்தும். அகப்புறச் சான்றுகள் பல தருகிறார்.

**176. கம்பநாடர் காலம் (153-158)**

செந்தமிழ்ச் செல்வி: தொகுதி 25; தி. பொ. பழனியப்பபிள்ளை; 1950-1951; ரூ. 9

தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 5, பக். 493, எண். 1353, எண். 401, 1896ஆவது ஆண்டில் இருக்கும் கல்வெட்டினை ஆதாரமாகக் கொண்டு கம்பர் காலம் 12ஆம் நூற். பிற்பகுதியா மெனக் கூறுகிறார்.

**177. கம்பர் காலம் (224-234)**

கால ஆராய்ச்சி: மா. இராசமாணிக்கனார், பாரிநிலையம்; மு. ப. அக். 1957; இ. ப. சன. 1973; ரூ. 5-50

கம்பர் காலம் 9ஆம் நூற்., 12ஆம் நூற். பிற்பகுதி எனும் இரு கொள்கைகளுக்கும் உள்ள உண்மை நிலையினை ஆராய்ந்து கம்பர் காலம் மூன்றாம் குலோத்துங்க சோழன் காலம் (1178-1218) என்று முடிவுரைக்கின்றார்.

**178. கம்பர் காலம் (121-125)**

நான்காவது கருத்தரங்கு மலர்; மு. கோவிந்தசாமி; கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1972; ரூ. 20.

கிட்கிந்தா காண்டம் பிலம்புகு படலத்தில், 'புவிபுகழ் சென்னிபேர் அபயன் தோள் புகழ் கவிகள் தம் மனையெனக் கனக ராசியும்' என்ற அடியும், யுத்தகாண்டம் மருத்துமலைப் படலத்தில் 'சென்னி நாள் தெரியல் வீரன் தியாகமா விநோதன் தெய்வப் பொன்னி நாட்டு உவமை வைப்பைப் புலங்கொள நோக்கிப் போனான்' என்னும் அடியும் கொண்டு, தனிப்பாடல்களினின்றும் சில சான்றுகள் முதலியவற்றோடு கம்பர் காலம் கி. பி. 12ஆம் நூற். என்கிறார். கி.பி. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த காளமேகம் இரட்டையர் ஆகியோரைப் பற்றிய தனிப்பாடல்கள் வரலாற்றுடன் ஒத்து வருவதால் தனிப்பாடல்களை வெறும் கற்பனை என்று தள்ளிவிடுதற்கில்லை என்கிறார்.

179. **கம்பர் காலம்** (பொ. கா)

மதுரைப் பல்கலைக் கழகம். பக். 56.

தோற்றுவாய்—12-ம் நூற்.கொள்கை 9ஆம் நூற். கொள்கை —உண்மை யாது?—முடிவுரை.

சொற்களையும், தொடர்களையும், கருத்துகளையும், உவமைகளையும் மட்டுமின்றி சிந்தாமணியிலிருந்து கம்பர் விருத்த முறைகளையும் காப்பிய நெறியையும் பெற்றார். இதனால் தேவருக்குப் பிற்பட்டவர் கம்பர் என்பது உறுதி. கி. பி. 9ஆம் நூற். சேர்ந்த திருமங்கையாழ்வார் அருளிச் செய்ததினின்றும் கம்பர் ஒரு பாசுரத்தை அப்படியே அமைக்கிறார். பன்னிரு ஆழ்வார்களையும் கம்பர் பயின்றவர் என்பதற்கு அவர் நூலில் விரிவான சான்றுகள் உள்ளன. இராமானுசர் காலத்தில் உச்சநிலையை அடைந்த இராமன் மீதான பக்திப் பெருங்கடலில் முகிழ்த்ததே கம்பராமாயணம். கம்பர் சேக்கிழாருக்கு முற்பட்டவராயின் உண்மையில் சோழ அரசனைச் சிந்தாமணியன்றி கம்பராமாயணமே கவர்ந்திருக்க வேண்டும். ஆனால் உண்மை எதிர்மறையாக உள்ளது. எனவே பெரிய புராணத்திற்குப் பிற்பட்டது கம்பராமாயணம். கம்பர் ஓரங்கல் நாட்டுக்குச் சென்றதற்கான விளக்கமும் கம்பர் காலத்தை இரண்டாம் குலோத்துங்கன் காலம் எனக் கொண்டால் கிடைத்துவிடும். வீரசோழிய உரையில் 'கம்பனாரிடைப் பெருமையுளது' என்று வருவதால் அதன் காலமாகிய கி. பி. 12ஆம் நூற். கம்பர் முற்பட்டவராதல் வேண்டும். கம்பர் காலம் பற்றிய நீண்ட சர்ச்சைக்குரிய பாடலான 'எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல்' என்பது 12ஆம் நூற். சேர்ந்ததாகவோ அன்றி இடைச்செருகலாகவோ இருக்கவேண்டும். கம்பராமாயணப் பாடலில் வரும் தியாக விநோதன் என்ற சொல்லாட்சி மூன்றாம் குலோத்துங்கனுக்குச் சிறப்பாக வழங்கப்பட்ட சிறப்புப் பெயராகும். கம்பர் 9ஆம் நூற். சேர்ந்தவர் எனில் கம்பர் காப்பியம்

பெரியபுராணத்தில் வலுவாகத் தன் சாயலை ஏற்படுத்தியிருக்குமே என்ற வினு எழுகிறது. இதற்கான ஒரே விடை கம்பர் காப்பியம் சில நூற். இருட்டில் இருந்தது என்பதே. கம்பன் பயன்படுத்தும் அமலன் என்ற சொல் உத்தம சோழனைக் குறிப்பதாகக் கொள்ள இடமுண்டு. கம்பராமாயணத்தை அடியொற்றி எழுந்த கந்த புராணத்தின் காலம் கி. பி. 11ஆம் நூற். பிற்பகுதி அல்லது 12ஆம் நூற். முற்பகுதி எனக் கலைக்களஞ்சியம் கூறுவதால் கம்பரின் காலம் அதற்கு முற்படுகின்றது. 8ஆம் நூற். இறுதிக் காலத்த வனை கம்பவர்மன் காலக் கல்வெட்டுகளில் இரண்டு சடையப்ப வள்ளல் பற்றியக் குறிப்புகள் உள. ஆனால் இதில் வருபவர் தாம் கம்பரை ஆதரித்தவர் என்பதற்குச் சான்றுகள் இல. பிற்காலச் சோழர் காலம் வீழ்ச்சியுறத் தொடங்கும்போது கம்பர் காப்பியம் பாடி வைணவசமய ஒற்றுமைக்கு வித்திட முயல்கிறார் எனலாம். எவ்வளவுதான் தம்கால இலக்கிய மரபுகளைக் கம்பர் ஏற்றாலும் அவர் சங்கச் சான்றோர்களைப் போல மரபு நெறி பிறழாதவர் என்பது உண்மையாகும். கி. பி. 949 முதல் 1218 வரையிலான காலப்பகுதியை மூன்றாவது காப்பிய காலம் எனக் கொள்ளலாம். இக்காப்பிய காலத்தின் முதிர்ச்சியில் விளைந்ததே கம்பராமாயணம். தண்டியலங்காரத்தின் செல்வாக்கும், பாட்டியல் நூல்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவற்றின் செல்வாக்கும் கம்பர் காப்பியத்தில் மிளிர்வது அவர் காலம் 12ஆம் நூற். என்பதையே காட்டுகிறது.

180. **The problem of the Life and the age of Kamban,** A. C. Paul Nadar.

Tamil Culture : Vol. vi. No. 1. Jan. 1957 (31-49), Vol. vi, No. 2. Ap. 1957. (92-112), Vol. vii. No. 2. Ap. 1958, (150-169).

The earliest copy available in Kambaramayanam is alleged to have been prepared in about 1578 A. D. He examines Vaiyapuripillai's reasons for saying 12th cent, and disagreed by saying, there is however no evidence that Kulothunga - III ever used the title of Thyaga Vinodhan in any one of his innumerable inscriptions. He used as many as nine titles and this is not one of them. There are two officers of Vikrama Chola bearing the name of Thyaga Vinodhan Thalaikoli and Thirumandiravolai Thayaga vinodhan Brammarayan. It is hardly necessary to add that the name Thyaga Muvenda Velan cannot be called in aid to prove the kings title. The literary and epigraphic evidence of those

times show that the successive rulers of the land of cawver- were all fond of the titles Veeram and Thyagi. 'ஆவின் கொடைச் சகர ராயிரத்து நூறொழித்து' is not one of the stanzas known to the traditinal stories as embodied in தமிழ் நாவலர் சரிதை and சோழ மண்டல சதகம், which belonged to 17th and 18th centuries respectively not to Tamil Plutarch (1859) and புலவர் புராணம் at the end of the 19th cent. 'ஆயிரத்து நூறொழித்து' which would mean only a thousand years deducting a hundred years answering to 900 of Saka era corresponding to 978 A. D. Several commentators consider most of the Telugu words used by Kamban as திசைச் சொல். The Trigarta refered to in Vikrama Cholan ula is not identifiable with any of the known heros of the time of Vikrama Chola(44). Other research works such as the learned editors of the Adyar Kalakshetram edition of Moovar Ula and the author of Kavi Rakshasan find no trace of any evidence in support of the theory that Kamban was a contemporary of Ottakkoothan. Prof. Vaiyapuripillai does not at all refer to the inscriptions at ukkal when it is recorded that sadayan helped the Maha sabha there with a loan of one thousand Kadis of Paddy at one time and four hundred kadis of paddy at another time. They belonged to 10th and 15th years of the reign of Kambavarman who flurished at the end of the 9th centuary.(46) There is no evidence what so ever that Kulothunga III was intolarnt or anti Vaishnavite. The date assigned to Kamban in the stanza namely 885 A. D. is really later than the times of Thirumangai Alwar and Nammalwar(94). According to tradition, Vanian Thatan was a Contemporary of Kamban and was reputed to be the author of the uthara Kanda(98). Under the circumstances of that period there is nothing strange about the name Kambanadu in the 9th cent. Kamban was a romantic with a fue spirit of adventure, though he too had a mastery of Sangam classics. So far as the matter in hand is concerned the objection of Prof. S. V. P. to the stanza beginning with எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழு on the basis of the chronoy logical priority of chintamani to Kambaramayanam backs substantial evidence and requires further investigation from various angles(104). It is significant that Kamba Ramayana makes no reference to any ruler of Tamilnad by his natural or

his proper name சென்னி பேரமலன் in பிலம்நீங்கு படலம் (35) is too general to identify it with any chola ruler சென்னி is a family name of all Chola rulers. Amalan occurs in Kulothunga Cholan ula links 157 among with அளகன் and அதுலன் and does not seem to apply to anyone Chola king in particular(110). we are unable to understand how Amalan and Uttaman are one and the same term(111) Equipped with superb mental training, gifted with a penetrating imagination and endowed with deep emotions and fired with a burning love for the Tamilnad, we should expect the poet to react powerfully to the fact, nature, and character of the Chola Empire and its glorious achievements only, if he had lived during the empire or immediately after(157). It is difficult to believe that Kamban was so ignorant of the geography of ceylon if he lived at any time during the days of the empire or after. The poet had many opportunities of refering to the glorious acts of the Conquest of Kosala and bringing the waters of the Ganges which have filled the Tamils of the period with great pride. So the only conclusion possible is that Kamban lived before the Empire was founded. He also gives three references from the text. (Not yet completed)

**181. கம்பர் காலம்**

*கம்பநாடர் : (காரைக்குடியிலிருந்து வெளிவரும் மாதாந்த ராமாயண சஞ்சிகை, ஆசிரியர். மோ. வே. கோவிந்த ராஜையங்கார்).*

*இக்கட்டுரையின் ஆரம்பமும் முடிவும் இல்லை. ஒட்டக் கூத்தர் எழுதிய உத்திர காண்டத்தின் சொற்றொடர்கள், கம்பனில் பயில்வதைத் தொகுத்துக் கூறியுள்ளார்.*

**பாத்திரங்கள்**

*பாத்திரங்கள் அகரவரிசையில் தொகுக்கப்பட்டு அவற்றில் இடம் பெறும் கட்டுரைகளும் நூல்களும் கால முறைப்படி அமைக்கப்பட்டுள்ளன. அகலிகை (6), அங்கதன் (2), அனுமன் (12), இந்திரசித்து (3), இராமன் (33), இராவணன் (12), இலக்குவன் (3), இலங்கைமாதேவி (1), குகன் (4), கும்பகருணன் (8), கைகேயி (7), கோசலை (3), சடாயு (2), சடையப்பர் (1), சத்துருக்*

கனன் (1) சபரி, (1), சிவன் (1), சீதை (14), சுமந்திரன் (3), சுரசை (1), சூர்ப்பணகை (3), தசரதன் (5), தாரை (5), திரிசடை (3), நீலமாலை (1), பரதன் (7), மண்டோதரி (1), மந்தரை (3), மாரீசன் (2), வாலி (13), விசுவாமித்திரர் (1), விபீடணன் (3) என அமைந்துள்ளன. இதன் பின் ஒன்றுக்கு மேற்பட்ட பாத்திரங்களை ஆய்வு செய்பவை அமைகின்றன. அவையும் கால முறைப்படி இரண்டு, மூன்று, பல பாத்திரங்கள் என்ற வரிசையில் அமைந்துள்ளன. அடைப்புக் குறிக்குள் உள்ள எண்கள் அவ்வவ் பாத்திரங்கள் பற்றி வந்துள்ள கட்டுரைகள், நூல்களின் எண்ணிக்கையாகும்.

பாத்திரங்கள் பற்றிய ஆய்வு கம்பனில் மிகக் குறைவே. இராமன், இலக்குவன் போன்றோர் பற்றிய விரிந்த நிலையிலான ஆய்வு இன்மை (அறிந்த வரையில்) சிந்தித்தற்குரித்து. இவர்களைப் பற்றிய கட்டுரைகளுண்டே தவிர நூல்களில்லை. கற்பின் கனலிபோல், இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்போல், வீடணன் போல் சிறந்த, பல முனைகளில் செய்யப்பட்ட ஆய்வு நூல்கள் இவர்களுக்கும் எழுதல் வேண்டும். அஃதின்மை கம்பன் ஆய்வில் காணப்படும் மிகப் பெருங் குறையாகும்.

பாத்திரங்கள் பற்றிய ஆய்வில் சில ஒப்பியல் நோக்கில் (வான்மீகியுடன்) அமைந்துள்ளன. மாருதி இலங்கையை எரித்த பின்னர் வருந்துதல், சீதை கணவனுடன் கான்புக வேண்டுதல் போன்றவற்றைச் சான்றாக்கலாம். கம்பனை வான்மீகத்தின் வழி நூலாகக் கொள்வதால் இந்நிலை எனலாம். சிறுபான்மை பிற இலக்கியங்களை இணைத்தும் திறனாய்வு செய்யப்பட்டுள்ளது— 'அனுமனை அனுபவித்த ஆழ்வார்களும் கம்பநாட்டாழ்வாரும்'- இராமனுக்கும், சீதைக்கும் அகராதிகள் இருப்பது குறிப்பிடத்தக்கது. ஒருவர் கட்டுரைக்கு மறுப்புத் தெரிவித்து மற்றொருவர் தன் கருத்துகளை இணைத்து எழுதிய கட்டுரைகளும் உள. திரு த. இராமநாத பிள்ளையின் வாலிவதை எனும் கட்டுரைக்குத் திரு கா. இராமசாமி வாலி ஒறுக்கப்பட்ட முறை சரியா எனும் மறுப்புக் கட்டுரை எழுதியுள்ளார். முன்னவர் இதன்பின் தன் மறுப்பினையும் நவின்றுள்ளார். இத்தகைய நிலை கம்பன் ஆய்வில் ஆங்காங்கே காணப்படுகின்றது.

**அகலிகை**

182. **அகலிகை சாப விமோசனம் (1—3)**

*கலைமகள், தொகுதி 3, டி. எஸ். ராமசந்திர ஐயர்; 1933; ரூ. 4*

கம்பர் வான்மீகியிடமிருந்து மாற்றியமைத்துள்ளமையை வெளிப்படுத்தி, கம்பர் பத்மபுராணத்தில் கூறியிருக்கும் முறையைத் தழுவிக் கூறியுள்ளார் என்கிறார்.

**183, கம்பர் கற்பும் - அகலிகை பொற்பும்** (257—260)

*ஆனந்த போதினி, தி. எஸ். நாராயணஸ்வாமி, அக். 1934*

*அகலிகை பற்றிய கம்பர் கதையமைப்பைக் கூறிச் செல்கிறார்.*

**184. அகலிகை கற்பிழந்தவளா?** (48—82)

*மங்கையரின் மாண்பு (இலக்கிய ஆராய்ச்சி); எஸ். கிருஷ்ண வேணி அம்மாள்; 1949*

*அகலிகை என்றால் அழகில்லாமை இல்லாதவள் என்பது பொருள். இவள் குலம், வாழ்க்கை, செய்கை, வாழ்ந்த இடம், அழகு முதலியன யாவும் செவ்வியாய் இருந்ததால் தூய்மையானவளே. அவள் மயங்கியிருக்கக் காரணம் விதி. ஆராய்ந்தறிய முடியாத நிலையில் இருந்ததால் உடன்பட்டிருக்க வேண்டியதாயிற்று. சாபவிடை அவள் குற்றமற்ற தன்மையை உணர்த்துகிறது. இராமர் தாயே என்று அவள் பொன்னடிகளில் வீழ்ந்து வணங்குவதும் 'நெஞ்சினால் பிழைப்பில்லாளை ஏற்றிடுக' என்று விசுவாமித்திரர் கூறுவதும் அவள் தூய்மையைக் காட்டுகின்றன. நிரந்தரம் உலகின் நெடும்பழி பூண்டாள் என்று கூறுவது பண்டை வினை இந்நிந்தையைச் சுமக்கும்படி நேர்ந்தது என்பதாகும். இவ்வாறு கூறி அவளைத் தூயவளாகக் காட்டுகிறார்.*

**185. The Tragedy of Ahalya** (61-67,285-291)

Tamil Culture, Vol III. E. T. Rajeswari; 1954;

Both Ahalya and Indra have erred consciounsly(65). The story of Ahalya is really esthetics, the science of beauty giving through its parable the history of its fall and rise(67). The description of the excterior of Mithila suggesting that we are entering the city of womanhood. It is on the out skirts of this city that drama of Ahalya has been enacted. These descriptions hold up before us the reflections of so many illusions and delusions to which unfortunate innocent women fall a prey(290). This Version of delusion itself forming as it were a contrast to the other Version viz Sita's abduction heightens there by the beauty and force of the latter and attains an organic unity with the main story whose hero becomes the deus ex in achina of this subsidary plot. Like all old stories this has became of parable of the triangle forces of beauty, power and Tapas.

186. பெண்மை நலமும் புலமை யறமும் (53—70)

நற்றமிழ்: ச. சோமசுந்தர பாரதியார்; மலர்நிலையம்; 133, பிராட்வே சென்னை - 1; மு. ப. பிப். 1955; இ. ப. செப். 1955; மூ. ப. செப். 1957; ரூ. 2

சமணக் கொள்கை தழையும்படி பிற்காலப் புலவர் பெண்மை யுலகைப் பழித்துப் புலமையறம் பிழைத்த இழிதகவை வெறுப் பவர்போல் கோசல நாடு முழுமையும் பெருந்தகைப் பெண்டிர் வாழும் பீடுடைத்து என்று பாடியுள்ளார். அகலிகை உவகை யோடு கல்லுருவம் நீங்கப்பெற்று எழுந்து நிற்றல், விசுவாமித்திர முனிவன் கௌதமனுக்குரிய பத்தினி எனல், நெஞ்சினுற் பிழைப் பிலாள் எனல், இராமன் அன்னையென்றும் மாசறு கற்பின் மிக்க அணங்கெனவும் கூறல் முதலியவற்ருல் அகலிகையைக் கற்பறம் பிழையாதவளாகவே காட்டியுள்ளார் என நிறுவுகிருர். 'நிரந்தரம் உலகில் நிற்கும் நெடும் பழி பூண்டாள் நின்ருள்' என்றது உலகத்தார் அவள் மீது சூட்டிய வீண் பழியைக் குறிக்கும். தன்னைப் புணர்பவன் அயலான் என்று அறிந்ததும் நன்று தீது ஓர்ந்தறிய ஒல்லாமல் அல்லாந்து துயர்க்கடலுள் ஆழ்ந்து தாழ்ந்தாள் என்பதே 'உணர்ந்தனள் தக்கதன்றென ஓராள் தாழ்ந்தனள் இருப்ப' என்பதன் பொருளாகும்.

187. அகலிகை (193—198)

ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை; சுசீலா மாரியப்பன்; சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1973; ரூ. 22

அன்னையே அனையாள், நெஞ்சினுல் பிழையிலாள், மாசறு கற்பின் மிக்க அணங்கு என்பதற்குரிய தகுதி அகலிகைக்கு உண்டா என்பது ஆசிரியரின் கேள்வி. இராமாயணம் முழுவதுமே சரணுகதித் தத்துவத்தை விளக்குவதாய் உள்ளது. அகலிகை வரலாறும் சரணுகதித் தத்துவத்தையே காட்டுகிறது என்று எண்ண இடமுண்டு. எத்தகைய தவறு இழைத்தாலும் தவறினை உணர்ந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்வதே தவறிழைத்தோர் உய்ய வழி. இத்தகையோர்களை ஏற்று அருள் புரிவதே இராமனின் கொள்கை. எல்லையற்ற பரம்பொருளான இராமனே அவளை நெஞ்சினுல் பிழையில்லாள் என்று ஏற்றுக் கொள்வதால் தான் கம்பனும் ஏற்றுக் கொள்கிருன். அவன் வழியை ஏனைய புலவர்களும் ஏற்று, அவளைக் கற்பின் செல்வி எனப் புகழ்கின் றனர் என்று அமைதி கொள்ளத் தோன்றுகிறது. ஈண்டு அகலிகை தவறுடையவள் என்பதற்குப் பல சான்றுகளும் தருகின்ருர்.

### அங்கதன்

**188. அங்கதன் அருந்திறல்** (344—349)

*ஆனந்த போதினி, தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; நவ.* 1931

*சீதையைத் தேடியது, இராவணனிடம் தூது சென்றது இவற்றை நவில்கின்றார். போர்க்களத்தில் காட்டிய சில வீர நிகழ்ச்சிகளையும் சுட்டுகிறார்.*

**189. அவன் தம்பி** (5—8)

*குமரன்: ரா. பி. சேதுப்பிள்ளை; ஏப்.* 1941;

*அங்கதன் தூது சென்றதனைக் குறிப்பிட்டுள்ளார்.*

### அனுமன்

**190. அரக்கனும் அனுமனும்** (408—410)

*ஆனந்த போதினி, ரா. பி. சேதுப்பிள்ளை; டிச.* 1933

*அனுமன் தூதனாகச் சென்ற நிகழ்ச்சியை விவரித்துள்ளார்.*

**191. மாருதி யிலங்கையை எரித்த பின்னர் வருந்துதல்** (501—503)

*கலைமகள்: தொகுதி* 3, *டி. எஸ். ராமசந்திர ஐயர்;* 1933; ரூ. 4

*தான் வைத்த தீயினால் சீதை துன்பப்பட்டிருப்பாளோ என எண்ணி வருந்தும் அனுமன், கம்பனிலும், வான்மீகியிலும் பெறும் மாற்றைத் தருகிறார்.*

**192. கவியினைத் திருத்தினான் கம்பன், கம்பன் புகழினைத் திருத்தினான் அனுமன்** (1, 12)

*குமரன்: ஜெகவீர பாண்டியனார்; டிச.* 1940

*அனுமன் சீதையைக் கண்டது; பரதனைத் தீயில் வீழ்வதினின்றும் காத்தது; இலக்குவனை. மருத்துமலை கொணர்ந்து உயிர்ப்பித்தது ஆகியவற்றை நவில்கிறார்.*

**193. ஸ்ரீராம தூதன் (கம்பன் கலை நாடகம்)**

(*கார்காலப் படலம் - திருவடி தொழுத படலம்*)

*சுவாமி சுத்தானந்த பாரதியார்*

*அன்பு நிலையம்; இராமச்சந்திர புரம்; திருச்சி,* 1942; 2+156; ரூ. 1-25

*ஆறு அங்கம் கொண்டது. எளிய நடையில் விளக்கமாகக் கதையை இடையிடையே கம்பராமாயணப் பாடல்களைக் கொடுத்து நவின்றுள்ளார். கம்பனைச் சுவைக்க, அதனை நாடகமாக்கி அரங்கேற்ற வேண்டும் என்பது ஆசிரியர் கருத்து. வித்துவான் ஜி. சுப்பிரமணிய பிள்ளை முன்னுரை வழங்கியுள்ளார்.*

**194. அனுமனது வீரர்போர்** (89—96)

*கல்வியும் கேள்வியும்: கு. மதுரை முதலியார்; 1960; ரூ. 2*

*அனுமன் அட்சன், இந்திரசிந்து ஆகியோருடன் (சுந்தர காண்டம்) புரிந்த போரினை இவண் புகழ்ந்துள்ளார்.*

**195. அனுமனின் கர்வ பங்கம்** (54—56)

*கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்? சி. என். நாச்சியப்பன் பொன்னமுகம்மை நூலகம்; கண்டனூர் ரோடு; காரைக்குடி மு. ப. ஜூன்; 1961; ரூ. 1*

*'தான் எவ்வளவு பெரிய வீரனுயிருந்தாலும் எவ்வளவு தூரத்திலிருந்து சிவலிங்கத்தை எடுத்து வந்தாலும் கற்பரசி கையால் பிடித்த மணல் லிங்கத்திற்கு ஈடாகாது', என்று அனுமன் புரிந்து கொண்டதே இக்கட்டுரை.*

**196. ஸ்ரீ ஆஞ்சநேயர்** (368-373)

*திருக்கோயில் ந. ரா. முருகவேள் சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத்துறை வெளியீடு, மே 1965; ரூ.1.*

*ஆஞ்சநேயர் வல்லமையைக் காற்றிற்குரிய சிறந்த பண்பாக, வலிமையைக் கூறும் புறப் பாடலைக் கொண்டு உறுதிப்படுத்துகிறார். அனுமன் உருத்திரனின் அம்சம் எனக் கூறப்பட்டிருத்தலைக் திருப்பரங்குன்றத் திருப்புகழ் 'இரவி இந்திரன் வெற்றிக் குரங்கின்' என்பதன் மூலம் காட்டுகிறார். இராமன், சீதை சிரஞ்சித்துவம் அருளுதல் (வேல் ஏற்ற; 46, உருக்காட்டு; 56, 57,) சொல்லின் செல்வனுக இராமன் வியந்து பாராட்டுதல் (அனும: 19, 63) முதலியவற்றையும் காட்டுகிறார். சுந்தரகாண்டம் எனப் பெயர் அமைந்ததற்குரிய காரணங்கள் பலவற்றுள் ஆஞ்சநேயர் ஆகிய சுந்தரன் பற்றிய அரும்பெருஞ் செயல்கள் மிகுதியாக இடம் பெற்றிருத்தலும் ஒரு காரணம் ஆகும் என்கிறார்; ஆஞ்சநேயர்க்குச் சிறிய திருவடி எனப் பெயர் வழங்குதலைப் பிரிநிலை நவிற்சி என்னும் அணிநலன் அமையும்படியாகக் கம்பராமாயணச் செய்யுள் அமைத்துள்ளதை விளக்குகிறார். (மயேந்திர : 23) இராமனைத் தன்னுடைய தோள்களில் சுமக்கும் பேர் பெற்றமையால் சிறிய திருவடி எனப் பெற்றான். ஆஞ்சநேயரின் முழுவரலாற்றினையும் பண்புகளையும் சுருக்கமாகத் தந்துள்ளார்.*

**197. இராமன் விடுத்த தூதன்** (58-75)

*இலக்கியத்தூதர்கள், அ. க. நவநீத கிருட்டிணன்; கழகம்; மு. ப. செப். 1965; ரூ. 1-50.*

*இராமன் விடுத்த தூதனுய அனுமன் அவ்விராமனைப் பிரிந்த சீதைக்குக் கணவன் விடுத்த காதல் தூதனுக மட்டும்*

தொண்டாற்றவில்லை. தன் பெருந்தலைவனாகிய இராமன் விடுத்த போர்த் தூதனாகவும் இலங்கை வேந்தனைக் கண்டு அவனது உள்ளமும் துலங்குமாறு செய்து மீண்டான். இதனாலேயே கம்பர் சொல்லின் செல்வன் என அவனைப் போற்றுகிறார். எனவே அனுமன் தலைமைத் தூதனுக்குரிய தகுதியெல்லாம் பெற்றுச் சிறந்து திகழ்கின்றான்.

198. **நிமிர்ந்து நின்றான்** (170-173)

நாடகக் காப்பியங்கள்: தெ. பொ. மீ.; சேகர் பதிப்பகம், 30 போஸ்ட் ஆபீஸ் தெரு; சென்னை-1; மு. ப. ஏப். 1966; ரூ. 3-50.

மனிதனது எதிர்கால வாழ்வினை எல்லாம் அநுமனிடம் காணலாம். அநுமனின் திருவிளையாடல்களைக் கம்பன் பரக்கக் கூறியதெல்லாம் புனைந்துரை யாகாமல் எதிர்காலத்தின் ஞானக் காட்சியாக விளங்கக் காண்கிறோம். கதிரவன் தேரோட ஓடிக்கற்ற அனுமன் யார்? பகலெல்லாம் கதிரவன் தேரோட இந்தச் சிறுமா மனிசனும் உலகில் ஓடி அலைந்து அனைத்தினையும் கண்டறிகின்ற கதையும் பொய்யா? என வினவி மின்நெடுங் கொண்டல் தாளின் எனும் பாடலின் மூலம் விளக்குகிறார். மனித இனவளர்ச்சி நிலையாகக் கொள்கிறார்.

199. **அனுமனை அனுபவித்த ஆழ்வார்களும் கம்பநாட்டாழ்வாரும்**

டாக்டர் ஜி.தி. கோபால கிருஷ்ண நாயுடு; மெர்க்குரி புத்தகக் கம்பெனி; கோயமுத்தூர்-1; மு. ப, பிப். 1974; பக். 23+2+1; ரூ. 1-25.

இலங்கை எரியூட்டுதல் 1-6, அநுமன் சீதையைக் காணுதல் 7-18, யுத்த முழக்கம் 19-21; அரியணை அநுமன் தாங்க 22-23.

அ. சீனுவாசராகவன், எஸ். வி. சுப்பிரமணியன் ஆகியோர் முன்னுரை வழங்கியுள்ளனர். அநுமனைக் கம்பனும், பிற ஆழ்வார்களும் புகழாஞ்சலி செய்துள்ளமையை ஓர் பக்தனின் நிலையி லிருந்து பொதுநிலையில் சிறப்பாகக் காட்டியுள்ளார் ஆசிரியர். தலைப்புகளுக்கேற்ப அதனைப் பாகுபடுத்தித் தருகிறார்.

200. **அனுமன் ஆய்வும் வழிபாடும்**

ச. சிவகாமி

ஜெய்குமாரி ஸ்டோர்ஸ்; கோர்ட்டு ரோடு; நாகர் கோவில். மு. ப. 1974; பக். 216. ரூ. 6.

இந்நூல் இருபகுதிகளையுடையது. முதற்பகுதி, பாத்திரப் படைப்பு (1-10), அறிமுகம் (11-16) அனுமன் இன்றியமையாமை (16-31), இராமதூதன் (32-54), சொல்லின் செல்வன் (55-80), வன்திறலோன் (81-103), கோதிலான் (104-120), இராம பக்தி (121-128), பிற இலக்கியங்களில் (129-138) என ஒன்பது

தலைப்புகளை உள்ளடக்கியது. இரண்டாம் பகுதி, தோற்றுவாய், வழிபாடு- தோற்றமும் வளர்ச்சியும் (142-145), பல்வேறு தோற்றங்கள் (146-150), தமிழகத்தில் வழிபாடு (150-157), பிற மாநிலங்களில் வழிபாடு (158-163), பிற தெய்வங்களுடன் தொடர்பு (164-172), வழக்குக் கதைகள் (173-182) என்னும் ஏழு தலைப்புகளைக் கொண்டது.

முற்பகுதியில் திரு க. வெள்ளைவாரணனார் அவர்களின் அணிந்துரை, நன்றியுரை, முன்னுரை இடம்பெறுகின்றது. பிற்பகுதியில் கம்பனில் அனுமன் பயிலும் இடங்கள், அனுமன் பற்றிய நூல்கள், துணைபுரிந்ததமிழ் ஆங்கில நூல்கள், பிழை திருத்தம் ஆகியவை இணைக்கப்பட்டுள்ளது.

காதாபாத்திரங்களின் குணாதிசயங்களை முன்னுக்குப்பின் முரண்படாமல், உலகியலுக்கும் இயற்கைக்கும் ஒவ்வும் முறையில் சித்தரித்துக் காட்டுவதில் கம்ப இராமாயணம் சாலச் சிறந்து விளங்குகிறது என்ற திரு கா. சு. பிள்ளையவர்களின் கூற்றுக்கு அனுமன் பாத்திரப் படைப்பே சிறந்த சான்றாக யமைகிறது. அனுமனை அறிமுகப்படுத்துவதில் கம்பன் நேரடி அறிமுகம், நாடகமுறை அறிமுகம் என்னும் இருமுறைகளையும் கையாளுகின்றான். அனுமன் தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொள்ளும் சிறப்புடை இடங்கள் நான்கு. இராம சுக்கிரீவர் நட்பு, சீதையைத் தேடியது.மருத்துமலை கொண்டு வந்து இலக்குவன், வானர வீரர்கள் உயிர் நீங்காமல் காத்தல், பரதனைக் காத்தல் இவற்றின் மூலம் அனுமனின் இன்றியமையாமையினை விளக்குகின்றார். அனுமன் ஒரு அகத்தூதும் இருபுறத்தூதும் செல்கின்றான். வகுத்துக் கூறுதல், நினைவாற்றல், சாதுர்யம், நுண்ணறிவு, விரைந்து செயலாற்றும் திறன், சொல் வல்லமை, கேட்போர்க் கேற்பச் செயல்படல், பகைவனுக்கு ஆட்படா மனத்திண்மை, சிந்தித்துச் செயலாற்றும் திறன் முதலிய தூதுவனுக்குரிய பண்புகள் அவனிடம் காணப்படுகின்றன. அனுமன் ஒற்றறுதற்கும் தகுதியுடையவன். அமைச்சர்களுக்குரிய குணங்களினின்றும் சிறிதும் வழுவாது காட்சியளிக்கின்றான். சுருங்கிய சொற்களிலே செறிந்த பொருளை உணர்த்தும் ஆற்றல் உடையவன் அனுமன். கேட்பவரைத் தன்பால் ஈர்த்தல், சொற்களை ஆராய்ந்து கூறல், தன் கருத்தினை வலியுறுத்திப் பேசுதல், காரணகாரியங்காட்டிப் பேசுதல். சலிப்பின்றிப் பேசுதல், வகைப்படுத்திக் கூறும் திறன், கேட்போர் உளமறிந்து மொழிதல், காலமறிந்து கூறல், இடனறிந்து பேசல், குறிப்பால் உணர்த்தல், இருபொருட் படப் பேசல், இடம் பொருள் ஏவலறிந்து சொல்லாடுதல் முதலிய தன்மைகள் அவன் சொல்லாற்றலுக்கு வெற்றியையளிக்கின்றன. அனுமன் இக்காவியத்தில் சிறப்பிடம்

பெற்றதன் அடிப்படைக் காரணம் அவனிடம் பொருந்தி நின்ற ஆற்றல். அனுமனின் ஆற்றல்கள் உடல் ஆற்றல், சித்தாற்றல் (அணிமா, மகிமா, லகிமா, பிராத்தி), பிற ஆற்றல்கள் (அறிவாற்றல், சொல்லாற்றல்) என முப்பிரிவாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அனுமனிடம் பணிவு, தற்புகழ்ச்சி இன்மை, கடமையுணர்வு, அஞ்சாமை, தன்னை அடைந்தாரைக் காத்தல், பகைவனிடத்தும் அருளுள்ளம், தலைவன் மேற் பழிவராது காத்தல், அறிவு, உருவைக் கண்டளவில் உய்த்து உணர்தல், பிறரை மதித்தல், சிறுமை கண்டு பொங்குதல், புகழில் மயங்காமை, முதலிய பண்புகள் காணப்படுகின்றன. கோதிலான் என்று வழங்கிய அடைக்கேற்பக் கம்பன் அவனைக் குறைகளே அற்றவனாகப் படைத்திருக்கின்றார். இராமன்பால் ஆழ்ந்த பக்தி கொண்டவர்களாகப் பலர் காணப்படுகின்றனர். அனுமன் அனைவரையும் வென்று இராமபக்தியில் ஈடுஇணையற்றவனாக விளங்குகின்றான். குகனைவிடப் பன்மடங்கு உயர்கின்றான். முதலில் சிலப்பதிகாரத்தில்தான் அனுமன் பேசப்படுகின்றான். அடுத்து ஆழ்வார் பாடல்களில் இடம் பெறுகின்றான். குலசேகராழ்வார், திருமங்கை ஆழ்வார், பெரியாழ்வார், திருஞான சம்பந்தர், அருணகிரிநாதர், இரட்டைப் புலவர்கள், தியாகராஜர், யோகி சுத்தானந்த பாரதியார், நாமக்கல் கவிஞர், சோம சுந்தர புலவர் ஆகியோர் வாக்கிலும், மகாபாரதத்திலும், இராகவன் பிள்ளைத்தமிழிலும் அனுமன் புகழ் சிறக்கிறது. சைனர்கள் இராமாயணத்திலும் அனுமன் குறிப்பு உண்டு.

பிற்பகுதி அனுமன் வழிபாட்டு நிலையினைக் காட்டுகிறது. கம்பனில் அனுமன் பயிலுமிடங்கள் ஆய்வுக்குப் பெருந்துணை செய்யும் அளவில் தொகுக்கப்பட்டுள்ளது. கூனியைத் துணை நிலை மாந்தர் என்று கூறுவது ஏற்புடைத்தன்று. பலமேற்கோள்கள் எடுத்துக் காட்டுதல் சிறப்புடையது. இரு பொருள்படப் பேசுதல் என்றும் தலைப்பின் கீழ் உள்ள சில சான்றுகள் நகைச்சுவையாகப்பேசுவதில் அமையக் கூடியது.

201. **தவழும் புகழ்** (43-48)

பன்னிரு கட்டுரைகள் :

அனுமன் சீதையைக் கண்டது, இலங்கைக்குத் தீ வைத்தது, மருத்துமலை கொணர்ந்தது முதலியவற்றை நவின்று செயற்கரிய செய்வர் பெரியர் புகழ் உலகில் தவழ்ந்து செல்லும் தாவிச் செல்லாது என்றுரைக்கின்றார்

**இந்திரசித்து**

202. **இந்திரஜித்தின் வெந்திறல்** (897-901)

ஆனந்த போதினி : தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் ஜூன், 1932.

இந்திரஜித்தின் வீரத்தினைச் சில காட்சிகளால் காட்டுகிறார்.

203. **இந்திரஜித்து** (74-97)

*தமிழ்க்கவி அமுதம், வித்துவான், ல. சண்முக சுந்தரம்; ஸ்டார் பிரசுரம்; மு. ப. ஜுன் 1956. ரூ. 2-50*

இந்திரஜித்தின் மரணத்தில் இராவணன் பூரணமான சோக பாத்திரமாக மாறிவிடுகிறான். இராவணனையும்விட உயர்ந்தவனாக இந்திரஜித்தைப் படைத்துள்ளான் கம்பன். அவன் சம்பந்தப் பட்ட ஒவ்வொரு முனையிலும் உணர்ச்சியை வெள்ளப் பெருக்காகப் பாய்ச்சுகிறான் கம்பன். 'இராமனை வெல்லமுடியாது. சீதையை விட்டுவிடு' என்பது சோக நாடகத்தின் உச்சநிலை; இராவணனிடம் தவறுகளை எடுத்துரைத்து கடுமையாகக் கோபிப்பது இவன் ஒருவன்தான். இந்திரஜித்தின் வாழ்க்கையையே கம்பன் ஒரு தனி நாடகமாகப் படைத்துள்ள சிறப்பை இக்கட்டுரையில் தெளிவாக அவன் வீரம், மனநிலை விளங்குமாறு காட்டிச் செல்கிறார்.

204. **வில்லின் செல்வன்** (33—44)

*கட்டுரை மலர்மாலை: ரா. பி. சேதுப்பிள்ளை, கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி; சென்னை; அணா 12*

மேகநாதனின் வீரத்தினைச் சுட்டி அவனை வில்லின் செல்வனாக்குகிறார்.

**இராமன்**

205. **கன்னிப்போர்** (78-80)

*கல்வியும் கேள்வியும்—கு. மதுரை முதலியார், 1920; ரூ. 2*

இராமபிரான் தாடகையை வதைத்த நிகழ்ச்சியை வருணித்துள்ளார்.

206. **அண்ணல் தன் வண்ணம்** (18-22)

*ஆனந்த போதினி, தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், ஜூலை 1931*

இராமனது மெய்வண்ணம், தாடகையை வீழ்த்திய கை வண்ணம், அகலிகையை உயிர்ப்பித்த கால்வண்ணம், கைகேயியின் கட்டளையை ஏற்றுக்கொண்டது, விபீடணனைச் சுக்கிரீவனிடம் அனுப்பித் தன்னிடம் வரச் சொன்னது, சீதையை மீட்டபின் ஏசியது ஆகியவற்றால் சொல்வண்ணம் முதலியவற்றைக் காட்டுகிறார்.

207. **கம்பரின் கவித்திறமை** (497-504)

*ஆனந்தபோதினி: ஐமதக்னி, சன. 1935*

வனம் புகுந்த இராமன் அதன் இன்பச் சித்திரங்களைச் சீதைக்குக் காட்டித் தானும் மகிழ்ந்ததைக் காட்டுகிறார்.

208. **இராமபிரான் பெற்ற இருபெரு வரங்கள்** (3.37-3.46)

*ஸ்ரீகோபாலக் கிருஷ்ண மாச்சாரியர் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மலர்மாலை. மு. இராகவஐயங்கார், அக். 1942.*

இராமனைக் காட்டுக் கனுப்பியது கைகேயியின் குற்றமன்று; தேவர்கள் வேண்டுகோளை மறந்து பட்டத்தை ஏற்க இருந்த இராமனுக்கு அதனை உணர்த்தவே காட்டுக்கு அனுப்பினர் என்னும் கருத்தை இராமன் இறுதியில் தசரதனிடம் கேட்ட வரத்தால் வலியுறுத்துகின்றார். 'நீளரசை வரன் பிழைக்கிது முதலெனு தாள்வுற மதித்து யான் பிழைத்தேன்' என்னும் இராமன் கூற்றுக்கு 'உலக அரசசை ஆள்வது தேவகாரியம் பழுதுபடுதற்கு மூலமாம் என்ற இதனை உணராமற் போன பிழை என்னதே' என்று பொருளுரைக்கின்றார்.

209. **இராமன்** (35-38)

*மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும் கு. பால சுந்தர முதலியார் எஸ். வாசன் கம்பெனி; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. 1945; இ. ப. 1947; மூ. ப. 1958; நா. ப. 1959; ரூ. 2-50.*

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பதைத் தனக்கு அறிவுரையாகக் கொண்டது, இலக்குவனை நல்லொழுக்கத்தினின்று வழுவாத வண்ணம் காத்த திறம், ஒழுக்கம் தவறிய மாந்தரை ஒறுத்தது; சிறந்தோரைப் போற்றிய பான்மை ஆகிய பண்புகளை எடுத்துரைக்கிறார்.

210. **அழகுத் தெய்வம்** (158-168)

*தமிழர் பண்பாடு; எஸ். வி. பி. பி. ஏ.; பி. எல்.; தமிழ்ப் புத்தகாலயம்; 393 பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-4. மு. ப. சூன் 1949; இ. ப. 1951; ரூ. 3.*

இராமனுடைய ரூபசௌந்தர்யம், குணசௌந்தர்யம், வீரசௌந்தர்யம் இம்மூன்றையும் அவனது திவ்ய சரிதத்தில் வைத்து உலகிற்கு விளக்குவதே இராமாயணம். உலாவியலில் வைப்புமுறை சிறப்பாக அமைந்துள்ள முறையை விவரிக்கின்றார். வரைக் காட்சிப் படலம் தொடங்கி உலாவியல் முடிவாயுள்ள பகுதியை, கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன் கருணை வெள்ளத் தழுத்திய முறைக்கு ஒருவாறு ஒப்பிடலாம்.

**211. உத்தம சகோதரன் (114-121)**

*தமிழர் பண்பாடு:* எஸ். வி. பி. பி. ஏ., பி. எல்.

இராமபிரான் மீது அவன் தம்பியர்கள் அனைவரும் அத் தம்பியர்களுக்குச் சார்பாக உள்ளவரும் பொறுமை கொள்ளுதற் குரிய காரணங்கள் பல இருந்தன, எனினும் பொறுமைத்தீ உண்டாகவில்லை. இதற்குக் காரணம் இராமபிரானது அருட் பெருங் குணங்களே யாம். உத்தம சகோதரத்வத்திற்கு எடுத் துக் காட்டாய் உள்ளவன் இராமன். குகன், சுக்கிரீவன், விபீட ணன் ஆகியோருடன் நட்புக்கொண்டு சகோதரர்களாக ஏற்றது 'யாதும் ஊரே யாவம் கேளீர்' என்ற தமிழர் பண்பாட்டினை விளக்கி நிற்கிறது.

**212. இலக்கிய நாயகன் இராமன் (17-25)**

*இலக்கியப்பொழில்:* எம். ரம்போலா மாஸ்கரேனஸ் பி. ஏ.; ஒற்றுமை நிலையம், நெ. 8. வியாசராவ் தெரு; தியாகராய நகர்; சென்னை-17; 1951; ரூ. 1-50.

குடிகளிடத்தில் கொண்ட பேரன்பு, இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் என்னும் வள்ளுவர் வாக்குக்குச் சான்றாக அமைந்துள்ளமை, மாற்றாரை மன்னிக்கும் இயல்பு, (விபீடணன் அடைக்கலம்) தொடர்புடை யார் மாட்டுப் பேரன்பு (குகன்) பெற்றோரிடத்துப் பணிவு, மனைவியிடத்துக் கனிவு, சகோதரனிடத்துக் கொண்ட நேயம் ஆகிய இராமனின் நற்பண்புகளே இராமனைக் காப்பியத்தின் உயிர்நிலையாக ஆக்குகின்றன. அன்பே அவன் கொண்ட தலையாய உயர் பண்பாகும்.

**213. விதியின் பிழை (30-31)**

*கட்டுரைப் பூங்கா:* அ. சிவலிங்கனார்; ஒற்றுமை ஆபீஸ்; நெ. 8. வியாசராவ் தெரு; தியாகராய நகர், மதராஸ்-17; 1952; ரூ. 1-50.

இடையூறு பிறரால் உற்ற ஒருவன் அவனை நோவாமல் விதியை நோதல் வேண்டும் என்பதனை இராமன் இலக்குவனுக்கு உணர்த்திய வகையை இதில் காட்டுகிறார். தசரதன் பெற்ற சாபத்தால் இராமன் வனம் ஏக வேண்டியதாயிற்று. அவன் முன் செய்த வினை இங்ஙனம் வந்து மூண்டது. இராமன் செய்த வினையே கூனியை மாறுபடச் செய்தது. இதனால் கைகேயியின் பிழையன்று. பரதன் இங்கு நடந்த நிகழ்ச்சிகளை அறியாத வனாதலின் அவன் பிழையன்று. ஒருவனுக்கு யார் மூலம் தீது நேர்கின்றதோ அவரையே அதற்குக் காரணமாக்கிக் கூறிவிடுவர்.

அதனால் இராமன் அனைவர் பிழையும் அன்று என்றவன் தன் பிழை என்னாமல் விதியின் பிழை யென்றான்.

214. கம்பன் கவியும் காகுத்தன் கணையும் (72-83)

கட்டுரைக் கதம்பம்: பாலூர் கண்ணப்ப முதலியார்; சி. சுப்பைய செட்டி அண்டு கோ., பெரிய தெரு; திருவல்லிக்கேணி, சென்னை-5; மு. ப. 1960; இ. ப. 1962; ரூ. 2.

'இராம-கிருஷ்ண விஜயம்' என்னும் மாத சஞ்சிகையில் வெளி வந்தது. கம்பனுடைய புகழ், அவரின் பிற நூல்புலமை ஆகியவற்றை முதலில் கூறியுள்ளார். இராமனுடைய அம்பின் வேகத்தின் மாட்சியினைக் காட்டிய முதலிடம் தாடகை வதம். கணையின் தோற்றப் பொலிவு விளங்குவது இரண்டாவதாகிய வாலிவதம். மூன்றாவது இராவண வதம் என்கிறார். பெரிய புராணத்தில் 'உலகெலாம்' எனும் தொடர் பல இடங்களில் பயன்படுத்தப் பட்டிருப்பினும் குறிப்பாக மூன்றிடங்களில் சிறப்புறுவது போல, கம்பன் இராமனது அம்பிற்குப் பல இடங்களில் வேலை தந்திருப்பினும் மேற்கூறிய மூன்றிடங்களி லேயே அதன் சிறப்பைக் காட்டியிருப்பது, அவர் சேக்கிழாரைப் பின்பற்றி நடந்துள்ளமையைப் புலப்படுத்தும் என்கிறார்.

215. விதியா? அறமா? (79-82)

காவியத்தில் ஓவியங்கள்: சு. இராசேந்திரன்; அருணா பப்ளி கேஷன்ஸ், தியாகராயநகர்; சென்னை-17, மு.ப. 1962; ரூ. 1-75.

தாயின் கட்டளையை ஏற்றுக் கானேகச் சித்தம் செய்ய வரும் இராமன் முன் விதி, இராமனுக்கு மன ஆறுதலின் பொருட்டு செல்கிறது. விதியின் உள்ளடங்கியது அறம். அறம் இரங்கிய நிலையில் செல்கிறது. இவ்வாறு இராமன் காடேகுவது விதியா? அறமா? என்ற வினாவிற்கு இடமின்றிக் கம்பன் இரண்டை யும் இணைத்து வைத்துள்ளான்.

216. கம்பர் நீதியந் தலைவர் (73-80)

இலக்கியப் பரிசு: வித்துவான் குமாரசாமி; மணிவாசகர் நூலகம்; சிதம்பரம்; மே 1962; ரூ. 1-50.

இராமன் விபீடணனை, உடனிருந்தோர் கூற்றுகளுக்குப் பின் ஏற்றுக்கொள்ளல் அவனை நீதியந்தலைவனாக்குகிறது. தானே முதலில் செய்திருப்பின் குழப்பம் ஏற்பட்டிருக்கும். இராமன் சுக்கிரீவனை விளித்து, விபீடணனை அழைத்து வரச் சொன்னதில் உள்ள 'கோதிலாதவனை' என்பதற்கு 'யாதொரு குற்றமும் உண்டாகாது அவனை' என்றும் பொருள் கொள்ள லாம்(78). தன்னோடொப்பச் சுக்கிரீவனை உயர்வுபடுத்தித் தன்

வயமாக்கிய மதிவன்மையும், வினை செயல் திறமும் நன்கு வெளிப்படுகிறது (79). சுக்கிரீவன் நிலையும், விபீடணன் நிலையும் (காமம் காரணமாக அண்ணனைத் துறந்த நிலை) ஒன்றாய் இருப்பதால் அவனை அனுப்பியிருக்கலாம். இதனால் முதலில் மாறுபட்ட பிறர் உள்ளம் விரைவில் அமைதியடைகிறது.

## 217. காலமும் கோலமும் (23-27)

*கவிதையும் கவிஞனும்: புலவர் எம். சி. கண்ணபிரானார்; கலை அரசி வெளியீடு; சென்னை-7; மு. ப. சூலை 1963; ரூ. 2.*

காலமறிந்து கவிசெய்யும் திறனைக் கம்பரிடத்தில் பல இடங்களில் காணலாம். பரதன் மூலம் தயரதன் மறைவைக் கேட்ட ராமன், எதிர்வரும் தாயரிடம் 'என் தந்தை யாண்டென', வினவி, அவர்கள் சேவடியில் நீர் சிந்தினார் என்று குறிப்பதன் மூலம் அந்தச் சூழ்நிலையில் மிகுந்துள்ள துன்பத்தைக் காட்டி, தாயரை வணங்கினான் என்பதையும் குறிப்பாகச் சுட்டிக் காட்டியுள்ளார். இப்பணிவு பழக்கத்தால் ஏற்பட்டதாகக் காட்டுகிறார். மேலும் காட்டில் தான் பட்ட துன்பத்தால் கைகேயியை வெறுத்து விட்டானோ என்ற ஐயமும் ஏற்படாவகையில் இவ் வணக்கம் அமைந்துள்ளது. எளியோரையும் எக்காலத்திலும் பணியும் இயல்பு வாய்ந்த இராமனது ஒழுக்கத்தை எடுத்துக் காட்டவே கம்பர் இவ்வாறு துன்பத்திலும் பணிந்ததாகக் காட்டியுள்ளார் என்று தம் கூற்றுக்குச் சான்று காட்டுகிறார்.

## 218. கம்பன் காட்டிய இராமன் (343—344)

*தமிழ்ப் பொழில்: வி. இராசமாணிக்கம் எம்.ஏ., பிப்—மார்ச் 1963*

கம்பர் இராமனை விருப்பு வெறுப்பற்றவனாகக் காண்பிக்கின்றார். 'யானே சொல்லக் கொள்ள இசைந்தான் முறைமையாலே' என்பதில் முறைமையாலே என்ற தொடரால் பரதனுக்கு அரசியல் உரிமை உண்டு என்பதும் பெறப்படும். போரில் இறுதியில்தான், படைகள் அழிந்தால்தான் அரசர் போர்க்கெழுவர். ஆனால் இராமன் படைகளோடேயே சென்றுவிட்டான். இதற்குக் காரணம் கும்பகர்ணன், இந்திரசித் ஆகியோருடைய திறமையை இராமன் முன்பே யறிந்திருக்க வேண்டும். மனித நிலையிலும் திருமால் அவதரித்துக் காட்டியுள்ளார். மனித நிலையில்தான் சில தவறுகள் ஏற்பட்டுள்ளன. கம்பர் காட்டிய இராமன் இருவகையினன். ஒருவன் எளிய மனிதப் பண்புடையவன்; இன்னொருவன் திருமாலின் அவதாரமான இறைமைப் பெற்றவன். இக்கட்டுரை 7-10-62இல் நிகழ்ந்த கலைமகள் விழாவில் பேசியதன் சுருக்கம்.

**219. கம்பனில் நாயகன் I** (87—109)

இலக்கிய நாயகர்கள் (முதற் பகுதி): புலவர் செந்துறை முத்து; பசவேஸ்வரா பிரசுரம்; தவுலாபாத்; கிருஷ்ணகிரி (சேலம் மாவட்டம்) மு. ப. செப். 1963; ரூ. 2

இராமன் தமிழ்மறை நெறியினை அறிந்தானோ என்னவோ, கம்பர் தமிழ்மறை மொழிப்படி இராமனின் வாழ்க்கையை அமைத்துக் காட்டுகின்றார். இராமன் வாழ்க்கையை விடச் சிறந்த அன்பு வாழ்க்கையைக் காண்டல் அரிதே. இராமன் மிக உயர்ந்த ஒழுக்கத்தினைக் கொண்டிருந்த காரணத்தினால்தான் ஒழுக்கத்தையே துணையாகக் கொண்ட குகன், சபரி, விபீடணன் முதலியோர் அவனுடன் நேயம் பூண்டு ஒழுகினர்.

**220. இளங்கோ இராமன்** (239—243)

தமிழ்ப் பொழில்: த. இராமநாதப் பிள்ளை; அக்—நவ. 1963

இளமையில் குடிமக்கள் நலம் வினவியது; தாடகையை வதைத்தது; சீதையின்பால் காதல் கொண்டது; தந்தை தாய் சொல் பணிந்தது; தீயோரை ஒறுத்து அந்தணர்க்கு அபயம் அளித்தலே தன் வாழ்க்கை நோக்கமாகக் கொண்டது; நண்பர்களைத் தன்னுயிரென ஓம்பியது; தம்பியர், மனைவி மீது பேரன்பு கொண்டது முதலியவற்றைக் காட்டுகிறார். நாகரிக வாழ்க்கைக்குரிய மனித இயல்பும் பண்பாடும் மிக்குத் திகழ்ந்தான் இராமன். வாலியை ஒறுத்து நீதி செலுத்தினான். அறநெறி வழுவாது போர் புரிந்தான். பகைவர் மீது அருளுடையவன். தன் இல்லாள் பிறர் மனையைச் சிறிதும் விரும்பினாள் அல்லள், என்பதனை நிலை நாட்டவே, 'பிறன்மனை இருந்த உன்னை ஏற்கலாமா?' எனத் தன் இல்லாளைக் கேட்டான் என்றுரைக்கின்றார். உள் தலைப்புகள் இட்டுக் கட்டுரையை அமைக்கின்றார்.

**221. கம்பரில் பாலர் கல்வி** (68—72)

இலக்கிய வழி: (திருத்தப் பதிப்பு) - பண்டிதமணி. சி. கணபதி பிள்ளை; திருநெல்வேலி சைவாசிய கலாசாலை, பழைய மாணவர் வெளியீடு - 2; திருமகள் அழுத்தகம்; சுன்னாகம்; 1964; ரூ. 3

இராம இலக்குவர் முனிவர்களிடம் சென்று கல்வி பயின்று திரும்புகையில் எதிர்வரும் நகர மக்களுடன் உரையாடும் பகுதியிலிருந்து பாடல்கள் தரப்பட்டுக் கதை விளக்கம் தரப்படுகின்றது. இறுதியில் தாடகையைக் கண்ட இராமன் பெண்ணென மனத்திடை நினைத்தமையால் அம்பு தொடுக்காது நின்றமையை விசுவாமித்திரர், 'ஆறி நின்றது அறன் நன்று' என்று பாராட்டுவதைக் காட்டி இத் தருமம் எங்கு இருந்து வந்தது? எந்தக் கலாசாலைப் படிப்பிலிருந்து வந்தது? என்றும், 'ஏ'

இராவணு, தவித்த முயல் அடிப்பது தருமம் அன்று. இன்று போய் நாளை வா!' என்கின்றன். இந்த வார்த்தை இராமனுக்கு எப்படி வந்தது? என்றும் இருவினுக்களை எழுப்பிக் கொள்வதோடு கட்டுரை முடிவுறுகின்றது.

222. **வில்லி** (32—35)

*இலக்கிய நினைவுகள்: டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்*

பலருடைய உயிரை வெற்றியோடு குடித்த இராமனின் கூற்றம் அனைய கூர்ங்கணை ஓரிடத்தில் தோல்வியோடு உயிரைக் குடித்தது. வாலி வதையில் வாலியின் உயிர் இருக்கும் வரை அவன் நெஞ்சைத் துளைக்கும் ஆற்றல் அம்புக்கு இல்லை. இராமனின் அம்பினைத் தடுத்து நிறுத்திய அறநெஞ்சின் ஆற்றலாக இதனைக் காட்டுகிருர்.

223. **அறந்தரு சிந்தையோன்** (56—67)

*அறந்தரு சிந்தையோன்; எல். இராமனுதன் எம். ஏ.; அன்னை நிலையம்; சிவகங்கை மு. ப. 1964; ரூ. 2*

இராமனின் அறம் நிறைந்த வாழ்வையும், பகைவர்க்கருளும் சிந்தையையும் மாற்றுர் வாய்மொழியாகக் கம்பன் வைத்துள்ளமையைக் காட்டுகிருர். வள்ளுவர் கருத்திற் கிணங்க இராமன் பொருமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகிய குற்றங்களை அகற்றி வாழ்வதுடன், ஏனையோர்களிடமும் இக்குற்றம் பொருந்தாவாறு, அவ்வப்போது எடுத்துக் கூறி (சுக்கிரீவனைத் திருத்தியதைக் காட்டுகிருர்) நெறிப்படுத்தும் அருள் நெறியுடையவன் என்பதைக் கம்பர் காட்ட முற்படும் சிறப்பு, உலகில் மக்கள் அன்பு, அறம், அருள் என்ற நிலையை நிலைபேறு உடையதாகக் கொள்ள வேண்டும் என்று உணர்த்துவதாக அமைந்துள்ளது.

224. **முறுவலித்தது ஏன்?** (144—153)

*புதிய கோணம் (இலக்கியக்கட்டுரைகள்); அ.ச. ஞானசம்பந்தன்; பாரி நிலையம்; மு. ப. 1965; ரூ. 3-25*

தாய் மட்டுமே செய்யக்கூடிய காரியமான பசிக்கு உணவு கொடுத்தலை ஆண் மகனுக இருந்தும் கூடக் குகன் செய்து விட்டான். எனவே அவனை எடை போட வந்த இளையபெருமாள் தாயினும் நல்லான் என்று கூறுகிருன். குகன் தன் கையுறைகளைக் கொடுக்க இராமன் முறுவலித்தது ஏன் என்ற வினவிற்கு, 'அறிவின் துணைகொண்டு என்னைக் காண முயன்றுவிட்டதாகக் கருதி ஓரளவு இறுமாந்து நிற்கின்ற உங்களைக் காட்டிலும் என்னுடைய தன்மையை ஒரு சிறிதும் அறிந்து கொள்ளாமலும் அறிய முடியாமலும், இக்குகன் தன்னுடைய அன்பு, பரிவு என்ற இரண்டிலும் தான்வேறு யான்வேறு என்ற வேறுபாட்டைப் போக்கித் தன்னையே ஐக்கியப் படுத்திக் கொண்டான்' என்பது

போல் அமைந்திருக்கின்றது இப் புன்முறுவல் என விடையளிக்கிறார். தங்கள் தங்களுடைய அன்பையே பெரிது என்று கருதிக் கொண்டிருக்கும் சீதையை, இலக்குவனை இராமன் 'ஐய நின்னை இன்னனம் பார்த்த கண்ணை ஈர்கிலாக் கள்வனேன் யான்' என்று குகன் கூறியவுடன் நோக்கி அதன் மூலம் அவன் அன்பின் ஆழத்தை அவர்கள் அறியச் செய்து புத்தி புகட்டுகின்றான்.

225. **கம்பன்கண்ட இராமனில் சிறப்பாயிருப்பது அவனது அழகா? அறிவா? ஆற்றலா?** (76—84)

*பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை பப்ளிஷர்ஸ்; திருநெல்வேலி; மு. ப.* 1966; ரூ 2

*கம்பன் இராமன் அழகினை வர்ணித்திருப்பது, ஆற்றலை வெளிப்படுத்தியிருப்பது, அறிவின் உம்பரனுகக் காட்டியிருப்பது ஆகியவற்றை முதலில் கூறுகிறார். பின் மாயமான் பின் சென்றது. வாலியை வதம்புரிந்தது ஆகியவற்றால் அறிவில் சிறப்பில்லை. ஆற்றலுக்குப் பக்கபலமாக இருப்பவள் சீதை. மண்டோதரி 'அஞ்சினேன் அஞ்சினேன் அச்சீதை என்னும் அமிழ்தால் செய்த நஞ்சினால் இலங்கை வேந்தன் நாளை இத்தகையன் அன்றோ' என்று கூறுவதைச் சான்றாக்குகிறார். அழகினை வர்ணிப்பதில் கம்பன் 'மையோ, மரகதமோ...ஐயோ இவன் வடிவு' என்று தடுமாறுவதைச் சுட்டி அழியா அழகே இராமனில் சிறப்பாயிருப்பது என்று முடிக்கிறார்.*

226. **கம்பர் தரும் இராமன் அருட் செல்வம்**

மு. சதாசிவம்

(Dictionary of Epithets and Names of Sri Rama as found in Kambaramayanam)

*பாரிநிலையம்; மு. ப.* 1969; 16+171; ரூ. 3-50

*அகராதி* 1—134, *கம்பர் கண்ட இராமன்* 135—171 *என இரு பகுதியாக இந் நூல் அமைந்துள்ளது. எல்லாச் சிறப்பு நலங்களையும் ஒரே இடத்தில் எடுத்துக் கூறாமல் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு தெய்வப் பண்பிலேயே திளைத்து இன்புறுகிறார் கம்பர் என்று முன்னுரையில் கூறுகிறார். கம்பர் கண்ட இராமன் எனும் பகுதியில் கம்பர் இராமனின் அக, புற அழகுகளை வர்ணித்துள்ள மாற்றை எளிய உரைநடையில் பகுதி பகுதியாகப் பகுத்துத் தருகிறார். இராமனைப் பற்றிப் பொது நிலையில் அறிய இக்கட்டுரை உதவுகிறது.*

227. **அழகு ராமன்** (11—15)

**Lady Doak College Magazine; வசுமதி 1969;**

இராமன் என்பதற்குத் தன் திருமேனியின் அழகினாலும், நற்குண நற்செய்கைகளாலும் பிறரைக் கவருபவன் என்பது பொருள். தசரதன் நீங்கா விருப்பால் அவன் அழகை ரசித்தல், விசுவாமித்திரர் கரிய செம்மல் என்றழைப்பதில் அழகனைத்தும் அடங்கியிருத்தல், மிதிலை மகளிர் கண்டு மயங்குதல், வாலி இறக்கும் நிலையிலும் 'ஓவியத்தெழுத வொண்ணா உருவத்தாய்' எனல், சூர்ப்பணகை காமுறுதல் முதலியவற்றைச் சுட்டி, இராமனது அழகு இராமாயணத்தில் வருணிக்கப்பட்டுள்ளது போல், விளக்கப்பட்டிருப்பதுபோல் வேறெந்த இலக்கியமும் தன் பாட்டுடைத் தலைவனை வருணிக்கவில்லை என்று கூறுகிறார். நம்மாழ்வார், குலசேகராழ்வார், வான்மீகி ஆகியோர் கூற்று களையும் தருகிறார்.

228. **இராமபிரானின் கன்னிப்போர்** (95—96)

திருக்கோயில்; கு. மதுரை முதலியார்; நவ. 1970; ரூ. 1

இராமனின் கன்னிப்போரான தாடகை வதத்தினை இங்கு எடுத்துக் கூறுகிறார்.

229. **காவிய நாயகன்** (239—247)

வங்கத்தமிழ்: ப. ந. தியாகராஜன், பாரதி தமிழ்ச் சங்க வெளியீடு, 93 - ஏ, ராஜ்விஹாரி அவென்யு; கல்கத்தா - 26; 1970; ரூ. 5

இராமனின் அவதார இரகசியத்தைக் கோசிகன் வாயிலாகக் கூறிவிடுகிறான் கம்பன். மூலசக்தியின் திருவவதாரமே இராமன் என்னும் கம்பன் நீலமாலையின் கூற்றான, 'மாத்திரை அளவில் தாள் மடுத்து' எனும் பாடலின் மூலம் விரிசடைக் கடவுளின் அம்சத்தையும், கடிமணப் படலத்தின் 'கோவையின் பெருவட முத்தங் கோத்தன', 'மேவரும் சுடரென விளங்கும்' என்னும் பாடல்களின் மூலம், மூலப் பொருளாவன் என்பதையும், சுந்தர காண்டத்தில் அனுமன் வாயிலாக 'சொல்லிய அனைவரும் அல்லன்', 'மூலமும் நடுவும் ஈறும் இல்லது' என்னும் பாடல் களின் மூலம் மும்மூர்த்திகளின் திருவவதாரமாகக் கம்பன் காட்டு கிறான். காப்பியத்தின் மூலமாக வைணவத்தையும், சைவத்தை யும் ஒன்ற வைத்துள்ளான் கம்பன்.

230. **பழியின் பரிசு** (566—568)

திருக்கோயில்: திருமலை நல்லான், இராமகிருஷ்ணையங்கார். செப். 1970; ரூ. 1

இராமபிரான் தன்னைச் சார்ந்தோர் பலர்மீது, பழியை ஏறிட்டு நன்மை பயந்திருப்பதை இராமாயணத்தில் காணலாம். முதலாவதாகக் கொடுத்த அரசை மீட்டுப் பெண் சொற் கேட்டுப் புதல்வனைக் காட்டுக்கனுப்பியதாகப் பழி ஏற்றப்படுகிறது

தயரதன் மீதும் கொடியளாய் மாறிக் கொண்டவனை வற்புறுத்தி ஆட்சியைக் கொண்டு குணக் கொண்டலாம் இராமபிரானைத் தண்டகாரணியத்துக்குப் போகச்செய்ததாகக் கைகேயி மீதும், தூய தாயுள்ளத்தைப் பேயுள்ளமாக்கியதாகக் கூனிமீதும், தாய் வாயிலாக இராமபிரானைக் காட்டிற்கு ஓட்டி நாட்டினைக் கைப்பற்றிட முயன்றதாகப் பரதன்மீதும், பழிகள் ஏற்றப்படுகின்றன. தேவர்களுடைய முயற்சியின் பயனாக இவை ஏற்பட்டன என்று கூறப்பட்டாலும் இறைவனான இராமபிரானது சங்கற்பத்துக் கியையவே அவர்கள் முயற்சி அமையுமாதலின் இப்பழி அனைத்திற்கும் மூலகாரணம் இராமபிரானே. கம்பர் 'அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும் துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்' என்று கைகேயியின் மனமாற்றத்துக்குப் பாவத்தையும் அறத்தையும் காரணமாகக் கூறியுள்ளார் எனில், அக்கூற்றிற்கும் இராமபிரான் காரணம் என்பதே கருத்து. கவிஞன் இங்குப் பாவமென்றும் அறமென்றும் குறிப்பிட்டது இராமபிரானையே என்று நாம் துணிதல்வேண்டும் என்று கூறி அதனை விளக்குகிறார்.

**231. கம்பர் காட்டும் இராமன்—கணவன் (213—231)**

*இலக்கிய அணிகள் :* சி. பாலசுப்பிரமணியன்; பாரி நிலையம்; மு. ப. ஏப். 1972; ரூ. 7

இக்கட்டுரை 27-2-1967இல் நிகழ்த்திய வானொலி உரையாகும். இதில் இராமன் சீதையின் களவுநிலை கூறுகிறார். 'இராமன் சீதைக்கு ஏற்படும் இடர்களுக்கு அஞ்சி காட்டுக்கு வர வேண்டாமென்பதும், சீதை துணிவுடன் உடன் கிளம்புவதும், சீதையின் அகமும் முகமும் குளிர இராமன் அவள் பெரிதும் விரும்பும் கணவனாக வாழ்ந்தான் என்பது போதரும். 'இந்நன்னுதலவள் நின் கேள்' என்ற வாசகம் இராமன் சீதை மாட்டுக் கொண்டிருந்த நல்மதிப்பினைப் புலனாக்குகிறது. அவனை விளிக்கும் தொடர்கள் பேரன்பினையும், மதிப்பினையும் புலப்படுத்துவனவாம். சீதைக்காகப் பாலைவனத்தைச் சோலைவனமாக்கியது—அருளுள்ளம்; சீதையைப் புகழ்தல்—உளம் ஒன்றியநிலை, இலக்குவனைச் சீதைக்குக் காவல் வைத்துப் பொன்மானைத் தொடர்ந்தது—பொன்னைப்போல் போற்றிய தன்மை, சீதை சிறிதும் வருந்தப் பொறுக்காதவன், சீதை பிரிவால் வருந்தியது, ஆறுக்காதல், ஏகபத்தினி விரதன், சீதையுடன் இல்லறத்தைத் திறம்பட நடத்தியவன், (அருந்தும் மெல்லடகு), மறு பிறவியிலும் சீதை இராமனைக் கணவனாக விரும்பிய நிலையில் இராமன் வாழ்வு நடத்திய நற்பண்பு, சீதை கொண்ட ஆராஅன்பு ஆகியவற்றைச் சுட்டி இராமனை நல்ல கணவனாகக் காட்டுகிறார்.

**232. கம்பர் காட்டும் இராமன்—சகோதரன்** (202—212)
இலக்கிய அணிகள் : சி. பாலசுப்பிரமணியன்

இது சென்னையில் 26-10-70 அன்று நிகழ்த்திய வானொலி உரையாகும். இராமாயணத்தின் மூலம் கம்பர் ஓர் உலக சகோதரத்துவத்தை, தேசீய ஒருமைப் பாட்டை உணர்த்திக் காட்டியுள்ளார். வாலி இராமனுக்குத் தம்பியர் தான் உயிர் என்று குறிப்பிடுவது, இலக்குவன் தவச்சாலை அமைத்தமை கண்டு நெக்குருகி நின்றது, பிரம்மாத்திரத்தால் இலக்குவன் இறந்தானென்று எண்ணியபோது புலம்பியது, பரதனை ஆரத்தழுவியது, பரதனின் பண்பு நலனைப் பாராட்டுவது, 'என் பின்னவன் பெற்ற செல்வம் அடியேன் பெற்றதன்றோ' என்றுரைப்பது, குகன், விபீடணன், சுக்ரீவன் ஆகியோரைத் தம்பியராகக் கொண்டது ஆகியவற்றைச் சுட்டி, இராமாயணத்தின் நெடுகிலும் இராமனின் சகோதரப் பண்பு உணர்த்தப்படுகிறது என்கிறார்.

**233. இராமன் திருமாலா?** (151—156)
நான்காவது கருத்தரங்கு மலர் : கு. திருமேனி, கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைச் சார்பு வெளியீடு. 1972; ரூ. 20

இராமாயணத்தில் இராவணன் செருக்குற்ற போது அவனை அழிக்கத் திருமால் வடிவில் பரம்பொருள் மனிதனாக வந்து அவதரித்துள்ளார் என்பது ஆசிரியரின் முடிவு. பல பாடல்களைச் சான்றாக நவின்றுள்ளார்.

**234. அழியா அழகுடையான்** (46—58)
நமது பண்பாடு : க. சி. கமலையா, தமிழ்ப் புத்தகாலயம், மு. ப. சன. 1973; ரூ. 5

இராமனைத் தசரதன் அழைத்து வரச் சொன்னது முதல் சித்திரகூடத்தில் பரதனைச் சந்தித்தது வரையிலுள்ள பகுதிகளில் கம்பன் இராமனை வர்ணிக்கும் அழகினையும் அவன் குணநிசயங்களையும் அழகாகக் காட்டுகிறார்.

**235. இராமனைக் கண்டார் யார்** (42—46)
நமது பண்பாடு : க. சி. கமலையா

இராமன் கடவுளின் அவதாரம் என்பதனைக் காப்பியத்துள் உள்ள சில சான்றுகளைச் சுட்டி இறைவனை முடியக் கண்டவர் யார்? என்று வினவுகிறார்.

**236. அறம் வளர்த்த கண்ணாளன்** (58—83)
இலக்கியப் பண்பாடு : சரோஜினிதேவி; மல்லிகை வெளியீடு; மெர்க்குரிப் புத்தகக் கம்பெனி; கோயம்புத்தூர்-1, ரூ. 2-50

இராமாயணத்தைக் கவிச்சுவையின் களஞ்சியமாகவும் வாழ்வில் தெளிவூட்டும் அறநெறிச் சாரமாகவுமே காண்பது நம்மளவில் நன்று. எல்லோருக்கும் பயன்படுவதாக இராமன்

எவ்வாறு நற்குணக் களஞ்சியமாய் வாழ்த்தான், அறத்தின் திருவுருவாய் வாழ்ந்தான் என்பதைக் கம்பராமாயணம் தெளிவாக விளக்குகின்றது. குணமும் குறியும் கடந்த கடவுள், குணமும் குறியும் உடைய நம்மிடையே உலவும் போது நாம் பயன்பெற முடியும் இந்த நோக்கத்தோடு தான் கம்பர் தம்முடைய இராமாயணத்தைப் பாடினுர்(6 ). காதலித்த உருவாகி அறம் வளர்த்த கண்ணுளன் என்ற தொடருக்கு, 'அழகனுக உருவங்கொண்டான், அதற்கேற்ப அறம் வளர்த்தான், அறம் வளர்த்த கண்ணுளக இருந்தான். அதற்கேற்பக் காதலித்த உருவாகியிருந்தான்—என அழகும் அறிவும் ஒன்றுக்கொன்று துணை போவதாகக் கொள்ள வேண்டும். இராவணன், இராமன் ஆகிய இரு எதிரிகளும் அழகுடன் பொலிந்ததை ஒரே இடத்தில் காட்டுகின்ற முரண்நயம் கம்பரால் மிகத் திறம்பட எடுத்தாளப்பட்டுள்ளது. இராமன் இராவண வதத்தில் அறத்தோடு இருந்ததைக் குறிப்பிட்டு அவன் நாடும் தந்தையும் அறத்தோடு இருந்ததை நவின்று, அறத்தின் எதிர்ப்பை, களைகளை அவன் களைந்த பின்பே அறம் வளர்த்த கண்ணுளன் என்று குறிப்பிடப்படுகிருன் என்கிருர்.

**237. இராமன்** (77—82)

வெண்ணிலவில்: ஜி. சுப்பிரமணிய பிள்ளை, தமிழ்நிலையம்; புதுக்கோட்டை.

சீதையைப் பிரிந்த இராமன், வெண்ணிலவு கண்டு, கொண்ட ஆற்ருமையை இக்கட்டுரையில் கூறுகிருர்.

### இராவணன்

**238. இராவணன்** (44—73)

தமிழ்க்கவி அமுதம் : வித்துவான் ல. சண்முகசுந்தரம்; ஸ்டார் பிரசுரம்; மு. ப. ஜூன் 1956; ரூ. 2-50

வில்லை நழுவவிட்டுத் தேர்த்தட்டில் சோர்ந்து விழுந்த அருச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்த பகவத்கீதை போன்றிருக்கின்றது விபீஷணனுடைய இரணிய நாடகம். முதல்நாள் போரில் இராவணனுக்கு ஏற்பட்ட அவமான நிலைதான் கடைசி வரை இராமனுடன் போராட விடாமல் தடுக்கின்றது. சுற்றத்தார்களையும் மைந்தர்களையும் மாறிமாறிப் பலிபீடத்தில் தள்ள வைக்கிறது. படிப்படியாக, விபீடணன், கும்பகர்ணன், இந்திரசித்து அவனை விட்டுப்பிரிய இராவணன் சோக உணர்ச்சியின் உதாரண புருஷனுக விளங்குகிருன். போர்க்கள நிகழ்ச்சியில் சமுத்திரம் போலத் தத்தளிக்கின்ற இராவணனுடைய சோக வாழ்க்கைக்குச் சூர்ப்பணகை சந்திக்கின்ற ஆரம்பமும், மண்டோதரி வந்து கதறுகின்ற முடிவும் சிரஞ்சீவித்துவம் அளிக்கின்றன.

**239. மன்னர் மன்னன்** (நாடகம்)

*தி. மாணிக்க வாசகம்*

*ஸ்ரீவிசாலாட்சி பதிப்பகம்; மீனாட்சி நிலையம்; திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை-3. மு. ப. 1959; இ. ப. 1961; 75; ரூ. 1-25.*

முன்னுரையில் இராவணனின் இளமைப் பருவம், அவன் தந்தையிடம் பெற்ற கல்வி, தாயிடம் பெற்ற அறிவுரை, அந்த அறிவுரையால் அவனடைந்த ஆக்கம், அதனை மீறிய போது பெற்ற அழிவு இவற்றை இந்த நாடகம் சித்தரிக்கிறது என்கிறார். இதில் உள்ள பாடல்களை இயற்றியவர்கள் கதி, சுந்தரம், தி. சி. சுந்தரமூர்த்தி ஆகியோர். பிறன்மனை நோக்காதே என்ற தாயின் அறிவுரைக்கு, மாட்டேன் என்று அவள் சாகும் தருவாயில் உறுதியளிக்கின்றான்.(22) இதனைத் துறந்து வேதவதியிடம் சாபம்பெற்றதனைக் கூறிக் காமத்தால் அவன் அழிந்ததாகக் காட்டுகிறார்; கம்பர்தம் சொற்றொடர்களைப் பல இடங்களில் அப்படியே கையாண்டுள்ளார். ஒவ்வொரு காட்சிக்கும் சிறு தலைப்பு கொடுத்துள்ளார்.

**240. அவல வீரர்கள்** (344-345)

*தமிழ்ப்பொழில்: சிவானந்த வல்லியம்மையார் பிப்.—மார்ச் 1963*

இக்கட்டுரை 7-10-'62 அன்று நிகழ்ந்த கலைமகள் விழாவில் பேசியதன் சுருக்கமாகும். பிராட்லி குறிப்பிடும், 'அவல வீரனுடைய முடிவு முன்பே தீர்ப்பு செய்யப் பட்டதாகும். அது அவனுடைய தீய செயல்களினால் ஏற்பட்டு அதனாலேயே அழிகின்றான்' என்பதற்கு இராவணனைச் சான்றாக்குகிறார். இராவணன் செய்த தவறு காமம் மட்டுமன்று. செருக்கும் காரணம். அவல வீரர்களுடைய வீழ்ச்சியில் ஒரு படிப்பினை இருக்கிறது. எந்த நிலையில் இருந்தாலும் காமம் என்பதை அளவோடு நிறுத்தாமல் எல்லைகடந்து விரும்புவார்களேயானால் அழிவார்கள் என்பதையே இது காட்டுகிறது என்னும் ஆசிரியர் சச்சந்தன், கோவலன் ஆகியோரையும் பிற அவல வீரர்களாகக் காட்டுகிறார்.

**241. கம்பனில் நாயகன்** II (110-124)

*இலக்கிய நாயகர்கள் (முதல் பகுதி): புலவர் செந்துறை முத்து*

இராமனும் இராவணனும் சில வகைகளில்தான் வேறுபட்டுள்ளனர் எனக் கருத இடமுண்டு. இராவணன் பெற்ற வரத்தில் கொல்லப்படுவது பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. எவரிடத்திலும் தோல்வியுறமாட்டாய் என்றுதான் வரம் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே வரம் பொய்த்துப் போகவில்லை என்பதனை உணர்தல் வேண்டும். இதனின்று இராவணனை வெல்ல இயலாது,

ஒருகால் கொல்ல இயலும் என்பது விளங்கும். தன்புய பயத்தாலே வென்றான் வரத்தால் அன்று. நல்லற நெறி, சிறந்த அமைச்சர், இடித்துரைக்கும் சான்றோர் இன்மையால் அழிந்தான். இராவணன் மான உணர்ச்சியை மிகுதியும் கொண்டவனே யாவான்.

## 242. இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும்

அ. ச. ஞானசம்பந்தன்

பாரிநிலையம்: நா. ப. 1965; 43 +167; ரூ. 4

சிறப்புரை - திரு. வி. க; முகவுரை திரு தெ. பொ. மீ, இராவணன் மாட்சி, இராவணன் வீழ்ச்சி என நூல் இரு பிரிவாக அமைந்துள்ளது. முதற் பகுதியில் இலங்கையின் மாட்சி (1—12), 'தீயினை நயந்தான்', (12—28), 'குலஞ் செய்த பாவத்தாலே கொடும் பழி தேடிக் கொண்டான்' (28—41), 'இந்திரப் பெரும் பதம் இழந்தான்' (41—58), 'நாளை வா' எனப்பட்டான் (59—63), 'வழி அலாவழி, மேற் செல்வான்' (63—65), 'வெலற்கு அரியான், (65—69), 'இடிக்குநர் இல்லான்' (69—76), தன் இரக்கம் (77—992), முதலிய கட்டுரைகளையும் இரண்டாம் பகுதியில் சூர்ப் பணகைப் படலம் (93—113), தீமையின் முதற்படி (113—122), தீமையின் வளர்ச்சி (122—140), தீமை முற்றுகிறது (140—145), கலைஞன் வீழ்ச்சி (146—163), முடிவுரை (163—167) முதலியன வற்றையும் கொண்டுள்ளது. ஆசிரியரின் முகவுரையும் உண்டு.

நூலுக்கு ஒரு அறிமுகமாகக் காப்பியம், அவலம் என்பது பற்றி 43 பக்கங்கட்குப் பேசுகிறார். பகைவனாகிய அனுமனை வைத்து இலங்கையையும் இராவணனையும் கம்பர் புகழ்வதால் இராவணன் நல்லாட்சி நடத்தினான் என்கிறார். கொல்லப்படுதல் பற்றி இராவணன் வரத்தில் ஒன்றும் இல்லை. வெல்லப்படக் கூடாது என்பதே வரம். தான் எடுத்த காரியம் சரியோ, தவறோ அதற்காக உயிரை விட்டதால் கொள்கையில் வெற்றியே கொண்டானகையால் 'வெல்லப்படாய்' என்ற வரமும் உண்மையாயிற்று. இதுவரைத் தோல்வி என்பதையே காணமையின் தன் வாழ் நாளில் தோல்வி என்பதே இல்லை என்றன்றோ ஒரு தவறான முடிவுக்கு வந்துவிட்டான். இலங்கை வேந்தன் அவசரத்தில் அமைதியை இழக்கும் பண்புடையவன் போலும். இதன் பிறகுத் தன் பிழைக்குத் தானே வருந்துகிறான். தன்னை எதிர்த்த மைந்தனைத் தந்தை ஒன்றும் தண்டித்தானில்லை. அதுவே இராவணன் மாட்டுக் காணப்படுகின்ற பெருந்தன்மை. இராவணன் கருத்துப் படி, இந்திரசித்து வீசிய பிரம்மாத்திரத்தால் பகைவர் சிந்தினர். வெற்றி கிட்டியது ஆனாலும் அவன் மனதில் அமைதியில்லை. பழி வாங்குதல் என்ற தாழ்ந்த குணம் தலைகாட்டுகிறது. இலக்குவன்,

இராமன் வீழ்ந்து கிடக்கும் களத்தைக் காணச் சீதையை அனுப்பும் அவன் நிலையைக் கீழ்த்தரமான காமவெறி என்றே கொள்ள வேண்டும். இறந்தவர்களைக் கண்டபின் தன்னை மணக்கச் சீதை முன்வருவாள்என நினைக்கும் இராவணன், அறிவு கலங்கி விட்டான்.

இன்றுதானா அண்ணன் தவறு செய்ய முனைந்தான்? தேவரைச் சிறையிட்ட காலந்தொட்டே அண்ணனிற் பிரிந்திருக் கலாமே? ஒருவேளை தற்போது பிரியினும் தனியே நின்றிருக் கலாமே? அறமுடையார் பக்கம் வெற்றி தானே சென்று எய்து மாறு இருந்திருக்கலாமே என்று வீடணன்மீது பழி கூறுகிறார். இராவணன் வலிமையால் ஒருவேளை போரை இராமன் நிறுத்தி விடுவானோ என்று பயந்து அனுமன் இலங்கையில் செய்த அருஞ் செயலைக் கூறுகிறான் எனும் ஆசிரியர் கூற்று ஏற்றுக்கொள்ள முடியாதது மட்டுமல்ல காப்பியத் தலைவனுக்கு இழுக்குத் தரு வதுமாம். இராவணன் இறந்தபின் ஓலமிடும் விபீடணன் கூற்று இறந்தவனை எள்ளுவதாக உள்ளது. இராவணனிடத்து அச்சத்தை மிகுதியாகக் கொண்டிருந்தான் வீடணன் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. மந்திரத்திலேயே தமது கருத்தை ஏனையோரெல்லாம் அஞ்சாது கூற இவன் மட்டும் பெரிய முக வுரையுடன் தொடங்குவதே இவனுடைய மனக் கருத்தை ஒரு வாறுகப் புலனாக்குகிறது. இராவணனிடத்து ஏனையோர் கொண் டிருந்ததுபோல் பயன் கருதாத அன்பைக் கொண்டிருந்தவ னல்லன் விபீடணன். அனுமன் இலங்கையை அழித்ததும் சுக்ரீவன் மணி முடியைக் கவர்ந்து சென்றதும் அவர்களுடைய ஒப்பற்ற வலிமை காரணமாக அன்று. இராவணனுக்கு அவற் றைத் தடுக்கும் திறம் இல்லாமையாலேயேயாம். தீங்கு தடுக்கும் திடமில்லாதவனாய் இராவணன் மாறிவிட்டதற்குத் தீமையைத் தானே வருவித்துக் கொண்டமையை உணர்ந்த அறிவே காரணம். இதனாலேயே அனுமனை எதிர்க்கவோ அல்லது சுக்ரீவனைத் தடுக்கவோ, தான் முயற்சியொன்றுஞ் செய்யாமல் வாளாவிருந் தான். இவ்வாறு தன்னைத்தானே தண்டித்துக் கொள்ளும் பெருந் தகைமை பேரறிவாளர்களுக்கே பொருந்தும். வீடணனைப் போல் நீயும் இராமனைப் பணிந்து உயிர் வாழ்வதை நான் விரும்பவில்லை என்று கூறுவதால் கும்பகர்ணன் இறப்பதை விரும்பவில்லை என்று தெரிகிறது. வீடணன் தனக்குக் கேடு சூழ்கிறான், தன் அரசுக்கு ஆசை கொண்டிருக்கிறான் என்பதை நன்கு உணர்ந்த பின்னும் அவனை ஒன்றும் செய்யாது நீ பிழைத்துப் போ என்று போக விட்டது கைம்மாறு கருதாத அன்பன்றோ? வீடணனைக் கொல்லாவிட்டாலும் அவனை ஏன் சிறைப்படுத்தி வைத்திருக்கக் கூடாது. இராமன் சிறந்த வாழ்க்கை நெறியை மேற்கொண்ட

வனேயாயினும், அவனுல் மனித இயற்கையின் பிடிப்பினின்றும் மீறி நடக்க முடியவில்லை சூர்ப்பணகையின் எழிலும் பேச்சும் அவனைக் கவர்ந்தன. இராமன் வாதம் அவனுக்குச் சூர்பணகை யிடத்தில் விருப்பம் உண்டு என்றும், ஆனல் பிறருக்கஞ்சி அவன் அவளை மணக்க இசையக் கூடாத மனநிலையை உடையவனுய் இருக்கிருன் என்றும் அறிவிக்கின்றது. அயலான் மனைவியின் மீது மையல் கொண்டதே இராவணன் வீழ்ச்சியின் முதற்படி. சூர்ப்பணகையின் பேச்சைக் கேட்டுச் சீதையைக் கவர்தலாகிய இரண்டாம்படியில் காலை வைக்க உறுதி கொள்கிருன். பகைவர் பலத்தை உணர முற்படாததும், தன் பலத்தைப் பெரிதாக மதித்ததும், உட்பகையை அறிந்து ஒழிக்காததும் ஆகிய செயல் களைச் செய்வித்த அறிவிழப்பு மூன்ரும் படியாய் அமைகின்றது. மகோதரன் புகழுரைகளால் மயங்கி, அவன் நேரில் அறிந்ததன் அனுபவமான அறிவையே பொருட்படுத்தாமல், போரைத் தொடர்ந்து நடத்தத் தீர்மானிக்கையில் தன் அழிவை நோக்கி நான்காம் படியில் காலை வைத்து விட்டான். மேகநாதன் இறந்த பின் தனக்குப் பழி வராமல் காக்கப் போர் புரிகின்ருன். காவியத்தின் அவலத் தலைவனின் அவல வாழ்வைச் சுவை குன்ருமல் தருகிருர் இந்நூலில். எனினும் சில கருத்துகளை அப்படியே ஏற்றுக்கொள்ள இயலவில்லை.

243. **இராவணன்***

உஷாராணி

முதுகலைத் தேர்வுப் பொருட் கட்டுரை 1972, காலிகட் பல்கலைக் கழகம்.

244. **இராவணனின் தன்மானம்** (108—112)

லண்டன் தமிழ்ச் சங்க ஆண்டு மலர்; தா. ஏ. ஞானமூர்த்தி; மீனுட்சி புத்தக நிலையம்; 60, மேலக் கோபுர வாசல்; மதுரை-1; 1972—73; ரூ. 10.

அறிவிலும் ஆற்றலிலும் அன்பிலும் நிகரற்று விளங்கும் ஒருவர் உணர்ச்சி வயப்பட்டுத் தவறிழைப்பாராயின் அத் தவறினை உணர்ந்து தம்மைத் திருத்திக் கொள்வதற்கு மாருகத் தாம் இயற்றிய தவற்றையே இயைந்ததாகக் கொள்வர். தவறு என்று பிறர் சுட்டிக் காட்டினும் அதை ஏற்றுக்கொள்வது தமக் கிழுக்கென்று அத்தகையோர் கருதுபவராவர். உலகில் ஒரு சிலரி டத்தில் காணும் இத்தன்மையினைக் கம்பர் இராவணன் வாயிலாக நன்கு விளக்கியுள்ளார். அவனைச் சார்ந்தவரும் மற்றவரும் சீதையை நயந்து சிறை வைத்தது தவறு என்று அறிவுறுத்தினர். ஆனுல் அதை அவன் தவருகக் கருதவில்லை. தான் நயந்து சீதையைக் கவர்ந்து வந்த பிறகு அவளை விடுப்பது தன்னுடைய

தன்மானத்திற்கு இழுக்கு என்றவன் கருதலானுன். அவன் தீயசெயலை வீடணன் சுட்டிக் காட்டியபொழுது அதைச் சிறிதும் உணராது அவனுடைய உண்மை அன்பின் மீதே ஐயம் கொண்டான். இராமனுல் இறந்துபடக்கூடும் என்ற உணர்வு ஏற்பட்ட போதும் சீதையை விடுவிப்பது தன்னுடைய தன்மானக் குறையென்று கருதிய அவன் பிறன்மனையாளாகிய அவளைக் கவர்ந்தது மிகப்பெரிய மானக்கேடான செயல் என்பதை உணராமல் போனுன். இதுவே நாம் அவனிடம் காணும் பெரும் குறையாகும்.

245. **இராவணன்** (62—128)

*அவல வீரர்கள்*: தா. ஏ. ஞானமூர்த்தி; மீனுட்சி புத்தக நிலையம்; மதுரை; மு. ப. ஜூலை 1973; ரூ. 2-75.

தசமுகன் என்பது உண்மையில் அவனுடைய அதிகாரம், எண்திசை, விண்ணுலகம், கீழுலகம் ஆகிய பத்துத் திசைகளிலும் சென்றது என்ற பொருளையே குறிப்பதாகும். தனக்கு ஊறு செய்த மானிடருக்குச் சூர்ப்பணகை என்ன செய்தாள் என வினவும் இராவணனின் மனம் சீற்றத்திலும் சிந்தனையை இழக்காமையைக் குறிக்கிறது. இடித்துரைக்கும் நல்லோரை அமைச்சராகப் பெருமை பெரிதும் இரக்கத்திற்குரியது. இராவணன் பால் கொண்ட அன்பு மேலீட்டால் விபீடணன் கூறியவற்றை அரசின் மீதுள்ள ஆசையாலும், இராம இலக்குவர்பால் கொண்ட அன்பினுலும் என்று இராவணன் கொண்டது அவலத் தவறு எனலாம் (Tragic error). இராவணனின் சிறப்புகளை இயம்பி, காமத்தின்பாற்பட்ட அவன் நிலையையும் காட்டி, முதல்நாள் போரிலிருந்து முடிவுவரை அவன் கொண்ட அவலங்களைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

246. **இராவணேசுரவன்**

தி. மாணிக்கவாசகம்

மீனுட்சி புத்தக நிலையம்; மதுரை; ஜூலை 1974; 5+132; ரூ. 2-75.

இராவணேஸ்வரன் 1—60, திருப்பம் 61—103, காவியப் பாதை 104—132

கம்பன் இராவணனுடைய பெருமைகளையும், அருமைகளையும் கூறிய பின், மக்கள் அவனை மாட்சி பொருந்திய வீரனுகத் தம்குலம் காக்கும் தியாக சீலனுகத் தன்னிகரில்லாத் தலைவனுகக் கருணை மறவனுக உத்தமனுக உருவகப்படுத்திக்கொண்டால் இராமனின் புகழுக்கு இழுக்கு வந்துவிடுமோ என மனத்திற் கொண்டே, இராவணனின் தூய்மையிலே ஐயம் ஏற்படும் வண்ணம் பல பாடல்களை இயற்றினுன். தசரதன் ஆட்சியிலும் பாலைவனங்களும் வறுமையும் மிஞ்சி நிற்பதைக் காண்கிறேம்.

'பழிபடா மன்னவன் நாட்டில் அழிவது எங்ஙனம்' என்று இராமனே தன் தந்தை ஆட்சி சீரானது என்று கொள்ள முடியாது என்று கூறிவிட்டான். இலங்கை மட்டுமே தேவர் புகழ் மூவரும் கண்டு பொறுமைப்படும் அளவிற்கு உயர்ந்த நாடாய் இருந்திருக்கிறது. இராமன் பத்துமாதம் தன் பத்தினியை வைத்திருந்தவனைப் பாவி என்று கருதாமல் அவன்மீது பரிவு காட்டினான். காரணம் இராவணன் தூய்மையில் நம்பிக்கை கொண்டதுதான். சீதையின் தெய்வீகத்தில் நம்பிக்கை வைத்த பின் இராவணன் அவளைக் காம நோக்குடன் எடுத்துச் சென்றான் என்று கூறுவதில் பயனில்லை. இராவணன் சீதையின் அருள் வேண்டும் பக்தன். இன்னல் ஊட்டி இன்பங் காட்டும் கடவுள். இராவணனுக்கு இன்னல்களைத் தந்து அவனுடைய மாசு மறுக்களைப் போக்கி இன்பம் என்னும் இராம இராய்ச்சியத்தைத் தந்தாள்.

விபீடணன் இலங்கையை நாடாள எண்ணம் கொண்டவன். பிற பெண்களைக் காம இச்சையால் அவன் தொடுவானேயானால் அவன் தலை வெடித்து விடும் என்று கூறும் பொழுது அவனுடைய நெஞ்சிலே காமம் என்ற பேய் எழுமானால் அவன் சிரம் வெடிக்கும் என்பது அன்றோ பொருள். தன் நாடும் தன் மக்களும் தனக்குப் பிறகு ஒரு நல்வாழ்வு வாழ வேண்டித் துணிந்து செய்த ஒரு காரியம்தான் சீதையைச் சிறையெடுத்த செயல். மானத்துடன் வாழ வேண்டின் ஒரு பெண்ணைத் தூக்கி வந்து, அவளிடம் அருள் வேண்டுவது பேதமை என்ற கருத்திலே கும்பகர்ணன் 'பேசுவது மானம் இடை பேணுவது காமம்' என்று இடித்துக் கூறினான். சீதை இலங்கையிலே அரக்கர் பாவம் அகல, இராவணனின் பிறவிப்பிணி தீர, இராமனின் சாபம் நீங்கத் தவம் செய்யும் வாய்ப்பைப் பெற்றாள். சிவலோகம் என்று பெருமைப்பட அமைந்த இலங்கை நாட்டிலே கால் அடி எடுத்து வைத்த உடனேயே, தவசியின் பெருமை அடைந்து விடும் நிலை ஏற்பட்டதை அனுமன் உணர்ந்தான். மன்னுயிர்களைக் காக்க வந்த இராமனே அரக்கர்களை அழிக்கத் தொடங்கியதால், வினைவிளை காலமாதலால் தன்னுடைய மக்களைக் காக்கக் கொண்ட முயற்சியில் தோற்ற அவன் ஆத்திரத்தில் அறிவை இழந்து சீதையைச் சிறை வைத்தான். இராவணன் சிவபக்தனாதலால் இராமன் அவனைக் கொல்ல விரும்பவில்லை. இராவணன் இறந்து புகழ் பெற விரும்பினான். எனவே இராமன் பக்தனைக் கொன்ற பாவத்திற்காக இராமேஸ்வரத்தில் பூஜை செய்தான். இதுவே இராமனைப் பெருமைக்குரியவனாக்கியது. சிவபூஜை செய்த காரணத்தால் இராவணனிடத்திலிருந்த காமம் அகன்று சிவமாகிய ஒளி தோன்றியது. சீதா பிராட்டி

என்ற சக்தியின் வடிவம் அபயம் கொடுத்து உயர்நிலைக்கு உயர்த்தியது. சீதையின் தவ வலிமையால் அவள் வடித்த சிவலிங்கமே இராமனுடைய பாவத்தை அகற்றியது. முனிவருடைய சாபத்தினின்று காப்பாற்றியது. இராமன் வருமுன்னர், அயோத்தியில் பஞ்சமும் பிணியும் மலிந்திருந்தன. ஆனால் பரதன் செய்த தியாகத்தாலும், நல்லாட்சியாலும் அயோத்தி அரசு செல்வத் திருநாடாயிற்று. இராவணன் சீதையின் அருளை வேண்டி, மனத்தினால் அவள் திருநாமங்களை உச்சரித்துப் படுத்திருப்பதைக் கம்பன் திருமாலைப்போல் அவன் படுத்திருந்தான் என்று கூறுகிறான்(58). அசோகவனத்தில் சீதை இருந்த சூழ்நிலை அவளுடைய கற்பைக் காக்கும் சூழ்நிலையாய் இருந்ததே யன்றி மாசு ஏற்படுத்துகின்றதாய் இல்லை. அவனும் சீதையைக் காண வரும்போது துணையுடன் வந்தான். காமுகன் எச்சாபத்தையும் உடைத்தெறிவான். ஆகவே இராவணனுக்குச் சாபம் உண்டென்பது கட்டுக்கதை. இலங்கையுள் அனுமன் நள்ளிரவில் வந்தபோது அவனை எதிர்த்து நிறுத்த அந்த நாட்டில் காவல் இல்லை. பழி பாவத்திற்கு அஞ்சிய இராவணன் அரக்கர், அரசர் இடையே பகைமையைப் போக்க அவளே வழிகாட்ட வேண்டுமென்று கூறினான். ஆனால் அவள் மக்கள் மன்றம் என்ன கூறும் என நினைந்து வாடினான். இராவணன் தன்னை மனத்தாலும் நினைக்கவில்லை என்பதை அவள் அறிவாள். விதியின் கைப்பாவையாகப் பிறரின் தயவிலே வாழ்ந்தான் இராமன். இன்று போய் நாளை வா என்று இராமன் கூறும்போது தன் கோசல நாட்டையே இராவணனுக்குத் தருவதாகக் கம்பன் தன் பாடலில் நயமுடன் கூறுகிறான். அதனைக் கொள்ளேன் என்று இராவணன் கூறுவது அவன் தியாகம். சிவபக்தனாதலால் தேவர்களும், மக்களும், இயற்கையும், அவன்முன் மண்டியிட்டு வணங்கின ஆயினும் அகந்தையில் அவன் சிவனை மறக்கவில்லை. இராமன் அம்பு, இராவணன் உடல் புகுந்து புனிதமாக வெளி வந்தது. இதனால் இராவணன் தீயவன் அல்லன் என்பதை ஒத்துக்கொள்கிறான். வீடணனை அருகில் அழைத்து இந்த வெற்றி புறமுதுகு காட்டி ஓடியவனை வென்றதற்கு ஒப்பாகும் என்றான். இராவணன் சீதையைத் தூக்கிவந்தவனே யாயினும் அவன் மூலமாகவே இராமனின் பாவங்கள் அகலவேண்டும் என்பது இறைவனின் திருக்குறிப்பாகும். தலைநகரில் மட்டுமின்றிப் பட்டிதொட்டிகளிலும் மக்கள் நல்வாழ்வுவாழ இயற்கை எல்லாம் மன்னனுக்குக் கட்டுப்பட்டு இருக்கும் விந்தையினை இராமனுக்குக் காட்டவே, சீதையைச் சிறைசெய்தான்; இலங்கைக்கும் பாரதத்திற்கும் இருந்த நீண்ட பகைமையை அன்புவழியில் அறவழியில் ஒழிக்க வேண்டிய பண்பு, இராமனிடத்து இல்லாத

காரணத்தால் போரின் முடிவில் அந்த நல்லகாரியம் நடைபெற வேண்டியிருந்தது. பாவத்திலே பிறந்து, பாவத்திலே வளர்ந்து, பாவியின் உருவிலே வாழ்ந்த இராமன் சீதையின் தியாகத்தினுல் தெய்வமானுன். கம்பன் இராவணனைத் தீயவன் என்ற போதிலும் இவையெல்லாம் துப்பறியும் நாவலில் வரும் புதிர் போன்றவைகளே. முற்காலத்தில் நடப்பது போல் மணவினை மூலமாகப் போரை முடிக்க, கரன் வதத்திற்குப் பின் சூர்ப்பணகை முனைந்தாள். அதற்கு இராமன் ஒப்பவில்லை. இராமன் தன் தந்தையைக் கொல்லும் சாபத்துடன் பாவியாகப் பிறந்து, அயோத்தி அரசை அடையவேண்டுமென்ற ஆவலால் மண்ணுசை கொண்ட பாவியாக வளர்ந்து, சீதையிடம் கொண்ட கழிபெருங் காதலால் தவத்தை மறந்து, இராவணன் என்ற பிராமணனைக் கொன்றதால் பிரமகத்தி தோஷத்தையும் பெற்ருன். மண்டோதரியும் அரக்கர் இனம்வாழத் தன் கணவனை இழக்கத் துணிந்தாள். நினைத்திருந்தால், இராமனுடைய படைகளை வெல்லும் ஆற்றல் தந்திருக்கலாம். விபீடணனை இராமன் பக்கம் சேராமல் தடுக்க முனைந்திருக்கலாம். அது இராவணேஸ்வரனின் வீரத்திற்கு இழுக்கு என்று கருதினுள். இருநாடுகளுக்கு மிடையே சேது அமைக்க விரும்பிய பாரதியார் கனவைப் பாரத நாட்டிலிருந்து இலங்கை சென்ற இராவணன் செயலாக்கினுன். இருபெரு நாடுகளும் ஒரு நாடாகச் செய்த பெருமை இராவணனுக்கு உண்டு. இராமராஜ்யம் எவ்வாறு இருக்கவேண்டுமென்று இராமனுக்குக் குரு ஸ்தானத்திலிருந்து உபதேசம் செய்துவிட்டுத் தன் முடிவைத் தானே தேடிக்கொண்டான். இராவணனுடைய அரசியல் திறமைக்கு, நல்லாட்சியின் பயனுக்கு இராமன் அடிமையானுன். இராமன் ஏற்படுத்திய இராமராஜ்யத்தின் தளம் இராவணனுடைய நாட்டின் திட்டங்களால் உருவாக்கப் பட்டது. இராவணன் இறந்தும் கொடை செய்தான்.

கம்பனிலிருந்து முற்றிலுமாக விலகிச் சென்றுள்ளது இந்நூல்.

**247. புறங்கொடாப் போர் வீரன் (95—102)**

*இலக்கிய இன்பம்: காமாட்சி குமாரசுவாமி*

இராமனது வீரத்தையும் வெற்றியின் சிறப்பையும் உயர்த்த இராவணனைச் சிறந்த வீரனுகப் புறங்கொடாப் போர் வீரனுக— தவவலிமை, படைவலிமை, போர்வலிமை படைத்த பொருநனுகக் காட்டுகின்ருர். பிறர்மனை நயவாப் பேராண்மையை இராவணன் மறந்து விட்டான். அத்தவறினைத் திருத்த அவனது தவவன்மை, படைவன்மை, போர்வன்மை ஆகியவற்ருலும் முடியவில்லை. இதனைக் கம்பர் நயம்பட 'வெம்மடங்கல் வெகுண்டனைய' எனும் பாட்டில் குறித்தார். இராவணனைப் புறங்கொடாப் போர்வீரனுகப்

படைத்திருப்பதனைச் சுட்டிக் கம்பர், தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் முதலியவை காட்டும் தமிழ் மரபினையுந் தம் காவியத்தில் போற்றிப் பேணும் தன்மை இதனுல் வெளிப்படுகிறது என்கிருர். இராமன் இராவணன் முதுகில் புண் கண்டு அஞ்ச வீடணன் சமாதானப் படுத்துவதைச் சுட்டி இக்கட்டுரையை அமைத்துள்ளார்.

**248. வீணைக் கொடியோன்** (75—80)
*பன்னிரு கட்டுரைகள்:*

*வீணைச் செல்வம் வாய்ந்த இலங்கை வேந்தனின் ஊரையும், இசைச் செல்வத்தால் நிரம்பி நின்றமையையும், அவனது இசை ஆற்றலையும் நவில்கின்ருர்.*

**249. இராவணன்** (83—91)
*வெண்ணிலவில்: ஜி. சுப்பிரமணிய பிள்ளை*

*சூர்ப்பணகைமூலம் சீதையின் அழகினைக் கேட்ட இராவணன் அவள் பிரிவால் மதி கண்டு மயங்குவதை இக்கட்டுரையில் காட்டுகிருர்.*

**இலக்குவன்**

**250. இலக்குவன் சீற்றம்** (72—77)
*கட்டுரை விருந்து: பூ. ஆலால சுந்தரன் எம். ஏ.,*
*சிவனகம்; எஸ்/19 ஆசிரியர் குடியேற்றம்; அகரம் தெரு; தாம்பரம்;*
*மு. ப. 1947; இ. ப. 1949; மூ. ப. 1956; நா. ப. 1957;*

*இராமன் காட்டுக்குப் போகவேண்டும் என்ற சொல் கேட்டு இலக்குவன் கொண்ட சீற்றத்தையும், அதனை இராமன் தடுத்த பின்னும் இராமன் மீதுள்ள அன்பால் கைகேயியை அன்னையாக இறுதிவரை கொள்ளவில்லை என்பதனையும் இரு சான்றுகளால் காட்டுகிருர். தாரையைக் கண்டபோது தாய் இருவரை எண்ணி வருந்தியது (கிட்கிந்தைப் படலம் 53) ஒன்ருகும். மற்ருென்று நாடு திரும்பியபோது மூன்று தாயரையும் தனித்தனியே வணங்காமல் பொதுவாக வணங்கியது.*

**251. இலக்குமணன்** (122—132)
*தமிழர் பண்பாடு: எஸ். வி. பி. பி.ஏ., பி. எல்.,*

*இலக்குமணன் மனம் இராமன் மீது கொண்ட அன்பினுலேயே இழைத்ததொன்றெனச் சொல்லத் தக்கது. அன்பின் பேரெல்லையாகிய காதலன் காதலியது அன்பே அவனது அன்போடு ஒப்பிடக்கூடியது. இலக்குமணன் வாழ்வு கர்ப்பித வாழ்வு. இலக்குமணனிடத்து விளங்கிய வீரமானது அவனது அன்பிற்கு ஒரு காம்பீர்யத்தைக் கொடுத்து நம்மை மகிழச் செய்கிறது. தம்பித் துணைவனுகவும் மந்திரித் துணைவனுகவும் இவன்*

இராமனுக்குப் பணி புரிந்தான். மந்திரித் துணைவனாய் உதவும் போது, இராமன் நினைத்ததையே நினையாதபடி தனக்கெனத் தனிப்பாங்கு ஒன்று உண்டெனக் கருதி விஷயங்களை நுனித்து ஆராய்ந்தறிந்தது போலத் தன்னை வீரனாக நினைத்த மாத்திரத்தில் தனக்கெனத் தனிப்பாங்கொன்று உண்டு என்பதனை நன்கு உணர்ந்தவன்.

**252. வில்லும் விதியும்** (102—105)

இலக்கியப் பலகணி: பொ. சுந்தரமூர்த்தி நாயனார் பி.ஏ.,பி.எல்., செல்வி பதிப்பகம்: காரைக்குடி; மு. ப. 1961; ரூ. 2

இராமனுக்கு மகுடம் இல்லையென்றபோது சீறியெழுந்த இலக்குவன், இராமன் அமைதிப்படுத்தவும் அடங்காதவனாய், 'விதிக்கும் விதி செய்யும் விற்றொழில் காண்டி', என்றவன், பஞ்ச வடியில் சீதையின் வற்புறுத்தலால் அவளைப் பாதுகாத்த லொழிந்து அண்ணனைக் காக்கச் செல்பவன், 'வெஞ்சின விதியை வெல்லவல்லமோ', என்று முரண்படுவதைச் சுட்டி இதுதான் மனிதஇயல்பு என்று கூறுகிறார். மெய்க்கல்வி மனத்துட் படியும் பொழுது இந்நிலை ஏற்படுகிறது. இலக்குவன் மனிதனானதால் அவனுள்ளும் இம்மாற்றம் என்கிறார்.

**இலங்கை மாதேவி**

**253. இலங்கை மாதேவி** (403 – 407)

ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை: வி. ரூத்ஜாய், சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1973; ரூ. 22

இலங்கை மாதேவியின் பண்புகள், மதுரையைக் காவல் புரிந்த மதுராபதிக்கும் இவளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமை கள் காப்பியத்தில் இன்றியமையாமை முதலியன கொடுத்துள் ளார். இப்பாத்திரத்தின் மூலம் அனுமனின் சிறப்பு, ஆற்றல், அறவுணர்வு, கடமையுணர்வு, இராமனிடம் கொண்ட அன்பு, இராவணன் கொடுமை, தத்துவக் கருத்துகள், உண்மைகள் முதலிய பல்வேறு நிலைகளைப் புலப்படுத்துதல் சாலச் சிறப் புடையது.

**குகன்**

**254. கம்பனின் காவிய முல்லை** (102—104)

Annamalai University Magazine: க. நூருல் ஹபீபா; 1967—1968

கம்பனின் இராமாயணம் முதனூல் அல்லவெனினும் வழிநூல் போலத் தோன்றுமைக்குக் கம்பனின் புலமைத்திறனும் கையாளும் உத்தியுமே சான்று ஆகும். இராமன்—குகன் சந்திப்பில் நட்பின் ஆழத்தைக் காட்டும் ஆசிரியர், கல்லாத வேட்டுவன் வாயிலாகத்

தத்துவக் கருத்தினை உணர்த்துவதனையும் எடுத்துக்காட்டுகிறார். ஒருவரிடமிருந்து விடப்படும் அம்பு இன்னார், இனியவர் என்று வேற்றுமை பாராது சென்று தைக்கும் தன்மையது. வேடுவர்களால் விடப்படும் அம்பு மன்னவர்களின் மார்பில் சென்று தைக்காதோ என்று பொருள்பட 'மன்னவர் நெஞ்சினில் வேடர் விடுஞ் சரம் வாயாவோ' என்று தத்துவம் பேசுகிறான். குகன் பரதனிடம் இராமன் தங்கியிருந்ததைக் காட்டும்போது 'அல்லை யாண்டமைந்த மேனி அழகனும் அவளுந்துஞ்ச' என்று கூறுகிறான். இதில் இராமனது தோற்றத்தைக் கூறி, சீதையை நோக்கியறியாத காரணத்தால் அவளும் என்று குறிக்கின்றான். இது அவனது பிறன்மனை நோக்காப் பேராண்மையைக் காட்டுகிறது. கோசலை குகனை மைந்தனாகப் போற்றுவதையும் சுட்டிக் கம்பனின் காவியத்தில் குகனின் பாத்திரப்படைப்பு முல்லையின் மணமென்ன வீசுவதாகக் கூறுகிறார்.

**255. கம்பன் பாத்திரப் படைப்பில் குகன்**

பொருட் கட்டுரை; மதுரைப் பல்கலைக் கழகம்; ஏப். 1970; பக். 73

முன்னுரை: வேடனுக்கு வேடமளித்த விதம் - உடலால் எளியவன், உள்ளத்தால் உயர்ந்தவன் - கூற்றின் ஆற்றலான் - தம்பியருள் ஏறு - தாயினும் நல்லான்—கங்கை வேடனும் காளத்தி வேடனும் - பாத்திரப் படைப்புகளும் குகனும் – முடிவுரை.

ஒருவனது உள்ளம் நன்கு பண்பட்டு அமைந்திருப்பின் அவனுக்குச் சாதி இல்லை; மதம் இல்லை; அவனை யாவரும் ஏற்றுக் கொள்வர். இந்த அரிய கருத்தினை மக்கள் மனதில் புகுத்த வேண்டும் என்ற ஒரே கொள்கையில்தான் கம்பன் குகனைப் படைத்திருக்கின்றான். குகன் இராமனை வணங்கி நிற்பது அவன் பண்பட்ட உள்ளத்தின் தன்மையாகும். அன்பிற்கு அனைவரும் கட்டுப்படுவர் என்பதனைக் காட்டவேண்டிக் கம்பன் குகன் அன்புடன் மீனினை இராமனுக்குப் பரிசிலாக அளிக்கவும், அதனை இராமன் ஏற்றுக் கொள்வதாகவும் அமைந்த ஒரு காட்சியினைப் படைக்கின்றான். இராமன் ஏற்றுக்கொண்ட தம்பியர் மூவரிலும் சிறந்தவனாகக் குகன் அமைந்துள்ளான். பரதனிடம் இராமனின் அழகினைப் பலபடக் கூறிய குகன் சீதையினை 'அவள்' என்று மட்டும் சுட்டுவது அவனின் பிறன்மனை நோக்காப் பேராண்மையைக் காட்டுகிறது. உள்ளத்தால் செயல்படும் குகனின் குணத்தினை, பண்பினைக் கண்டு காப்பியத் தலைவனும் இராமனும் அவனுக்குத் தாயினும் நல்லான் என்ற பட்டத்தினை அளிக்கின்றான். 'உள்ளம் என்றொரு கோவிலிலே தெய்வம் வேண்டும் அன்பே வா' என்ற முதுமொழிக்கிணங்கக் கங்கை வேடன், காளத்தி வேடன் ஆகிய இருவரும் வேடர் குலத்திலே தோன்றி

றாலும் அருவருக்கத்தக்க செயல்களைச் செய்தாலும் தீராத அன்புடைய காரணத்தால் நீங்காத பேரின்பத்தை அடைந்தனர். சிறிய வேடத்தினை மேற்கொண்டு இடையிடையே தோன்றி மறைந்தாலும் காண்பவரது உள்ளத்தை விட்டு அகலாத ஒரு பேற்றினைப் பெற்றுவிட்ட காரணத்தினால் எஞ்சிய பாத்திரங்களை விடவும் குகன் சிறந்தவன் போற்றுதற்குரியவன்.

256. **குகன்**

பொருட்கட்டுரை; மதுரைப் பல்கலைக் கழகம்; 1970; பக். 54

முன்னுரை – குகன் பாத்திரப் படைப்பின் இன்றியமையாமை – குகனும் இராமனும் – குகனும் பரதனும் – முடிவுரை.

கம்பன் குகன் பாத்திரப் படைப்பில் ஆழ்வார்களுடைய கருத்துகளைத் தழுவிக் காப்பியம் அமைத்திருக்கின்றான். கனிந்த அன்பு வாய்ந்த காளத்தி வேடனைக் கருத்திற்கொண்டு, குகனுக்கு அன்பையே அடிப்படைப் பண்பாக ஆக்கியுள்ளான். குகனும் பரதனும் இராமனுக்குத் தம்பியராய் அலலன செய்யும்போது இராமனுக்கு அஞ்சினர். அவ்வச்சமே கூனியைச் சத்துருக்கனனிடமிருந்தும், கைகேயியைப் பரதனிடமிருந்தும் காத்தது. இராமன் தலைமையில் அன்பு என்ற பேரரசு ஆட்சி செய்வதை-இராம இராச்சியம்—அன்பியல் அரசு என்பதைக் காப்பியத்தின் துவக்கத்தில் அமைந்துள்ள குகன் வரலாறு எடுத்துக்காட்டுகின்றது. குகன் காட்டிற்கு வழிகாட்ட வில்லையென்றால் சூர்ப்பணகை இராம இலக்குவரைக் காணுமலே போயிருக்கலாம். பரதனைப் பற்றிய உண்மை எண்ணம் புலப்படவும் குகனும் குகப்படலமும் காப்பியத்திற்கு இன்றியமையாதன. குகனும் இராமனும் சந்திக்கும் காப்பியக்களம் அன்புக்களமாகக் கம்பனால் அமைக்கப்பட்டுள்ளது. இராமனுக்கும் குகனுக்கும் முன்பே பழக்கம் உண்டென்று வான்மீகி முனிவர் அமைந்திருக்கின்றார். கம்பன் அப்பொழுதுதான் முதன் முதலாகச் சந்திப்பதாகப் படைத்துள்ளார். இராமன் பரதன் சந்திப்பில் இரு நிகழ்ச்சிகள் இன்றியமையாது நடத்தல் வேண்டும். ஒன்று தந்தையின் இறுதி பற்றி இராமன் அறிவது. மற்றொன்று பரதன் நாட்டுக்கு மீள்வது. தந்தையின் சாவால் இராமன் வருந்துங்காலை, பரதன் இராமன் துயர் கண்டு வருந்தினால் காப்பியக்களம் சிறக்காது. எனவேதான் பரதன், இராமன் வதிந்த இடங்களைக் குகன் காட்டக் கண்டு புலம்புகின்றான். ஆதலினால் குகன் பரதனைக் காண்பதும் இருவரும் உரையாடுவதும் பண்புப் படைப்பில் மிக மிக இன்றியமையாத பகுதி ஆகும். பரதனைக் குகன் தவறாகப் புரிந்துகொண்டது எந்த மனிதனும் செய்யக் கூடியதே ஆகும். குகனும் பரதனும் இராமபக்தியில் ஒருதன்மையுடையவர். கோசலை குகனையும்

மகனுகக் கொண்ட பேறு அவன் ஒருவனுக்கே கிடைத்தது. குகன் வாழ்வியல் தனிக்காப்பிய மாதற்குரிய தகுதியும் உணர்ச்சியும் உடையது. இராமன் முன்னே குகன் ஒளியின்றிப் பணிந்து கிடக்கின்ருன். குகனைப் படைத்து, வான்மீகி காணுத சமுதாய சம தர்மத்தைக் கம்பன் உலகிற்கு உணர்த்துகின்ருன். வாழ்ந்தால் குகனைப்போல் வாழவேண்டும் என்பது குரக்கினத்தரசனின் துணிவு. இதனுல் குகன் மாற்ருரால் மதிக்கும் பாத்திர நிலையை அடைந்து பெரும்பேறு பெறுகிருன்.

257. **குகன்***
வேலு வந்தாள்: முதுகலைப் பொருட்கட்டுரை; 1973; காலிகட் பல்கலைக் கழகம்

**கும்பகர்ணன்**

258. **கும்பகர்ணன்** (133—157)
*தமிழர் பண்பாடு: எஸ். வி. பி. பி.ஏ., பி.எல்.,*

சரீர பலமுள்ளவர்கள் புத்தி நுட்பமுள்ளவராயிருத்தல் மிக அரிது. நுண்ணிய அறிவினைத் தீய வழியிற் செலுத்துங்கால் ஏற்படும் வஞ்சகம், கபடு முதலியனவும் இவர்கள்பால் காணுதல் பெரும்பாலும் இல்லை. இவர்களுடைய புத்தி நேர்வழியிலேதான் செல்லவல்லது. இம்மானஸீக தத்துவத்தை நன்குணர்ந்த கம்பன் கும்பகர்ணனது குண விசேஷத்தை அமைத்து அவனை வார்த்தையாடும்படி செய்கிருன். கும்பகர்ணன் முதலில் இராவணன் எண்ணப்படி போர் செய்தலையே வேண்டியவன் பின்னுல் போருக்குச் செல்லும்போது சீதையை விட்டுவிடுதலே உய்திறம் என்று பேசுவதற்குக் காரணம் விபீடணன் கூறிய ஆலோசனையும் அவன் பிரிந்து செல்ல நேரிட்ட பெருந்துன்பமும் முதற் போரில் ஏற்பட்ட தோல்வியுமேயென ஊகித்தல் தவருகாது.

259. **கும்பகர்ணனது வீரப்போர்** (112—136)
*கல்வியும் கேள்வியும்: கு. மதுரை முதலியார்; 1960; ரூ. 2*

கும்பகர்ணன் வதைப் படலத்தினை இங்கு எடுத்துக் காட்டியுள்ளார்.

260. **கும்பகன்னன்** (73—178)
செய்ந்நன்றி மறவாச் செம்மல்கள்: பண்டித. மீ. கந்தசாமிப் புலவர்; ராஜேஸ்வரி பப்ளிஷிங் ஹவுஸ்; 85, மேல ஆவணி மூல வீதி; மதுரை; மு. ப. அக். 1961; இ. ப. ஏப். 1962; ரூ. 1-25

எட்டாம், ஒன்பதாம் வகுப்பு மாணவர்கட்குத் துணைப்பாடமாக எழுதப்பட்டதற்கேற்ப எளிய, தெளிந்த நடையில் கும்பகன்னன் வாழ்வைக் கூறிச் செல்கிருர். சிறு சிறு உள் தலைப்புகள்

இட்டுக் கதைபோல் கூறுகிருர். இராவணன் கும்பகன்னனை எழுப்பும் போது அவன் தூங்கச் சென்று ஒன்பதே நாட்கள் தான் ஆயின; சுக்கிரீவன் தானே தன்னை விடுவித்துக் கொண்டான்; தான் இராவணனுடன் பிறந்திருந்ததையும் தன்னைத் தூங்க வைத்துக் கொண்டே அவன் உணவும் உடையும் கொடுத்து வந்ததையும் எண்ணி அவற்றிற்கு இழிவு நேராத வகையில் போரில் ஈடுபட்டு உயிரைக் கொடுத்தான்; விபீடணன் அடைக்கலத்தைப் போற்றுவோர் கூட கும்பகன்னனைப் போற்றுதற்குக் காரணம் செய்நன்றி மறவாமை என நவின்றுள்ளார்.

261. **மாபெருந் தியாகம்** (130—137)

*தமிழ்க்கனிகள் ; கனகசவுந்திரி இளந்திரையன்+சாலை இளந்திரையன்; வள்ளுவர் பண்ணை; மு. ப. 1965; ரூ. 3*

அன்பு, அறிவு, ஆண்மை நிறைந்த கும்பகர்ணன் தான் இறந்துபடுவது உறுதியென்றறிந்தும், இராவணன் பக்கல் தவறுண்டு என்றறிந்தும் இராமனுடன் சேராமல் தன் உயிர் கொடுத்துப் போராடுவது எல்லாம் செஞ்சோற்றுக் கடனுக்கென்று, இறுதியில் தன்னுயிர் கொடுத்து மாசினைப் போக்க இருக்கும் இராவணனிடம் அன்பு காட்டத் தம்பியர் இல்லையே என்ற குறை ஏற்படக் கூடாது என்பதற்காகத் தான் மற்றவரின் குறைகளை மறைக்கவும் நீக்கவும் தன்னைத் தியாகம் செய்கிருன். பாரதத்தில் கர்ணன் இறந்துதான் ஆகவேண்டும் என்ற நிலை. இங்கு அப்படியில்லை. ஆகவே கர்ணனை விட உயர்ந்தவன் என்பது ஆசிரியர் முடிவு.

262. **மா(ன)வீரன்** (99—105)

*தமிழ்வளம் : கவிஞர் தமிழ்முடி;*

*இளங்கோ பதிப்பகம்; 14, உஸ்மான் ரோடு; சென்னை 17; மு. ப. 1967; ரூ. 2-25*

இராவணன்—கும்பகர்ணன் உரையாடலில் உடன் பிறப்புப் பாசத்தைக் கம்பர் கும்பகர்ணன் வாயிலாகக் காட்டுகிருர். போர்க்களத்தில் இராமன் முன்னிலையில் தனியாக நின்றபோதும் அஞ்சாது போர் புரிந்து, இறுதியில் தன் துண்டித்த தலையை மூக்கிழந்த காரணத்தால் கருங்கடலுள் போடச் செய்ய இராமனிடம் வேண்டி நிற்பதால் இறந்த பின்னும் தன் மூக்கில்லா முகத்தைப் பிறர் பார்க்கக் கூடாது என நினைக்கும் அவன் மான வீரத்தை இக்கட்டுரையில் போற்றுகிருர். கதைபோல் கட்டுரையை அமைத்துள்ளார்.

263. **கம்பன் கண்ட கருணன்** (93—97)

*கு. மதுரை முதலியார் எழுபதாம் ஆண்டு நிறைவு விழாச் சிறப்பு மலர் : அ. நா. மகாபூஷணம்; 1969; ரூ. 3*

வீரம் நிறைந்த வாழ்வும், குலத்து மானமும், சகோதரப் பாசமும் கும்பகருணன் போற்றும் குறிக்கோள்கள். பழி அஞ்சும் பாவம், குலமானம், புகழ், பழியோடு தொடர்ந்த போரில் தோல்விதான் என்ற துணிவு இவை கும்பகருணன் பேச்சில் இடம்பெறுகின்றன. மனித வாழ்க்கையின் அடித்தளத்தில் இரு வேறான தத்துவங்கள் அமைந்து கிடக்கின்றன. ஒன்று நாட்டுக் காகவும் குடும்பத்துக்காகவும் உற்றார் உறவினர்க்காகவும் தன்னல மற்ற எந்தக் காரியத்தையும் செய்யலாம் என்பது. மற்றொன்று உன்னத இலட்சியங்களுக்காகக் குடும்பத்தையும் உற்றார் உறவினரையும் நாட்டையும் கூடத் துறக்கலாம் என்றும் சத்தியாக்கிரக வழியாகவும் இவ்விரு கோட்பாடுகளின் விளக்கத் தைக் கும்பகருணன்—விபீடணன் சந்திப்பிலும் கொள்கை விவாதத்திலும் கருத்துப் பரிமாற்றத்திலும் காணலாம்.

**264. கம்பராமாயணத்தில் கும்பகர்ணன்***

எம். கலைமணி, முதுகலைப் பொருட்கட்டுரை, 1971, காலிகட் பல்கலைக் கழகம்.

**265. நெஞ்சில் நெருஞ்சி (கும்பகருணன் திறனாய்வு)**

அ. அறிவொளி; அன்பரசி வெளியீட்டகம்; வடக்குத் தெரு; பொருள்வை; சிக்கல்; மு. ப. மார்ச் 1977; 172; ரூ. 5

முன்னுரை—3; நன்றி 4-6; 1. நெஞ்சில் நிறுத்துங்கள் 9-11; 2. நெஞ்சில் நுழையும் நெடுந்தோற்றம் 12-41; 3. நெஞ்சில் படரும் நிழல் 42-83; 4. நெஞ்சில் தைக்கும் நெருஞ்சி 84-100; 5. நெஞ்சில் படிந்த நிறங்கள் 111-144; 6. நெஞ்சில் நிகழ்ந்த நெடும் போர் 145-157; 7. சான்றுகள் 158-160; 8. செய்யுள் தொகை 161-172.

இந்நூல் இறுதி நேரத்தில் கிடைத்தமையால் முழுமையாகப் படிக்க இயலவில்லை. ஆசிரியர் உள்ளுரையில் ஒவ்வொரு தலைப் பின் கீழும் அதில் உள்ள செய்தியினைக் கொடுத்துள்ளார். அவை அவ்வாறே இங்குத் தரப்பட்டுள்ளன.

1. கதை தெரியாதவர்களுக்குக் கதையை மட்டும் சுருக்கிக் கூறுகிறது. 2. ஓர் அரக்க பாத்திரத்தை வால்மீகியும் கம்பனும் எவ்வாறு வெளிப்படுத்துகிறார்கள் என்பதைப் பல்வேறு உத்தி களில் ஆய்வு செய்கிறது. 3. வால்மீகியும் கம்பனும் கும்ப கருணன் வரலாற்றில் காட்சியமைப்பு செய்வதை நிரல்பட வைத்துத் தேர்வு செய்கிறது. 4. அரிஸ்டாட்டில் காலம் முதலாகப் பேசப்படும் அவலப் படைப்புகளின் இலக்கணத்தைக் கம்பன் படைப்பில் நாம் தெளியக் காணும் திறத்தைக் கூறு கிறது. 5. கும்பகருணன் மனத்தில் உள்ள அறிவு, மானம், நன்றி, அறம், பாசம் ஆகியவைகள் எவ்வாறு தொழில்

படுகின்றன என்பதை உளவியல் மற்றும் இலக்கிய இலக்கணக் கூறுகளால் விளக்குகிறது. 6. கம்பன் மட்டும் படைத்த வீடணன், கும்பகருணன் சந்திப்புக் காட்சியில் குழப்பமா? என்பதை உள நூல் முறையில் பொருத்துகிறது. 7. இந்நூலின் உள்ளே காணும் மேற்கோள் சான்றுகளைத் தொகுக்கிறது. 8. இந்நூலில் ஆதாரமாக்கப்பட்ட கம்பன் பாடல்களை வரிசை செய்கிறது.

**கைகேயி**

266. **கேகயர் கோமகள் இழைத்த கைதவம்** (263—268)

*ஆனந்த போதினி:* தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; அக். 1931

தயரதன் கன்யாசுல்கத்தை மறந்ததால் அதனை நிறைவேற்றி அவனுக்குப் பழிவராது காக்கக் கைகேயி வரம் வாங்கினாள். பரதன் ஆட்சிக் காலத்தில் இராமன் நாட்டிலிருந்தால் கலகம் விளையுமாதலால் இராமனைக் காட்டுக்கு அனுப்பினாள். திரும்பி வருங்கால் குடிமக்கள் பரதன் ஆட்சியின் சிறப்பினால் அமைதி யுறுவர் எனவே 14 ஆண்டுகள் காட்டுக்கு அனுப்பினாள். (தயரதன் குறையும் கைகேயி நிறையும் எனும் நூற் கருத்தைத் தழுவி எழுதப்பட்ட கட்டுரை இது)

267. **கைகேயி** (85—89)

*மன்னவர்நீதியும் மங்கையர் மாண்பும்:* கு. பாலசுந்தர முதலியார்; எஸ். வாசன் கம்பெனி; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. 1945; இ. ப. 1947; மூ. ப. 1958; நா. ப. 1959; ரூ. 2-10

மந்தரையின் சூழ்ச்சியால் கைகேயியின் மனம் மாறுபடா திருப்பின் சிறையிருந்த செல்வியின் ஏற்றத்தை உலகு எங்ஙனம் உணரும். கைகேயியின் மனத்திரிவும் உலகிற்குப் பெரியதோர் நன்மையை நல்கியதென்பர் நல்லறிவுடையோர், எனக் கைகேயி யின்பால் இரக்கம் காட்டுகிறார்.

268. **கைகேயி உள்ளம்** (39—53)

*அற்புத ரஸம்:* ரஸிகமணி டி. கே. சி; மல்லிகா வெளியீடு; மு. ப. 1964; இ. ப. 1969; ரூ. 1

கூனி கைகேயியின் மனதை மாற்றிவிடுவது முதல் கைகேயி தசரதனிடம் வரம் பெறுவது வரைக் கதைபோல் நிகழ்ச்சிகளைக் கூறிவருகிறார். உரையாடல்களுக்கு உதாரணமாகச் சிறுசிறு கதைகளையும் நிகழ்ச்சிகளையும் இடையிடையே கூறியுள்ளார். வானவரும் மற்றவரும் இயற்றிய தவத்தால்தான் கைகேயி னுடைய மனம் மாறிவிட்டது என்கிறார்.

**269. மன்னவன் கட்டளை**

மன்வன் கட்டளை: புலவர் மா. சி. சுப்பிரமணியம்
தேவி நிலையம்; இராயப்பேட்டை; சென்னை - 14; மு. ப. சன. 1967; ரூ. 2

தான் செய்வது தவறான செயல் என்று கைகேயி உணர்கிருள். அதனால் இராமன் ஏற்பானே, மாட்டானே என்ற அச்சம் தோன்ற மன்னவன் கட்டளை என்று கூறுகிருள். ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள என்பதில் அவள் பேராசை வெளிப்படுகிறது. இராமனுக்கு, காட்டுக்குச் செல்வதால் நன்மை உண்டு என்று விளக்குவதுபோல் தாழிருஞ் சடைகள் தாங்கி என்றும் இராமன் மருள்வானே எனக்கருதி ஏழிரண்டாண்டில் வா என்றும் கூறுகின்ருள். வா என்பது மன்னவன் கட்டளை; என் கட்டளை அன்று என்ற எதிர்மறைப் பொருளும் இதில் உண்டு. இதனால் முன்யோசனையும் கூர்மையான அறிவும் கொண்டவள் என்கிருர். இக்கருத்துகளை இராமன் உணர்ந்ததால்தான் 'மன்னவன் பணியன்ருயினும் நும்பணி மறுப்பேனே' என்கிருன். தன் ஏமாற்றத்தை, 'பின்னவன் பெற்ற செல்வம் அடியேன் பெற்ற தன்ருே' எனக் கூறி உணர்த்துகிருன். இதில் இகழ்வும் உள்ளது. இன்றைய என் நிலை நாளை அவனும் பெறலாம். எனவே 'இன்னிதின் உறுதி அப்பால்' என்று கூறுகிருன். அவள் மனநிலை யுணர்ந்தே (தசரதன் மூர்ச்சை தெளிந்து தடுப்பதற்குள் இராமன் செல்ல வேண்டும்) இன்றே போகின்றேன் என்றும் அவள் விடை கொடுக்க மாட்டாள் என்ற நம்பிக்கையில் விடையும் கொண்டேன் என்றும் கூறுகின்ருன்.

**270. கம்பன் படைப்பில் கைகேயி**

பொருட் கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், 1970; பக். 140

முன்னுரை - காப்பியங்களில் கைகேசி – தேவியரில் தேவி- கொடுமனக் கூனியும் கவர்மனக் கைகேசியும் - வாய்மை மன்னனும் வண்மைக் கேகயன் மாதும் - கோசலைக் குமரனும் பரதன் தாயும் - தாயும் சேயும் - கைகேசியின் சூழ்திறன் - காவியப் போக்கில் கைகேசி நிலை - மதியை விதி வென்றது - கைகேசி குற்றவாளியா? - முடிவுரை.

கைகேசிதான் காப்பியத்தின் இன்றியமையாத இடத்தைப் பெறத் தகுதி வாய்ந்தவள். கைகேசி தான் செய்துவிட்ட தவறுக்காக வருந்துகிருள் என வான்மீகியாரும் துளசியாரும் உரைக்கின்றனர். ஆனல் கம்பன் அவ்வாறு உரைக்கவில்லை. அவள் அதை உணரும் தன்மையே இழந்துவிட்டாள் என்றே சொல்லத் தோன்றுகிறது. இந்நிலை அவளுக்குக் கணவனை இழந்ததாலும், மகன் தன்னைத் துறந்ததாலும் ஏற்பட்ட மருட்சியே. கைகேசி

யின் வரத்தால் அரக்கர் குலம் அழிந்ததால் அவள் இழைத்தது தீங்கன்று. அவளது குணம் தெரிந்ததால்தான் இராமன் அவளைத் தெய்வமென்றுரைக்கின்றான். மற்ற இரு தேவியரிடத்துக் காணாத தாய்மையைக் கைகேசியிடமே காண்கிறான். தசரதன் இராமனுக்குப் பட்டம் கட்ட வேண்டுமென்று கைகேசியிடம் கூறியிருந்தால் அவளே முன்னின்று நடத்தியிருப்பாள். கூனியால் அறிவு திரியவே, இராமனுடன் உறவை வெட்டிவிட்டு, 'தந்தை உன்னைக் காட்டுக்குப் போகச் சொன்னார்', என்ற பொய்யும் கூறுகின்றாள்.

தன் இதயத்தைக் கல்லாக்கிக் கொண்ட கைகேசி தன் மைந்தனிடம் தந்தை இறப்பிற்காக வருந்தாதே என்றுரைப்பது நல்லொழுக்கமாகாது. மன்னவனின் மனமறிந்து, மகன் மனமறியாததால் அவனிடம் தோற்றாள். இராமனைப் புண்ணியத் துறைகளாடி, தவவேடம் கொள்ளச் சொன்னதன் மூலம் அவன் புறவொழுக்கத்தையே மேற்கொள்வான், அரசாட்சி விரும்பான் என எண்ணினாள். ஒருவேளை வந்து விட்டால் என் செய்வது என எண்ணியே பதினான்கு ஆண்டுகள் என வரையறையிட்டாள். அதற்குள் அயோத்தி மறந்துவிடும் என நினைத்தாள். இராமன் காட்டில் இருக்கவேண்டிய ஆண்டின் எண்ணிக்கை தசரதனுக்குத் தெரியாமல் இருப்பதில் கவனம் செலுத்தியே இராமன் காடாள வேண்டுமெனக் கேட்கிறாள். கூனி வரம் என்ற பாதையைக் காட்ட, பின் செய்ய வேண்டியவைகளைத் தானே முடித்த செயல் அவளது சூழ்ந்திறனை விளக்கி நிற்கிறது. பிறர் அறியாது, குழப்பம் விளைவிக்காமல் வரம் பெற்றது புத்திக் கூர்மையைக் காட்டுகிறது. முதல் நிலையில் கைகேசி தெய்வக்கற்பினளாகக் காட்டப்படுகிறாள். பின் முற்றிலும் மாறுபட்டு உரங்கொள் மனத்தவளானாள். இதன்பின் செய்துவிட்ட செயலுக்காகச் சிந்தை நொந்து உளம் சோர்வுற்று தன்னிலை மாறி நல்லது எது, கெட்டது எது என உணர முடியாத போக்கினை அடைந்தாள்.

சேக்ஸ்பியரின் லேடி மாக்பர்த்தும் இவளும் வினைமுறையால் ஒன்றாக விளங்குகின்றனர். முதலில் கைகேசியின் வெற்றிக்கு வழி செய்த விதி பின் பரதன் மூலம் தோல்வியடையச் செய்தது. அவள் மதியை விதி வென்றது. தசரதன் இறப்பிற்கு அவன் பெற்ற சாபமே காரணம் கைகேயி அன்று. பரதனுக்கும் அவளால் எந்தப் பழியும் ஏற்படவில்லை. இராமன் காடு சென்றது தேவர் சூழ்ச்சி. ஆகவே கைகேயி குற்றமற்றவள்.

**271. தெய்வக் கற்பினள் கைகேயி**

தி. மாணிக்கவாசகம்

தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. 1972; 4+51; ரூ. 1-50

இந்நூல் பகுதி: ஒன்று (5—13), பகுதி: இரண்டு (14—42). பகுதி: மூன்று (43—49), பகுதி: நான்கு (50—55) என்னும் நான்கு பகுதிகளையும் பல உட் பிரிவுகளையும் கொண்டது.

இராமன் தமிழன். 6000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருக்க வேண்டும். இராவணன் பிரமனின் பேரன். வடமொழியில் உள்ள ஒரு வேதமான சாம வேதத்திற்கு ஆசிரியன். தமிழன் என்பதை எப்படி ஒத்துக் கொள்ள முடியும்? இராமன் திருமால் அவதார மாக மட்டுமன்றி, சிவனும், திருமாலும், பிரமனும் ஒன்ருய்க் கலந்து உலகத்தை உய்விக்க வந்த கடவுள். சிறந்த சிவபக்தன். இரண்டாம் பகுதியிலிருந்து கைகேயியின் நிறையையும் தசரதன் நிறையையும் வலியுறுத்துகிருர். முனிவர், தன் மகனைப் பிரிந்த சோகத்தால், 'மன்னவனே புத்திர சோகத்தால் மடியக்கடவாய்' என்று கூறி உயிர்விட்டபோது அவர் மனத்தில் இராமன் இறந்து, தசரதனும் மடிய வேண்டும் என்ற எண்ணம்தான் இருந்திருக் கும். ஆனல் இராமன் மடியவில்லை. அவனை முனிவரின் சாபத்தி னின்று காப்பாற்றிய பெருந்தகை கைகேயி. ஆனல் கைகேயி உண்மையைக் கூறமுடியாத நிலையில் பழியை ஏற்ருள். கன்யா சுல்கத்தின் மூலம் பெற்ற அரசைக் கைகேயியே மணமுவந்து தசரதனிடம் கொடையாகக் கொடுத்து விட்டாள். 30 ஆண்டு களுக்கு மேல் தசரதன் வசம் நாடு இருந்துவிட்டது. ஆகையால் சட்டப்படி இந்த நாடு கைகேயிக்குச் செல்ல முடியாது. தசரதன் கொடுத்த வரத்தைக் கூனி நினைவூட்டுதலிலிருந்து கூனிக்குச் சட்டத்தில் நம்பிக்கை இல்லை என்பது புலனுகின்றது. ஆகையால் தசரதன் நாட்டை இராமனுக்குக் கொடுத்ததில் சட்டப்படித் தவ றில்லை. என்ருலும் கேகயனுக்குக் கொடுத்த வாக்கைத் தவறிய பழி அவனுக்கு வரும். ஆனல் குறையுடைய வனுகிவிடமாட் டான். மேலும் கைகேயி விட்டுப்போன எச்சங்கள் இராமனும் பரதனும். சிறந்த எச்சங்களை விட்டுச் சென்ற கைகேயியும் தசரதனும் தக்கார் என்று நிலைநாட்டுகின்ருர்.

இந்நூல் சோமசுந்தர பாரதியாரின் கருத்துகளை ஒட்டியும் வெட்டியும் பேசுகின்றது.

272. **கைகேயி***

லோகாம்பாள்

முதுகலைத் தேர்வுப் பொருட்கட்டுரை, 1972; காலிகட் பல்கலைக் கழகம்

**கோசலை**

273. **தருமத்தாய் (106—110)**

இலக்கியப் பலகணி: பொ. சுந்தரமூர்த்தி நாயஞர் பி.ஏ.,பி.எல்., செல்விப் பதிப்பகம்; காரைக்குடி; மு. ப. 1961; ரூ. 2

கைகேயியின் மனநிலை கூனியால் திரிந்ததையும் பரதன் மீது அன்புகொண்ட கோசலையின் மனநிலையையும் காட்டி, தன் மகன் வாழ்வுக்கே இடையூருக வந்த மாற்ருள் மைந்தனைத் தன் மகளைக் காட்டிலும் கோடி கோடி மடங்கு மேலாக மனமார வாயாரப் பாராட்டும் மனநலம் வாய்ந்த கோசலையைத் தருமத்தாய் என்கிருர்.

274. **கோசலை உள்ளம்** (54—60)

அற்புத ரஸம்: ரஸிகமணி டி. கே. சி;

பரதனிடம் நிறைந்திருப்பதாகக் கோசலை கூறும் மூன்று குணங்கள் தாமஸம், ராஜஸம், சாத்வீகம் ஆகும்(57). முடிசூடி வருவான் மகன் என எண்ணி நிற்கும் கோசலை பின் மகன் காடு செல்லவேண்டும் என்பதையறிந்து வருந்துவதுவரை இங்குக் குறிப்பிட்டுள்ளார்.

275. **திறங்கொள் கோசலை**

பொருட் கட்டுரை: மதுரைப் பல்கலைக் கழகம், 1970; பக். 55

முன்னுரை-கோசலை பாத்திரப் படைப்பு-வாழ்க்கைத் துணை நலம் – தாய்மை நலம் – பண்பு நலன் - முடிவுரை.

இராமனுடைய உருவச் சிறப்பிற்குக் கோசலையே காரணம். கோசலையின் பேச்சும் செயற்பாடும் அவளைக் கல்வி வல்ல பெண்ணுகவே காட்டுகின்றன. இராமன் அயோத்தியில் இல்லா குறையைக் கோசலையின் அருள்நிறை பண்பே ஓரளவிற்கு ஈடு செய்கிறது. தன் பிள்ளை, மாற்ருள் பிள்ளை என்ற வேறுபாடில்லாத் தாய்மை உணர்வையும் சாதி கடந்த மனித ஒருமைப்பாட்டுப் பண்பையும் எடுத்துக்காட்டக் கோசலை இன்றியமையாதவள் ஆவாள். கணவன் பால் வைத்த நேயமே அவளிடம் சிறந்து விளங்குகிறது. கோசலையின் மாரு அன்பின் தன்மையையும், கைகேயியின் மாறிய அன்பின் தன்மையையும், அவர்கள் கொண்ட துன்பத்தை அளவு கோலாகக் கொண்டு மதிப்பிடுகிருன் கம்பன்.

தயரதன் புகழுக்கு இழிவு வாராவாறு ஈன்ற மகனைக் காடு புகுத்திக் கணவன் சான்ருண்மையைக் காக்கும் கோசலையின் திறம் தமிழ்க் குலத்திற்குரிய பண்பாகும். இராமன் பிள்ளைமையையும் இளமையையும் பாடுங் கம்பர் கோசலையைவைத்துப் பாடு வாரா? அன்றி வளர்த்த தாயான கைகேயியை வைத்துப் பாடு வாரா? எனவேதான் இராமனுடைய இளமைக் காலத்தைப் பாடவில்லை போலும். குகன் கோசலைதான் இராமன் தாய் என்பதனை அவளது தெய்வ ஒளியின் மூலம் கண்டான். கோசலையின் கற்பு, கற்பிலக்கணத்தை இலக்கியமாயிருந்து உறுதிப்படுத்திய கற்பு

என்பர். பட்டத்தரசியாக விருந்தும் இராமனுக்கு முடி சூடுவது பற்றிய மந்திராலோசனைச் சபையில் கோசலை இல்லை. கோசலை தயரதனுடைய பட்டத்தரசி என்பதற்காக அவளுக்குரிய சிறப்புகள் எவை? என்பது போன்ற வினாக்களுக்கு இராமவதாரக் காப்பியத்தில் விடையில்லை. கம்பர் கோசலையைப் பட்டத்தரசியாகப் படைத்தாரல்லர். ஓர் அன்புத் தாயாகவே படைத்துள்ளார்.

**சடாயு**

**276. புகழுடம்பு பெற்ற மனிதன் (823—826)**

*ஆனந்த போதினி: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; 1932*

சடாயு சீதைக்காகப் போரிட்டு உயிர் துறந்த நிகழ்ச்சியினைக் குறிப்பிடுகின்றார்.

**277. சடாயுவின் வீரப்போர் (81—88)**

*கல்வியும் கேள்வியும்: கு. மதுரை முதலியார்*

சடாயு, இராவணனுடன் சீதையைக் காக்கப் புரிந்த போரினைச் சிறப்பித்துள்ளார்.

**278. புகழுக்கு உயிர் கொடுத்தோன் (70—87)**

*இலக்கிய நினைவுகள்: டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்*

சடாயு என்னும் சொல்லின் பொருள்— பொருள்களைக் கூர்ந்து நோக்கி நுணுகியறியும் ஆற்றல் பெற்றிருந்தான். சிறந்த நட்பின் கேள்வியான், மனத்திண்மையுடையவன். சடாயுவாகிய ஐயறிவுயிர் ஆறறிவுயிர்களாகிய இராம இலக்குமணர்களுக்குத் தந்தையாகிறான். அறத்திற்காக உயிர்நீத்துப் பண்பிலே தெய்வமாய், பார்வையிலே கழுகாய் இருக்கின்றான். சீதையை இராவணன் தூக்கிச் சென்றதைக் காப்பியத்தின் திருப்புமையமாகக் கருதினோமானால் யார் தூக்கிச் சென்றார் என்பதைக் காப்பியத் தலைவனுக்கு உணர்த்திய பாத்திரத்திற்குத் தனி இடம் கொடுக்க நாம் கடன்பட்டுள்ளோம். கிளைக் கதைகளுள் ஒன்றாயினும் காப்பியத்தோடு ஒன்றிய கதை. அறவழி நின்றோருக்குப் பறவைகளும் விலங்குகளும் துணைபுரியும் என்பதனை மனிதச் சமுதாயத்திற்கு அறிவுறுத்தவே ஆசிரியர் சடாயுவை அறிமுகப் படுத்தியிருப்பாரோ என்று தோன்றுகிறது.

**சடையப்பர்**

**279. சடையன் புகழ் மாலை (329—332)**

*ஆனந்த போதினி: ரா. பி. சேதுபிள்ளை, நவ. 1932*

சடையப்பரைப் புகழ்ந்து கம்பர் இராமாயணத்துள் பாடியுள்ள பாடல்களைத் தொகுத்து அவற்றால் வெளிப்படும் சடையன் புகழை விவரிக்கிறார்.

**சத்துருக்கனன்**

280. **ஒரு பாட்டுடையான்.** (23—28)
*இன்றும் இனியும் : அ. ச. ஞானசம்பந்தன்.*
*பாரிநிலையம்; மு. ப. 1968; ரூ. 5*

*பத்தாயிரம் பாடல் பாடிய கம்பன் நான்காவது தம்பிக்கு ஒரு பாடலே தந்துள்ளான். ஒருவேளை பத்தாயிரத்துள் ஒருவனுக நான்காவது தம்பியைக் கருதவேண்டுமென்று கவிஞன் எண்ணினுன் போலும். 'நாட்டை ஆள் நீ, தீப்புகுகின்றேன் நான்' என்று பரதன் கூறிய செய்தியை நினைக்கவும் முடியாமல் அஞ்சுகிருன் சத்துருக்கனன். அச்சத்தின் பின்னே இத்தகைய ஒரு பைத்தியக்காரத்தனம் நடைபெறுமா? என்று நினைத்தவுடன் மருட்கை தோன்றுகிறது. இந்த அரசாட்சியின் நிலையை நினைக்கும் போது எள்ளல் தோன்றுகிறது. தன் மனநிலை தெரியாமல் பேசிய பரதன் உரைகளைக் கேட்டுக் கோபமும், இவ்வளவு தவருக நினைத்து விட்டானே என்று நினைக்கும்பொழுது அழுகையும், தான் இராமன் தம்பி அல்லையோ என்று நினைக்கும்போது இளிவரலும் ஒருங்கே தோன்றுகின்றன. இவனைப்பற்றி முழுவதும் அறிந்து கொள்ளுமாறு நாலே வரிகளில் கூறியுள்ளான் கம்பநாடான். சிறந்த கலைஞன் மிகச் சிறிய அளவில் கூட மிகப் பெரிய படைப்பைப் படைத்துக் காட்டக் கூடும் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக் காட்டன்ருே?*

**சவரி**

281. **அருந்தவத்தரசி** (3—5)
*வஞ்சிநாடு மலர் 12, இதழ் 49, 50. வி. ருத்ஜாய்* (13-11-1971)

*சவரி உயிர்களிடத்துத் தாயைப் போன்ற அன்புடையவள். இராமன் பிறந்ததாலாகிய பயனை அனுபவப்பதற்குரிய தூண்டுகோலாக அமைகின்ருள். தத்துவக் கருத்தை விளக்கவே சவரிக்கு முக்கியத்துவம் கொடுத்துப் படைத்துள்ளான் எனலாம். இராமன் பரம்பொருள் என்பதும் இறைவனை நினைத்துத் தவம் செய்தால் இறைவனின் தரிசனம் கிடைக்கும் என்னும் உறுதிப் பொருளும் தெரியவருகிறது. இவள் கூற்ருக மொத்தம் நான்கு பாடல்களே அமைந்துள்ளன வெனினும் சவரி பிறப்பு நீங்கு படலம் என்ற ஒரு தனிப்படலத்தை அமைத்தது இவளது சிறப்பு கருதியேயாகும். சிலப்பதிகாரக் கவுந்தியுடன் ஒப்ப வைத்துப் பேசுகிருர்.*

**சிவன்**

282. **கம்பனும் சிவனும்**

*ராய. சொ.*
*அழகப்பா கல்லூரி வெளியீடு;* 1966; 18+340+14: ரூ. 5

பதிப்புரை 4 பக். முகவுரை 4பக். கம்பனும் சிவனும் 10 பக். நூல் 340 பக். சிவனைக் குறித்த சொல் தொடர் அகராதி 8 பக். சிவ சம்பந்தமான சொல் தொடர் அகராதி 1 பக். பாட்டு முதற் குறிப்பகராதி 5 பக்.

நூலின் உள்ளுறையாகச் சிவனைப்பற்றிக் கவியும், பாத்திரங் களும் கூறும் கூற்றுகள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. மொத்தம் 395 கூற்றுகள். ஒவ்வொரு பாத்திரத்தின் கூற்றுகளின் எண்ணிக்கைகளையும், தொகுத்தளித்துள்ள பக்கங்களையும் அட்டவணைப்படுத்திக் காட்டியுள்ளார்.

கம்பன் சிவனைப்பற்றி எங்கெங்கு எப்படியெல்லாம் தான் செய்த பேரிலக்கியத்தில் பேசியிருக்கிறான் என்பதை ஆய்வதே இந்நூல். சிவனின் முழுமுதல் தன்மையைப் புலப்படுத்துவதில் கம்பர் நால்வருக்குப் பின்னிட்டவர் இல்லை என்பதற்குச் சிவனைக் குறித்த சொற்றொடர் அகராதி சான்று பகரும் என்று திரு. வ. சுப. மாணிக்கம் தன் பதிப்புரையில் கூறியுள்ளார்.

கம்பன் வைணவன், பாடிய இராமாயணம்-வைணவக் கதை, சைவத்திற்குப் புறம்பானது, எனும் கருத்தினை மறுத்து, உரைத் திருப்பதே இந்நூல். கம்பன் பிறப்பினால் சைவன் என்று அவன் பெயரும், தொடர்புடைய சடையப்பன்; சடையன், அம்பிகாபதி எனும் பெயர்களும் காட்டுகின்றன. காவியத் தலைவர்களுக் குள்ளே இராமனுக்கு இணையான ஒருவன் இலன் என்றும் காவியத் தலைவியர்குள்ளே சீதைக்கு இணையான ஒருத்தி இலள் என்றும் உணர்ந்த காரணத்தினாலேயே கம்பன் இராம காதையைப் பாடத் தலைப்பட்டான்.

ஒவ்வொரு பாடலுக்கும் தலைப்பு, பொழிப்பு, விளக்கம், மேற்கோள், சிறப்பு ஆகியவை தருகிறார். பாடல் இடம்பெறும் காண்டம், படலம் தருபவர் படலத்தில் அப்பாடலின் எண்ணைக் குறிக்கவில்லை. எளியநடையில் உரை கூறுபவர், அரிய பதங் களுக்கு உரையையும் விளக்கத்தில் தருகிறார். பாடலோடு தொடர் புடைய, முன்னும் பின்னும் உள்ள பகுதிகளையும் தேவையான இடங்களில் சுட்டுகிறார். ஒவ்வொருவர் கூற்றையும் கொடுக்கு முன் சிறிய குறிப்புத் தருகிறார்.

சுந்தரகாண்டம் ஊர்தேடு படலத்தில் 'முக்கண் நோக்கினன் முதல் மகன்' எனும் பாடலுக்குப் புதுப் பொருள் தருகிறார். 'இந்திர சித்தன் விநாயகக் கடவுளும், முருகக் கடவுளும் ஓர் உருவம் கொண்டு பிறந்தவன் என்பது கருத்து. முருகக்கடவுள் ஐந்து முகங்களும், பத்துக் கரங்களும் கரந்து பிறந்தான். கணபதி துதிக்கையோடு கூடிய யானைத் தலையையும், பெரு வயிற்றையும் மறைத்துப் பிறந்தான் என்பர்(62). யுத்த காண்டம்

நிசும்பலைப் படலம், 'தேவாசுரரும், திசை நான்முகனும்' எனும் பாடலில் மூவுலகின்கோ என்பதற்கு இந்திரனன்று திருமால் எனப் பொருள் குறிக்கிருர்(106).

பால(55), அயோத்தியா(19), ஆரணிய(50), கிட்கிந்தா(24), சுந்தர(49), யுத்த(198). காண்டங்களில் சிவன் பற்றிக் கூறப் படும் இடங்களையும் தொகுத்துத் தந்துள்ளார்.

கம்பன்பற்றிய ஆராய்ச்சி நூல்களுள் இது ஓர் புது முயற்சி யாகவும், சிறப்பானதாகவும், செம்மையாகவும் அமைந்துள்ளது. ஆசிரியரின் சிவப்பற்று இந்நூலுள் வெளிப்படை.

**சீதை**

283. **பிராட்டியார்**

*ஆனந்த போதினி :* அசலாம்பிகை அம்மையார். ஜூலை—1932, ஜூன் 1934.

திருமணத்திலிருந்து, இராமனுல் மீட்சி பெற்றதுவரை உள்ள சீதையின் நிலையினை ஒவ்வொரு இதழிலும் சிறிது சிறிதாகக் கூறியுள்ளார். உத்தர காண்டத்தைக் கம்பர் இயற்றிய தாகக் கூறியுள்ளார்.

284. **சீதை கணவனுடன் கான் புக வேண்டுதல்** (405—410)

*கலைமகள்* தொகுதி 3 டி. எஸ். இராமசந்திர ஐயர் 1933; ரூ. 4

கம்பன், வான்மீகியை மாற்றி அமைத்துள்ளதைச் சுட்டி யுள்ளார்.

285. **சானகி** (73—85)

*மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும் :* கு. பாலசுந்தர முதலியார்

சீதையின் அழகு முதலில் கூறப்பட்டுள்ளது. நாயகன் துன்புற்ற காலத்தும் அவனைப் பிரியாது அவனுடன் உறைதலே கற்புடைய மங்கையர்க் கழகென்பதைக் குறித்து அவள் நியாய மாகத் தருக்கித்த திறம் சிறப்புடையது(76). எவற்றையும் நன்கு தேர்ந்து முடிவினைக் கொள்ளும் சீதையின் சீரிய அறிவின் திற மும் கற்பின் மேன்மையும் வியக்கத் தக்கனவாகும்.

286. **கற்புத் தெய்வம்** (169—176)

*தமிழர் பண்பாடு :* எஸ். வி. பி., பி. ஏ., பி. எல்., தமிழ்ப் புத்தகாலயம், மு. ப. ஜூன் 1949; இ. ப. 1951; ரூ. 3

அசோக வன நிகழ்ச்சியைக் கூறுகிருர். சீதை முதலில் அனுமனிடம், அவளது உறுதிப்பாடு, பின் இராமனது கடமை, இலக்குவனது கடன், மீண்டும் தன் உறுதிப்பாடு, பின் ஊசலாட வரம் என்று பேசுகிருள். இதனை, உத்தம வாழ்விற்குக் கம்பன் வகுத்துக் கொண்ட ஒழுக்க உலகில்தான் இச்சீரிய விதிகாணப்

படுகிறது(175). என விவரிக்கிறார். தமிழர் பண்பாட்டிற் சிறந்த ஓர் அம்சமாகிய இக்கற்பின் ஓவியத்தைக் கம்பன் எழுத்தின் ஓவிய மாகச் செய்தனன்(176).

**287. அசோகவனம் (7—48)**

அசோகவனம்: ஆ. முத்துசிவன்; ஸ்டார் பிரசுரம்; திருவல்லிக் கேணி, சென்னை-5; மேலக்கோபுரத்தெரு, மதுரை, மூ. ப. 1956; ரூ. 2-50

இராவணனின் காலை ஆகாரத்திற்குக் கூடக் காண மாட்டாத சீதை, அவனிடம் இருந்து தன் கற்பு, பெண்மை, குடிப்பிறப்பு, ஆகிய பண்புகளைக் காப்பாற்றினாள் என்றால், அவளுடைய பண்பு மகோன்னதம் வாய்ந்த மனப்பண்பே(23). அசோகவன சீதையின் நிலையை, அவள் இராவணனால் பட்ட துன்பத் தைச் சிறைவைத்தது முதல் மீட்டது வரை கூறி, 'அதர்மம் தொலைந்து தர்மம் தலையெடுக்க வேண்டுமென்றால், அந்தப் புனித சேவைக்கென்று தெய்வம் தேர்ந்தெடுக்கும் கருவி இவ்வாறெல் லாம் அவஸ்தைப் படவேண்டியதுதான். இதுவே அசோக வனத்தின் மர்மம்(48) என்றுரைக்கின்றார்.

**288. சீதை (32—43)**

தமிழ்க்கவி அமுதம்: வித்துவான். என். சண்முகசுந்தரம்; ஸ்டார் பிரசுரம்; மு. ப. சூன் 1956; ரூ. 2-50

சீதையின் திருமணத்தைப் பற்றிப் பேசும் ஆசிரியர், சீதை இக்காவியத்தில் பிரவேசிப்பதன் மூலமாகச் சத்தியத்திற்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டது. தருமதேவதைக்குத் தெம்பு உண்டாகிவிட்டது. அழகுத் தெய்வத்திற்கோ தன்னிடத்திலே கவர்ச்சியும் பிரியமும் ஏற்பட்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கி விட்டது(32) என்கிறார். மனிதவம்சத்தைப் பெற்று வளர்த்துச் சிரஞ்சீவித்துவம் கொடுக்கின்ற தாய்மை உணர்ச்சியும், தன் சௌந்தர்யத்தையும் உபகாரத்தையும் நாயகருக்குக் கொடுத்து வாழவைக்கின்ற கருணையும், கம்பருடைய சிருஷ்டியில் சீதையாக மலர்கின்றது.

**289. கற்பின் கொழுந்து (44—48)**

தி. ஆ. பெ. விசுவநாதம் மணிவிழா மலர்; பூ. ஆலால சுந்தரம்; திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம்; (பதிப்பாசிரியர்) துரை ராசுப்பிள்ளை; 1958;

'நின் பிரிவினுஞ் சுடுமோ பெருங்காடு?' என வினவியது, அனுமன் வாலில் பற்றிய தீயைக் குளிரச் செய்தது, 'மீண்டு வந்து பிறந்து தன் மேனியைத் தீண்டலாவதோர் தீவினை தீர் வரம்' வேண்டியது, பயிர்ப்பு (ஏறு சேவகன் மேனியல்லாலிடை)

அனுமன் கூற்று (விற்பெருந் தடந்தோள் வீர) இவற்ருல் சீதை யின் கற்பைப் பெருமைப் படுத்துகிருர். சங்க இலக்கியப் பாக்களைச் சான்ருக்குகிருர்.

290. **கற்பின் கனலி**

எஸ். ராம கிருஷ்ணன்

மீனுட்சி புத்தக நிலையம்; மதுரை; மு. ப. சன. 1961; இ. ப. மார்ச் 64, மூ. ப. சன. 1973; 192, ரூ. 3-50.

கண்வழி களவு(5—13), காதல் திருமணம் (13—30), குழந்தை உள்ளம் (30–40), கானக வாழ்வு (40—48), வஞ்சனைக்கு இலக் கான பேதைமை (48—63), கபடத்துறவியும் கற்புக் கரசியும் (63—90), சிறையிருந்த செல்வி (90—105), தீயினைச் சாடிய தூய ளின் வீரம் (105—119), தேவியும் தூதனும் (120—142), மங்கை யின் திண்மையும் மாயா சனகனும் (143—162), அறச்செல்வியின் அலகில் அவலம் (162—173), கற்பின் கனலி (173—193).

இல்லறம் தழுவ வேண்டுமானுல் காதல் உணர்ச்சி அரும்ப வேண்டும். தூய காதலுக்கும் நீச காமத்திற்கும் இடையே உள்ள வேறுபாட்டினை ஓர்ந்து கொள்ளவும் வேணடும். இதனை எல்லாம் கருத்தில் கொண்டே, கோசிக முனிவன், அகலிகைக் கதையை நடத்திச் செல்கின்ருன்(6). சீதையைத் தெய்வம் என்று மனம் உன்னிய அளவில், தயரதனும் மற்றவரும் வணங்கி னர் என்பதனை உள இயல் கருத்தை ஓர்ந்து 'உடல் சிந்தை வசம் அன்ருே?' என்பான் கம்பன். கம்பனது சீதை குழந்தை உள்ளம் படைத்தவள். வான்மீகத்தின் சீதை உலக விவரம் அறிந்தவள். கம்பனது சீதை கணவனுக்கு முன்னுல் பேசுவதற்கும் கூசும் தன்மையினள்(37). மாரீச நாடகம் வெற்றி அடைவதற்குச் சீதை பிஞ்சு உள்ளம் படைத்தவளாக இருத்தல் வேண்டும். பின் ளுளில் திட்ப நுட்பமான பார்வையும் தேர்ந்து தெளிந்த ஞான மும் அடைவதற்கு முன் தேவையான அறிவுச் செல்வத்தைப் பெறுகிருள் கானக வாழ்வில்(41). 10 ஆண்டுகள் வனத்தில் வசித்தனர்(46). சூர்ப்பணகை சீதையைக் கண்டாள் என்று சொல்லுமிடத்தில் கற்பின் கனலியைக் கண்டாள் என்று உரைத் தது முற்றிலும் பொருத்தமே(49). அரக்கர் மாயத்தைப் புரியாத சீதை, நெருக்கடியான நேரத்தில் நாயகனின் ஆற்றலையும் சரிவர கவனிக்கத் தவறுகிருள்(58). சீதை அளவு கடந்த எளிமை உடையவள் என்பதால்தான் தன்னை ஏசும் பொழுதும் இளை யோன் சீற்றம் கொள்ளவில்லை(61). அயன் சாபம் என்ன என் பதனை இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லுங்கால் தெரிவித் தால், வேகம் குன்றி நாடக நயம் நலியுமென்பதால் அதனை இங்கு விரிக்காது விடுத்தான். ஆனுல் அதனைத் தெரிவிக்க வேண்டும்

என்ற கட்டுப்பாட்டினை மறக்காமல் அனுமனுடன் உரையாடும் சீதையின் வாய்மொழியாக வைத்தான்(85). காகுத்தன் தேவி தன் கற்பையும் பிறப்பையும் காப்பதற்காக எத்தகைய இராவ ணேசுவரனை எதிர்த்து நிற்கிறுளென்பதைப் புலப்படுத்தி அவளது மகோன்னதமான மனநலத்தை உணர்த்தவே அரக்கன் வருகையை விரிவாகச் சித்தரித்தான் கம்பன்(106).

அனுமனைக் கண்டவுடன் அவள் அரக்கனேவென்று அயிர்த் தது கணவனிடம் சீதைக்குள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்தும் வாய்ப்பாகக் கொள்ளவே(126). ஏவல்கூவல் பணி செய்வேன்' என்று மொழிந்த அனுமனது அடக்கமும், 'அது என் பெரிய பேதமைச் சின்மதிப் பெண்மையால்,' என்று இயம்பும் சீதையின் பணிவும் ஒன்றையொன்று விஞ்சுவனவாக உள்ளன(132). துன்பத்தால் தளர்ந்து சீதை கூறும் செய்தி அவளதுப் பெண்மைப் பெருமையைப் புதிய புதிய கோணங்களில் புலப் படுத்துகிறது(140). அனுமனும் மாயத்தால் உருமாறிய அரக்கனே போலும் என்று சீதை நெஞ்சறிய பொய் புகன்றது அவள் வாய்மைக்கு ஊனமன்று. பிறர்க்குரியாளருக வாழும் சான்றோ ளுன அனுமன் தொண்டு புரியுங்கால் அவனுக்குத் தீமை நேராது காத்தலே அறம் பயில்வதாகும்(141). கணவனைப் பிரிந்து கொடியன் சிறையில் பொறுத்தற்கரிய துன்பத்துக்கு ஆளாவது போதாதென்று மாயா சனகன் மூலமும் மங்கையின் மனத் திண்மைக்குச் சோதனை வைக்கிருன் கம்பன். இராமனுக்குரிய சீதையின் உருவை அரக்கன் தன் மனதில் சிறை கொண்டது அவனது இழிவைக் காட்டுமே அல்லாது சீதைக்கு மறு வாகாது.

கணவன் இறந்தானென்று கருதித் துடிக்கும் எல்லையை அடைவதற்கு முன், தந்தையே கைதியாகி வந்து அரக்கன் சார்பில் வாதாடுவதாக மாயை செய்வது பொருத்தமென்று நம்பிய கம்பன் மாயா சனகப் படலத்தை அமைத்தான்(148). நரனை ஒரு பொருட்டாக மதியேன் என்று தியன் என்னதான் பசப்பினுலும் காகுத்தனைக் கண்டு அஞ்சினுன் என்பது மெய் (149). அகலிகை அனுபவத்தில் அவள் கணவன் வேடத்தில் வந்த அன்னியன் என்பதைப் புலனளவில் உணர்ந்தாளெனினும், போக மயக்கத்தில் அறிவுச் செயல் நிகழாது போய், தகவிலாத கூட்டம் என்பதைத் தேருது காலம் தாழ்த்தினுள். மனமறியப் பிழை இழைக்கவில்லை எனினும் நேர்ந்தது தவறே என்பதால் அவள் இழுகுற்ருள்(153). கையறு நிலையில் கதறுபவன் அரக் கனே ஆனுலும் இவனுக்கு எதிராக மகிழ்ச்சிக்குறி காட்டுவதற்கு மங்கையின் கருணை இடம் கொடுக்கவில்லை. எனவே அவள் மௌனமாக உள்ளூரக் குதூகலிக்கிருள்(161). நினைத்தற்கரிய

துன்பமெல்லாம் அனுபவித்த பெண் அக்கொடுமையைக் கடிந்து பேசுவதும் இயல்பே. ஆயினும் தன்னலம் கருதாத் தகைமைக்கும் பிறர் துன்பம் பொருத கருணைக்கும் உரியளான சீதைக்கு அது இழுக்கென்று விடுத்தான் கம்பன். கொண்டவன் மாண்டான் என்று எண்ணும் போது மட்டும் கேகயன் மகளின் கொடுமையைக் குறிப்பிடச் செய்து, இவ்விதம் நாவழுவச் சீதையின் துயரம் எல்லை கடந்திருக்க வேண்டுமென்பதை நாம் உய்த்துணர வைத்தான் (169). சீதையை மாண்டுபோ என்று கூறி இரக்கம் என்று ஒரு பொருள் இல்லாத நெஞ்சினரான அரக்கரை வதம் செய்த இராமனே இரக்கத்தை உகுத்துவிட்டான் (181). அவளது கற்புக்கனல் அரக்கர் கூட்டத்தை எரித்ததுடன் அக்கினி தேவனையே பொசுக்கி, உலகின் ஐயத்தையும் எரிக்கவேண்டிய தாயிற்று (192). வான்மீகியுடன் வேறுபடும் இடங்களையெல்லாம் சுட்டிச் சிறப்பாக விளக்கியுள்ளார்.

**291. கம்பன் கலைக் கோயில் (67—76)**

*தென்றல் தந்த கவிதை : தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; தமிழ்ப்புத்தகாலயம்; மு ப. 1964; இ. ப. 1971; ரூ. 2-50.*

சீதையின் அழகினைக் கம்பர் வர்ணித்திருப்பதை இயம்பி, இளமை உள்ளமாயினும் காதலித்தவனையே மணக்க வேண்டும் என்று உறுதி நிறைந்த மிதிலைச் செல்வி; வடிவழகும், நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு என வினவும் குண அழகும் நிறைந்த அயோத்தி சீதை; மகிழ்ச்சியின் எல்லை கண்டாள் தண்டகாரண்யத்தில், இராவணனால் கவரப்பட்ட சீதை குண அழகின் எல்லையாகி அசோக வனமாகிய கோயிலில், இலக்குவன் கட்டிய பர்ணசாலையாகிய மூலத்தானத்துள் தவமும் தவம் செய்து பெற்ற அழகுத் தெய்வமாகக் கோயில் கொள்கிறாள் என்று சீதையைக் கம்பன் கலைக்கோயிலாகக் காட்டியுள்ளமையை விவரிக்கிறார். இக்கோயிலுக்கும் ராஜராஜன் பெருவுடையாருக்குக் கட்டிக் கொடுத்திருக்கும் கலைக்கோயிலுக்கும் ஒப்பிட்டால் ஒற்றுமை உண்டு என்றுரைக்கிறார்.

**292. சீதை**

ஆர். இராசாமணி அம்மையார்

பேகன் பதிப்பகம்; சுப்பிரமணியபுரம்; காரைக்குடி-2; 1966; 3+10; ரூ. 1-50.

மிதிலைச் செல்வி, மரவுரிச் சீதை, இராவண முனிவன், சீதையின் நினைவு, அனுமன் முன் சீதை, சீதையின் அவலம், சீதையின் குடும்பப் பண்பு, இராமன் முன் சீதை, கற்பின் கொழுந்து, சீதையின் அறிவும் துணிவும், சீதையின் தோழி, பலர் புகழ் சீதை எனும் பன்னிரு கட்டுரைகளாக நூலமைந்துள்ளது.

சீதையின் திருமணம் சுயம் வரத்தின் பாற்படும். இம்முறை தொன்றுதொட்டு வழக்கத்திலிருந்துவந்தது. பெண்ணுரிமைக்கு இது ஒரு சான்று(16). சங்க இலக்கியத்தில் 'பெருங்காடு இன்னு என்றீராயின் இனியவோ பெரும தமியோர்க்கு மனையே' (குறுந்) எனும் தலைவியின் கூற்று, கணவனுடன் காடு செல்லத் துணிந்த சீதையின் கருத்தை ஒத்துள்ளது(19). இராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற பகுதியே கம்பராமாயணத்தின் உயிர்நிலையாக விளங்குகிறது. பெண்ணினத்துக்கே தலைசிறந்த எடுத்துக்காட்டாய் அமைந்த சீதையின் வாயிலாகப் பயிர்ப்புப் பண்பினை விளக்க முற்பட்டார் கம்பர்(32). புறத்தழகு கண்டு சீதையிடம் தன் உள்ளத்தைப் பறி கொடுத்த இராமனது நிலையைக் காட்டியும், சீதையின் கற்பு, காதல், பொறை, கருணை முதலிய அகத் தழகு கண்டு வியப்புற்ற அனுமன் நிலையே சிறைப்புடைத்து(49). கண்ணகியைக் கவுந்தியடிகள் சிறப்பித்தவாறே பிராட்டியைக் கற்பின் பெருமை பற்றிப் பெருந்தெய்வம் என்று அனுமன் கூறினுன் என்றுலும் பொருந்தும்(73). தவம் என்பது தன்னைத் தான் கொண்டொழுகும் நெறி. இது ஒருமை மகளிர் இல்லில் இருந்தே பெரும்பாலும் செய்தொழுகுவது. பெருந்தவமானது கணவனது வாழ்விலும் தாழ்விலும் உடனிருந்து கற்புநெறி வழுவாது நோற்பது. நற்பெருந்தவமாவது தன்னைச் சேர்ந்தோர் பிரிந்த நிலையிலும் பிறர் தன்னைத் துன்புறுத்திய நிலையிலும் தன் குடிமை, பொறை, கற்பு ஆகியவற்றிற்குக் குறைவு நேராது ஒழுகுவது. இம்மூன்றும் நிலையையே பிராட்டி இப்பொழுது மேற்கொண்டுள்ளாள்(78).

சீதையை ஆதிரையுடன் தீப்புகுதலைக்கொண்டு ஒப்பிட்டுப் பேசுகிருர்(88). தான் அனுமனைத் தீண்டலாகாது என்று முதலிலேயே கூறினுல் அவன் உள்ளம் வருந்துமென்று இரண்டு ஏதுக்களை முதலில் கூறி, தீண்டுதல் தகாது என்பதை இறுதியில் கூறினுள்(93). பிராட்டி அனுமன் வாயிலாக ஒவ்வொருவருக்கும் கூறிய செய்திகள் அவள் நுண்ணறிவினைக் காட்டுகிறது(94). மாயா சனகன் மீது ஐயுறுவது அவளது ஆழ்ந்த அறிவினைக் காட்டுகிறது(95). அரக்கியரது கொடுஞ்செயலால் சீதை இறக்க நேரிட்டிருக்கும். இதன் விளைவு அயோத்தியின் அழிவுவரை செல்லும். அங்ஙனம் நேராது தடுத்தது இரக்க மனப்பான்மையுடைய திரிசடை(98). சீதை திரிசடையைத் தெய்வமாகக் கருதித் தன் மனத்திலுள்ள எண்ணங்களை வெளியிட்டாள்(105). இராவணன் கொண்ட தீய எண்ணத்தை இராமனது அம்பு நீக்கியதாகக் கூறப்பட்டுள்ளது(110).

பொது நிலையில் சீதையைப் பற்றி ஓரளவு தெரிந்து கொள்ள இந்நூல் உதவுகிறது. மிக எளிய நடையில் அமைந்துள்ளது.

**293. கம்பர் காட்டும் பெண்ணோவியம் (I தொகுதி) சீதை**
Dictionary of Epithets and names of Sri Sita as found in Kambaramayamam.)

மு. சதாசிவம்

பாரி நிலையம்; மு. ப. 1970; 68 ரூ. 1-60.

இந்நூலுக்கு ஓ. கே. நல்லமுத்து அணிந்துரை நல்கியுள்ளார். நூலின் முன் பகுதியில் கம்பன் கூறும் சீதை பற்றிய வருணனைகளைத் தொகுத்து முறைப்படுத்தி அகராதியாக அமைக்கிறார். பின்பகுதியில் அவ்வருணனைகளை எளிய, உரை நடையில் பகுதி பகுதியாகப் பிரித்துத் தந்துள்ளார். இப்பகுதி சொல்லோவியம் என்னும் தலைப்பில் அடங்குகிறது.

**294. கம்பன் கண்ட சீதை**

க. கிருட்டிணவேணி

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகப் படைக்கப்பட்ட பொருளாய்வுக் கட்டுரை; 16+84; பதிப்பு 1970.

இப்பொருட் கட்டுரை, சீதையின் புற அழகு (17—37), பண்புகள் (37—76), பாத்திர இன்றியமையாமை (77—100) என்னும் பெருந் தலைப்புகளோடு பல துணைத் தலைப்புகளையும் கொண்டது. துணை புரிந்த நூல்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

முன்னுரையில் பாத்திரங்களின் - பொதுவாக சீதையின் பாத்திரப்படைப்பு, ஜைன ராமாயணம், சங்க இலக்கியம், திருவிராமேச்சுரம், கலித்தொகை, சிலப்பதிகாரம், திருப்புகழ் முதலியவற்றில் சீதையைப் பற்றிய குறிப்புகள் ஆகியன பற்றிப் பேசப்படுகின்றன. சீதையின் எல்லா உறுப்புகளும் அதற்குரிய இலக்கணங்கள் பொருந்தியனவாகவே அமைக்கப்பட்டுள்ளன என்று கூறி, குழல், முகம், நுதல், புருவம், கண், மூக்கு, வாய், பல், தோள், கை, விரல், நகில், இடை, அல்குல், கொப்பூழ், அடி, மேனி, சாயல், நடை என்னும் சிறு தலைப்புகளில் இவைகள் வருமிடங்கள் சிலவற்றை எடுத்துத் தருகின்றார். பாத்திரத்தின் பண்பும் இவ்வகையிலே தரப்படுகின்றது. நாண், மடம், அச்சம், பயிர்ப்பு, வேட்கை, பேதைமை, நிறை, பொறை, ஐயம், உறு பெயர் கேட்டல், வன்சொல், தறுகண், அருள், அன்பு, உயிர்ப்பு, நிலைத்தல், செய்ந்நன்றி, வெறுப்பு, இகழ்ச்சி, மகிழ்ச்சி, துன்பம், உறுதி, உபசரித்தல், வெகுளி, ஆணை, ஒழுகம், இரங்கல், உபதேசம், நிந்தனை, கற்பு, வாழ்த்தல், என்னும் தலைப்பின் கீழ்த் தரப்பட்டுள்ளன. பாத்திர இன்றியமையாமையில் இராமனும் சீதையும் திருமணத்திற்கு முன் காண்டல், திருமணம், கானகம் செல்லல், சூர்ப்பணகையைக் காண்டல், இராவணனைக் காண்டல்,

சிறையெடுத்தல், சிறையிருப்பு, அனுமனைக் காண்டல், இராவணனை நிந்தித்தல், தீப்புகல், மீட்சி முதலியன கதைச் சுருக்கமாகத் தரப்படுகின்றன.

**295. கம்பனில் சீதையின் பாத்திரப் படைப்பு***

கே. கிருஷ்ணவேணி

முதுகலைப் பொருட்கட்டுரை, கேரளப் பல்கலைக் கழகம்; 1971; 119

1. முன்னுரை, 2. கம்பனும் அவன் காவியமும், 3. காவியத்தின் பாத்திரப் படைப்பு, 4. சீதை என்ற பாத்திரம், 5. பாத்திரப் படைப்பில் சீதையின் புற அழகு, 6. சீதையின் பண்பு நலன், 7. சீதையென்ற பாத்திரத்தின் வளர்ச்சி, 8. கம்பராமாயணத்தில் சீதைக்குரிய இடம், நூற்பட்டியல்.

**296. தவம் செய்த தவமாம் தையல் (58—64)**

நமது பண்பாடு: க. சி. கமலையா, தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. சன. 1973; ரூ. 5

சீதையின் அசோகவனத்து நிலையையும், அவளை அங்குக் கண்டு வந்த அனுமன் இராமனுக்கு அவள் நிலையினை எடுத்துக் காட்டும் திறனையும் நவின்றுள்ளார்.

**சுமத்திரை**

**297. சொல் மாண்புடைய அன்னை (3—5)**

வஞ்சி நாடு: மலர் 14; இதழ் 46; வி. ருத்ஜாய், அக். 1973

சுமித்திரையின் ஒப்புயர்வற்ற, பண்புமிக்க சொல்லே இராமாயணத்தை நிலைநிறுத்துகிறது என்று கூறினும் மிகையாகாது. இவளே உண்மையான தாய்க்குலத்திற்கோர் சிறந்த எடுத்துக்காட்டு என்று கூறும் ஆசிரியர், சுமித்திரை இலக்குவனுக்குக் கூறும் அறிவுரைகளையே அவன் இராமனுக்கு எடுத்துக் கூறி உயிர் துறக்காது, கவந்தனோடு போரிடுமாறு கூறி இராமன் புகழையும் நிலைநிறுத்துகிறான் என்கிறார்.

**சுமந்திரன்**

**298. மூரிய தேர்வலான் (114—127)**

புதிய கோணம் (இலக்கியக் கட்டுரைகள்); அ. ச. ஞானசம்பந்தன்; பாரிநிலையம்; மு. ப. 1965; ரூ. 3-25

சுமந்திரன் என்ற வடமொழிப் பெயருக்கு அரசனுடைய இயங்குதிணை, நிலைத்திணைப் பொருட்களைக் கவனித்துக் கொள்ளும் கடப்பாடு உடையவன் என்பதே பொருள். தசரதன் தவம் புரியச் செல்வதை விரும்பாத சுமந்திரன் அதனைத் தன் வாயால் வெளியிட அஞ்சி பெருங் காவியங்களில் போற்றப்படும் மங்கல வழக்கினை ஆண்டு 'அரைசன் ஆக்கிப் பின் அப்புறத்து அடுத்தது, புரிவாய்' என்று கூறுவதன் மூலம் அவன் அன்புநிலையை ஆசிரியர் வெளிக்காட்டுகிறார். தசரதனிடம் கொண்ட அன்பு,

இராமனிடம் கொண்ட காதல் இரண்டின் இடைப்பட்டு அல்லலுறுகின்றான்.

299. **காதலும் கடமையும்** (128—143)

*புதிய கோணம் (இலக்கியக் கட்டுரைகள்); அ.ச. ஞானசம்பந்தன்*

அன்பை அவித்துக் கடமைமேல் எழவேண்டிய நிலைமையில் சுமந்திரன் முதல்அமைச்சன் என்பதற்கு ஏற்பக் கடமையைச் செய்துவிட்டான் (131) என இராமன் சீதையைக் காட்டில் விட்டு வந்ததைக் கூறுகிறார். குகனைப் பற்றிச் சுமந்திரன் அறிந்திருப்பதால், அருமை மன்னனாகிய இராமனுடைய நண்பர்கள் எத்தகையவர் என்று அறிவதும், அயோத்தி நகரின் எல்லையில வாழும் குகன் அயோத்தி மன்னனிடத்தில் எந்த மனப்பான்மையுடன் பழகுகிறான் என்பதையும் அறிய முடிகிறது. எனவே தலையாய அமைச்சன் கடமையை நிறைவேற்று முகமாகவே உளது சுமந்திரன் குகனைப் பற்றி அறிந்திருப்பது(143). சுமந்திரனின் அவலநிலையை இக்கட்டுரை நன்கு வெளிப்படுத்துகிறது.

**சுரசை**

300. **சிந்தை தூயாள்** (63—69)

*இளவேனில்—இரண்டு; வி. ரூத்ஜாய்; (சிறப்பாசிரியர்) டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்; பதிப்பாசிரியர் அ. இராசேந்திரன்; தா. ஏ. பியூலா மேழ்சி; இளங்கோ மன்றம்; 1973*

அனுமனின் ஆற்றலை அறிய அனுப்பப்பட்ட சுரசையால் அனுமன் சூழ்ச்சித்திறன், சமயோசித அறிவு, சொல்வன்மை, அஞ்சாமை, கடமையுணர்வு, சோர்வின்மை, பொறை, சித்தாற்றல் முதலியன வெளிப்படுகின்றன(66). சுரசை அரக்கனாக மாறுவேடம் கொண்டிருப்பின், தன் கருத்திற்கிடையூறாக வந்த நேரத்து அனுமன் போர் புரிந்து வெற்றி வாகையோடு தன் பணி மேற்கொண்டு விரைந்து சென்றிருப்பான். இந்நிலையில் அவன் உடல் வலியொன்றே வெளிப்பட வாய்ப்புண்டு. சுரசை ஓர் பெண்ணாகையினாலேயே இச்செயல் செய்ய இயலாததாகிப் பிற பண்புகள் வெளிப்பட வாய்ப்பேற்படுகிறது(67).

**சூர்ப்பணகை**

301. **சூர்ப்பணகையின் சூழ்ச்சி** (26—35)

*கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்? சி. என். நாச்சியப்பன்*

இராவணனின் அகந்தையை அழிக்க வேண்டும் என்பதுதான் சூர்ப்பணகையின் ஆசை. தன் கணவனைக் கொன்ற அவனைப் பழி வாங்கத் தன் மகனைத் தவம் செய்ய வைத்தாள். ஆனால் அறியாது இலக்குவனால் கொல்லப்பட்டான். எனவே, சீதையைக் கொண்டு இராவணன் வென்றால் தன் மகனைக் கொன்றவர் அழிவர். உயிர் தப்பினால் தனக்கு இராமன் கிடைப்பான். இராவணன் அழிந்தால்

தன் பழைய பழி தீரும் எனும் தன் சூழ்ச்சித் திட்டத்தை மறைமுகமாகப் பல முனைகளில் விரித்துப் போராடுகிறாள். சூர்ப்பணகையின் சூழ்ச்சியால் இராவணன் அழிந்தான்.

302. **சூர்ப்பணகையின் சூழ்ச்சித் திறன்** (34—45)

தமிழும் தேனும்: வெ. வரதராஜன் எம்.ஏ., மு. ப. 1964; இ. ப. 1973; ரூ. 2-50

அங்கபங்கமான சூர்ப்பணகை, கரனிடம் சென்று முறையிடும் பொழுதே அவள் சூழ்ச்சி ஆரம்பமாகிவிட்டது. எதைச் சொல்ல வேண்டுமென்பதையும், எப்படிச் சொல்ல வேண்டுமென்பதையும் சிந்தித்துச் சொல்லியிருப்பது அவளுடைய சூழ்ச்சித்திறனைக் காட்டுகிறது(39). பண்பாடும் நாகரிகமும் இல்லையாதலால் அண்ணன் முன்னிலையிலும் தன் காம உணர்ச்சியைக் காட்டி விடுகிறாள்(42). 'நான் மாரனின் அம்பினால் இறப்பதைவிட இராமனின் அம்பால் இறப்பேனாயின் என் புகழ் இந்நிலவுலகில் நீடு நிற்கும்' என்று இராவணன் கூறுமளவிற்குச் சீதைபால் நசையை உண்டாக்கச் செய்ததற்கு வசைமிக்க சூர்ப்பணகையே காரணமாக இருந்திருக்கிறாள்(45).

303. **வஞ்சமகள்** (9—27) நாடகம்

**வஞ்சமகள்**: கு. அழகிரிசாமி தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட்; சென்னை - 8;
மு. ப. 1968; ரூ. 3

இது மேடை நாடகமாகும். முதன் முதலில் 1963இல் கம்பர் விழாவில் அரங்கேற்றப்பட்டது. கம்பராமாயணச் சூர்ப்பணகைப் படலம் நாடகமாக்கப்பட்டுள்ளது. இடையிடையே பாடல்களைக் கொடுத்துப் பின்னணியாக அவற்றை அமைத்துள்ளார். (சூர்ப்பணகையின் வரவு, எண்ணம்.) கம்பன் சொற்களைக்கொண்டே அமைத்துள்ளமையால் கம்பனைப் படித்தோருக்கே நாடக நடை புரியும். சில பாடல்களைப் பாத்திரங்களின் கூற்றாகவும் அமைத்துள்ளார்.

**தசரதன்**

304. **தசரதர் மரணம்** (309—315)

கலைமகள் (தொகுதி 3); டி. எஸ். இராமசந்திர ஐயர்; 1933; ரூ. 4

தசரதர் பெற்ற சாபம், புத்திர பாசம், மரணம் முதலியவற்றைக் கூறி கம்பர் வான்மீகியிடமிருந்து வேறுபடுவதையும் காட்டுகிறார்.

305. **பிரிவாற்றாமை** (424—432)

ஆனந்த போதினி: வ. பதுமநாப பிள்ளை, டிச. 1933

தசரதனிடம் விசுவாமித்திரர் இராமனை வேண்டிப் பெற்ற நிகழ்ச்சியைத் தெளிவாக்கியுள்ளார்.

306. **தசரதன் மந்திராலோசனை** (3, 10; 3, 10; 1, 12; 1, 12)
குமரன்: மு. அருணசலம்; மே—சூன் 1941
மந்திரப் படலத்தினைச் சுவைபட வர்ணிக்கின்றார்.

307. **பிள்ளைப்பாசம்** (44—49)
கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்?: சி.என். நாச்சியப்பன்
தசரதன் பெற்ற சாப வரலாற்றையும் அவன் துயரினையும் கூறிப் பிள்ளைப்பாசம் எல்லோருக்கும் ஒன்றுதான் என்கிறார்.

308. **கம்பன் கலை. (நாடும் மன்னனும்)**
அ. ச. ஞானசம்பந்தன்
பாரிநிலையம்; மு. ப. 1961; 3+117; ரூ. 1-75

இந்நூல் திரு. சா. கணேசன் அவர்கட்குப் படையலாக அமைந்துள்ளது. ஆசிரியரின் முன்னுரையோடு கோசலம் என்னும் கனவு (1-11), கோசல மக்கள் வாழ்வுமுறை (12-23), ஆடவரும் பெண்டிரும் (24-39), கோசல அரசியல் (20-58), அயோத்தி வேந்தன் (59-66) விசுவாமித்திரன் வருகை (67-76), அரசியல் சூழ்ச்சி (77-102), கவிஞன் துயரும் மன்னன் துயரும் (103-117) என்னும் 8 கட்டுரைகளையும் பல துணைத் தலைப்புகளையும் கொண்டது.

கம்பர் கோசல நாட்டு வருணனை என்ற பெயரில் ஒரு கனவு உலகத்தையே உண்டாக்கி விடுகிறார். தன் உடம்பின் குருதி முழுவதும் தமிழ்க் குருதியாக ஓடப்பெற்ற தமிழ்க் கம்பன் அதனைப் பண்டைக் கோசலம் என்று தான் கனவு கண்ட நாட்டிற்கு ஏற்றுகிறான். மக்கள் செல்வ வளத்தோடு அமைதியாக வாழ்ந்தனர். ஆண்மக்களின் வாழ்வு செழிக்க வீட்டினுள் இருந்து உதவுபவர் பெண்டிர். பெண்கள் கல்வியும் பெற்றிருந்தனர். மன்னன் ஆட்சி சிறக்க உதவியவர்கள் அந்நாட்டு மக்களே. அன்பு நிரம்பியவர்கள் எனினும் அறத்தாறு செல்லலே அரசர்க்கு அருங்கடன் என்பதை நன்றாகப் புலப்படுத்துகின்றான் கவிஞன். (தாய் ஒக்கும் அன்பில்...) சங்ககாலம் தொட்டு 12ஆம் நூற்றாண்டு வரை பிறழாது வந்த முடியாட்சிக் கொள்கை முதன்முதலாகக் கம்பனால் உடைத்து ஒதுக்கப்படுகிறது. மன்னனை உயிர் என்றும் மக்களை உடல் என்றும் உருவகித்த முறையை மாற்றி, ஆணையிடும் உயிராக மக்களையும் ஆணையின் வண்ணம் ஒழுகும் உடம்பாக மன்னனையும் ஆக்கிய பெருமை கம்பனுக்குரியது. மக்கள் விரும்பியதாலேயே தசரதன் ஆட்சி செய்கிறான் என்றுரைக்கின்றான். மைந்தர் மாட்டுத் தசரதன் கொண்ட அன்பு பலமுறை சோதனைக்குள்ளாக்கியது— விசுவாமித்திரன், பரசுராமன். பரசுராமனிடம் பிள்ளைப்பாசம் அவனைக் கோழையாக்குகின்றது. இக்காதல் அவன் உயிரைக்

குடித்த பிறகே முடிவடைகின்றது. கைகேயிக்கு முன்னர் கொடுத்த அரசை அவள் அறியாமல் இராமனுக்குக் கொடுக்கிருன் என்பது மட்டுமன்று. இதில் அவன் உரை தவறி விட்டான். கம்பன் படைத்த தசரதன் இராமன் மாட்டு எல்லையற்ற காதல் கொண்டுள்ளான் என்பதும், அக்காதல் காரணமாக அறம் பிறழவும் துணிந்து விட்டான் என்பதும் வெளிப்படை. இராமன் மாட்டு எல்லையற்ற அன்புகொண்ட தந்தையாயினும் அவன் ஒப்புயர்வற்ற பண்பாட்டை அறியமுடியவில்லை. பொதுவாகப் புலம்பலில் கம்பனுடைய வாழ்க்கையில் வருத்தம் நிறைந்த நெஞ்சப் பிழிவையே காணுகிறேம். (அம்பிகாபதியின் பிரிவு) தசரதன் புலம்பலிலும் கவிஞனின் அவலக்குரல் கேட்கிறது. தசரதனுட் புகுந்து புலம்புகின்ற கம்பன் அன்புமிக்க விடத்துப் பிழைகாண்டல் இயலாது என்ற உலகவியல்படி அத்தசரதனுக்குப் புத்திரசோகம் உண்டாக்கிய கைகேயியை வாயாரத் திட்டுகிருன்.

முதல் நான்கும் நாடு பற்றியும் இறுதி நான்கும் மன்னன் பற்றியும் அமையினும் மன்னன் பெற்றியே பெரும்பான்மையாகப் பேசப்படுகின்றது.

**தாரை**

**309. தாரை** (482—486)

*செந்தமிழ்ச் செல்வி : தொகுதி 5; ரா. பி. சேதுப்பிள்ளை* 1927-1928; 9

தாரை கைம்மைக் கோலம் பூண்டு, சுக்கிரீவனைத் தேவையான சொல்நயம் காட்டி உய்வித்ததனைக் காட்டுகிருர்.

**310. தாரை** (89—91)

*மன்னவர் நிதியும் மங்கையர் மாண்பும் : கு. பாலசுந்தர முதலியார்;* மு. ப. 1945; இ. ப. 1947; மூ. ப. 1958; நா. ப. 1959

நல்லமைச்சரைப் போன்று, வருந்தீங்கினைத் தம் நாயகருக்கு அறிவிக்கும் ஆற்றலமையப் பெற்றிருந்த மங்கை தாரை(89). தூக்கிவினை செய்தலில் மங்கையர் மிக்க ஆற்றல் வாய்ந்தவராகையால், ஆடவர் அவர் நன்னெறி பற்றியொழுகுவராயின் உய்வரென்பது ஒருதலை.

**311. தர்மம் காத்த தாரை** (36—43)

*கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்? : சி. என். நாச்சியப்பன்*

தாரை தீர்க்கமான அறிவும், தெளிவான சிந்தையும், ஊக்கமுள்ள மனமும், உண்மையான அன்பும், படைத்தவள். ஆகவே அனுமனும் அங்கதனும் அவளிடம் ஆலோசனை பெற வருகின்றனர். அவளுக்குச் சுக்கிரீவனைக் காட்டிக் கொடுக்கும் தாழ்ந்த

குணமில்லை. அதனால்தான் இலக்குவனின் கோபத்தைத் தணிக்கும் பெரும் பொறுப்பை ஏற்று வெற்றியுடன் முடித்தாள். சூர்ப்பணகைக்குக் கிடைத்த சந்தர்ப்பம் தாரைக்கும் கிடைக்கத் தாரை தர்மத்தைக் காத்து வானரகுலம் வாழவழி வகுத்தாள்.

**312. கம்பவானில் ஒரு தாரகை** (187—192)

ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, மு. சி. கேசவன்; பாண்டிச்சேரி தாகூர் அரசினர் கலைக் கல்லூரித் தமிழ்த் துறைச் சார்பு வெளியீடு; 1974

விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளும், கலைப்படைப்புகளும் காணும் உண்மைகள் தம்முள் முரண்பட்டவையா? என்னும் வினா எழுப்பி இங்கு விடை காண்கின்றார். மனிதனைவிட விலங்குகளும் பறவைகளுமே ஒருவன் ஒருத்தி உறவை உறுதியாகக் கடைபிடிப்பதாக பெர்ட்ராண்ட் ரஸ்ஸல் தரும் கருத்தினை எடுத்துக் காட்டிக் கம்பனில் தாரை என்னும் பாத்திரத்தை அதனோடு பொருத்திக் காட்டுகின்றார்.

**313. கம்பன் பெற்ற தாரை** (84—88)

நீங்களும் சுவையுங்கள்: தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்; தெ. பொ. மீ. வெள்ளிவிழா வெளியீடு; வசந்தம் பதிப்பகம்; திருவல்லிக்கேணி; சென்னை-5; ரூ. 3-50

தாரை என்பது, இந்திய மக்கள் கற்புடையவர் என்று போற்றும் ஏழு தாயரில் ஒருத்தியின் பெயர். சுக்கிரீவனும் வாலியின் மனைவியைக் காமக்கிழத்தியாகக் கொண்டால், இராமன் கொள்கை நிலைபெறாது என்பதற்காகப் பெண்ணின் பெருமையைப் பாடவல்ல கம்பன், தாரை கற்புடைமாதின் பெயர் என்ற மரபினையும் நிலைநாட்டுகின்றான். தன் கதைப் போக்கினையும் காக்கின்றான்.

**திரிசடை**

**314. திரிசடை அரக்கர் குல மங்கையா?** (92—140)

மங்கையரின் மாண்பு (இலக்கிய ஆராய்ச்சி); எஸ். கிருஷ்ண வேணி அம்மாள்; ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்; 53-56, பவழக்காரத் தெரு; சென்னை-1; இ. ப. ஏப். 1959. ரூ. 2

அரக்கர் குலத்தில் பிறந்தும் இரக்கத்துடன் இருந்தது, சீதை சாகாமல் இருக்கத் துணை நின்றது; இதனால் பலர் இறப்பு தவிர்க்கப்பட்டது. குற்றம் புரியும் பிறரைத் திருத்தும் ஆண்மை கொண்டவள். சீதையைத் தேற்றிய விடங்களிலெல்லாம் அவளது அறிவு நுட்பம் வெளிப்படுகிறது. தீயவர் பால் இரக்கம் கொள்ளவில்லை, ஆகையால் நடுநிலைமையோடு கூடிய தெய்வத் தன்மையுடையவள். சீதை திரிசடையை அன்னை என்றது அன்பைத் தனித்துப் பிரிக்க முடியாததாலும், தெய்வம் என்றது

செப்பிய யாவும் நிலைபெற்ற நலங்களைத் தந்ததாலும் ஆகும். பிறரும் வழிபட வேண்டும் என்று அணங்காக்கினுள். இவற்ருல் திரிசடை தெய்வத்திற்கும் மேலானவள்.

315. **தாயினுமினியள்** (153—162)
தமிழ்ப் பொழில்: லி. ருத்ஜாய். ஆக. செப். 1971;

சிறையிருந்த செல்விக்குத் தன் உயிரைக் காத்துக் கொள்வதற்கு ஆறுதலாக ஒரு அன்பு வடிவத்தைப் (திரிசடை) படைக்கின்றுர். சீதையைத் திரிசடை தேற்றும் இடங்களைச் சுட்டி, அவள் உயிரைக் காக்கும் இன்றியமையாமை நோக்கி அவள் இராமாயணத்தின் உயிர் என்ருலும் மிகையாகாது. அன்பு, கருணை, அறம் என்னும் முப்பண்புகளின் வடிவமே திரிசடை.

316. **ஒரு சடையும் திரிசடையும்** (7—18)
பன்னிருகட்டுரைகள் :

திரிசடை அசோகவனத்தில் சிறையிருந்த செல்விக்கு உற்ற துணையாயிருந்து மேன்மை பெற்றதைக் காட்டியுள்ளார்.

**நீலமாலை**

317. **நீலமாலை** (22—28)
தமிழ்க்கவி இன்பம்: வித்துவான். ல. சண்முகசுந்தரம், ஸ்டார் பிரசுரம்; மு. ப. அக். 1959; ரூ. 2

பாத்திரங்களுக்குச் சிரஞ்சீவித்துவம் கொடுப்பதுதான் நாடகப் பண்பு என்னும் இவர் நீலமாலை, சீதையிடம் வில்லொடித்த நிகழ்ச்சியைக் கூறுவதை விவரித்து, 'நீலமாலை தன்னையறியாமலேயே செய்தியைப் பெருக்கி அவளே அதைத் துரிதப்படுத்துவதில் ஒரு மயக்கம் ஏற்படுகிறது' என்று கூறி அவளின் இத் தன்மையினுல் மறக்க முடியாத பாத்திரமாகி விடுகிருள் என்கிருர். நீலமாலையின் ஒவ்வொரு எடுப்பிலும் துரிதமும் அவசரமும் போட்டி போடுகின்றன.

**பரதன்**

318. **உண்மையிற் பரதனே உத்தம சகோதரன்** (347—353)
ஆனந்த போதினி: கே. முனிசாமி; நவ. 1935

இராமன் காடு சென்றது முதல் பரதன் வருந்தியது, பரதனைக் குகன் பாராட்டியது, வாலி பாராட்டியது, இராமனைக் கண்டு திரும்பியது வரைச் சுருக்கமாகக் கதையைக் கூறி, வரதுங்கனின் மனைவி எழுதிய பாடலைச் சான்ருகக் கொண்டு பரதனை உத்தமச் சகோதரனுக நிர்ணயிக்கிருர்.

319. **பரதன்** (38—41)
முன்னவர் நிதியும் மங்யைர் மாண்பும்: கு. பாலசுந்தர முதலியார்

அரச செல்வத்தை ஒதுக்கிய சீரிய ஒழுக்கம், இராமன் பால் செலுத்திய பேரன்பு இவற்றைச் சுட்டுகிறார்.

320. **கம்பர் காவியத்தில் ஓர் ஓவியம்** (85—92)

கல்விக் கழகக் கட்டுரை : (புதுவைக் கல்விக் கழகத்தின் வெள்ளி விழா மலர்), ஆலால சுந்தரஞ் செட்டியார்; 1951

பரதன் இராமனிடம் கொண்ட சகோதர பாசத்தினையும், இராமன் பரதனிடம் கொண்ட அன்பின் நிலையையும், விசுவாமித்திரர், இராமன், வாலி, அயோத்தி அமைச்சர், குகன், கோசலை, அநுமன் முதலிய பலரும் பரதனது பண்பினைப் பாராட்டியுள்ளதைச் சுட்டிக் கம்பன் காவியத்தில் பரதனே ஒப்பற்ற ஓவியம் என்கிறார்.

320. **பரதன்** (நாடகம்)

தி. மாணிக்கவாசகம்

விசாலாட்சிப் பதிப்பகம், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை-3; மு. ப. 1960; 4+66 ரூ. 1.

24 காட்சிகள் கொண்டது. தசரதன் கன்யா சுல்கமாகக் கோசல நாட்டைக் கைகேயிக்குக் கொடுத்தான். பரதன் கேகய நாடு செல்வது, இராமனை அமைச்சருடனும், நாட்டு மக்களுடனும், அதிகமாகப் பழகச்செய்து அவர்களின் அன்பை அதிகமாகப் பெறவைத்தது ஆகியவற்றைத் தசரதனின் சூழ்ச்சியாகக் கூறுகிறார். உருவு கண்டு எள்ளாமை வேண்டும் என்னும் குறளுக்குக் கூனியைச் சான்றாக்குகிறார். பரதன் கேகய நாட்டிலிருந்து திரும்பும் வழியில் பதுமை மண்டபத்தில் தங்குவதாகவும், அங்கு இறந்தோர் சிலையே இருக்குமிடத்தில் தசரதன் சிலையும் இருக்கக் கண்டு உண்மையறிய அயோத்தி சென்று நிகழ்ந்ததை அறிகிறான். முதன் முதலில் பரதன் திருமணம் முடிந்தவனாக அரசவையில் அறிமுகப் படுத்தப் படுகிறான். தசரதன் இராமனுக்கு முடிசூட நினைக்கு முன்பே கூனி கைகேயியின் வரம், கன்யா சுல்கம் இவற்றைக் கொண்டு இராமனைப் பழி வாங்கத் துடிப்பதாகக் காட்டுகிறார். கம்பர் சொற்றொடர்களை அவ்வாறே பல இடங்களில் பயன்படுத்தியுள்ளார். எளிய நடையிலமைந்துள்ள இந்நாடகத்தில் இடையிடையே குறள் கருத்துகளையும் கூறுகிறார்.

321. **Bharathan in Kambaramayanam**

R. Kumaravelu

Madras University, M. Litt. Thesis Janu. 1963; 4+190

Preface I—IV, Part I.1. The development of Epic in Tamil literature 1—9, The Kambaramayanam and its place in Tamil

literature 10—19, Kamban's genius in characterisation 20—44, Bharathan as depicted by Valmiki 45—63, Kamban's indebtedness to Valmiki and the Vaishnavite saints (Alvars) in the characterisation of Bharathan 64—88, Part II, The importance of Bharathan in Kambaramayanam 89—100, Bharathan as a dutiful son and a affectionate Brother 101—117, Bharathan as Estimated by the other characters of the Epic especially by Lakshmana and Guga 133—157, Bharathan as compared with his own brothers and the brothers of other families depicted in the epic 158—173, Kamban's Unique treatment of Bharathan 174—190, Appendics, Bibliography (191—237.)

Kamban's Ramayana, is studied with high regard by all scholars in Tamil whether they are Jains, Saivites, Christians or Muslims. He gives a short characterisation of important characters in Kambaramayanam. Not a single character talks too much or uses unnecessary words. They help to develop the epic in its onward march(41). Bharatha is the best examples for 'Seshadve Bharatantriam' 'I' and 'myself' are the two enemies which must be avoided by all and everything should be devoted to Eswara. This we see in the character of Bharata. The narrative in the Ayodhya Kanda, in which Bharata had a dominant role to play has been neatly and economically done by Kamban(94). Bharata helps Kamban in picturising the scene with natural dramatic dialogues. The dialogues which we see through Bharata are vivid, fresh and interesting. Bharata is in many ways a parallel character to that of Rama(95).

He would pay special attention to the words of Rama and Whenever possible he would obey his brother and try always to act as Rama wished or would wish(97). But Lakshmana's only aim was to serve Rama and he would do that even if it displeases Rama. Kamban has skilfully made use of these differing qualities of the two brothers in the epic writting. Bharathan's importances in the epic lies also in the noble qualities of his character. Wherever Bharata appears in the epic, we have dramatic touches and human sentiments which captivate the reader and that he has changed the course of the story to the best advantage of Rama in taking care of the kingdom during his absense(100). As a son he was respectful and dutiful and as a brother he was loving and loyal(101).

Bharata had always two fold duties in his mind, one a duty to the father the king and the other a duty to his elder brother(106). He loved his mother as a dutiful son and lamented over her foolishness which brought misery and shame to the world(112). His affection towards his brothers was unique and stood as an everlasting example for ideal brotherliness in the great epic(117). Rama request his father to cancel the curses on Bharta and his mother and Rama could not pay a better compliment to Bharata than this(129). He gives the collection of the words about Bharatha by the vaishnavite saintsin the appendices

**322. கம்பன் படைத்த பரதன்**

*பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், ஏப். 1970; பக். 91*

*புகழொடு தோன்றியவன் - தாயும் சேயும் - தந்தையும் மைந்தனும் - தாய் போற்றிய சேய் - அண்ணனும் தம்பியும் - தம்பியர் இருவர் - அன்பர் இருவர்.*

*பரதன் என்ற சொல்லிற்குப் பரிப்பவன் அல்லது ஆள்பவன் என்பது பொருள். கைகேயி தான் பெற்ற புதல்வன் பரதனை நன்கு புரிந்து கொள்ளவில்லை. அவள் மனந்திரிந்தமையே அதற்குக் காரணமாகும். பரதன் இராமனைக் கடவுளாகவும் கருதினன். சான்றோர் பழிக்கும் வினையைப் பரதன் செய்யத் துணிந்திலன். கைகேயியுடன் தொடர்பு படுத்திக் காணும்பொழுது அவன் பண்பும், அடக்கமும், சான்றாண்மையும் நன்கு விளங்குகின்றது. தசரதன் பரதனிடத்துத் தந்தையென்ற முறையில் காட்டவேண்டிய அன்பைக் காட்டவில்லை. கைகேயியின் கொடுஞ்செயலும் துணைநின்று தசரதன் உள்ளத்தில் அன்பிற்குப்பதிலாக வெறுப்புணர்ச்சியை வளர்த்தது. பரதன் தன் நிலையைப் பற்றிச் சிறிதும் சிந்தியாது, அறத்தைக் காப்பவரில்லையே, மக்கள் வாழ்விழந்தனரே என்றெல்லாம் கூறுவதை நோக்கும்போது, தந்தை அறங்காவலராக, மக்களுக்காகவே வாழ்ந்திருந்ததை நினைத்து எத்துணைப் பெருமையும், மதிப்பும் அவரிடத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.*

*பரதனின் பண்பைச் சற்று அதிகமாகத் தெரிந்து கொள்ளக் கோசலையின் ஐயப்பாடு உதவியது என்று கூறலாம். பரதனின் சூளுரைகளைக் காணும் பொழுது பரதனை நிமித்தமாக வைத்துக் கொண்டு, உலகத்தோர்க்குப் பல சிறந்த அறங்களைப் புகட்டவும் கம்பர் இவ்வரிய சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் எனலாம். கோசலை பலவாறு கூறிப் பரதனைத் தீயில் பாய்தலினின்றும் காப்பாற்றினாள். பரதனையும் அவன் தாயையும்*

இராமன் புரிந்து கொண்டிருக்கவில்லை எனலாம். பரதனையும் குகனையும் இருவேறு துருவங்களில் நிறுத்திப் பின்னர் இணைத்துக் காட்டும் அழகிய நிகழ்ச்சியமைப்பு கம்பரின் கலைத் திறனுக்கோர் எடுத்துக்காட்டு. குகனுடன் பரதனை இணைத்து வைத்துப் பார்க்கும் பொழுது உண்மையன்பாலாகாத தொன்றில்லை; அன்புதான் பண்பை வளர்க்கும்; எவரையும் தமராக்கிக் கொள்ளும் ஆற்றல் அன்பிற்குத்தான் உண்டு என்பன போன்ற பல அரிய உண்மைகள் புலப்படுகின்றன.

**323. கம்பராமாயணத்தில் பரதன்***

*நாகராஜன்*

*முதுகலைப் பொருட்கட்டுரை, 1973; காலிகட் பல்கலைக் கழகம்*

**மண்டோதரி**

**324. மண்டோதரி** (540—545)

ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை; லி. ரூத்ஜாய்; பாண்டிச்சேரி தாகூர் அரசினர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1974

மண்டோதரி மனைவி, தாய் என்னும் இருநிலைகளில் வெற்றி பெற்றமை ஈண்டு எடுத்துக்காட்டப்படுகின்றது. கம்பராமாயணம் வீரகாப்பியமாகவும் கற்புக்காப்பியமாகவும் மிளிர்வதற்கு இப் பாத்திரம் எத்துணை இன்றியமையாதது என்பதும் நிலைநாட்டப் படுகிறது. இதற்கு அவளது அடக்கம் என்னும் பண்பே அடிப் படைக் காரணம்.

**மந்தரை**

**325. கம்பர் காவியத்தில் மந்தரை**

*வி. மஞ்சநாதன் போத்தி*

*பொருட் கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், ஏப். 1971; 54*

தோற்றுவாய் - கூனி தோன்றினாள் - திருப்பு மையம் - கூனும் சிறிய கோத்தாயும் - கூனியின் பண்பு நலன் - விதியின் ஆற்றல் - முடிவுரை.

கம்பன் சமயப்பொறை நிலவச் செய்ய இராமாயணத்தை இயற்றினான் எனலாம். உலக இலக்கியங்களில் காணப்படும் அவலச்சுவைக் கூறுகள் பெரும்பாலும் அயோத்தியா காண்டத்தில் அமைந்துள்ளது. அரிச்சந்திர புராணத்தை விட அவலச் சுவை இக்காண்டத்தில் மிகுந்துள்ளது. மந்தரை கோசல நாட்டில் பிறந்து வளர்ந்த குடிமகளல்லள். ஆகவே அந்நாட்டுப் பண்பாடு அவள் குருதியிலூற வழியில்லை. கூனி அரங்கில் தோன்றுகிறாள். திருப்புமையம் அமைகின்றது. எது அறம் எது மறம் என்பதை உலகோர் அறிய உதவுகின்றாள் கூனி. கூனி தோன்றியதாலேயே சீதை, பரதன் மற்றும் பிற பாத்திரங்களின்

தன்மையை உணரமுடிகிறது. அறிவின் ஆற்றல் பெறாத நிலையில், சிற்றினச் சேர்க்கையும் அமைந்துவிட்டதால் கைகேயி எளிதில் கூனி விரித்த வலையில் விழுந்தாள். கூனி கேகய நாட்டிலிருந்து வந்தவள். ஆகவே அவளுக்குக் கன்யாசுல்கச் செய்தி தெரிந்தே யிருக்கும். ஆனால் அவள் ஓரிடத்தும் தன் வாதத்தின்போது குறிப்பிடவில்லை.

கம்பன் வான்மீகி கூறும் கன்யா சுல்கத்தை ஏற்றுக்கொள்ள வில்லை. நாடு தசரதனுடையதென்ற அடிப்படையிலேயே காவியம் அமைத்துள்ளார். பெண்களிடம் இயல்பாகக் காணப்படும் குணத்தின் அடிப்படையில் பேசுகின்றாள் கூனி. கேடாகிய வித்திற்குக் கூனி மாரிக் காலமாகவும்; கைகேயியின் தீய அறிவு தரையாகவும் அமைந்துள்ளன. சூதாகிய நீர் பெற்று அவ்வித்து முளைவிட்டது. இரு வரங்களும் அவ்வித்தின் எழுந்த மரத்தின் இலைகளாகவும் அதன் பழம் துன்பமாகவும் அமைந்தன. காலமறிந்து வினை யாற்றிப் பழி தீர்த்துக் கொண்டாள். இராமன் கூனியை மன வருத்தமடையச் செய்வதற்கு முன் அவளை யாரும் குறை கூறிய தாக அகச் சான்றேதுமில்லை. ஆகவே கொடுமனக் கூனியாதலின் முழு பொறுப்பும் இராமனையே சாரும்.

கூனி கைகேயியிடமும் பரதனிடமும் கொண்ட அன்பு, அவளை மற வழிகளில் சிந்திக்கவும் செயல் புரியவும் தூண்டிற்று. சூர்ப்பணகை, தாரை, மண்டோதரி, கூனி ஆகியோரில் கூனியே செயலாற்றுந் திறன் மிக்குடையவள். இறுதியில் மனமாறினாள் கூனி. கூனி தொடர்பான நிகழ்ச்சிகளில், கம்பர் தரும் பாத்திரங் களின் வாழ்வு தாழ்வுகளுக்கு, வெற்றி தோல்விகளுக்கு அவரவர் பண்பு நலனும் சூழ்நிலையுமே காரணமாம். கூனியை உலகோர் பழி தூற்றாமலிருப்பதற்கே விதியைக் கம்பர் கைகேயியின் மன மாற்றத்திற்கும் பிற நிகழ்ச்சிகளுக்கும் காரணமாக்குகிறார்.

326. **உள்ளமும் கோடிய கொடியள்** (56—62)

இளவேனில்: வி. ரூத்ஜாய்; (சிறப்பாசிரியர்) டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்; (பதிப்பாசிரியர்) க. ப. அறவாணன்; அ. இராசேந்திரன்; இளங்கோ மன்ற வெளியீடு; 1972

தான் செய்யும் கொடுமையை நினைத்துப் பார்த்து அதனால் விளையும் தீமையையும் ஆராய்ந்து வேண்டுமென்றே செய்கிறாள். இராமன் முடி சூடினால் கோசலையின் தாதியருக்கு அடிமை செய்ய வேண்டும் என்ற கூனியின் எண்ணம் அவளை வைத்தே தோன்றியிருத்தல் வேண்டும். ஒன்றில் தசரதனின் அன்பிற்குரிய கைகேயியின் தாதி என்னும் இறுமாப்பில் ஏனைய தாதியரை அடிமைப்படுத்தியிருத்தல் வேண்டும். இன்றேல் பொறாமை எண்ணங்கொண்ட கூனி, கைகேயியின் மகன் பரதன் ஆட்சி

செய்யின் அப்பலத்தில் மாற்றார் தாதியரை அடிமைப்படுத்தலாம் என்னும் கெட்ட ஆசையுடையவளாய் இருந்திருக்கலாம்(60). கூனிக்குச் சீதை, இராமன், கோசலை ஆகியோர் பெயரில் எவ் வகையிலேனும் பொறாமை இருந்துகொண்டே வந்திருக்கிறது என்பது மூற்றிலும் உண்மை. அந்தப் பொறாமையைத் தீர்த்துக் கொள்ளும் கருவியாகவே கைகேயியைப் பயன்படுத்திக் கொண்டாள் என்பதும் தெளிவு(62) என்று கூறிக் கூனியை, சுவர்க்க நீக்கத்தின் சாத்தானுடன் ஒப்புமைப் படுத்துகிறார்.

**327. கூனியின் பாத்திரப் படைப்பு** (283—287)

ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை; (தொகுதி—1) அ. பாண்டுரங்கன்: நாகர்கோவில்; தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1975; ரூ. 18

இராவணன் அழிவிற்கும் கூனியின் கொடுமைக்கும் ஒரு தொடர்பை இணைத்துக் காப்பியக் கட்டுக்கோப்பைக் கம்பன் வலி யுறுத்துகிறான் (இராவணன் இழைத்த தீமைபோல்...): மிகச் சிறியதொரு செயலைக்கூட கொடியவர்கள் தம் நெஞ்சில் மறைத்து வைத்துக் காலம் வரும்பொழுது பழி தீர்த்துக் கொள்வார்கள் என்னும் உள்ள இயல்பைத் தெளிவாகப் புலப்படுத்துகிறான் கம்பன். கயவர்கள்கூடத் தீங்கிழைக்கும்போது அதற்கும் ஒரு காரணத்தைத் தேடி அலைவார்கள் என்னும் மனவியல்பையும் இது புலப்படுத்துகிறது. கூனி இல்லாவிட்டால் கைகேயியின் உள்ளத்துக் குறையை (பிறந்த இடத்துப் பெருமை, புகழி லுள்ள ஈடுபாடு) நாம் அறியவே வாய்ப்பில்லை என்னும ஆசிரியர் விரிவாக வான்மீகியின் கூனி வேறுபட்டு நிற்பதையும் காட்டுகிறார்.

**328. மந்தரை சூழ்ச்சி** (நூல்)

இக்காலத்து நாடக ஆசிரியர்கள், இப்ஸன், ஷா போன்றோ ரின் நாடகப் பாத்திரங்களின் ஆடை அணிகலன்களை அணிவிப்ப தோடு அவர்களின் குணநலன்களையும் ஒருசிறிது ஒப்பிடவே செய்வர். நமது நாடகாசிரியராகிய கம்பர் தற்கால ஆரிய வழக்கத் தையே அனுஷ்டிப்பதைக் காணலாம். (கொடுமனக் கூனி தோன் றினள்) கைகேயியின் மனநிலையைக் கூனி மாற்றி அமைத்த திறனைக் கூறுகிறார்.

**மாரீசன்**

**329. அடிமனம்** (127—132)

புதுமெருகு: அ. சீநிவாசராகவன்; மெர்க்குரிப் புத்தகக் கம்பெனி; மு. ப. 1961; ரூ. 3

தவவேடத்துடன் இருக்கும் மாரீசனின் அடிமனத்தில் சித்தா சிரமப்போரால் இராமன் மீது எழுந்த பயம், இராவணன் அவனிடம் வரும்பொழுது 'இந்திரனும் யமனும் அஞ்ச வாழ்கிறாய்.

இங்கே இந்த இன்னல் இருக்கைக்கு வந்த காரணம் என்ன', என்று கேட்கும் பொழுது வெளிப்படுகிறது.

**330. கம்பர் படைப்பில் மாரீசன்** (214—218)

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஒன்பதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை; தொகுதி—1; ந. சாந்தா ஆப்தே; மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு 1977.

பிறப்பில் உயர் குலத்தவனுன மாரீசன் வளர்ப்பின் குறைபாட்டால் குன்றிய குணத்தினனாய், வஞ்சனை நிரம்பியவனாய் வனத்து முனிவர்களை வதைக்க முற்பட்டான்(216). இராமனால் இருமுறை கொல்லப்படவிருந்தும் உயிர் பிழைத்த அவன் அதன் பின் பொறிகளை அடக்கித் தவநிலையில் நின்றான் என்பது இந்திரியம் அடக்கி நின்ற மாரீசன் இருக்கை என்ற கம்பர் வாக்கால் தெளிவாகும்(216). ராமன் கையால் நான் மரணமடைந்தால் எனக்கு எல்லா சேமமும் உண்டாகும்' என்று வான்மீகியின் மாரீசன் கூற்றைக் கம்பர் மனதில் உட்கொண்டார் என எண்ண வாய்ப்புண்டு. மாயமானாகி இராமனது அம்பால் பட்டுப் பிறவிக் கடலைக் கடக்க மாரீசன் முற்பட்டான் எனலாம்(217). இறுதியில் சான்றோனாக மாரீசன் மாறியதாகக் கூறும் ஆசிரியர் இராமனின் அம்பு பட்டவுடன் ஏன் இராமன் குரலில் சீதை, இலக்குவரை அழைத்தான் என்பதனைக் கூறவில்லை.

### வாலி

**331. கேள்விச் செல்வன்** (3,.3—10)

குமரன்: ஜி. சுப்பிரமணியம்; மே. 1941;

வாலி தேவாரங்களில் புகழப்பட்டுள்ளமை சுட்டி அவன் வதம் நிகழ்ந்ததனைக் கூறிச் செல்கிறார்.

**332. சிறியன சிந்தியாதான்**

எஸ். இராமகிருஷ்ணன்

மீனாட்சி புத்தக நிலையம்; 60, மேலக் கோபுரத் தெரு; மதுரை - 1; மு. ப. 1957; ஐ. ப. 1968; 4+148; ரூ. 2-50

இந்நூல் முன்னுரை முடிவுரையோடு, தூயோரின் துணை வலி தேடு (5—8), உணர்ச்சி வேகமும் ஒருதலைத் தீர்ப்பும் (9—27), தூய நட்பும் துணிந்த செயலும் (28—34), அஞ்சி நின்ற தாரை, அஞ்சாது சென்ற வாலி (35—48), மற்போரும் மனப் போரும் (49—62), அடுசரம் தொடுத்தவனைச் சாடும் சுடுமொழி (63—88), சாமான்யனும் சான்றோனும் (89—96), வாய் இழந்த இராமன்; நவை உணர்ந்த வாலி (97—119), சான்றாண்மையைப் புதுக்கிய செம்மல் (120—144) என்னும் 9 தலைப்புகளின்கீழ் அமைகின்றது.

கவந்தன், சவரியின் அறிவுரைப்படியே படைவலி கொண்ட வாலியை நாடாமல் இராமன், சுக்கிரீவனிடம் வருகின்றான். தன் குலப்பகைவன் இராவணனுக்குக் கூடச் சில சலுகைகள் அளித்த இராமன் வாலியின் நிலையில் தன்னை மறந்து உணர்ச்சி வேகத்தில் ஒருதலைத் தீர்ப்பு வழங்குகிறான். வான்மீகியின் வாலி சுக்கிரீவனைக் கொல்லாமல் அவனை ஓடவைத்து விட்டு வருவதாகக் கூற, கம்பரின் வாலி கொன்றுவிட்டு வருவதாகக் கூறுவதில் உள்ள வேறுபாட்டைக் காட்டி கம்பரின் கவிப் புலமையை விளக்குகின்றார். வாலி, இராமன் நாணும்படி தன்நிலை எண்ணி இரங்கும் சாமான்யனாக இல்லாமல் தன்னைக் கொல்வதற்காகப் பழி சூடிய இராமனையும் அவனது குலத்தையும் எண்ணியே இரங்கும் சான்றோனாகக் காட்சி தருகின்றான். நாம் அனைவரும் முன் மாதிரியாகக் கொண்டு போற்றத்தக்க சான்றோனாக உருப்பெற்று விடுகிறான் என்பதே ஆசிரியர் கூற்று. வான்மீகியின் இராமன் அரசியல் அதிகாரத்தைக் காட்டி அமைதி கூறுகிறான். சூரிய குமாரனை அயிர்த்துச் சினம்கொண்டு சீறியதற்கும், தோழமை வேண்டித் தொழுத இராவணனை நண்பனாகக் கொண்டதற்கும் அனுபவமின்மையே காரணம். சிற்றின சகவாசம் அவனது கொலைக்குக் காரணமாகவும், தம்பியை வெகுண்டு கொல்லக் கருதியது அந்த இறப்புக்கு வாய்ப்பாகவும் அமைந்தன. வாலியின் மனம் தூயது. ஆனால் அவனது குறை திருத்தத்துக்கு உரியது அல்ல.

சமுதாயத்துக்குச் சாத்தானாக வாய்த்திருக்கும் இராவண ஆட்சியை அழிக்க வாழ்வின் பிரவாகம் திரண்டு செல்லுங்கால், இராவண சகவாசம் என்ற குற்றம் புரிந்து, தடைமதிலென இடை வந்து நிற்கிறான். தடை மதிலைத் தயவு தாட்சணியமன்றி தகர்த்தெறிவதைத் தவிர அறத்துக்கு வேறு வழியில்லை. கொல்லம்பு மருமத்தில் பாய்ந்த பின்பும் இராமன் பழி சூடியதை எண்ணி நாணல், குற்றத்தை உணர்ந்த பின்பு மன்னிப்பு கோரல், தம்பிக்காக வரம் வேண்டல், இராவணனை அழிக்க முடியாமைக்கு வருந்தல் முதலியன மனத்தூய்மையின் மேன்மைக்கு முன் மாதிரியாகத் திகழும் இத்தகைய வாலி சிறியன சிந்தியாதான் ஆவான் என்று முடிவுரையில் முடிக்கின்றார்.

வாலிவதை தவறு என்று வாதிடுவோர்க்கு வாலிவதையின் அவசியத்தை எடுத்துரைக்கும் நூலாக இது அமைந்துள்ளது.

**333. கம்பர் கண்ட வாலி**

இருமுனை: செ. பொன்னுசாமி;

இ. சு. இளங்கோவன்; இடங்கிமங்கலம் (அஞ்சல்); திருச்சி மாவட்டம்; மு. ப. 1958; இ. ப. 1959; ரூ. 1-75

போர் முழக்கம், தாரை தடுத்தல், இராமனின் பெருமை, வாலியின் வலிமை, சாபம் பெற்றது, வாலி-சுக்கிரீவர் தகராறு, வாலி வலியிழத்தல், வாய்மை பேசல் என உள் தலைப்புகள் இட்டுத் தன் கட்டுரையை அமைக்கிறார். வாலியின் கூற்றில் வியப்பும் திகைப்பும், வெகுளியும் வீரமும், இன்னலும் இழிவும், நீதியம் நேர்மையும் எதிரொலித்தன. உயர் பிறப்பாயின் மறைந்திருந்து ஏன் அம்பெய்ய வேண்டும் என்ற வாலியின் கேள்விக்கு இராமன் தன் செயல் எண்ணி விடை கூறுதிருக்கக் கம்பன் இலக்குவனைக் கொண்டு பதிலுரைக்க வைத்திருக்கும் திறன் வியத்தற்குரியது(76). வாலியின் செயல்கள் வாலி சிறந்த அறிவுடையவன், ஒழுக்கமுடையவன், உயர் வகுப்பினன் என்பன போன்ற இயல்பினைப் புலப்படுத்துகின்றன. குடிப்பிறப்பினால் அவன் செய்த இரு குற்றங்களையும் உணர்ந்து இராமனிடம் மன்னிப்புக் கேட்கிறான். (சுக்கிரீவன் குற்றமற்றவன் என்பதை உணராதது; அவன் இல்லாளை இழிவு படுத்தியது) இது சிறந்த வீரனின் இயல்பாகும்.

**334. வாலிவதை (5—8)**

*தமிழ்ப் பொழில்: த. இராமநாத பிள்ளை, பி. ஏ., (லண்டன்);* ஏப்—மே 1963

இராமன் வாலியை அஞ்சி மறைந்து நின்று அம்பெய்தான் அல்லன். சுக்கிரீவனே வாலியை ஒறுத்தற்கு உரியவனாகலின், அவனை வாலியோடு பொரவிட்டுப் பார்த்து நின்றான். சுக்கிரீவனுக்கு ஆபத்து நேர்ந்த தருணத்தில் துணை புரிந்தான். தன் அம்பு இலக்குத் தவறாதெனை அறிந்த வில் வீரன் அறைகூவி அம்பெய்யின் தன் வல்லமையைப் புகழ்ந்து பேசுதலாகுமன்றோ? அதில் வீரமுமில்லை. ஆயுதமில்லாத வாலியை அறைகூவி அம்பெய்தல் வீரத்தின் பாற்படாது. இவ்வண்ணம் போர்நீதியை ஆராய்வோமானால் வில்வீரன் தன் வில்லை எறிந்து குரங்குபோலப் புடைத்துக் கடித்தல்லவோ பொருதல் வேண்டும். இத்தகைய நியாயத்தின் வழிநின்றால் குரங்கோடு மனிதன் போர் புரியாதிருத்தலே நன்னெறியாகும். அரசிளங்குமரன் வாலியோடு பொருது தன் போர் வல்லமையைக் காட்ட வந்தவன் அல்லன் என்பதும் வாலியை ஒறுத்தற்கே அம்பெய்தான் என்பதும் தெளிவாகும்(7). வலிமையுடையவனுக்கே எது சரி, எது பிழை என்பதைத் தீர்க்கும் உரிமை உண்டென்னும் கொள்கை பொருந்தாதென்பது வாலியின் வதையில் இனிது நாட்டப்படுகிறது(8).

**335. வாலி ஒறுக்கப்பட்ட முறை சரியா? (103—107)**

*தமிழ்ப் பொழில் :* வித்துவான் கா. இராமசாமி: ஜூன்—ஜூலை 1963

த. இராமநாத பிள்ளையின் 'வாலிவதை' பற்றி ஆய்வு செய்தற் பொருட்டு இக்கட்டுரை எழுந்துள்ளது.

இராமனும் சீதையும் உறங்குகையில் 'வில்லையூன்றிய கை யோடும் வெய்துயிர்ப் போடும்' நின்ற இலக்குவன் 'தம்பியரின்றி மாண்டு கிடப்பனே தமையன் மண்மேல்' என்ற கும்பகர்ணன் ஆகியோரது சகோதர அன்புடன் ஒப்பிட்டு நோக்குழி, சுக்கிரீவன் அண்ணன் மீது பற்றுக்கொண்டிலன் என்பது புலனாகும். தீப்புக முனைந்து நாடேற்க மறுக்கும் பரதன், சத்ருக்கனனுடன் ஒப்பிடும்பொழுது, நாடு அரசின்மையால் அல்லலுறும் என்று அமைச்சர்கள் வற்புறுத்தியதாலேயே தான் ஆட்சியை ஏற்றதாகக் கூறும் சுக்கிரீவன் கூற்றுகள் ஒவ்வாது(104). சுக்கிரீவன் அரசபோகத்தையும், இன்ப நுகர்ச்சியையும் விரும்புபவன் செல்வத்தால் செருக்கடைபவன், செய்ந்நன்றி கொல்பவன், உண்மையில்லாதவன் எனச் சான்றுகளுடன் கூறுகிறார். சுக்கிரீவன் தன் அண்ணன்மாட்டுப் பற்றிலனென்றும், அவனது வலிமைக்கஞ்சியே அடங்கியிருந்து பின் சமயம் கிடைத்ததும் மன்னனானான் என்றும் அறிகின்றோமாதலின் அத்தகைய தம்பியை அடித்து துரத்தியதற்காக வாலியைக் குற்றவாளியாக்கல் தகவுடைத்தன்று(105).

இராமன் வாலியின் தன்மையைத் தூது வாயிலாகவோ அன்றி நேரிலோ அறிந்து அவன் இணங்காவிடில் தண்டித் திருத்தல் வேண்டும். இராமனோ அப்படிச் செய்தானல்லன். வாலியைக் கொன்றமைக்கு இராமன் கூறும் காரணங்களை நோக்கின் 'வல்லவன் வகுத்ததே வாய்க்கால் என்ற இராமனின் கோட்பாடு புலப்படும்(106). இராமன் இலக்குவனுக்கிடையே உள்ள உரையாடலைச் சுட்டி, சுக்கிரீவன் துணையால் சீதையைப் பெறுதலாகிய பயனை இராமன் கருதினானே அன்றி அறத்தினை நிலைநாட்டும் எண்ணம் அங்கிலையில் அவனுக்குத் தோன்றவில்லை(107) என்கிறார். வாலி தவறு செய்தான், அதனை உணர்ந்தான், அதற்காக வருந்தினான். ஆனால் இல்லறந் துறந்த நம்பி தான் வில்லறந் துறந்ததனை உணர்ந்ததாகத் தெரியவில்லை(107) என முடிக்கிறார்.

**336, வாலி ஒறுக்கப்பட்ட முறை சரியா? (171—172)**

*தமிழ்ப் பொழில்; த. இராமநாதப்பிள்ளை பி. ஏ.; ஆக—செப் 1963*

வித்துவான் கா. இராமசாமி அவர்களின் 'வாலி ஒறுக்கப்பட்ட முறை சரியா?' எனும் கட்டுரைக்குப் பதிலாகும் இக் கட்டுரை. வேண்டியவற்றைச் செய்யக் காலந்தாழ்த்தினனெனழிய செய்ந்நன்றி மறந்தான் அல்லன் சுக்கிரீவன். வாலி மீது அன்புடையவன். அரசபதவியைக் கவர விரும்பவில்லை

(பிலம்புக்காய் நெடுநாள் பெயராய்; வானமாளவென் தன்மூனை வைத்தான்) சரண்புகுந்தத் தம்பியைக் கொல்ல முயன்றது குற்றமே. பரதன் போல் அல்லாவிடினும் ஓரளவு தமையன் மீது அன்புடையவன். வல்லவன் வகுத்த வாய்க்காலே சரி என்னும் கொள்கையுடையவன் இராமன் என்றதனை மறுக்கிறார்.

337. **வாலி வசதம்** (115—127)

இலக்கிய நினைவுகள் : டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

வாலியைக் கொன்றது தகுதியாகுமா? அதுவும் அறத்தின் செம்மல் இவ்வாறு ஆற்றியது முறையா? இதை வாலியின் வாதம் அலசுகிறது. வாதிட்ட வாலி பணிந்துவிடுகிறான். இந்த வியத்தகு மாற்றத்தை ஆற்றியது கம்பனின் காப்பியப்பாங்கு. அதில் கவிஞன் கருத்திற் கொண்ட ஒருமைப்பாடு. கம்பநாடன் வாலியின் வாதத்தை உற்று நோக்கி, உறுதிகாண விழைந்தவரையும், அவன் உரையில் உண்மை தெளியப் புகுந்தோரையும் கைவிட்டுச் செல்கின்றான்.

338. **கம்பன் காட்டும் வாலி** (31—35)

வள்ளுவன் முதல் பாரதிதாசன் வரை : சி. தில்லைநாதன் எம். ஏ.; தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. செப். 1967; ரூ. 2-50.

நமக்குக் கம்பன் காட்டும் வாலியின் குணப்பண்பு தெளிவின்றிச் சிக்கலாகத் தோன்றுகிறது. 'பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ?' என்று இராமன் சொல்வதைப் பார்த்தால் வானரர் தலைவன் வாலி அறிவு குறைந்தவனென எண்ணிடத் தோன்றும். ஆனால் அம்பெய்த இராமன் முன் அவன் பேசுவதத் தனையும் அறிவு பொதிந்த வார்த்தைகள்(32). வான்மீகி, வாலிவதைக்குக் கூறும் சமாதானங்களைக் கூறி, பலவிடத்து வாலியைக் கம்பன் காட்டும் விதம் இராமன் கூறும் சமாதானங்களை வெறும் சாட்டுகளாகவே ஆக்கிவிடுகிறது(33) என்கிறார்.

339. **வாலிவதை** (சொர்ணம்மாள் சொற்பொழிவுகள்)

கோ. சுப்பிரமணியபிள்ளை

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்; அண்ணாமலை நகர்; 1969; 76

ஆசிரியர் தம் கருத்துகளைப் பலத்துணைத் தலைப்புகளின் கீழ் கூறிச் செல்கின்றார்.

இராமனை ஓர் அரசிளங்குமரனாகவே, மனிதனாகவே வைத்துப் பார்க்கவேண்டும்; அப்பொழுது அவன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த ஓர் உத்தமனாய், அமரனாய், வானுறையும் தெய்வமாக மதிக்கப்பட்டு விடுவான். இராமன் வாலியைக் கொன்றது சரியா, தவறா என்ற வினா வாலியைக் கொல்லு முன்னரே எழுந்து விட்டது. இலக்குவன்தான் எழுப்பினான் அவ்வினாவை. விதி, கவந்தன் வாயிலாகக் காலன் ஒருவனை வாலிக்குத் தேடித்

தந்தது. வாலி நல்லவன்தான். ஆனால் அதைப்பற்றி இராமனுக்கு அக்கறை இல்லை, வாலி சுக்கிரீவனுக்கு வேண்டாதவன். அதனால் தனக்கும் வேண்டாதவன் என்றாகிவிட்டது. சுக்கிரீவன் மனைவியைப் பற்றி, வாலி விரும்பினான் என்று யாரும் எதுவும் பேசினது கிடையாது. சுக்கிரீவன் அவளை நினைத்ததாகவோ, நினைத்துத் தேடியதாகவோ தேடி வருந்தினதாகவோ யாதொரு சான்றும் கிடையாது. ருமை தன் கணவனைத் தேடியதாகவும் யாதொரு குறிப்பும் கிடையாது. வாலி ருமையைப் பற்றியதாகவோ, அவளுக்குக் கொடுமை செய்ததாகவோ, தகாதபடி நடந்துகொண்டதாகவோ எதுவும் கூறப்படவில்லை. சுக்கிரீவன் மனைவியை மீட்க முயன்றதாகவோ எதுவும் நடந்ததாகவோ தோன்றவில்லை.

ஆயினும் அனுமன் தாரம் விரும்பினான் என்று வாலிமேற் குற்றம் சாட்டினான். இராமன் கேட்ட பிறகுதான் அனுமனுக்கே அதைச் சொல்லத் தோன்றியது. ஊரிலே விட்டு வரப்பட்டாள் என்று சொல்லாது 'அவன் விரும்பினான்' என்று சொன்னான். சுக்கிரீவன் ஓடியவுடனே அவன் மனைவியையும் வாலி அவனிடம் அனுப்பியிருக்க வேண்டும். அதைச் செய்யத் தவறியதால் அவன் விரும்பினான் என்று சொல்ல இடம் உண்டாயிற்று. இது வாலி அரச தர்மத்தில் வழுவிய தன் பயன். உண்மையிலே வாலி ஒழுக்கத்தில் தவறி நடந்திருப்பின், அதை வேறு யார் பொறுத்தாலும் அவன் மனைவி பொறுக்க மாட்டாள். வாலி ருமையோடு நாட்கள் கழித்திருப்பானாகில் தாரை துன்பமே அறியாது இருந்திருப்பாளா? 'இதுவரையில் எப்பொழுதும் என்னோடு மாறுபடாத குணத்தை யுடையவனே' என்றும் கூறுகிறாள். நான்கு வேதங்களையும் வேலியாகக் கொண்டு வாலி கிட்கிந்தை மலையில் வாழ்ந்து வந்தான். அந்தணரே வேதங்கள் கற்றற்கு உரியராகலின், கற்றோர்கள் ஓதவும்தான் செவியாற் கேட்டு உணர்ந்தவன் வாலி என்று நாம் கொள்ளலாம். வழிபடுவதற்குத்தான் அவன் ஆற்றல் பயன்பட்டது என்று அனுமன் இராமனுக்குச் சொல்கிறான்.

வாலியும் இராவணனனும் நட்புக் கொண்டபடியால் இராவணனுக்கு உதவியாக வாலி வரக்கூடும் என்று நினைக்கும் விதத்தில் பேசினான். வாலியை ஒழித்தால்தான் பூமிக்குப் பாரம் குறையும், ஆதிசேடனுக்கும் தலைச்சுமை குறையும் என்ற ஒரு குறிப்பினையும் காட்டுகிறான். தம்பிமார் என்பவர்களிடத்தில் இராமன் அன்பு செய்பவன் என்பது உண்மை. அதனால் சுக்கிரீவனுக்காக அம்பிடைத் தொடுக்க மாட்டான் என்றது தப்பு. சுக்கிரீவன் தம்பி, தம்பியைத் தாங்குவது தானே இராமன் இயல்பு. அவன் தம்பிக்குப் பரிவான், தமையனைப் பகைப்பான்.

சுக்கிரீவன் தம்பி என்பதை நினைக்க வாலி மறந்து விட்டான். கம்பர் இலக்குவனை அன்புடைத் தம்பி என்பதால் சுக்கிரீவனுடைய அன்பில்லாமையைக் குறிப்பால் புலப்படுத்துகிறார். இராமனை இலக்குவன் 'வீர' என்று அவன் செய்வது வீரச் செயலன்று என்று சுட்டிக்காட்ட விளிக்கிறான்.

வாலியைக் கொல்ல இராமனும் மறைந்து நிற்கலாமா? என்று நாம் சிந்தனையை இலக்குவனோடு சேர்ந்துக் குழப்பிக் கொண்டு, உத்தமனுக்கும் ஒரு மறு வந்துவிட்டதே என்று நினைக்கும்போது. 'ஆம் மறுவில்லாத உத்தமன் இந்த உலகத்தில் ஏது? இருக்கவே முடியாது' என்ற உண்மையை இராமன் வாயிலாகவே சொல்லும்படிச் செய்கிறார் கம்பர். சுக்கிரீவனுக்கு ஆதி முதலே இராமன் வலிமையில் ஐயப்பாடு உண்டு. அதற்காகவே மராமரம் துந்துபி போன்ற சோதனைகளை வைத்து இராமன் பலத்தை எடைபோட்டுப் பார்த்தான். அதற்காகவே அவனைச் சற்று வருந்தும்படி விட்டு வேடிக்கை பார்த்தான் இராமன் என்று இங்கே ஒரு கருத்தைப் பெரியோர்கள் கூறுவதுண்டு.

போரில் வில்லற நெறிப்படி இராமன் அம்பு தொடுக்காததால் வாலியின் மார்பிற்குள் புகுந்து துளை போட்டுக் கொண்டு நின்றுவிட்டது, கழன்று வெளிச் செல்ல வேண்டிய அம்பு. இராமனைக் கண்ட வாலி ஏசுவதாகக் கூறப்பட்ட பாடல்கள் அனைத்தும் இராமன் செய்த தவறைப் புலப்படுத்துவனவேயன்றித் தான் உயிர் துறப்பதற்கு வருந்தியதாக ஒன்றும் காணப்படவில்லை. சீதை அருகில் இருந்தாளாகில் இவ்வாறு வில்லறம் துறந்து வாலியைக் கொன்றிருக்க மாட்டான் (சான்று காகாசுரன்) கேள்விச் செல்வனை வாலியும் கோபம் ஆறி, இராமன் தவறு செய்யமாட்டான் என எண்ணினான். 'பல நன்மைகளைச் செய்துள்ள பரதனின் தமையன் ஏதோ பிழைப்பட்ட எண்ணத்தில் தடிந்ததற்காக அவனைப் பகைக்கலாமா? தன் உயிர் ஒரு சிறு பொருள். அதைப் பார்க்கக் கூடாது. அப்பெரியவனைப் பார்க்க வேண்டும் என்று கருதி வணங்கிய வாலி சிறியன சிந்தியாதான் அன்றோ? தம்பிக்காக இராமனிடம் இரங்கும் வாலியின் விரிந்த மனப்பான்மையை எண்ணுந்தொறும் மெய்ப்பொருள் நாயனாரின் வரலாறும் நம் மனக்கண் முன் நிற்கின்றது. வாலியை அறுபத்து நாலாவது நாயன்மாராகக் கொள்ளலாம்.

இராமனும் ஏதோ முன்பின் எண்ணாது சுக்கிரீவனுக்கு வாக்குக் கொடுத்ததன் விளைவாலும், சொல்லின் செல்வனின் சொல் வன்மையாலும், சூழ்ச்சியாலும், செல்வாக்காலும் வாலி மேல் அம்பைப் போட நேர்ந்ததே தவிர விரும்பவில்லை. தான் கூறியபடி கார்காலம் முழுவதும் கிட்கிந்தை மலைச் சாரலில்,

மறைந்து நின்று வாலியைக் கொன்ற பாவங்கள் தொலையும் பொருட்டு தவம் செய்தான். இந்த ஒரு குற்றம் செய்த தாலேயே இராமன் மனிதனுகி நம்மால் புரிந்து கொள்ளக்கூடிய நம்பியாகிருன். இல்லாவிட்டால் அவன் தெய்வமாகி நம்மால் தொடவும் தொடரவும் முடியாத தொலைக்குப் போயிருப்பான்.

வாலி இராமனைக் குற்றம் சாட்டுவது மட்டுமே கூறி இராம னின் பதிலுரைகளை முற்றிலுமாக விலக்கி ஆசிரியர் இந்நூலை யாத்திருப்பது அவர் கருத்தை வலியற்றதாக்கி, நூலினையும் நிறைவடையாத தாக்குகின்றது.

**340. கம்பராமாயணத்தில் வாலி***

நல்லதம்பி

முதுகலை பொருட்கட்டுரை; 1972; காலிகட் பல்கலைக் கழகம்.

**341. வாலிவதை** (20 - 25)

ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை; நா. ஆறுமுகம்; சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளி யீடு; 1973; ரூ. 22.

வாலிவதை ஏன் வாலியின் வினு, இராமனின் பதில், இராம னின் உள்ளப்போக்கு, இராம பாணம் என்னும் சிறு தலைப்பு களைக் கொண்டது இக்கட்டுரை, இராமன், சுக்கிரீவன், அனுமன், வாலி; இலக்குவன் ஆகியவரின் உரையாடல்களைக் கொடுத்து இறுதியில் 'சுக்கிரீவனுக்கு அரசாட்சி தரவே வாலி வதை நிகழ்த்தப்பட்டது அதற்கு இராமனும் இலக்குவனும் சொன்ன காரணங்களைவிடத் தலைமையோடு தாரமும் தருவேன் என்று சற்றும் ஆராயாமல் இராமன் சொன்ன சொல்லும், அதற்குத் தூபம் போட்ட அனுமன் சொல்வன்மையும் சூழ்ச்சியும் உண்மையான காரணங்கள்,' என்கிருர்,

**342. வாலி** (*திறனுய்வு*)

புலவர். கு. திருமேனி எம். ஏ., பி. ஓ. எல்.,

இலக்கிய நிலையம்: 14, வீரேச்சிரம், திருச்சிராப்பள்ளி-6; மு. ப. மார்ச் 1974; 4+136; ரூ. 4-50

இந்நூல் தி. சே. பாலசுப்பிரமணியம் அவர்களின் அணிந் துரையுடன் கூடியது. 53 துணைத் தலைப்புகளின் கீழ் தன் கருத்து களை நவில்கின்ருர்.

சபரியும் கவந்தனும், சுக்கிரீவனுக்கு வாலியினின்றும் விடுதலை கிடைப்பதுதான் இராமன் வீரம் பெற்றதன் பயனும், காட்டிற்கு வந்ததன் பயனும் ஆகுமென்று கருதுகின்றனர்(8). (வாலிவதை 111). வாலியோடு வலிதில் யாராவது சண்டைக்கு வந் தால் அவர்கள் தங்கள் பலத்தில் பாதி தரவேண்டுமேயல்லாது

இவன் அவர்களிடம் போருக்குப் புகுந்தால் கிடைக்காது(10). வாலி இராவணனைக் கொல்லாது விடுத்ததன் காரணம் மனிதர்களைத் தவிர அவனுக்கு வேறு யாராலும் இறப்பில்லை என்று வரம் உள்ளதால் ஆகும்(11). சுக்கிரீவன் மனம் தூயவன் ஆதலால் அவனிடம் ஆற்றுப் படுத்துகின்றனர்(27). 'ஈரம் நீங்கிய சிற்றவை சொற்றனள்' எனும் பாடலை எடுத்துக்காட்டி, கம்பர் வாலி வதையை அறம், மறம், நெறியுடன், காப்பியத் தலைமகன் பண்பு முரணாது அமைத்துள்ளார்(38). 'குரங்கின் எள்ளற்குறு போர்' என்று இலக்குவன் கூறுவது குரங்குத்தனமான இழிந்த போர் செய்யச் சுக்கிரீவன் துணிந்ததாகப் பொருள் கொள்ள வேண்டும்(41).

இப்பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசலாமோ? என்ற இராமன் கூற்றுக்கு 'சுக்கிரீவன் தன் அண்ணன் வாலியைக் கொல்ல ஒரு காரணம் உடையவன். நீ அவ்வாறு எத்தகைய காரணமும் இல்லாது தந்தை, தாய், உடன் பிறந்தான் அத்துணை யோரையும் அறனழி செயல் செய்ததாகக் கருதி அதற்கு எவ் வகையிலும் காரணமாகாத பரதனைக் காரணமானவன் என்று கொண்டு இழித்துப் பேசிக் கொல்ல முனைந்த பித்தாய விலங்கு ஒழுக்கமுடைய நீ, பிறர் பழிபற்றிப் பேசுகின்றாயே பேச லாமோ?(46) என்பதே பொருள். அப்பொழுதுதான் இராமன் வாலியை விலங்கன்று என்று கூறியமை பொருந்தும் என்கிறார். வாலிமீது ஆரம்பத்திலேயே இராமன் வாளி விடுக்காதது எளிய வர்க்கு உதவும் காலம் கருதிக் காலம் தாழ்தத்தானே யன்றி தடுமாறியன்று(51).

வாலி இராமன் மீது கூறிய குற்றங்களை, ஆசிரியர் வாலி மீதே திருப்புகின்றார். அஞ்சி ஓடினார் பாலும் அடைக்கலம் புகுந் தார் பாலும் இரங்கியோ அன்றி உடன்பிறந்த பாசம் கொண்டோ, பரிந்து கண்ணோடி உய்தி தருதற்கு வேறாகத் தன் வீரத்தை அலமரச் செய்துள்ளான்(37). சீதை தன் அணிகலன்களைக் கீழே இட்டும் ஆண்டு வாலி தன்வலி காட்டி அவளை மீட்க ஒருப்பட் டானல்லன். காரணம் வாலியின் சிந்தை பிறன் மனை நயத் தலால் திகைத்திருந்தது(58). இராவணன் புரிந்த அதே குற்றத்தை வாலி புரிந்ததால் இராமன் மனுநெறிப்படி கொன்றான்(66). துந்துபி, மாயாவி, சுக்கிரீவனிடம் எவ்வித இரக்கமும் காட்டவில்லை(61).

வரத்தால் பெரியவனாகிய வாலியே தன்னை எதிர்த்தவர்களைக் கொன்றும், கொல்லக் கருவு கொண்டிருப்பதும் பாவமாகும்(63). வீரம் பெற்று அதன்வழிச் செருக்குற்றதால் வாலி வழி கலி புகுந்துள்ளது(63). வரச் சூழ்ச்சியடைய வாலியை மறைந்து நின்று கோறலே ஆண்மையாகுமேயன்றி நேர் நின்று பொருதல்

ஆண்மை ஆகாது பேதமையாகும்(69). வாலி வீரன், வலியன் என்ருல் தன்ேேடு எதிர்ப்போர் வலியில் பாதி கொள்ளாப்போதே வெல்ல வேண்டும்(71). இரலை மலை புகுந்த சுக்கிரீவனிடம் தனக்குள்ள சாபம் கருதி அங்குப் புகாது புறங்கொடுத்தவன் வாலி(72). வாலியின் உயிர்க் கொலையால் எத்தனையோ உயிர்க் கொலைகள் தவிர்க்கப்பெற்றன. அறக்கொலைகள் தவிர்க்கப்பட்டன. மேலும் நெல் செய்யப் புல் தேய்ந்தது கொலை ஆகாது போல் இதுவும் ஆகாது(76). பண்பில்லாத இராவணனுடன் நட்புக் கொண்டது அவன் பண்பழிவிற்குச் சான்று(77).

இராமனுக்கு ஐயம் திரிபு எதுவுமின்றி வாலி செய்தது கொலைக் குற்றமென்று உணர்ந்த பிறகு நடுவணனாக இருந்து கோடல் எற்றிற்கு?(78). வாலி பிறருடன் பொருதபோது மற்போரும், குத்துப்போரும், கடித்தல் போருமே புரிந்துள்ளமையால் நிராயுதபாணி ஆகமாட்டான்(86). சிறியன சிந்தியாதான் என்பதற்கு வாலி தான் இதுகாறும் செய்த சிறியனவற்றைச் சிந்தியாதிருந்துப்பின் தெளிந்த அறிவில் அவற்றைச் சிந்தித்துத் தான் செய்த கொடுமைகளைப் பொறுக்குமாறு வேண்டுகிருன்(104) என்கிருர். யாராலும் அறுக்கவொண்ணுத பிறப்புத் தளையை அறுத்து வீடுபேறு காட்டியதை மெய்யறிவு தலைப்பட்டதால் உணர்கிருன் வாலி(108).

சிந்தையாலும் செய்கையாலும் யாருக்கும் எந்தக் கேடும் புரிந்ததில்லை', என்று கூறி அங்கதன் புலம்புவது இறந்த தந்தையை மகன் பரிந்து பேசுகின்ற இவ்விடத்தில் ஆழ்பொருள் இருத்தற்கில்லை(115). பொய் உரையாத புண்ணியா என்று தாரை உரைப்பதால் உருமைபால் கொண்ட தொடர்பினைத் தாரையிடம் மறைத்தான் அல்லன் என நினைக்க வேண்டி வருகிறது(118). வலியார், வஞ்சகர் என்ற இவர்வழி கொடுமைக்குள்ளாக்கப் பெற்ற மகளிர் நெஞ்சினில் பிழைப்பில்லாதவராயின் கொள்ளுதற்குரியரேயன்றித் தள்ளுதற் குரியரல்லர் என்பது இராமன் கொள்கை(120). வாலியைக் கொன்றதால் பழி ஏற்பட்டதாக இராமன் கூறுவதாகக் கூறுவோர்க்கு 'எங்களில் காண்டி' என்று இலக்குவனையும் உட்படுத்திக் கூறுவதால் பொருந்தாது என்கிருர்(121).

இராமன் மணங் கொண்டும் இல்லறம் புரியாது வாழ்ந்தது, துறவுக் கோலம் பூண்டும் துறவுநெறி கடைப்பிடிக்காதது, வில் வேந்தியும் அதற்குரிய தொழில் புரியாதது ஆகிய இவற்ருல் வரும் சிறுமை நீங்கவும் தனக்குச் சுக்கிரீவன் வருகைக் காரணமாகக் கிடைக்கும் கால எல்லையில் தான் இவ்வாறு துன்புறுமாறு செய்த பழவினை கெடுமாறு நோன்பு மேற்கொள்ளப் போவதாகக் கூறுகின்ருன்(123). அங்கதன் திருமணம் ஆகாதவன், திருமணம்

கொண்டோரே அரியாசனத்து அமர்தற்கு அருகராவர் என்பது இறைநெறி (பெருங்கதை, இலாவண காண்டம் 4:24). வாலியாகப் பிறந்த இந்திரன், இராவணனுடன் நட்புக் கொள்ளவே திருமால் முதலிய தேவர்களின் அவதாரம் பயனற்றுப் போவதைக் கண்டு, கவந்தனும் சபரியும், சுக்கிரீவனைக் நட்புக் கொண்டு, வாலியைக் கொல்ல ஆவன புரிகின்றனர்.

புதிய பொருள்களைச் சில இடங்களில் கூறிய போதிலும் வாலியே தவறுடையவன் என்ற கருத்தினை முதலிலிருந்து கொண்டு நூல் முழுமையும் அதனை வலியுறுத்திச் செல்கின்றார்.

**343. வாலி வதம் சரியா?**

முரு. பழ. இரத்தினம் செட்டியார்

மீனாட்சிப் பதிப்பகம்; கீழ இராச வீதி, புதுக்கோட்டை; மு. ப. சூன் 1975; 2+92; ரூ. 3

இராமனிடம் சுக்கிரீவன் சரணாகதியே அடைகின்றான். இதனாலேயே இராமன் அவன் இன்ப துன்பங்களில் பங்கு கொள்கிறேன் எனக்கூற நேரிட்டது(5). வரச் சூழ்ச்சிக்காக இராமனும் ஒரு சூழ்ச்சியைக் கையாண்டு கொல்கிறான் எனச் சொல்வது இராமனை மிகவும் கீழான நிலைக்குக் கொண்டு போய்விடும்(11). கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்பதில் கிட்டுவார் என்பது. வாலியோடு மற்போர் செய்வோரைக் குறிக்குமேயன்றி எட்டியிருந்து விற்போர் செய்பவரைக் குறிக்காது. விற்போர் செய்பவரிடத்தும் வாலி பாதிப்பலம் பெற வேண்டுமானால் அவர்மீது பாய்ந்து பிடித்துத் தன் பிடிக்குள் அகப்படுத்த வேண்டும் என்பது இதனால் பெறப்படும்(15). பேருலகெலாம் நெருக்கி நேரினும் வென்றி வெஞ்சிலை யலாற் பிறிது வேண்டுமோ இராமனுக்கு' எனும் வாலியின் கூற்றால் இராமனை அவன் வெல்ல முடியாது என்பதே பொருள்(20).

இராவணன் சீதையைச் சிறை வைத்திருந்தாலும், களங்கப் படுத்தாமல் வைத்திருந்ததால் அங்கதனைத் தூது அனுப்பினான். வாலியோ உருமையைக் களங்கப்படுத்திவிட்டதால் இவ்வித சமாதான முயற்சிகளுக்கும் அறவே இடமில்லாமல் போகிறது(33). குற்றத்திற்குரிய தண்டனையை அளிக்காமல் வாலிக்குச் சரணாகதி அளிப்பது அவன் ஈடேற்றத்தைக் கெடுக்கும் என்பது இராமன் கருத்து. ஆதலால் வாலியை அழைத்துப் பேச விரும்பவில்லை. வாலி ஆட்சி காலத்திலேயே சுக்கிரீவனுக்கு இளவரசுப்பட்டம் கட்டி விட்டமையால் வாலிக்குப்பின் அவனே அரசன் ஆக உரிமையுடையவன்(35).

'இப்பித்தாய விலங்கு' என இராமன் சுக்கிரீவனைப் பேசுகிறான். இலக்குவனை எனக் குறிப்பது பொருத்தம் இல்லை(52).

வாலி விரும்பினால்தான் எதிரியின் பாதி பலம் அவனுக்கு வரும்(56). மாயாவி குலப்பகைவனாதலாலும், இராவணன் சிவ பூஜைக்கு இடையூறு ஏற்படுத்தியதாலும் வரபலத்தைப் பயன் படுத்துகிறான். பிற இடங்களில் இயற்கை பலத்தினாலேயே போரிட்டான். இதனாலேயே துந்துபியோடு போர் ஓராண்டு நீடிக் கிறது. சுக்கிரீவன் ஒத்துப் போரிட முடிகிறது; எனவே வாலி சுத்த வீரன்(56). இருவரும் ஒத்துப் போர் புரிந்தமையால் உண்மையில் அடையாளம் தெரியாமல்தான் தாமதித்திருக் கின்றான். சுக்கிரீவன் வாலியால் வீழ்த்தப்படப் போகின்ற சமயத் தில் அடையாளம் கண்டு அம்பெய்திருக்கலாம். ஆனால் அதற்குள் அவசரப்பட்டு சுக்கிரீவன் ஓடி வந்துவிட்டான்(59). இராமபாணம் முழுதும் பாய்ந்து வெளியேறி விட்டால் அந்தக் கணமே வாலி உயிரிழந்து விடுவான். இராம தரிசனம் பெற்று வீடுபேறு பெற வாய்ப்பில்லாமல் போய்விடும். வாலி செய்த சிவ பூஜையின் ஆற்றல் இவ்விடத்தே துணையாக நின்று அவன் பாணத்தைப் பிடுங்கிப் பார்க்க வாய்ப்பளித்தது என்பதே பொருத்தமாகும்(60).

வில் நாணொலி கேட்டுத்தான் தாரை தன் ஆட்கள் மூலம் இராமன் வந்த செய்தியை அறிந்திருக்க வேண்டும்(23). போரில் மறைந்து நின்று அம்பெய்தது பேரறத்தை மீறிய செயல். குற்ற மானாலும் பேரறத்தைக் காபபாற்ற நிகழ்ந்ததால் குற்றமற்றதே யாகும்(75). முன்னால் இராமன் மறைந்திருந்து அம்பெய்ததனைத் தீயனவாக எண்ணிய வாலி, இராமன் நிலை அறிந்ததும் அவை எண்ணுதற்கும் தகுதியற்ற சிறியனவாகத் தோன்றுகிறது அதனைச் சிந்திக்காமல் விட்டு, தான் இதுவரை தீமை என. உணராதிருந்த செயல்களைத் தீமை என உணர்ந்து அவற்றைப் பொறுக்குமாறு வேண்டுகிறான் இராமனிடத்து என்பதே ‘தீயன பொறுத்தி என்றான் சிறியன சிந்தியாதான்’ என்பதன் பொருள்(78).

வாலியிடத்து நடந்த போரில் தான் வில்லறம் துறந்ததையே ‘போரின் வில்லறந் துறந்து வாழ்வோர்க்கு’ என இராமன் குறிப் பிடுகின்றான்(83). போர் அறவிதிகளை மீறியது சரியே என எண்ணினும், அது தீமையே எனக் கருதியே நோன்பு நோற் கின்றான். இங்கு இராமன் வருந்துவது கழிவிரக்கத்தின் பாற் படுமேயன்றி பிழையுணர்ச்சியின் பாற்படாது(85). இராமன் பதினான்கு ஆண்டுகள் வானப்பிரஸ்தம் போன்ற ஒரு தவநிலையை மேற்கொண்டான் எனலாமேயன்றி உண்மையில் அது வானப் பிரஸ்தமன்று. மேலும் பரதன் இராமனிடம் அரசாட்சியை ஒப் படைத்துவிட்டான். எனவே அவன் அரச கடமையை மேற் கொண்டதில் தவறில்லை(86—87).

பிறனில் விழைந்தவன் அரசனாகத் தகுதியில்லை. எனவே வாலியை அரசனாக நடத்தவில்லை. இந்திரன் ஏற்கனவே பிறனில் விழைந்தவன். இந்திரன் அம்சமான வாலி தான் அடைய வேண்டிய பேற்றை அடையாமல் மீண்டும் பிறனில் விழைந்து தடையுண்டு நிற்கிறான். ஆகவே மறுபடியும் மன்னிப்பளித்தால் அவன் ஈடேற்றம் அடையமாட்டான். அவனுக்கு மரண தண்டனையே சரி எனப் பிற வாய்ப்புகளின்றி அவனைக் கொல்கிறான்.

வாலிவதம் சரியே என்பது ஆசிரியர் முடிபு. தன் வாதங்களைப் பொருத்தமுற விளக்கியுள்ளார்.

**விசுவாமித்திரர்**

**344. அரச மாதவன்** (124—160)

ம. க. ஜயராம் நாயுடு; பாரதி கழகம்; பெரியமேட், சென்னை; ஏப். 1929

இராம லட்சுமணரை யடைதல் (124—131), தாடகையின் வதம் (132—142), வேள்வியை முடித்தல் (143— 51), சீதையின் திருமணம் (152—160) ஆகிய தலைப்புகளின் கீழ் கௌசிக முனிவரின் கதை கூறுகிறார்.

**விபீடணன்**

**345. விபீஷண சரணாகதி விசேஷங்கள்** (3. 171—3. 174)

ஸ்ரீ. கோபாலக்கிருஷ்ண மாச்சார்யர் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மலர் மாலை: அண்ணங்கராச்சார்யர்; அக். 1942

விபீடணன் நேரடியாக இராமனின் திருவடியில் வீழாமைக்குக் காரணம் நேரடியாகப் பெருமாள் திருவடியில் புகுவது முறையன்று, பாகவர்களை முன்னிட்டுக் கொண்டே பகவானது திருவடிகளில் புக வேண்டும் என்பதாகும்(3. 172). விபீடணனை அடைக்கலமாகக் கொள்ள வேண்டாம் என்று வானரப் படை உரைப்பதற்குக் காரணம் அவர்கள் இராமன்பால் வைத்த காதலால் தான் (3. 172). விபீடணன் குற்றமற்றவன் எனவே ஏற்கலாம் என்று கூறிய திருவடியை ஆட்சேபித்ததற்குக் காரணம் 'குற்றவாளரை அங்கீகரிப்பதே நலம்' என்பது பெருமாள் திருவுள்ளம் (3. 174) என்று கூறுகிறார். கம்பனையும் வால்மீகியையும் இணைத்துக் கட்டுரை எழுதியுள்ளார்.

**346. வீடணன்**

ப. அருணாசலம்

மனோன்மணி விலாச புத்தக சாலை; 52, பத்துரோடு கோலாலம்பூர்; மு. ப. சன. 1967; 1+104; ரூ. 1-50

கோலாலம்பூரில் நிகழ்ந்த அந்தர் யோகத்தில் நிகழ்த்திய உரையின் விரிவு. இரு பிரிவுகளாக 26 உட் தலைப்புகளின் கீழ் இந்நூலை அமைத்துள்ளார். முடிவுரையில் தன் கருத்துகளைத் தொகுத்துரைத்துள்ளார்.

அரக்கர்கள் நடுவே தருமம் தன்னை வெளிப்படுத்தி வாழ்தல் முடியாதெனக் கருதி மறைந்து வாழ்தற்காகவே இவ்வரக்கன் (வீடணன்) உருக்கொண்டு அங்கு வாழுகிறது எனக் கருதுகிறார் கம்பர்(2). தமையனுக்கு வீடணன் அறிவுரை கூறும்பொழுது அரசநீதி உணர்ந்த அறிஞனாக வீடணனைக் காட்டுகிறார் கம்பர்(7). இராவணன் அழிவைத் தரவல்ல சாபங்களைப் பற்றி எண்ணும் வீடணன் சிந்தனையில உடல் வலிமையினும் படைப் பெருமையினும் ஆற்றல் மிக்கது அற ஆற்றலே என்ற எண்ணம் நிலைத்திருக்கிறது(13). தன்னை இதுநாள் வரைப் பேணிய தன் தமையனிடம் கொண்ட அன்பால இனிமேல் தான் அவனுக்குத் துணை நிற்க மாட்டாமையை எண்ணிய பிழை பொறுக்க வேண்டுகிறான். தான் அன்பு செலுத்தும் ஒருவனைத் துறந்து சென்றான் என்றால் அவனை விடவும் அறத்தைப் பெரிதாக எண்ணினான் என்பதுதானே பொருள்(24).

வீடணன் அடைக்கலப்படல 102ஆம் பாடலில் கம்பர் இராவணனுக்குக் கேடு நெருங்கி விட்டதாகக் கருதி இராமன் பக்கம் வந்தடைந்ததை மாருதி வாயிலாகப் பாராட்டினாலும் உற்று நோக்குமிடத்து வீடணனின் மனப்பக்குவத்தையே இது காட்டி நிற்கிறது(34). இராவணனும் தன் தவறு உணர்ந்து சரண் புகுந்திருந்தால அவனையும் இராமன் மன்னித்திருப்பான். அதனால் அரக்கர் குலமும் பிழைத்திருக்கும் என்றும் எண்ணுகின்றான். இத்தகைய எண்ணம் வீடணனுக்குத் தன் தமையனிடமுள்ள அன்பினைக் காட்டுமேயன்றி இலங்கையரசைக் கைப்பற்றக் கருதியிருந்தான என்பதை உணர்த்தாது(38). 'இராமனுடன் உடன்பாடு காண விரும்பினும் உன் தம்பி அதனைத் தடுத்து விடுவான்' என்று சேனைக் காவலன் கூறுவதும், இராவணன் மசாம்பேறி என்று கூறுவதும் பொதுவாக வீடணனைப் பற்றி அவர்கள் கொண்டிருந்த வெறுப்பினைப் புலப்படுத்துமேயன்றி அவன் பண்புகளைப் பற்றிய கருத்துகளாகக் கொள்ள முடியவில்லை(50).

தன் தமையன் செயலுக்குத் தன்னையும் பொறுப்பாக்கிக் கொள்ளும் உள்ளத்தைக் கும்பகர்ணனிடம் காண்கிறோம்(55). கும்பகர்ணனை இராமனுக்குத் துணைவனாக மாற்றும் முயற்சியில் தோல்விகண்ட வீடணன் 'குலத்து மானம் தீர்ந்திலன் சிறிதும்' என்றே இராமனிடம் கூறுகிறான். இஃதொன்றே கும்பகருணனிடம் கம்பர் காணும் குறைபாடு(59). வீடணன் உள்ளத்தில் தான் அறவழி ஒழுகுவதாகத் தெளிவான எண்ணமிருக்கிறது. வரையறை உடைய உணர்வினைக் கடந்து எல்லாவுலகிலும் ஊடுருவி நிற்கும் இறையுணர்வு பெற்ற ஞானம் அவனுக்குண்டு(77). 'என்னதோ இறந்துளான் மேல் அயிர்த்தல்' என

இராமன் கூறுவது இராவணன் இறந்து பட்ட பின்னரும் வீடணன் நெஞ்சில் காழ்ப்பு இருந்தது என்பதற்குக் காட்டாகக் கொள்ளல் பொருந்தாது.

தன் தவறை உணர்ந்து அவனிடம் இறுதிக்கடன் செய்யக் கூறுகிறான் இராமன் என்று பொருள் கூறுவதே சிறப்பாக உள்ளது(84). இராவணன் நெறியில்லா நெறியிற் சென்று விட்டான் என்ற வேதனையைப் புலப்படுத்தி வீடணன் அழுகின்ற போதும் உலக அன்னையாகிய சானகிக்கு இழைத்த தீங்கினைக் குறிப்பிடுகின்றானே ஒழிய பிறவகையில் குற்றமுள்ளவனாகக் காட்டவில்லை(85). வீடணன் சகோதர நேயமற்றவனல்லன். தன் குலப் பெருமையை அவன் உணர்ந்திருந்தான். தன் குலப் பெருமையை அழியவிடக் கூடாது என்ற எண்ணமும் இருந்தது. ஆகையால் இராவணனை விட்டு அகன்றது, அவன் செய்யத் தகாதனவற்றைச் செய்துவிட்டான் என்ற எண்ணத்தாலும், அவன் செயலால் தான் பிறந்தகுலம் பெருமை இழந்து அழிந்து விடும் என்பதாலுமே(87).

வீடணன் இரண்டு இனத்தவர்கள் தம்முள் போர் விளைத்துக் கொள்ளும்போது தான் பிறந்த இனத்துக்குக் கேடு சூழ்ந்தவன், பகை இனத்தோடு சேர்ந்துகொண்டவன் என்ற நிலையில் கம்பர் நமக்குக் காட்டவில்லை(92) அறவுணர்வை உறவு என்ற எண்ணம் தோன்றி அழித்துவிடவில்லை. அறவோனாக வீறு பெற்று உயர்ந்த நிலையில் தன்குலம், பிறன்குலம் என்ற உணர்வு வெளிப்பட்ட நிலையில் உலகத்தலைவனாக விளங்கினான்(93). இராமன் பேரருட்டிறத்தைப் புலப்படுத்திப் பயில்கின்றவர்கள் உளம் கொளச் செய்தற்கும் 'வீடணன் வாழ்வை'ப் பெரிதும் பயன்படுத்தியுள்ளார் என்றுதான் கூறவேண்டும்(104).

**347. விபீஷணன்**

நா. சிவசுப்பிரமணியன்

ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்; கோர்ட்ரோட், நாகர்கோவில; மு. ப. ஆக. 1975; 1+44; ரூ. 2

அனுமன் தூதனாக வராமலே, தூதனின் செயலுக்கு அப்பாற்பட்டு அக்ககுமாரனை, அரக்கர்களை அழிக்கிறான். தன் நாட்டுக்குள் அரசாணை, அனுமதி பெறாமல் நுழைந்துவிட்டு, அநியாயமான செயல்களைச் செய்து இராவணனால் கொல்ல ஏவப் படும்பொழுது, இளைதாக முள்மரம் களையக் கூடிய கடமையினின்று இராவணனைத் தடுத்த குற்றத்தை உடையவன் விபீஷணன்(3). மந்திராலோசனையில் நீண்ட மூகமனுடன் பேசி எதிரியின்பால் நெஞ்சை வைத்து அண்ணன்பால் நஞ்சைக் கொண்டவன் என்பதனை வெளிப்படுத்துகிறான். தம் கருத்தைத் தயங்காது கூறலாம் என மன்னவனே ஆணையிட பேசிய இந்திர

ஜித்தைத் தடுத்ததன் மூலம் மன்னவன் ஆணைக்குப் புறம்பாக நடந்தவன், பேச்சுரிமையைக் கேலியாக்கியவன் ஆகிறான்(4). அற மற்ற செயலை நீ செய்வதால் உன்னைப் பிரிகிறேன் என்றால் வேத வதியை நெருங்கியது, தேவர்களை, தேவமாதர்களை அடிமை யாக்கியது, வாலியிடம் போர் செய்தது, நந்தியிடம் இராவணன் செயல்கள் எல்லாம் அறத்தோடு கூடிய செயல்களாக விபீஷணன் நினைக்கின்றானா?(5)

சீதையைக் கவர்ந்தான் இராவணன் என்றால் அயோத் திக்கோ, காட்டில் சீதை வாழ்ந்த இடத்திற்கோ தானே வலியச சென்று எடுக்கவில்லையே? மேலும் கரனுதியர்களைப் போரில் வென்ற இராமனைப் போரில் சந்திக்கும் போர்முறை எனவும் சொல்லலாம். சூர்ப்பநகை இழைத்த தீவினையால் தான் இராவணன் மதிமயங்குகிறது. எனவே அக்குற்றமும் அவனிடம் இல்லை(7). அறமுடையவன் பக்கமே அவன் நெஞ்சு என்றால் இராமன் தவறே புரியாதவனா எனக்கேட்டு 1. முடி சூட்டிக் கொள்க என்று தயரதன் சொன்ன பொழுது சிற்றன்னைக்குத் தந்தை கொடுத்த வாக்கினை நினைவுபடுத்தாமல் இருக்கிறான். 2. இலக்குவன் தடுத்தும் சீதை கேட்க மான் பின் செல்கிறான். 3. வாலி வதையில் இராமன் நடந்து கொண்டது அறத்தின் வழிப் பட்டதோ என்பது ஐயப்பாடு(8). 4. காமவேதனையால் கட்டுடல் அழியும் சூர்ப்பனகையிடம் விளையாடியது என்ன அறமோ(9). என வினவுகிறார். திரிசடை எதற்காக, ஏன், எப்படிச் சீதை யின் அருகில் வந்தாள் என்பது சந்தேகத்திற்குரியது(11). கும்ப கர்ணனையும், இந்திரஜித்தையும் இராவணன் ஏசியதைப் போலவே விபீஷணனையும் ஏசும் பொழுது ஏன் இவன் மட்டும் இராமனிடம் செல்லவேண்டும்?(18) பிறவியை ஈனும் வித்தாகிய அவாவினை நீக்கத்தானே இராமனை அடைகின்றான். ஏன் இராமன் முடிசூட்டியதை எந்தத் தடங்கலும் இல்லாமல் ஏற்றுப் புனைகிறான்? பிறவி நோய் நீங்கவா?(17) இலங்கையின் ராணுவ ரகசியங்களை இராமனுக்கு உரைக்கிறான். அண்ணனுக்காகத் தன் உயிரைக் கொடுக்கும் கும்பகர்ணனின் சகோதரப் பாசம் விபீஷணனிடத்து இல்லை(19). இராமன் வானர வீரர்களை உயிர்ப்பித்தபோது ஏன் கும்பகர்ணனையும் அறவோனாகிய அதிகாயனையும் மீட்டுத்தரக் கேட்கவில்லை?(20)

நிகும்பலை யாகத்தில் என்ன குற்றம் செய்ததற்காக இந்திர ஜித்தைக் காட்டிக் கொடுத்தான்?(26) அறத்தின் பக்கம் வெற்றி தானே வந்துசேரும் என்று விபீஷணன் பேசாமல் இருந்தால் என்ன?(27) இராவணன் அழவேண்டும் அதனைப் பார்க்க வேண்டும் என்ற ஆசையை இலக்குவன் மூலம் (இந்திரசித் வதை) விபீஷணன் நிறைவேற்றிக் கொண்டான்(28).

இராவணன் எதிரியினுடைய பெருமையை உணராமல் இருந்த தற்கு விபீஷணனே முக்கியமான காரணம் என்று சொல்ல லாம்(29). இலங்கையின் வலிமையைப் பற்றிச் சொல் என்ற வுடன் இராமனிடம், இவ்வளவு வலிமையுடைய இராவணனை வெல்ல முடியுமா என இராகவன் நினைத்துவிடக் கூடாது; அதைரியம் கொள்ளக் கூடாது என்று குறிப்பிடத்தான் இலங்கைக் கேள்விப் படலத்தில் அனுமனைப் புகழ்கிறான்(32). இறந்து கிடக்கும் அண்ணன் தன் சொல்லை இப்பொழுதாவது உணரவேண்டுமென்று எள்ளலாகவும் குத்தலாகவும் பேசுகிறான். சூர்ப்பநகையின் சூழ்ச்சியை விபீஷணன் அறிந்திருக்கிறான் ஆனால் இராவணனிடம் மறைத்து விட்டான்(35). சீதையின் மீட்சியைத் தெரிவிக்க வரும் அனுமன் மற்ற அரக்கியரைக் கொல்ல விரும்பும் பொழுது சீதை தடுக்கிறாள். ஆனால் அந்நாட்டின் அரசன் விபீஷணன் தன் நாட்டு மக்களைப் பிறர் துன்புறுத்தும் பொழுது ஒன்றுமே பேசாமல் இருப்பதும் ஏனோ? தன் மக்களைப் பாதுகாக்கும் கடமையினின்று தவறியவன் ஆகிவிட்டான்(37). சீதையை இராமன் சுடு சொற்களால் சுட, அவள் தீயுட் புகுந்து தன் கற்பினை நிலைநிறுத்துமாறு செய்த இராமனை அப்பொழுது விபீஷணன் தடுக்காதது ஏன்? தன் மனத்தேயது நிறைவேறி விட்டதால் தான்(40).

பாரதிதாசன், புலவர் குழந்தை, வழக்குச்சொல் (விபீஷண வேலை) ஆகியோரின் கூற்றினையும் சுட்டி, விபீடணன் தன் இன அரசரிடமிருந்து நீங்கியதும், தன் இன அரசரைப் பற்றி உளவு சொல்லியதும் விபீஷணப் பாத்திரத்தை இழுக்குறவே செய்கின்றன(44) என முடிக்கிறார்.

**ஒன்றுக்கு மேற்பட்ட பாத்திரங்கள் இணைந்து நிற்பவை**

348. **தசரதன் குறையும் கைகேயி நிறையும்**

ச. சோமசுந்தர பாரதியார்

நாவலர் புத்தக நிலையம்; 59, ஏ, மேலாவணி மூலவீதி; மதுரை-1; மு. ப. 1926; இ. ப. ஏப். 1970; மூ. ப. நவ. 1971; நா. ப. ஆக. 1972; 129; ரூ. 3-50

முன்னுரை 22-24, கம்பர் கவிக்கருத்து 25-45, வால்மீகர் சுலக வரலாறு 46-54, தசரதன் தவறு 66-83, கோசலை மனக்கோள் மன்னவன் முயற்சி 88-91, கொற்றவன் உளக்கிடையும் கேகயர் கோமகள் அறத்துறையும் 92-98, கைகேயி இராமனைக் காடு கடத்தக் கருதக் காரணம் 99-111, குரிசலர் நாட்டில் கொடையுரிமை கோடல் வரன்முறை வந்த வழக்கறமாகும் 112-122, சில வினாவிடைகள் 128-129. இறுதியில் பாரதியாரின் வாழ்க்கைக் குறிப்பும் உள்ளது.

பட்டத்திற்குரிய மூத்த புதல்வனுக்கு மட்டும் கொடுக்க வேண்டிய மரியாதை, குறைவில்லாமல் பரதனுக்கும் கொடுக்கப் பட்டது(23) கூனி தான் கூறியவையெல்லாம் பயனிலவாகவே, 'ஒல்லும் வாயெலாம் ஓவாதறவினை செல்லும் வாயெல்லாஞ் செயக்' காமுறும் கைகேயிக்கு அறத்தாசையைக் காட்டி, அதற்கு இராமன் முடி சூடலிடையூறுமெனக் கூறினாள். இஃதும் கைகேயி மனதினை மாற்றாதிருக்கவே 'கெடுத் தொழிந்தனை உனக்கரும் புதல்வனை' எனும் பாடலில் கன்யா சுல்கச் செய்தியை நினைவுபடுத்தி பரதன் அரசெய்தத் தேவினை ஒருப்படுத்துகிறாள். இப்பாடலுக்கு உனக்குக் கன்யா சுல்கமாகக் கொடுத்த பேரரசு உன் மைந்தனுக்கும் அடுத்தத் தம்பிக்கும் தான் உரிமை என்று பொருள் கூறுகிறார். இக்கருத்தை வலியுறுத்தும்படி இராமன் கூற்றான் 'வரனிலுந்தை சொல் மரபினாலுடைத் தரணி நின தென்று...' என்னும் பாடலிலும் சுல்கச் செய்தியை அறிந்து இராமன் இவ்வாறு கூறுவதாகக் கூறுகிறார். தன் காதற் கிழவன் பழியொடு பாவமெய்தி அறங்கொன்றழிவதைத் தடுக்கவே கைகேயி வினையாற்றினாள். அவனைப் பழியினின்று காத்து புகழ் பெறத் தான் பழிசூட வரம்கேட்டாள். உண்மையைத் தசரத னுக்கு மட்டும் சொன்னால் அவன் செயலும் பின் விளைவும் என்னுமே (62). இதனைத் தெய்வீகக் கற்பினள் ஆழ்ந்து சூழ்ந்து தெளிந்து துணிந்த அறவினை கூறும் பகுதி என்பதனைத் தலைப் பெயராலேயே நம் கவியரசர் நன்கு அறிவித்துப் போந் தார்(63).

பரதனே பட்டமெய்தி இராமனுக்கு அரசியல்லாதிருப்பது ஒன்றே அவள் விருப்பமன்று என்பதற்கு, பரதன் இல்லாதபோது தான் தரத் துணியாதவள் பிறகு இராமனுக்குப் பரதன் தரு வதைத் தடுக்காமையே தக்க சான்றாகும்(64). தானும் அவனுடன் இராமனையழைக்கச் சென்றதே அவள் மாசற்ற மனத்தூய்மை யையும் இராமனுக்கத்தில் அவளுண்மை யார்வத்தையும் இனிது விளக்குவதாகும்(65). பரதனையும் சத்துருக்கனையும் கேகய நாட்டுக்கு அனுப்பியது, இராமனிடம் பிறமக்களை விட அதிக அன்பு கொண்டிருந்தது. இராமன் குடிகள், அரசியலதிகாரி களின் அபிமானத்தையடையும் வரை அவனுக்கு அரசு தருவதற் குள்ள தன் ஆசையைத் தசரதன் மறைத்து வைத்தான். அனை வருக்கும் அழைப்பு விடுத்தவன் கேகயனுக்கு அறிவிக்கவில்லை. கைகேயிக்கு உணர்த்தாதது, தசரதனும் கோசலையும் இடையூறு உள்ளதாகக் கருதுவது முதலியவற்றால் தசரதனைக் குறை யுடையவனாக்குகிறார். சுல்கச் செய்தி கோசலைக்கும் தெரிந்திருக்க வேண்டும் என்கிறார். தசரதன் இராமனுக்குத் தன் தவறு தெரியுமுன் அபிடேகத்தையும் முடிக்க நினைக்கிறான்.

தசரதன் தானறியாமல், தசரதனை செல்லுமிடத்து எங்கு இராமன் இருப்பினும் தனயனைத் தழுவிக்கவும் தருமங் கருதாமல் அவனை அயோத்திக்கு அரசனாக்கவும் வினைபல விரைந்து சூழ் வான். இராமன் காடு சென்றால் தசரதனும் சபலம் நீங்கி, அறத் துறையில் மனம் நிலைப்பான். ஆகவே காட்டுக்கு அனுப் பினன்(202). குடிகள் இராமன் நகரில் இருப்பின் அவன் பாலுள்ள அன்பால் கலகம் செய்வர். 14 ஆண்டுகள் அங்கிருந்தால் பரத னாட்சியில் அவர்கள் மனம் மாறி அவனை நேசிக்கத் தொடங்கி விடுவர். எனவே அவன் திரும்பி வந்தாலும் குழப்பம் இராது. எனவே 14 ஆண்டுகள் எனக் காலம் குறிப்பிடுகிறாள். தசரதன் கைகேயிக்குக் கன்யா சுல்கமாக நாட்டை வழங்கியது வழக்கறம் என்பதற்குச் சான்றுகள் தருகிறார். வான்மீகி இராமாயணக் கதையைக் கொண்டு கம்பராமாயணப் பாத்திரங்களை ஆராய்ந் தெழுதியுள்ளார்.

**349. வீணைக்கொடியோன் வீரத்தம்பியர் (24—28)**

ஆனந்தபோதினி: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; ஜூலை, 1932

கும்பகர்ணன் அண்ணனிடம் மந்திரப்படலத்தில் வீரவுரை பகர்தல், விபீடணன் அறவுரை பகர்தல் இவற்றைச் சுட்டுகிறார்.

**350. இராமாயணத்தில் தொண்டு (70—103)**

இலக்கிய ஒளி: ஆ. செபரத்தினம் எம். ஏ.

ஆ. செபரத்தினம்; பெருமாள்புரம் திருநெல்வேலி-7. 1962: ரூ. 2

கம்பன் நடை எழிலும் கருத்துயர்வும் தமிழ்ச் சோழரது நல்லாட்சியில் தமிழ் இனம் வாழ்ந்த பெருவாழ்வின் சாயலே யாகும்(73). இலக்குவன், அனுமன், ஆகிய இருவரின் தொண்டு பற்றிப் பேசுகிறார். இலக்குவன் இராமன்பால் கொண்டிருந்த அளவிலாப் பற்றும் தொண்டின் சிறப்பும் இராமனுக்குத் துன்பங் கள் வந்த பின்னரே ஒளி பெறுகின்றன: இராவணவதத்தால் தான் அவன் தொண்டு சிறந்து விளங்கியது. அனுமன் இல்லை யேல் சீதையை உயிருடன் மீட்கமுடியாததால் இராமாயணத்தை அழியாமல் காத்த உயிர்நிலைப் பாத்திரம் அனுமன்(83). இந்திர சித்தினோடு இலக்குவன் போர்புரிந்து அவனை வென்றான் என்னும் ஒரு நிகழ்ச்சியே அனுமப் பேரொளியில் இலக்குவச்சுடர் முற்றிலும் மறைந்துவிடாதபடி அவனைக் காப்பாற்றுகிறது. இராமனைக் கண்டளவில் கொண்ட அனுமன் அன்பு, சாதி முதலிய வரம்புகளைக் கடந்த பேரன்பு. ஆற்றல் தன் உடலாக வும், அன்பின் தொண்டு தன் உயிராகவும் வாழ்ந்த அனுமன் சொன்னலமும் சிறந்த சமர்த்தன்.

**351. இந்திரசித்தும் இலக்குவனும் (19—31)**

இலக்கிய நினைவுகள் : டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்

இராமனிடம் இலக்குவன் பேசும்போதும், பழகும்போதும் தன்னை அடிமையாகவே இலக்குவன் கருதினான். சீதைக்கும் அடிமையாகவே வாழ்கிறான். இராமனைப் பாதுகாக்கும் பொறுப்பையும் எடுத்துக் கொள்கிறான். அஞ்சாமையும், வீரமும் உடையவன் எதிரி இந்திரசித்து, மான உணர்விலும் இலங்கையின் புகழிலும் இராவணனின் சிறப்பிலும் மிகுந்த அக்கறை கொண்டவன், வீரச்சிறப்போடு சூழ்ச்சியிலும், மாயையிலும் வல்லோன், இருவரிடமுள்ள பொதுப்பண்பு வீரம்—இந்திரசித்தின் வீரத்தோடு மாயை சேர்ந்தது. வீரத்தை வீரம் வெல்லவில்லை. சூழ்ச்சி மாயையை வென்றது. எடுத்துக்காட்டுகள் தரப்பட்டுள்ளன.

352. **சொல்லின் செல்வன்** (நாடகம்) (5—57; 78—164)

பேராசிரியர். டாக்டர். ரா. சீனிவாசன்

அணியகம்; 22, செல்லம்மாள் தெரு: சென்னை 30; மு. ப. மார்ச் 1968; இ. ப. 1973; மூ. ப. மே 1974;

சொல்லின் செல்வன் (5-57), வாய்ச்சொற்கள் (59-76), கேகயன் மகள் அல்லது உறுதிகொண்ட நெஞ்சினள் (78-164) எனும் மூன்று நாடகங்கள் இந்நூலுள் அடங்கியுள்ள போதிலும் முதலும், இறுதியுமே, கம்பராமாயணத்தைத் தழுவியவை. ஒவ்வொரு நாடகத்திற்கும் ஆசிரியர் தனித்தனியாக முன்னுரை வழங்கியுள்ளார். மு. வரதராசனாரின் அணிந்துரையுடன் கூடியது இந்நூல்.

சொல்லின் செல்வன்: இந்நாடகம் 15 காட்சிகள் கொண்டது. கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம் ஆகிய காண்டங்களில் உள்ள அனுமனின் சிறப்பு நிலையை இங்குக் காட்டுகிறார். இந்நாடகத்தில் பெரும்பாலும் முழுமையாகக் கம்பனைப் பின்பற்றியுள்ளார், சிறிய வேறுபாடுகளே உள. இங்கு இராமனைக் கண்டுவரும் அனுமன், 'தயரதன் தந்த ஆட்சியைத் தாயின் ஆணையால் இளையவர்க்கு உதவி அவர் இங்கு வந்துள்ளார்' என்ற உடனேயே சுக்கிரீவன் அச்சம் நீங்கி அவன் வாயிலாக அரசைப் பெற விரைகிறான். உருமையைக் கவர்ந்த வாலி தாரையிடம், 'அவள் இன்பத்திற்குரியவள், நீ என் அன்பிற்குரியவள்...அவள் எனக்கு ஒரு பொழுதுபோக்கு, ஆனால் நீ என் வாழ்வுக்குத் துணை(16). என்று கூறுகிறான் அனுமன் தானே முன்வந்து கடலைக் கடப்பதாக உள்ளது(3·). அனுமன் சீதையிடம், 'அன்னை அவர் சொல்லின் செல்வன் என்றே அழைப்பர். அவர்

சொல்லின் நான் எங்கும் செல்வேன்'(41) என்று கூறுவது ஆசிரியரின் சொல்லாட்சித் திறனைக் காட்டுகிறது. அனுமன் சொல்லின் நயத்தால் நிறைவேற்றிய செயல்களைக் குறிப்பிட்டு அவன் சொல்லின் செல்வன் என்பதை ஆசிரியர் இந்நாடகத்துள் நிலைநிறுத்துகிருர்.

கேகயன் மகள் : 27 காட்சிகளைக் கொண்டமையும் இந் நாடகம் சிறுபான்மையே கம்பனைப் பின்பற்றுகிறது. 'கேகயன் மகளின் தூய்மை உணர்வும் உறுதியும் காவியத்தின் உயிர் என்பதைப் புலப்படுத்துகின்றது. இது முழுமையும் கம்பனைப் பின்பற்றியது அன்று, பாத்திரப்படைப்பின் இயக்கத்தை ஒட்டி அமைந்தது(77) என்று ஆசிரியர் தன் முன்னுரையில் குறிப் பிட்டுள்ளார்.

பலரைத் தியாக வாழ்வில் புகுத்திய கைகேயியால் இராமன் பலதாரமணம் தடைப்பட்டது, இலக்குவன் சீற்றம் நீங்கி அடக்கம் அறியமுடிந்தது என்பது ஆசிரியர் கருத்து. இறுதியில் கைகேயி 'உன் மகனுக்குத் தான் ஆட்சி என்று சொல்லித்தான் என்னைத் திருமணம் செய்து கொண்டார். அதனை நினைவு படுத்தத்தான் வரங்கள் கேட்டேன்(162). இருவரும் சரிசமமாக ஆளும் உரிமை பெறவேண்டும் என்பதுதான் என் வரத்தின் அடிப்படை(162). வரத்தால் பெற்ற அரசைத் தன் திறத்தால் பரதன் நிறுவிவிட்டான் இராமனிடம் அரசைக் கொடுத்துவிட்டு மீண்டும் முறைப்படி அவனிடமிருந்து பெற்றுக்கொண்டான், மரபையும் தன் பக்கம் இழுத்துக் கொண்டான்(163) என்று கூறு கிருள்.

கைகேயிமீது குற்றம் உள்ளதுபோலவும், இல்லாதது போலவும் நாடகத்தை நடத்திச் செல்லும் ஆசிரியர் இந்நாடகத் தினை, முன்னுக்குப்பின் முரணாகவும், குழப்பமாகவும் அமைத் துள்ளார்.

353. **பண்புயர் தம்பி பரதனா? இலக்குவனா?** (27—31)
Aditanar College of Arts & Science Magazine; Vol. 7:
ஆ. ஐசக்; 1972

பிரிவென்னும் துயரமே தன் வாழ்க்கையாக அமைந்தவன் பரதன். பிரிவில் அவன்நிலை, இராம — இலக்குவரிடத்துக்குக் கொண்ட அன்பு, உயிர்விடத் துணிந்தது. இராமன் கோசலை, குகன், வாலி, ஆகியோர் புகழ்ந்தது ஆகியவற்றை விளக்கிச் சிறந்தவன் பரதன் என முடிவு செய்கிருர். தன்னைப்பற்றித் தாழ்த்தியே பேசுகிருன் ஆகவே அவனைப் பண்பிற் சிறந்தவனுக்கு கிறது என்கிருர். இலக்குவன் பற்றிய ஆராய்ச்சி இல்லை.

354. மனமாற்றம் (19—31)

கட்டுரைக் கனிகள் : கி. வா. ஜகந்நாதன்

படிப்படியாக மனம் மாறிவரும் போக்கை நுட்பமாகக் கம்பன் காட்டுகிறான். இராமன் தன் மகன், பரதன் கோசலை மகன் என எண்ணும் கைகேயியின் உள்ளம் முதலில் கூனியின் பேச்சால் மாறாது அவளை வெகுள்கிறது. ஆனால் பரதனைத் தன் மகன் என்று கூறும் சிறிய மனமாற்றம் அவளறியாமல் நிகழ்ந்த மாற்றம். இதனை நன்கு பயன்படுத்திய கூனி மேலும் பலபேசி கைகேயி இராமனைக் காட்டுக்கனுப்பு மளவிற்கு மாற்றிவிடு கிறாள். முதலில் இராமனைக் காணவரும் குகன் தேனும் மீனும் கொணர்வதும், பின் இராமன் அதனை நுகாமாட்டான் என்பதனை அவனுடன் ஓர் இரவு பழகிய பழக்கத்தால் தெளிவுபெற்று, மறு நாள் புறப்பட்டுச் செல்கையில், 'தேனும் தினையும் உண்டு', என்பதும் பின் தன்னைக் கூட்டிச் சென்றால் 'நறியன கனிகாயும் நறவிவை தர வல்லேன்' என்பதும் அவன் மனமாற்றத்தைப் புலப்படுத்துகிறது என்று தன் கூற்றுக்குச் சான்றுகள் காட்டு கிறார்.

355. இலங்கைநாட்டு இருசகோதரர்கள் (15—18)

கம்பன் மலர்: ரா. ஸ்ரீ. தேசிகன்

விபீடணனின் தூயதோற்றமும், கும்பகர்ணனின் தாயுள்ள மும் நம்மைக் கவர்கிறது. விபீடணன் உயர்வான வீதியில் ஒரு பெரும் தர்மநெறியில் போய்க்கொண்டிருக்கிறான். கும்ப கர்ணனோ நம்மவரில் ஒருவன். இருவரும் போர்க்களத்தில் சந்தித்து உரையாடும் நிகழ்ச்சியை இங்குத் தருகிறார்.

356. கம்பன்கலை (தம்பியர் இருவர்)

அ. ச. ஞானசம்பந்தன்

மெர்க்குரி புத்தகக் கம்பெனி; கோயமுத்தூர்-1; 147; ரூ. 3

நாவாய் வேட்டுவன் (1-26) குகன் எனப்பெயரிய கூற்றின் ஆற்றலான் (27-53), பரதன் எனும் பெயரான் (54-89), நேர்மை யின் ஆணி (90-147) என 4 தலைப்பின் கீழ் அமைவது இந்நூல். சிறு தலைப்புகள் சிலவற்றையும் கொண்டது.

ஒருவகையான முரண் அணியுடன் கவிஞன் குகனை அறிமுகம் செய்கிறான். அன்பு ஒன்றின் காரணமாக இராமனைப் பார்க்க வருகின்றான். குகனுடைய பேச்சில் அவன் அன்பின் ஆழமும் வஞ்சகமற்ற மனப்பாங்கும் நன்கு வெளியாகின்றன. தன்பால் தோன்றும் உணர்ச்சிகளை மறைத்துக் கொண்டு வாழும் நாகரிகத்தில் பழகியவன் அல்லன் குகன்—குகன் கண்ணீர் பெருக்குதல், இராமனைத் தன்னைப்போன்ற மனிதனாகவே மதித்து

எவ்வித பயனையும் எதிர்பாராமல் அவனிடம் அன்பு பாராட்டியதே குகனிடம் நாம் காணும் சிறப்பு. பரதனின் படைகண்டு கூறும் சொற்களில் அவனுடைய நன்றியுணர்ச்சி நட்பின் ஆழம் முதலியனவை அனைத்தும் வெளியாகின்றன. குகன் பரதனின் உண்மை நிலைகண்டு இராமனும் பெறமுடியாத பெருமையைப் பரதனுக்குத் தந்து மகிழ்கிறான். கைகேயி இன்னாள் என்று அறிந்தும் வணங்குவதை நோக்கிப் பரதனுடைய பண்பாட்டிலும் ஒருபடி மேற்சென்று விடுகிறான். விருப்பு வெறுப்பற்ற முனிவனாலும் அறக்கடல் எனப் புகழப்படுபவன் பரதன். இவன் இராமனிடம் கொண்ட அன்பு பெரிய ஆற்றில் ஓடும் நீர் போன்றது. ஆரவாரமோ, சந்தடியோ இல்லை.

தன் இளையவர்களை முதலிற் குறிப்பிட்டுவிட்டுப் பிறகே தன்னைக் குறிப்பிடும் பரதன் பண்பாட்டின் சிகரமாய் விளங்குகிறான் (குகப். 66). தான் சொல்லிய சொல்லைக் காக்கும் பொருட்டுத் தீயில் வீழ்ந்து உயிரைவிடத் துணிகிறான். பரதனும் இராமனும் உரையாடும்பொழுது பரதனின் பெருங்காதலும், அடக்கமும், பணிவும், கற்றறிவுடைமையும் புலனாகின்றன. இராமன் இரண்டொரு சிறு பிழைகளாவது செய்ய, பரதன் பிழை என்று கூறக் கூடியது ஒன்றையும் கனவிலும் கருதாதவனாய் வளர்ந்துவிட்டான். இராமன் செயல்கள் அனைத்தையும் தாயின் செயல்களாகக் கருதும் பரதனது பண்பாட்டை அளவிட முடியாது. சான்றோர்களுள் ஒரு சான்றோனாகப் படைக்கப்பட்டுள்ளான். தான் என்ற பொருளை முற்றிலும் அழித்துக்கொண்டு, தொண்டு, குறிக்கோள் என்பவற்றிற்கே வாழ்பவன், மனிதனாகப் பிறந்தாலும் தேவன் ஆகிறான். இவ்வுண்மையை உலகிற்குக் காட்டவே பரதன் படைக்கப்பட்டுள்ளான்.

இரு பாத்திரங்கள் பற்றிய இணைப்பு நூல் இது. தம்பியர் அறுவரினும் குகனும், பரதனும் ஒற்றுமையுடையவராய், இராமனிடத்து ஆரவாரமற்ற முறையில் ஆழ்ந்த அன்பினைச் செலுத்துபவர்களாய் அமைவதால் இந்நூலில் இவ்விருவர் பற்றி ஆராய்கிறார்.

**357. கம்பன் கலை – அரசியர் மூவர்**

அ. ச. ஞானசம்பந்தன்

பாரிநிலையம்; மு. ப. 1954; இ. ப. 1956; 2+133; ரூ. 1-50

சூழ்ந்த தீவினை (1—14), கேகயன் மடந்தை (15—56), முதல் தேவி (57—108), இளையமென்கொடி (109—133)

எடுத்த எடுப்பிலேயே கூனி மீது வெறுப்பு வரவேண்டுமென்பதாலே இயற்பெயர்கொண்டு அறிமுகப்படுத்தாது, அடையெடுத்தக் காரணப்பெயரால் அவளை நமக்கு அறிமுகஞ் செய்து வைக்கிறார்(6). கூனி முதலாவதாகக் கைகேயியின் தாய்மைக்கு

முறையிடுகிருள்(9). பின் சக்களத்தியாகிய கோசலை பெறப் போகும் வாழ்வைப் பெரிதுபடுத்திக் காட்டினுள். இறுதியாகப் பிறந்த வீட்டைக் காட்டித் திரித்துவிட்டாள். கவிஞன் கூனியின் கொடுமையைக் கைகேயியின் நன்மையின் எதிரே நிறுத்தி, இரண்டுக்கும் இடையே உள்ள வேறுபாட்டைக் காட்டுகிருன்(12). கூனிக்குப் பரதனும் ஒன்றுதான். இராமனும் ஒன்றுதான் கைகேயியின் தோழி என்பதற்காக ஒருவேளை கோசலையாவது கூனியை இழித்துப் பேசியிருக்கலாம். ஆனுல் இராமன் மறந்தும் கூனிக்குத் தவறிழைக்காதவன்(14). சந்தர்ப்பம் அல்லது சூழ்நிலை காரணமாகத் தவறிழைப்பவர்களைச் சார்ந்தவள் கைகேயி(17).

கூனி கைகேயியின் மனதினை மாற்றும்போது மீண்டும் மீண்டும் இராமன் பெயரைக் கூறிக்கொண்டு அவனுல் இடர் விளையும் என்று கூற விரும்பவில்லை. எவ்வளவு தூரம் கைகேயி மனம் மாறினுள் என்பதைச் செவ்வையாக அறிந்து கொள்ளு முன்னர்க் கூனி இதனைச் செய்ய விரும்பவில்லை. ஆதலின் இராமனை விட்டுவிட்டுச் சுற்றி உள்ளவர்களால் விளையும் தீங்கு பற்றியே பேசுகிருள்(52). அவளுடைய தாய்மை, பிறந்த வீட்டுப் பற்று, எதிர்காலத்தைப் பற்றிய ஏக்கம், சக்களத்தியின் செல்வாக்கில் ஏற்பட்ட காழ்ப்பு, கணவன் அன்பில் கொண்ட ஐயம் என்ற இத்தனையுஞ் சேர்ந்து அவள் தூய சிந்தையையும் திரித்து விட்டன(36). கேவலம் கூனியின் மொழியால் கைகேயி மனம் மாறினுள் என்பது கைகேயிக்கு மிகத் தாழ்வு எனக் கருதியே கம்பன் பிற காரணங்களையும் கூறுகிருன்(38).

மனைவி கணவனிடம் கேட்கும் அனைத்தையும் தந்து தீர வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. எனவே கைகேயி கணவனிடம் மனைவி கேட்கும் நிலையில் பேச விரும்பவில்லை. இதனை மன்ன என்ற சொல் தெளிவாக்குகிறது(43). தான் விளைத்த செயலின் எதிர்பார்த்ததும், எதிர்பாராததுமான பயன்களைக் கண்டு அவளே நடுங்கிவிட்டாள். இந் நடுக்கத்தால் ஓரளவு உணர்ச்சியைக்கூட அவள் இழந்துவிட்டாள் என்றே எண்ண வேண்டியுள்ளது(52). இராமன் முடிசூடப் போகிருன் என்பதறிந்த கோசலை, சுமித்திரையுடன் திருமால் கோயில் செல்வது ஐயத்திற்கு இடமளிக்கிறது. கைகேயிக்குத் தசரதன் கூறியிருப்பான் என்பதாலா அன்றி அவள் அவ்வளவு மகிழ்ச்சியடைய மாட்டாள் என்பதாலா அவளுக்குத் தெரிவிக்கவில்லை(64).

கோயிலில் வழிபடுவது ஐயத்தை மிகுவிக்கிறது. ஏதேனும் இடர் வருமென அவள் மனதில் ஐயம் இருந்து வந்தது(65). முடிபுனைவதற்கு இடையூறுண்டோ என்பதில் தசரதனைச் சந்தேகிக்கவில்லை(78). இராமன் கூறிய உடனேயே இவ்வாறு பரதனுக்கு முடியைப் பெறக்கூடியவர் யார் என்பதைக் கோசலை

ஊகித்துவிட்டாள். எனவேதான் தசரதன் ஆணை இடாவிடினும் என்று கூறுகிருள் (82). தாயாகிய கோசலை கூட இராமனை முற்றி லும் உணரவில்லை(92). பன்னெடு நாட்களாகவே தசரதன் கைகேயியிடத்துக் கழிபெருங் காதல் கொண்டு அவளிடமே தங்கி விட்டாலும் கோசலைக்கு அவன் மாட்டு இருந்த காதல் சற்றுங் குறையவில்லை(94). கைகேயியிடம் ஒரு வார்த்தை வேண்டவில்லை. சொல்லி வாய் இழப்பதைக் காட்டிலும் சொல்லாமலே தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்கிருள் அப்பெண்ணரசி(96).

ஒன்றன் மேல் ஒன்ருக எல்லையற்ற துன்பங்கள் வந்து மோதினவுடன் அம்மங்கை நல்லாள் நடுவுநிலையுடன் ஒன்றை ஆராயும் இயல்பை இழந்துவிட்டான் போலும். அன்றேல் பரத னும், இராமன் காடு செல்லக் காரணமோ எறன் எண்ணங் கொள்ளக் காரணம் இல்லை(103). எல்லை மீறிய தாயன்பே இதற்குக் காரணம். கோசலையும், சுமித்திரையும் தசரதனுல் அதிக மாகக் கவனிக்கப்படாததாலேயே இருவரும் இணைந்து நெருங்கிய அன்புகொண்டு நிற்கின்றனர். 'அரசனை யான் பொய்யனுக்க விரும்பவில்லை'(120) எனும் இராமன் கூற்ருல் நிகழ்ந்ததை ஊகித்துவிட்டாள் சுமித்திரை. சுமித்திரையைப் பொறுத்த வரையில் இராமனே மன்னவன். அவன் காடு சென்ருலும் கவலை யில்லை. பிறரைப்பற்றி ஒரு வார்த்தைகூடக் குறையாகவோ, பழி யாகவோ கூருமல் தன் மனக் கருத்தைச் சந்தர்ப்பம் வந்தபோது அழுத்தமாகக் கூறும் இம்மாதரசியின் வன்மை சிந்திக்கத் தக்கது(128). இலக்குவனுக்குக் கூறும் உரையால் அவள் கோசலை யினும் மேம்பட்டவளாகத் தோன்றுகிருள்.

வான்மீகியுடன் வேறுபடுமிடங்கள் சிலவற்றையும் சுட்டியுள் ளார்.

358. **இராமகாதையின் திருப்பு முனைக்கு உதவும் கொடிய பாத்திரங் களில் தலையானவர் யார்? (கூனியா? கைகேயியா? சூர்ப்ப ணகையா?) (67—75)**

பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் மு. ப. 1966

திருப்புமுனைகளாக அமைந்துள்ள அவர்களின் கொடுமை நிலைகளை முதலில் வடித்துப் பின், சூர்ப்பணகை இராவண வதத்தை முடித்து வைப்பது கொடிய செயலல்ல. கெட்டவன் ஒருவன் அழிவதனுல் துன்பியல் முடிவு ஏற்படுவதில்லை. நல்லவன் ஒருவன் துயர் அடைவதனுலேயேதான் ஏற்படுகிறது. கைகேயி யைத் தூண்டுவதோடு கூனியின் கொடுமையும் நின்றுவிடுகிறது. கைகேயியோ கணவன் உயிருக்கே உலை செய்த பின்னும் இட ரறியா முகத்தளாக வாழ்கிருள். எனவே கைகேயியே கொடிய வள் என்று இறுதியுரைக்கிருர்.

**359. இராம சேவையில் தலைநின்றவர் யார்? (இலக்குவனா? அனுமனா? விபீஷணனா?)** (33—43)

*பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்*

*முதற்கண் மூவரின் சேவைகளையும் எடுத்தியம்பி, விபீடணன் நீதியால் வந்த நெடுந்தரும நெறியில் நிற்பவனாகை யால் இராமன் ஒருகால் ஏதாவது தவறு செய்துவிட்டால் அவனை யும் விட்டு ஓடத் தயாராக இருப்பவன். இராமனுக்குச் சேவை செய்வதன் மூலம் வீட்டரசு கிடைக்கும் எனற எண்ணம் உடையவன். அனுமன் இராமசேவை செய்கிறவன் என்பதி லேயே பெருமை கொள்பவனாக வாழ்கிறான். ஆயின் இலக்குவன் தன் சேவையை விளம்பரப்படுத்தவில்லை. வைணவர்கள் கைங் கர்ய லட்சணம் இதுவே. ஆகவே இவனே சிறந்தவன் என்று முடிவு செய்கிறார்.*

**360. உடன் பிறவாத் தம்பியரில் உயர்ந்த தம்பி யார்? (குகனா? சுக்கிரீவனா? வீடணனா?)** (20—32)

*பட்டிமண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்*

*குகன், சுக்கிரீவன், விபீடணன் ஆகியோர் தம்பியான வரலாறு முதலில் கூறுகிறார். பின் சுக்கிரீவன் காரியவாதி. காரியம் முடிந்தவுடன் நன்றி மறந்தவன். விபீடணனுக்கு நீதிக் குப் பின்தான் பாசம். எனவே இருவரும் உயர்ந்த தம்பியாக முடியாது. குகன் உளங்கலந்த அன்புடையவன். பரதன், சீதை, கோசலை ஆகியோரும் இவ்வுறவைப் புலப்படுத்துகின்றனர். ஆகவே குகனே சிறந்த தம்பி என்கிறார்.*

**361. தம்பியரிற் சிறந்தவன் யார்? (இராமன் தம்பி பரதனா? வாலி தம்பி சுக்கிரீவனா? இராவணன் தம்பி விபீஷணனா?)** (10—19)

*பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்*

*முதலில் பரதனின் சிறந்த பண்புகள், சுக்கிரீவன் வரலாறு, சாதியால் வந்த சிறு நெறியை உடன் பிறப்பால் ஏற்படும் பாசத்தை எல்லாம் உதறத் தெரிந்து நீதியால் வந்த நெடுந்தரும நெறியில் நிற்க முனைந்த விபீடணன் நிலை ஆகியவற்றைச் சுருங்கக் கூறி, சுக்கிரீவன் அண்ணனைக் கொல்விக்க வழிதேடியதால் சிறந்த தம்பியாக முடியாது. நன்றி மறந்து காமக் களியாட்டத் தில் ஈடுபட்டதால் சிறந்த பண்பில்லை. விபீடணன் தானே 'எப் போது அண்ணன் வழி தவறிச் சென்று விட்டானோ அதன்பின் நான் அவன் தம்பி அல்ல', என்று கூறியதால் தம்பி அல்ல என்று கூறி, எத்தாயர் வயிற்றில் பின் பிறந்தார்கள் எல்லாம் ஒத்தால் பரதன்போல் பெரிதும் உத்தமன் ஆவதுண்டோ என இராமன் வினவுவதையும், வரதுங்கன் மனைவி பாட்டையும் கூறி, பரதனே சிறந்தவன் என்ற முடிவிற்கு வருகிறார்.*

362. **தாயன்பில் தலைசிறந்தவர் யார்? (கோசலையா? கைகேயியா? சுமத்திரையா?)** (44—54)

*பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்*

*மூவரின் அன்பு நிலைகளையும் கூறி உண்மையிலேயே இப்படித் தன் மகன், மாற்றாள் மகன் என்ற வேற்றுமையே இல்லாத அன்பு காட்டுகிற தாயர் மூவரை உருவாக்கிய பெருமை கம்பனுக்குத்தான் உண்டு*(51). *கைகேயி தன் மகனுக்குத் தீராத பழி தரும் காரியத்தைச் செய்கிறாள், கணவன் உயிரைக் குடிக்கும் காலனாகிறாள். சுமத்திரையை உயர்ந்த பண்பும் தியாக புத்தியும் உடையவள் எனப் பாராட்டலாம் ஆனால் சிறந்த தாயாக முடியாது. கோசலை அறிவோடு கலந்த அன்புடையவளாதலால் தன மகன் மாற்றாள் மகன் என்ற வேறுபாடுணர்ந்தும் அதனை மாற்றி அன்பில் நிலைத்து நின்றாள். கைகேயி உணராததால் சூழ்ச்சியால் தடுமாறுகிறாள். கோசலை பரதனிடம் 'கேகயர் கோமகள் இழைத்த கைதவம் ஐய! நீ அறிந்திலை போலும்' என்று கேட்டதால் பரதனையும் ஐயுறுகிறாள் என ஊகிக்கலாமே தவிர அப்படித்தான் என்று உறுதி கூற முடியாது. ஏதோ தகவல் அறியக் கேட்ட கேள்வியாகவும் இருக்கலாம். எனவே இவள் அன்பே இறுதிவரை நிலைத்து நின்ற தாயன்பு என்று கூறுகிறார்.*

363. **Kambaramayanam (Portrayals and Hiranya Vadai Padalam)**

V. S. Mudaliyar

First ed. May, 1968; 67; Rs. 2

Sita 1—19, Rama 20—41, Lakshmana 42—51, Hiranya Vadai Padalam 52—67 (Translations of selected Poems)

The most striking thing about Sita, apart from her Karpu (chastity) is her unique Beauty which defies comparison and even description(1), The forest has no terrors for her so long as she is in Rama's company. In fact she thinks that all this life of exile is going to be so much fun(5). Asking of the false deer is an irony of fat.(6). In depending her chastity Sita rises to supreme heights of daring and courage(8). She forgets all that Rama had said so unjustly about her in the last. There is not a trace of displeasure, not to speak of ill feeling towards him. Rama remains as ever her hero(9). By describing the events of Rama's and other's actions when he went to the forest and his request to his father after the wars, the auther says that none but a Purushothaman can show such poise and equanimity such composure and serenity in the face unparalled misfortune and such for bearance and consi-

derateness towards the person who robbed him to his crown and sent him into exile(30). He also explains how Guha, Sugriva and Vibhishana were becomes Rama's brothers. Lakshmana is not only Rama's ever present companion, guard and servant he is also the scont who scents dangers ahead, sees through ruses and gives timely warnings(44). Next to Rama the greatest warrior that one comes across in the Ramayana is beyond question Lakshmana(47).

**364. கம்ப இராமாயணத்தில் தாயர் மூவர்**

*பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், பக். 59*

*கம்பரின் பெருமை-கோசலை-கைகேயி-சுமத்திரை முடிவுரை.*

*கோசலை குணமெனும் குன்றேறி நின்றவள் என்ற காரணத்தினால் அவளுடைய புகழ் வைணவப் பிரபந்தங்களில் சிறப்பித்துப் பேசப்படுகிறது. யசோதை கண்ணனால் பெருமையடைய கோசலை தன் பெருமையை இராமனுக்கு அளிக்கிறாள். இராமனது அடக்கம் தாயினிடமிருந்து பெற்ற மூலதனம். கோசலை பதிவ்ரதை என்றால் கைகேயியைப் பதிப்ரியை எனலாம். கோசலை அவல நிலையின் முதல் நிலை தன் கணவனின் உள்ள அமைப்பைப் பற்றியதென்றால் மற்றொன்று தான் நீண்ட காலம் புத்திரப் பேறின்றி வாடியிருந்த நிலை பற்றியதாகும். ஆனால் கோசலையின் அவலநிலை நன்கு வெளிப்படுவது இராமன் கானகம் செல்ல வேண்டிய நிலை வந்தபோது தான். இதனால் இதுவரை மேலோங்கி நின்ற பத்தினிப் பண்பு, தாய்ப்பாசத்தினால் அமுத்தப் படும் நிலையை அடைகிறாள்.*

*இராமன் கற்பினை வலியுறுத்தி அவளை மீண்டும் கற்பின் சிறப்பில் ஒளிவிடச் செய்கிறான். நீண்டகாலம் பிரிந்திருந்த தயரதனும் கோசலையும், தயரதன் இறப்பதற்கு முன்னர் ஒருமனப் பட்டு ஒன்று சேருகின்றனர். மைந்தீர் என்று குகனையும் சேர்த்து அழைத்தது தாய்மையின் முதிர்ச்சியையே காட்டுகின்றது. இங்கே இராமனின் தாய் உலகின் தாய் ஆகிவிட்டாள். கைகேயியின் திருமணத்தின்போது கோசல நாட்டைத் தயரத மன்னனுக்குக் கேகய மன்னன் மனம் உவந்து சீதனமாக அளித்தான். கைகேயி பரதனைப் பெற்றதால் அவளுடைய தாய்மைக்கு மிக்கச் சிறப்பு ஏற்படுகிறது. தாயின் தவறை உடனே திருத்திக் கைகேயியின் தாய்மையைத் தூய்மை கெடாமல் காத்தான். கைகேயியின் திடீர் மனமாற்றம் மான உணர்வாலும் அச்சத்தினாலும் ஏற்பட்டது. அவளை ஆட்டி வைத்தவள் கூனி. கைகேயி தன் இயல்பு மாறிச் செய்தது விதியின் விளையாட்டேயன்றி அவளுடைய குறையன்று. கூனியிட்ட நஞ்சிற்குப் பரதனுரை மாற்று*

மருந்தாக அமைந்தது. இராமாவதாரத்தின் குறிக்கோள் நிறை வேற்றத்தை ஏற்றது அவளுடைய சீர்மையாகும்.

சுமித்திரை என்ற பெயருக்கு வடமொழியில் 'நல்ல தோழமைப் பண்பு கொண்டவள்' என்பது பொருள். அவள் வயிற்றில் தோன்றிய இரு புதல்வர்களும் சேவையின் உருவாகத் திகழ்ந்தார்கள். சுமித்திரையும் கோசலையும் சத்துவ குணத்தின் இலக்கணம் இராமன் பிரிவால் வருந்தும் தயரதன், கோசலையை ஆற்றுவிக்கக் கூடியவளாகிய சுமித்திரையே இராம அவதாரத்தின் சிறப்பை உணர்ந்திருந்தாள். இலக்குவனை இராமனுடன் அனுப்பி மற்றொரு வகையில் விதியின் போக்கிற்கு உதவுகிறாள். சுமித்திரையை ஒரு வேதாந்தியாகவே கம்பன் படைத்திருக்கின்றான். வான்மீகி தாயர் மூவரையும் இத்துணைத் தெளிவாய்ப் படைக்கவில்லை கம்பனில் காணும்பொழுது தமிழ்நாட்டுத் தாயர் நினைவிலெழுகின்றனர்.

365. **கம்பர் கண்ட கற்பரசியர் மூவர்**

பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், பக். 58

தோற்றுவாய் - கவிஞர் பாத்திரப் படைப்பின் நோக்கம் - சீதை - மண்டோதரி - தாரை - முப்பெரும் பெண்டிர் - ஓர் ஒப்பு நோக்குக் கண்ணோட்டம் - கம்பர் கால மகளிர் நிலை - முடிவுரை.

மூன்று வேறுபட்ட இனத்தில், சூழலில் வாழும் சீதை, மண்டோதரி, தாரை ஆகியவர்களிடம் கம்பர் நிலைநாட்ட விரும்புவது பெண்மையை, மாசற்ற கற்பையே ஆகும். கம்பர் சீதையின் புறஅழகைப் போற்றிப் பல்லாண்டு பாடுவதும் அக அழகின் மேன்மையைக் காட்டுவதற்கே என்றுகிறது. அவள் தன் மூத்தோர்க்குக் கொடுக்கும் மதிப்பும் பெருமையும் அவளது பணியின் மேன்மையைத் தெளிவாக்குகின்றன. அயலான் அகத்துச் சீதை காட்டியது பொறுமை. பெண்களைப் பற்றியே அறியாத அனுமனையும் தலைவணங்கச் செய்தது இவளது கற்பின் வலிமையே. சீதையின் கற்பு இறைமைக் கற்பாகிறது.

தயரதன் இறந்தவுடன் அவன் மனைவிமார் யாரையும் உடன் இறந்ததாகக் காட்டாத கம்பர் அரக்கர் குலப் பெண்ணிற்கு அவ்வுயரிய பேற்றை நல்கி, எல்லோரினும் அவளை உயர்த்துகிறார். ஒப்பற்ற மனைவியின் புலம்பலை இராவணன் இறந்ததும் விளக்குகிறார். கொண்டவன் சொல்லுக்கு எதிர்ச்சொல் சொல்லாத மண்டோதரி சாதல் அஞ்சாத ஆனால் 'இறப்பின், பிறப்பின் பிறிதாகித்தன் காதலன் மறப்பானே என் பதற்கஞ்சும்', சங்க காலப் பெண்ணின் வழிவந்த நங்கையாக, கணவனைக் காமுகனாக இறக்க விடாமல் வீரவுணர்வெழச் செய்த வீரப் பெண்ணாக ராமாயணத்தில் ஒரு திருப்பு மையத்தைத் தோற்றுவித்த பெருமை மிக்க பெண்ணாகத் திகழ்கிறாள்.

எந்த உலகைப் படைப்பினும் அங்கு மானிட உணர்வின் போராட்டங்களே இடம்பெறுமாறு செய்வது கம்பரின் கவினுர் திறம். காமம் கருதி, இடனறிந்து ஏற்றதுரைக்கும் அமைச்சனுய், அன்பு, அறிவு, ஆராய்ந்த சொல்வன்மையுடன் பேசுகிருள் தாரை. மகனுக்காகக் கைம்மைக் கோலம் பூண்டு, சிலம்பின் மாதவியை நினைவூட்டுகிருள். தன் கணவன் தவறு கண்டு விட்டாஞே எனக் கவலும் தாரையிடம் சிறந்த மனைவியின் மனப்பாங்கைக் காண முடிகிறது. மனம் செல்லும் வழியெல்லாம் செல்லும் குரக் கினத்தில் கூடச் சிதையாமனமும், சிறக்கும் சிந்தையும்கொண்டு வாழலாம் என்பதற்கு எடுத்துக்காட்டாய் விளங்குகின்ருள்.

வடமொழியில் திருமணக் காலங்களில் ஓதப்படும் மந்திரங் களுள் ஒன்றில் சீதை, தாரை, அகலிகை, திரௌபதி, மண்டோதரி ஆகிய ஐந்து பெண்களும் கற்பில் சிறந்த உத்தமியர் என்று நினைவூட்டப்படுகின்றனர். சிலப்பதிகாரம் பெண்மையைப் பெரிதும் எடுத்துப் பேசும் பேரிலக்கியமாக விளங்கியதென்ருல் கம்பருடைய காப்பியமோ பெண்மை நோற்று உயர்ந்து பேரருள் விளக்கம்பெறச் சீதையெனும் தவப்பெருந்தையலைப் படைத்துக் காட்டி, வழிவழி பெண்ணின் நல்லாள் பெருமை போற்றும் சமு தாயமே மண்ணின் நல்லவண்ணம் வாழும் மாபெரும் சிறப்பிற் குரியது என்பதனை நிலைநாட்டுவதாக அமைகிறது. கற்புடைய ராய் நற்பாலொழுக்கம் உடையவராய் நிறைபெற்று, விருந்து புறந்தந்து சுற்றம் ஓம்பிக் காத்த அம்மகளிரிடம் பண்புகள் எல்லாம் அடைக்கலம் அடைந்தன. பாலைவனமாய்ப் பயனற்றுப் போகாமல் சோலைவனமாகும் சூழ்நிலையைத் தந்தமைக்கும் பெண்டிர் நிறைந்த நாடு கம்பர் கண்ட நாடு.

### 366. கம்பனில் தம்பியர் மூவர்

சு. இராமசுப்பு

பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம். பக். 70

முன்னுரை - குகன் - சுக்கிரீவன் - விபீடணன் - தம்பியர் மூவர் - முடிவுரை.

மிக்க அடக்கத்தோடும் வினயத்தோடும் பேசும் குகன் பண்பின் சிகரமேறிக் குணக்குன்ருகத் திகழ்கின்ருன். காட்டில் வாழும் வேடனுக்குரிய பரிவு, பெற்றதந்தைக்கு இல்லாது போயிற்றே என வருந்தி, அன்புகாட்டும் ஆண்பாலாகிய குகனைத் 'தந்தை போன்றவன்' எனக் கூறத்தயங்கி, 'தாயினும் நல்லான்' என இலக்குவன் கூறுகின்ருன். குகனது உள்ளத் தூய்மையும் அளவற்ற அன்பும் தன்னை மெய்மறக்கச் செய்கின்றமையால் அவனது மனநிலைகொண்டு நோக்கத்தான் அக்காணிக்கையை ஏற்றுக்கொண்டதாகவே குகன் கொள்ளலாம் என்று இராமன்

கூறுவது அன்பு என்ற சொல்லுக்கே இலக்கணம் வகுத்தது போன்றுள்ளது.

வைணவப் பெரியோர் சிலர் இலக்குவன் மேல் நம்பிக்கை யின்மையால் குகனும், குகன்மேல் நம்பிக்கையின்மையால் அவன் சுற்றமும் காத்து நின்றனர் என்றதோர் கருத்தைக் கொண்டனர். ஆனால் அவ்விதம் கொள்வதற்கு எந்தவிதமான ஆதாரமுமில்லை. இராமன்பால் மட்டற்ற அன்பு செலுத்தும் அனைவரும் அந்த அன்பின் காரணமாகவே, தங்கள் தங்கள் கடமையை ஆற்றுமுக மாகவே காவல் தொழிலை மேற்கொள்கின்றனர் எனக் கோடலே சிறப்புடையதாகும். தந்தையின் மீதும் கைகேயியின் மீதும் அதன் காரணமாகப் பரதன் மேலும் அளவற்ற கோபம் கொண் டுள்ள இளையவனிடம், பரதனைப் பற்றிய நற்சான்றிதழ் பெறு வது குகனால் இயலாததொன்றேயாம். எனவே முன்பின் யோசிக் காமல் பரதன்மேல் தவறான எண்ணம் கொண்டுவிட்டான் குகன். கைகேயியையும் தாயென உள்ளம் நெகிழ்ந்து வணங்கும் குகன் மனிதப் பண்போடு பெருமை மிக்கத் தோன்றலாகக் காட்சியளிக் கின்றான்.

வைணவப் பெரியோர்கள் 'குகப் பெருமாள்' என்று கூறும் உயர் பதவிக்குத் தன் அன்பாலும் பண்பாலும் உயர்ந்து நிற்கிறான் குகன். பிரதிபலன் எதிர்பாராது அன்பு பாராட்டி அருந்தவ நிலை யைக் குகன் கொண்டான். ஆனால் சுக்கிரீவன் இராமனை வந்த டைந்தது சாதாரண உலக வழக்கிற்கு உட்பட்ட தன்மைத்தாக உள்ளது. 'தீயரேயாயினும் உன் நண்பர்கள் என் நண்பர்கள்' என்று இராமன் பகர்வது அவர்கள் நட்பின் வலியைப் புலப் படுத்துகிறது. சுக்கிரீவன் களங்கமற்ற உள்ளத்தனாகையால் இராமனால் வாலியை வீழ்த்த முடியுமா? எனும் தன் ஐயத்தை வெளியிடுகின்றான். தன் துயர் பெரிதென வெண்ணாது பிறர் துயர் துடைக்க முற்படும் பெருங்குணத்தைச் சுக்கிரீவனிடம் காண்கிறோம்.

இராவணனுக்கு உள்ளபடி கூறும் உயரிய நண்பனாக விபீடணன் செயல்படுகிறான். அதனால் அறிஞர்க்கெல்லாம் அறிஞர் என்ற ஏற்றம் பெறுகிறான். தன் தமையனிடம் ஆதரவு அற்ற நிலையில் இராகவன்பால் அடைக்கலம் அடைவதைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லை. எதிரியின் பாசறையிலிருந்து வந்த வன் எனக் கருதித்தான்போலும் கருணை வள்ளலாகிய இராமனும் உடனே அபயம் அளிக்கத் தயங்குகிறான். மந்திராலோசனை செய்த பின்பே முடிவு செய்யவேண்டிய அரசியல் காரியமாகுமிது. அனுமன் கூறுவதுபோன்று இலங்கையரசை நாடி விபீடணன் வரவில்லை. வீடுபேறுதான் இராமனிடம் வேண்டினான். இதனால்

வீடணனையும் ஆழ்வாருள் ஒருவராக அமைத்து வழிபடுகிறது வைணவ உலகம்.

367. **வீரமாநகர்**

ரா. பி. சேதுப்பிள்ளை

எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை, பப்ளிஷர்ஸ், திருநெல்வேலி, மு. ப. 1932; இ. ப. 1949; மூ. ப. 1950; நா. ப. 1951; ஐ. ப. 1952; ஆ. ப. 1957; ஏ. ப. 1964; 5+112; ரூ. 1-50

வெ. ப. சுப்பிரமணிய முதலியார் முகவுரை வழங்கியுள்ளார். வீரமாநகர், வீணைக்கொடியோன், அரக்கர் பேராண்மை, இலங்கை வேந்தனும் கழுகின் வேந்தனும், அரக்கரும் அமரரும், இருவகை அமைச்சு, வாரணம் பொருத மார்பன், மானவீரன், வில்லின் செல்வன், இலங்கை அறிஞன், தென்னிலங்கைத் தெய்வம், இலங்கை அணங்கு, அரக்கர்கோன் தங்கை, சிறையிருந்த செல்வி, அறமும் மறமும் முதலிய பதினைந்து கட்டுரைகள் கொண்டது இந்நூல்.

முதல் கட்டுரையில் இராவணன் பெருமையையும், அவன் சிவனை வழிபட்டதை நாயன்மார்கள் போற்றியுள்ளமையையும் கூறுகிறார். இவ்வேந்தனுக்கு இராவணன் என்னும் பெயர் இறைவனால் அருளப்பெற்றது என்பதற்கு, கும்பகர்ணன் வதைப் படலத்தில் உள்ள ஓர் பாடலில் 'பண்டைத்தன் நாமத்தின் காரணத்தைப் பாரித்தான்' என்னும் அடியைச் சான்றுக்குகிறார்(3). இசைக்கலையில் அளவிறந்த ஆர்வமுற்று இசைக் கொடியில் இசைக்கருவியை எழுதியமைத்த பெருமை அவ்வீரனுக்கே உரியதாகும்(10) என்று அடுத்த கட்டுரையில் கூறுகிறார். அரக்கர் வீரத்தன்மையை 'அரக்கர் பேராண்மையில்' புகழ்ந்து சடாயுவின் ஆற்றலை 'இலங்கை வேந்தனும் கழுகின் வேந்தனும் என்னும் கட்டுரையில் வியக்கிறார்.

அரக்கர் அழிவின் போது தேவர் அரசர் முன் போலிக் கண்ணீர் வடித்ததை, நெஞ்சகத்து அன்பு நிறைந்த அவர் துயரமும், வஞ்சமனத்தவர் போலித் துயரமும் புறத்து ஒன்றாகவே தோன்றும், என்பதற்கு அமரர் செய்கையே அமைந்த சான்றாகும்(30) என்று மொழிகிறார். இருவகை அமைச்சில் இராவணன், தசரதன் ஆகியோரின் அமைச்சைக் குறிப்பிடுகிறார். இராவணன் வாரணம் பொருததனைப் பல இடங்களில் கம்பன் சுட்டியுள்ளதைக் காட்டி அத்தகையவன் முதல்நாள் போரில் அனுமனிடமும் எளிமையெய்திப் பெருமை குன்றி நின்றதை 'வாரணம் பொருத மார்பனில் குறிக்கிறார். கும்பகர்ணனின் சிறப்பியல்புகளை மானவீரனில் ஓதுகிறார். மேகநாதனின் வீரத்தையும்

அவனது போர்ச் செயல்களையும் 'வில்லின் செல்வன்' எனும் கட்டுரையாக்குகிறார்.

இலங்கை அறிஞனில் இராவணன், கும்பகர்ணன், அனுமன், இராமன், மேகநாதன் ஆகியோர் எண்ணம்போல் விபீடணன் இராமனிடம் அரசுக்காகச் செல்லவில்லை. அறத்திற்காகத்தான் சென்றான். கும்பகர்ணனுக்கு அரசை நலகுவதும், இராமனிடம் உள்ள கனிவும் சான்றாகும் என்கிறார். மண்டோதரியின் கற்புத் தன்மையை, பெருமையைத் தென்னிலங்கைத் தெய்வத்தில் பேசுகிறார். சீதைக்குச் சிறந்த துணையாக திரிசடை விளங்கியமையால் இலங்கை அணங்கானமையை இலங்கை அணங்கில் காட்டுகிறார். அரக்கர்கோன் தங்கையில் சூர்ப்பணகை தன் கணவன் இறக்க அரற்றிய சொற்களில் பழிவாங்கும் தன்மை உள்ளது. இராவணனைக் கொல்வித்த பணியும் அவளுக்கே உரித்தாயிற்று. இதனை இராவணன் வீழ்ந்தவுடன் அரற்றும் விபீடணன், மண்டோதரியின் (இராவணன் வதைப்படலம் 223, 230) கூற்றுகள் உறுதிப்படுத்துகின்றன என உரைக்கிறார்.

இராவணன் மனச்சிறையில் சீதை இடம் பெற்றிருந்தமையைக் கூறுகிறார். அகச்சிறையிலிருந்து அம்பினை ஏவியும், புறச்சிறையிலிருந்து அனுமனை ஏவியும் இராமன் மீட்டான். மண்டோதரி அரற்றலிருந்து இராவணன் மனச்சிறையிலிருந்து சீதை மீண்டாள் என்பது உறுதிப்படுத்தப்படுகிறது, முதலிய கருத்துகள் கொண்டது சிறையிருந்த செல்வி எனும் கட்டுரை. இறுதிக் கட்டுரையில் இலங்கையின் வளம் கூறி அங்கு அறம் இல்லை என்று கம்பன் கூறியிருப்பது சிறப்பு. அறநெறி திறம்பியதால் அது அழிந்தது. எப்பகையினும் அறப்பகை கொடிது என்பது அரக்கர் அழிவுற்ற கதையால் இனிதறியப்படும் என்று கூறி முடிக்கிறார்.

எளிமையும், தெளிவும் கொண்ட நடையில் கட்டுரைகள் அமைந்துள்ளன.

### 368. கம்பன்கலை நிலை

ஜெகவீரபாண்டியனார்

இந்நூல் 15 பகுதிகளைக் கொண்டது, முதல் பகுதியில் பொது நிலையில் கவிகளின் பெருமை, நிலை, தேவை இவற்றைக் கூறிப் பின் கம்பரின் சரித்திரம் கூறுகிறார். பெருமான் வீரவர்மன் என்னும் குறுநில மன்னனுடைய மகன் என்றும் தாய் அம்பிகா என்றும் கூறுகிறார். கம்பர் பிறந்தவுடன் அவர் தாய் இறக்கவே உவச்சன் எடுத்து அவரை வளர்த்தான். காளியின் அருள் பெற்றுக் கவிஞரானார். மனைவியார் தருமவல்லி ஆவர் என்றும் கம்பர் வாழ்ந்தகாலம் கி. பி. 830-900 என்றும் இராமாயணத்தை

அரங்கேற்றியது கி. பி. 885இல் என்றும் நவில்கிறார். கம்பர் கவியின் பெருமையுரைகளையும் தந்துள்ளார்.

பாலகாண்டம் முதலாக யுத்தகாண்டம் வரையிலான கதைக் குறிப்புகளைத் தந்துள்ளார் இதற்குப்பின் கம்பன் கலைநிலையை விவரிக்கிறார். இதில் ஒவ்வொரு பாத்திரத்திற்கும் நூலிலிருந்து தொகுத்த பாடல்களைக் கொடுத்து விரிந்தவுரை கூறுகிறார். ஒவ்வொரு அதிகாரமும் முடிந்தபின் அவ்வதிகாரத்தில் கூறப்பட்டுள்ள குறிப்புகளைத் தொகுத்து சுருக்கமாகத் தருகிறார். தொகுக்கப்பட்டுள்ள பாடல்களுக்குத் தலைப்பு, மேற்கோள் முதலியன காட்டுகிறார். இந்நூலுக்கு, ஸ்ரீ பொன்னம்பலசிவம், நா. கிருஷ்ணசாமி நாயுடு, மீ. சொக்கலிங்கம் பிள்ளை. ஏ. ஆர். சுப்பையா, வெ. செ: சொக்கலிங்கம் பிள்ளை ஆகியோர் சிறப்புப் பாயிரம் வழங்கியுள்ளனர். இந்நூலின் பகுதிகள் தனித்தனியே முறையே 1957. (இ-ப), 1943, 1943, 1945, 1946—, 1948, 1949, 1950, 1951, 1152, 1954, 1955, 1957, 1858 ஆகிய ஆண்டுகளில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

**369. கம்பர் காட்டும் பெண்கள் (91—99)**

உரைநடை விருந்து: கா. பொ. இரத்தினம்; வடஇலங்கைத் தமிழ் நூற் பதிப்பகம்; சுன்னாகம்; நா. ப. 1955; ரூ. 2-25

சீதையை இலட்சியப் பெண்ணாகக் காட்டுகிறார்(92). காட்டுக் குடன் வருவதாக இராமனிடம் பிடிவாதம் செய்தது, மாயமான் குரல்கேட்டு இலக்குவனை ஏசி அனுப்பியது ஆகியவற்றைப் பெண்களுக்குரிய இயல்பான குணமாகக் காட்டுகிறார். கோசலை, கைகேயி, கூனி, சூர்ப்பணகை, தாடகை, திரிசடை, மண்டோதரி ஆகியோரையும் அறிமுகப்படுத்துகிறார்.

**370. காவிய அரங்கில்**

அ. சீநிவாசராகவன்

பழனியப்பா பிரதர்ஸ்; சேப்பாக்கம்; சென்னை-5; மு. ப. 1956; 225; ரூ. 3-40

இந்நூல் நம்மைப்பற்றிய கவலை (1-8), அன்புவிளக்கு (9-26), கூனி தோன்றினாள் (27-37), பேசாத தம்பி(38-46), அதிசயக் கழுகு (47-69, துனியுறு முனிவன் (70-81) வேதாந்தப் போர்வை (82-94), அபூதபயங்கரம் (95-108), பிரிவு எனும் வேதனை (109-155) இரத்தினப்பரீட்சை (156-166), கரும்பாம்பு (167-192), கடல் கடைந்த கை (193-225) என்னும் 12 தலைப்புகளால் அமைந்துள்ளது. துணைத்தலைப்புகளையும் கொண்டது.

உள்ளத்தை உணர்ச்சி களஞ்சியமாகச் செய்துகொள்வது தான் பூரணமாக வாழ்வதற்கு வழி, பெறுவதற்குரிய வழி,

காவியப்பயிற்சி. காவிய உலகத்திலே சாவதானமாக மனிதத்துவத்தைக் காணச் சந்தர்ப்பம் கிடைக்கிறது. கம்பருடைய காவியத்தில் அணையாத அன்பு விளக்கு குகன். கூனி பொறுமையும் வஞ்சமும் நிறைந்தவள். நொண்டிக்காரணம் கற்பிக்கிறாள்—செகப்பிரியரின் இயாகோ. கொடுமை மட்டுமன்று, பிறர் மன இயல்பை அறிந்து அதன் பலவீனத்தைத் தாக்கி எப்படியும் மாற்றக் கூடிய சக்தியும் இருக்கிறது. இறுதியில் சத்துருக்கனின் பேச்சினின்றும் இதுவரை பேசாமல் இருந்ததும் தன்னைக் காட்டிக்கொள்ளாமல் அடக்கத்தோடு பரதனுக்குப் பின்னேயே நின்றதும் அவனுடைய அளவிலாத அன்பின் திறம் என்பதை உணர்கிறோம். தியாகத்திலோ, அன்பிலோ பேசாத தம்பி பேசுகின்ற தம்பியருக்குத் தாழ்ந்துவிடவில்லை.

கதைப்போக்கின் சுவையை மாற்றிக் காவியத்திற்கு உயிரும் ஓட்டமும் தரும் கருவியாக நிற்பவன் ஜடாயு. அழகுணர்ச்சி, தன்னைப் பற்றியே எண்ணாத நட்பின் கனிவு, அன்பே கடமையாகக் கொண்ட தருமநாட்டம், இதைக் காப்பாற்ற உயிரையும் விட முனையும் தீரம் - இவையெல்லாம் சேர்ந்து அவனுடைய வாழ்க்கையை ஞானி ஒருவனுக்கு அமையும் தெய்வ வாழ்க்கையாகச் செய்துவிடுகின்றன. மனித உள்ளத்தின் ஆழத்தையும், அதனுடைய விசித்திரமான கோணல்களையும் அறிந்தவன் விசுவாமித்திரன், பிரும்மரிஷிதான் என்றாலும் கோமளமான மனித உறவுகள், அவன் மனத்திலிருந்து பூரணமாக விலகவில்லை.

மாரீசனுடைய கடைசி மூச்சில் கூடப் பொய்யும் வஞ்சகமும் வெளிப்படுகின்றன. செத்தும் கெடுக்கும் பெருமை தீமைக்குத்தான் உண்டு. தன் நஞ்சையே விழுங்கிச் சாகும் பாம்பைப்போல, இராவணன் என்ற தீமை மாரீசன் மூலமாகத்தான் அழிவைத் தேடிக்கொண்டது. கவந்தனும் விராதனும் அபூதப் பயங்கரங்கள். ஆனால் கவந்தன் விராதனைவிட ஒருபடி மேல். இவர்கள் மனிதர்களுடைய பாதகத்திலிருந்து தான் தோன்றினார்கள். கயவர்களுடைய நெஞ்சிலே பதுங்கி, வெளிக்குத் தெரியாமல் திருவிளையாடல் புரியும் பாதகத்திலே, தமது கற்பனை ஒளியை வீசினார் வால்மீகி. கயவர்களின் மனிதவடிவம் மறைந்தது. அவர்களுடைய பாதகம் தனக்கேற்ற விகார வடிவத்தைப் பெற்றது. வால்மீகியைத் தொடர்ந்து கம்பர் பேசினார். பரதனோ பிரிவைத் தவிர வேறொன்றையும் அறியவில்லை. பிரிவு என்னும் பீழையின் ஆதிக்கத்தில் முதலில் இருந்து கடைசிவரையில் இருந்தவன் பரதன்.

கவிஞன் ஒவ்வொரு மனிதனையும் கையிலெடுத்து மதிப்புப் போடுகிறான். வைர வியாபாரி போன்றவன் கம்பன். தானமாலை, மண்டோதரி இருவரும் இராவணன் மனைவியர்தாம். ஒரேமாதிரி

புத்திரசோகம். ஒரே காற்றில் சவுக்கமரம் சலசலப்பதையும், மூங்கில் உடம்பைத் திருகிக்கொண்டு முனகுவதையும் போல் சோகப்புயலில் இருவரும் வெவ்வேறு வகை. தானமாலை இராவணனை ஏச, மண்டோதரிக்கு இராவணன் இறந்த பின்பும் அவனையும் அரக்கரையும் சுட்டெரித்த அவன் காமத்தீயைப்பற்றி 'இராவணனுர் காதல்' என்றுதான் பேசமுடிகிறது. சூர்ப்பண கையிடம் அடக்கம் இல்லை. இச்சையை நிறைவேற்றித் தடித்துப் போன மிருகத்தன்மை காணப்படுகிறது. பேச்சுச் சாதுரியம் உடையவள். மானப்பங்கப்பட்டுத் தவிக்கும் நிலையிலும் இருக் கிறது. இராவணன் ஒருவனைத் தவிர வேறு எந்தக் காவியப் பாத்திரத்திற்கும் வாலிக்குத் தருவதைப்போல் அவ்வளவு நீண்ட அறிமுகத்தைத் தரவில்லை கம்பர். தனக்குத் தெரிந்ததைத் தன் வாழ்க்கையோடு ஒட்டிப்பார்த்துத் தன் குற்றத்தை உணர்ந்து கொள்ளும் நிதானமும் அடக்கமும் வாலியிடம் இல்லை. முடிவடை யும் தருணத்தில் தான் வாலியின் வாழ்க்கை வீரமாகப் பொலி கிறது.

**371. கம்பர் காட்டும் மகளிர்**

எம். ராதாகிருஷ்ணபிள்ளை பி. ஏ., பி.எல்.

அல்லயன்ஸ் கம்பெனி; தபால் பெட்டி நெ. 617; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. மே 1958; 2+115; ரூ. 1-50.

கம்பரும் பெண்டிரும், கோசலை, கைகேயி, சுமத்திரை, தவத் தையல், அரக்கர் குலக்கொடி, தாரை, அகலிகை, மந்தரை, சபரி, மன்டோதரி, தாடகை, இலங்கிணி முதலிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

கம்பர் 10ஆம் நூற்றுண்டினர். வான்மீகருக்குக் குறைந்த பட்சம் 3000 ஆண்டுகள் பிற்பட்டவர் என்று முகவுரையில் கூறு கிருர். பெண்களை உயர்த்தும் நாடு உயரும் என்பது கம்பர் கொள்கை என்னும் ஆசிரியர் முதல் கட்டுரையில் கோசல நாட்டுப் பெண்டிர் பற்றியும், குறிப்பிடத்தக்க பெண்பாத்தி ரங்கள் பற்றியும் ஓர் சிறு குறிப்புத் தருகிருர். நான்கு பிள்ளை களையும் ஒன்ருய் மதித்தவள் கோசலை. இதற்கு மாருனவள் கைகேயி(7). முதலில் அயோத்தி அரசைப் பரதன் கவர்ந்து கொண்டான் என்று எண்ணி மனம் வருந்தியவள், அவன் உண்மை நிலையை அறிந்ததும் அவனை முடி மன்னர்க்கெல்லாம் மேலான மன்னனுக்குகிருள். இராமன் தாயானதால் குகனை ஏற்றுக்கொண்டாள். சாதிமத பேதம் பாராட்டவில்லை(12). தன் துன்பத்திற்குக் காரணமாயிருந்தவர்களையும் அவள் நொந்து கொள்ளவில்லை. கடமையே பெரிதென்று வாழ்ந்தவள் என்று கோசலை பற்றி உரைக்கிருர்.

சந்தர்ப்ப சூழ்நிலையே கைகேயியை மாற்றியது. கற்பென்னும் திண்மையில்லை(20). பொறுமையும் தன்னலமும் அவளைப் பரதன் ஏசும்படியான கதிக்கு ஆளாக்கின. இவை சாதாரண மனிதரிடம் காணப்படும் குணங்கள் தாமே என்று எண்ணும் போது அவளிடம் நம் அனுதாபம் அதிகரிக்கின்றது. இராமாயணக் கதைக்கு மூலவித்தாய் அமைந்தவள் கைகேயி என்பதை அறிந்ததும் அவளை மன்னித்து விடுகிறோம் எனக் கைகேயி பற்றி நவில்கிறார். இளைய தாரத்தின் மீதுள்ள மோகத்தால் இராமனைக் காட்டிற்கு அனுப்பினான் என்ற வசைச் சொல் தசரதனுக்கு ஏற்படக் கூடாது. சொன்ன சொல்லைக் காப்பாற்றவே அனுப்பினான் என்ற நிலை ஏற்படக் கம்பன் சுமத்திரையை மூன்றும் மனைவியாக்கினான்.

இலக்குவனுக்குக் கூறும் உபதேசத்தால் தியாக சிகரத்தின் உச்சியில் விளங்கி, கோசலையையும் மிஞ்சி விடுகிறாள். பெருங் குற்றவாளிகளுக்கும் தேவியருகில் இருந்தபொழுது ரட்சணம் கிடைத்தது. தனியனாய் இருந்து கரதூஷணாதியரை வதைத்தான். ஆனால் துணையிருந்துய அரும்பாடுபட்டே இராவணவதம் நிகழ்த்தினான். தஞ்சம் இன்னதென்று அறியாரையும், குற்றம் இழைத்தவர்களையும் ரட்சித்தாள் சீதை. கிருபாதிசயம், பாரதந்தரியம், அந்யயார்ஹ சேஷத்வம் இவற்றை ராமனைப் பிரிந்திருக்கையில் கடைப்பிடித்தாள் என அடுத்த கட்டுரையில் பேசுகிறார். சூர்ப்பணகையின் காட்சிகளை விளக்கிக் கம்பர் சூர்ப்பணகையின் சூழ்ச்சியால் இராவணன் இறந்து விட்டதாக வீபீடணன் வாயிலாகக் கூறுவதைச் சுட்டுகிறார். தாரை பற்றிக் கூறும் பொழுது, அமைச்சர்க்கேற்ற மதிநுட்பமும், கற்புடை நங்கைக்கேற்ற பண்புகளும் அவளை மாதர்குல மாணிக்கம் ஆக்குகின்றன என்கிறார்.

வாலிக்கும் தாரைக்கும் இடையில் நடக்கும் தர்க்கத்தின் மூலமாக இராமனுடைய சகோதர அன்பு வெளியாகிறது, என நவில்கிறார். 'பிழையில்லாதவளாகவே கம்பர் காட்டுகிறார். உலகோர் உண்மை உணராது சூட்டிய பழியைப் பொறுமையாகத் தாங்கி நின்றாள்'. இவையே அகலிகை பற்றிய ஆசிரியர் கூற்றாகும். அறிவுக்கடல், நட்புக்கு எடுத்துக் காட்டு, ஒரு துறவிக்கு வேண்டிய ஞான வைராக்கியம் கொண்டவள், எனத் திரிசடையைக் காட்டுகிறார். மந்தரை, பெண்களின் உள்ளத்தை நன்கு புரிந்தவள். மனோதத்துவம் அறிந்தவள் இராமனது அருங்குணம், பரதன், இலக்குவன் ஆகியோரது சகோதர வாஞ்சையும், சீதையின் கற்பும், அரக்கர் வீரமும் மந்தரையின் சூழ்ச்சியின் காரணமாக வெளிப்படுகிறது என உணர்த்துகிறார். சபரி பற்றிய கட்டுரையில் சுயம்பிரபை பற்றியும் பேசுகிறார். மண்டோதரி கற்புக்கனலி என மொழிகிறார். இறுதியில் சுரசை நல்

லெண்ணக்காரி ஆதலால் அவளுக்குத் துன்பம் இல்லாமல் அனுமன் வெளிவருகிறுன். அங்காரதாரை அரக்கியாதலினல் வயிற்றைக் கிழித்து வெளியேறி சூழ்ச்சியைச் சூழ்ச்சியால் வெல்கிறுன்(115) என்று கூறுகிருர்.

**372. கம்பன் கண்ட அமைச்சர்கள்**

இலக்கிய அமைச்சர்கள் : அ. க. நவநீத கிருட்டிணன்
கழகம்; மு. ப. 1959; மறுபதிப்புகள் மே 1960; ஜூன் 1960; ஜூன் 1962;ஜூலை 1963; மே 1965; மே 1966; மே 1967; ரூ. 1-50.

கம்பன் அமைச்சர் பற்றிக் கூறியுள்ள கருத்துகளை, தயரதன் அமைச்சர், அறிவும் திறமும், மதியும் மானமும், அறமும் அறிவும், உறுதியும் உரமும், மதியமைச்சரும் மருத்துவரும், தயரதன் மந்திரப் பேரவை, அரசன் கருத்தை அறிவித்தல், அமைச்சர் இசைவு, சுமந்திரன் மறுமொழி ஆகியவற்றின் கீழ்த் தொகுத்துரைத்துள்ளார்.

**373. அழியா அழகு**

கி. வா. ஜகந்நாதன்
கலைமகள் காரியாலயம்; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. 1959; 6+243; ரூ. 3.

இந்நூல், வடிவு கண்டார் (1—15), உவகையின் உருவம் (16—27), திருமுகச் செவ்வி (28—42), அழியா அழகு (43—58), மனமாற்றம் (59—71), நாவாய் வேட்டுவன் (72—80), இராக் காதலன் (81—90), விடை கொண்ட குகன் (91—111), குகன் சீற்றம் (112—130), குகன் மனமாற்றம் (131—137), வியப்பும் உருக்கமும் (138—146), குகன் பண்பு (147—165), பரதனும் குகனும் (166—180), விதியின் பிழை (181—198), ஒரே நினைப்பு (199—212), காந்தமாமணி (213—225), கண்டதும் காணுததும் (226—243), என்னும் 17 தலைப்புகளைக் கொண்டது.

'தோள் கண்டார் தோளே கண்டார்' என்னும் பாடலின் நயம் விளக்கப் படுகிறது. நீலமாலையின் வரவு கதையில் ஒரு சிறிய திருப்பத்தைக் காட்டுகிறது. கம்பன் படைக்கும் சிறிய பாத்திரமும் உயிருடையதாக, உணர்வுடையதாக, அற்புதச் சித்திரமாக, ஓவியனையும் ஏமாற்றும் இயல்புள்ளதாக அமைந்து விடுகிறது. நீலமாலை. 'இப்பொழுது எம்மனோரால் இயம்புதற்கு எளிதோ' என்னும் பாட்டிற்கு விளக்கம். இராமனுடைய முகக்கமலத்தின் பொலிவுக்கு மூலம் அவன் சமநிலைப்பண்பு. 'வெய்யோனொளி தன்மேனியின் விரிசோதியின் மறை 'என்னும் பாட்டின் விளக்கமும் விரிவாகத் தரப்படுகிறது. —உவமையினல் அளவிட முடியாத இராமனது பேரழகை உணர்ச்சிச் சித்திரமாகக் காட்டிவிட்டான் கம்பன். ஒரு நிலையில் இருந்த மனம் அதற்கு நேர் எதிரான

நிலைக்கு மாறுவதென்றால் படிப்படியாகவே நிகழும். கம்பன் இதனை நுட்பமாகக் காட்டும் பாங்கு கைகேயி, குகன் வாயிலாக விளக்கப்படுகிறது.

குகன் செய்த உதவி சிறியதாயினும் கைம்மாறு கருதாத உதவியாக இருக்கிறது. இராமனுடைய நட்பு ஒன்றையே பெறற்கரும் பேருக எண்ணி இன்புற்றான். இராமன்பால் குக னுக்குள்ள அன்பைக் கம்பன் பக்தி என்ற சொல்லால் குறிக் கிறான்.—'பக்தியின் உயிர் ஈயும் பரிவினன்'. சிந்தையிலும் இலக் குவனோடு ஒத்த தம்பியாகும் தகுதியுடையவன். கம்பராமாய ணத்தில் வரும் குகன் உணர்ச்சி உருவாக இருக்கிறான். குகப்பட லத்தில் குகனுடைய உணர்ச்சி இருவேறு திசையில் ஓங்கி நிற் கிறது.—முதலில் கோபக்கனல், பின்னர் அளவற்ற மதிப்பு. இராமனிடம் இருந்த பேராண்மை குகனிடமும் இருந்தது. —'அல்லை ஆண்டு அமைந்த மேனி' இதில் இராமன் அவனைத் தம்பியாக ஏற்றுக் கொண்டதன் பொருத்தம் தெரிகிறது. குகன் உய்த்துணரும் அறிவுடையவன். 'சுற்றத்தார் தேவரொடும் தொழ நின்ற...' கம்பன் குகனைப்பற்றிச் சொல்லும் இடங்களில் அவனுடைய உருவத்தை வருணிக்கிறான். அவன் இயல்பு மூத லிய பெருமையைச் சொல்லும் இடங்களில் 'உள்ளம் தூயவன் தாயின் நல்லான்' என்று கூறுகிறான். 'வந்தெதிரே தொழுதானை' என்னும் பாடல் விளக்கம் தருகிறார்.

கம்பன் தன் இராமாயணத்தில் விதியைப் பல இடங்களில் நினைப்பூட்டிக்கொண்டே போகிறான். — கவிக்கூற்றாகவும் பாத் திரங்களின் கூற்றாகவும் — இராமன், மண்டோதரி. இராமனு டைய பண்பு அவனுடைய நினைப்பிலும் பேச்சிலும் மலர்வதோடு அவனுடைய சார்புடையவர்களிடத்திலும் புலனாகிறது. எல்லோ ரும் ஒரே நினைவுடையவர்கள். — இராமன் குகனைத் தம்பி என்பது போல், பரதன், கோசலை, அனுமன், சீதை. சீதை இராமன் வில்லிற்கு மாசென்று கருதல். 'விரிமழைக்குலம் கிழித்து' என்னும் பாடல் விளக்கம். மார்பில் புதைந்த வேலைக் காந்தமணி கொண்டு எடுக்கும் வழக்கம் நன்றாகத் தெரிந்திருக் கிறது. 2 இடங்களில் வைத்திருக்கிறான். — காட்சிப் படலத்தில் கவிஞன் கூற்று, மீட்சிப் படலத்தில் தசரதன் கூற்று. மதனன் வெறும் அவயவப் பிழம்பாகிய வடிவைக் கண்டு சீதையை எழுத மாட்டாமல் திகைத்தான். இராமன் வடிவழகினையும் பண்பழகி னையும் கண்டு இன்புற்றான். அனுமன் பண்பழகைக் கண்டு வணங்கினான். வடிவைக் காணாவிட்டாலும் பண்புகளால் கண்டு கொள்ளலாம் என்பதனை அகக்கண்ணைப் பெற்ற அனுமன் உணர்த்தி விட்டான்.

இந்நூலில் பாடல் விளக்கங்கள் பெரும்பான்மையாக இடம் பெற்றுள்ளன.

**374. கம்பன் கதா பாத்திரங்கள்**

கி. லஷ்மணன் எம்.ஏ.,
பழனியப்பா பிரதர்ஸ்: மு. ப. 1959; இ. ப. 1963; 65; ரூ. 1

இந்நூல் தசரதன் (1—16), கோசலையும் கைகேசியும் (17-31), இராமனும் இலக்குவனும் (32—45), பரதனும் குகனும் (46—58), சீதை (59—65) என்னும் ஐந்து கட்டுரைகளைக் கொண்டு திகழ்கின்றது. பல துணைத் தலைப்புகளையும் உடையது.

தசரதனின் ஆட்சியை வள்ளுவர் கூறும் அரசியல் இலக்கணத்துக்குச் சிறந்த ஓர் இலக்கியமாகக் கொள்ளலாமெனத் தோன்றுகிறது. தசரதனுக்கு இராமனிடமுள்ள பாசத்தினைப் பல எடுத்துக்காட்டுகள் காட்டி விளக்குகின்றார். சத்தியம், புத்திர வாஞ்சை ஆகிய இரண்டின் பொருட்டு எழுந்த மனப்போராட்டத்தில் சத்தியத்தையே நிலைநாட்டி உயிர் நீத்த பெருமையுடையவன். தசரதன் இறந்தது தனது வஞ்சனையினாலேதான் என்போரின் கருத்தினைக் கடுமையாக எதிர்க்கிறார். கோசலை தெய்வ நம்பிக்கையும் ஆரவாரமற்ற அறவாழ்வு முடையவள். இராமனது பிரிவால் தாங்கொணாத் துயருற்ற தசரதனைக் கோசலை பலபடியாகத் தேற்றும் விதமும், அதே சமயம் கணவன் வாய்மையைக் காக்க அவள் துடிப்பதும் உத்தம பத்தினியாக்குகின்றன. ஒரு குலமகளுக்குரிய இலக்கணங்கள் சொல்லிலும் செயலிலும் அமைந்திருக்கின்றன. இவள் தாய்மை குறுகிய நோக்கத்தோடு கூடியதன்று. பரந்த நோக்கும் தயாள குணத்தோடும் கூடியது.

இராமாயணத்திலே மிக விசித்திரமான பாத்திரம் கைகேசி. இவளது குணநலன்களைப் பற்றித் தொடக்கத்தில் கூறப்பட்டது உண்மையாயின் கூனியின் எத்தகைய பேச்சும் அவள் மனதைத் திருப்பாது. இப்பொருந்தாமையை உணர்ந்தே கம்பர் உலகியலுக்குப் புறத்தே காரணத்தைத் தேடுகிறார். கொடுமையிலே இறுதி வரை அழுத்தமாக உரைத்து நின்றமையே வியப்பு. தசரதனை வாய்மையுடையவனாக்கவே கைகேயி இவ்வளவுஞ் செய்தாள். எனவே அவள் நிறைவுடையவள் என்று சிலர் கூறுவது நகைப்பையே தருகின்றது. இதற்குப் பல காரணங்களும் தரப்படுகின்றன.

கைகேயி தன் கொடுமையின் பாரதூரமான விளைவுகளைக் கண்ட பின்பாவது மனம்மாறித் தன் பிழையை உணர்ந்து வருந்தினாலாவது அவளை மன்னிககலாம். ஆயின் இத்தகையவளை மன்னிக்க நீதியுண்டா? இராமபக்தியே பரதனையும் குகனையும் ஒருவரோடொருவர் உறவு கொள்ளச் செய்தது. இருவரது இராம பக்தியும் ஒரு கோபநிலை மூலமும் ஒரு சோகநிலை மூலமும் வெளிப்

படுகின்றது. இராமன் பொருட்டு இருவரும் பல சமயங்களில் தம்மையே நொந்து கொள்கின்றனர். யாருடைய அன்பு சிறந்தது என்று வினவினால் விடை கூறுவது எளிதன்று. குகனுடைய அன்பு எவ்வித உறவோ, தொடர்போ இல்லாது எழுந்த அன்பு—கண்ணப்பனை ஒத்தவன். சிலர் பரதனை இராமனிலும் மேம்பட்டவன் என்பர். இரு காண்டங்களில் மட்டும் தோன்றும் பரதனை ஆறு காண்டங்களிலும் நடுவிடம் வகிக்கும் இராமனோடு ஒப்பிட்டு மதிப்பிடுவது ஏற்றதன்று. இறுதிப் பகுதியில் சீதை அனுமன் தோளில் ஏற மறுத்ததன் காரணம் பயிர்ப்பெனும் பண்பால் என்று காரணம் காட்டி நிறுவப்படுகிறது.

**375. A Study of the Minor Characters in Kambaramayanam**

A. R. Indira

Thesis Submitted for the Degree of M. Litt of the University of Madras; Jan. 1963; 288

Introduction 1-9, PartI—Pivots of the polt 10-68, Character lights 69-115, Atmosphere, significance and suspense 116-154, philosophic symbols 155-180, Part II Characterisation Aspects and methods I. 181-223, II. 224-288.

On the hole there are 52 minor characters in the epic and the Thesis has 10.

Mantharai's presense in Ayodhya, Surpanaka's intrusion into panchavati and Maricha being ready to hand to be used as an instrument by Ravana are all accidental(11). Maricha plays an important role in making the abduction of Sita possibe(12). Montharai is a figure of unalloyed evil and She has really no motive other than that of doing evil for its ownsake. Kamban has provided us with a character that lights up Mandodari by contrast. He has given us Tanamali(115). Jadayu Tarai and Mandodari are taken as typifying characters used by the poet to create atmosphere and suspense in the long story of Ramayana(117). Jatayu dies before he could convey to Rama full information regarding Ravana. Suspense is secured and the story moves on with our interest firmly fastned on it(132). Would Vali listen to Tarai? This is the kind of suspense that Tarai's coming is made to create by Kamban(136). Kamban uses a few characters for the purpose of lending significance and Mandodari is one of them to wards the end of the epic(154). Viradha is a symbol to kamban at the same time of the deadening influence of

Kama and the revivifying and freeing power of divine grace. This is the voice through which the poet breathes his faith(173). Surabhanga is to Kamban a symbol of unceasing human effort that reaches out to the obsolute by gods grace, finds it at its our door(180). He gives a statement of the more important variations from Valimiki and points out the masterpiece of Kamban. The description of the appearance, nature and mood, actions and gestures, poet's comments, their words and deeds, creating a suitable background, the dramatic element (Dialogue, soliloquey) what other characters say, Individualisation, consistency and other devices of the characters are given separately.

376. **கம்பன் கண்ட அயோத்தி** *(பாத்திரப் படைப்பு)*

*பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக்கழகம்*; 1970; 92

*முகவுரை—வீரகாவியம் — மூத்தவன் இராமன்—இளையவர் நால்வர்—அரசியர் மூவர்—ஏந்தல் தயரதன்—பாத்திரப் படைப்பில் பிறர்—கம்பன் படைப்புத்திறம்—முடிவுரை.*

*குணநலத்தால் மட்டுமின்றிக் கொள்கையாலும் ஆற்றலாலும் வீரத்தாலும் இராமன் சிறந்து விளங்குகின்றான். வழிபடுவதற்குரிய ஒரு தலைவன் காவியத் தலைவனாய் அமைவது ஒரு காவியத்திலும் காணாத புதுக்காட்சி. குகனது அன்பு கைமாறு கருதாத அன்பு. பரதனின் சூளுரைகள் அவன் அறமாண்புகளை நன்குணர்ந்தவன் என்பதனை எடுத்துக்காட்டா நின்றன. இராமனிடத்துக் கொண்ட அன்புக்கு மாறாகப் பரதன் நாடாள இசையான் என்று யாரும் துணியாத நிலை இருந்தது. தனது துணிந்த நிலையைப் பரதன் தானே உணர்த்தினான். இராமனிடத்துக் கொண்ட அன்பினால் இராமனுக்குத் துன்பம் நேர்வதாகக் கருதுமிடத்து இலக்குவன் வெஞ்சினம் கொண்டானேயல்லாமல், மற்ற நேரத்திய அவனது நிறைந்த உள்ளம் போற்றிப் புகழத் தக்கது.*

*சத்துருக்கனன் பரதனுடன் இராமன் சென்ற கானகத்தை அடைந்தபோது பரதன் வேறு, தான் வேறு என்பது இல்லையாதலால் இவனது கூற்றுகள் தனியாக அமையவில்லை. கோசலை தாய்மை யுணர்வால் உந்தப் பெற்றவளாய் இராமனைப் பிரிய நேர்ந்தது நினைந்து வருந்துவதும், பரதனை வெறுப்பதும் இயல்பே யன்றி, அவளிடம் குற்றங் காணுதல் இயலாது. ஒரு கணவனுக்கு இரு மனைவியராயின், மாற்றாள் மகனைத் தன் மகன்போல் நேசித்தல் இல்லையாம் என்னும் உலகியல் பொய்க்கும்படி வாழ்ந்த கைகேயி தீய மந்தரை சொல் கேட்டு இவையே உலகியல் என்னும்படி வாழ்ந்தாள். பதினான்கு வருடங்கள் கழித்தும்*

இராமன் வராதபோது கைகேயி துயரமுற்றதாகக் காட்டவில்லை கம்பன். காட்டினால் கொடிய மனம் படைத்த கைகேயியிடம் இரக்கம் காட்டிவிடுவார்கள் என்று அஞ்சியா? இலக்குவன் பணி உயர்ந்து நின்றமைக்கு அன்புப் பண்பு மட்டுமின்றித் தாயின் அறிவுரையும் காரணம் ஆகலாம். கைகேயின் மதியின் மீதும் செயலின் மீதும் தவறு காண இடமுண்டு.

தயரதன் தன்னிடம் அன்புகொண்ட கோசலைபால் பற்று வையாது, கைகேயியிடம் பற்று வைத்து இறுதியில் தன் வாய்மைக்காக அவளிடம் தோற்றது, அரசர் போற்றும் பெருமித வாழ்வும், வல்லமையும் இருந்தும் ஒன்றுமில்லாத வெறுமையே அவன் வாழ்வில் படர்ந்துவிட்டது என்பதனைக் காட்டுகிறது. கூனி செய்யும் கொடுமையைக் காரணமில்லாக் கொடுமையாகக் கருதலாம். பரதன் அயோத்தியிலேயே இருந்திருந்தால் ஒருவேளை இராமனுக்கும் தசரதனுக்கும் நன்மை புரிந்திருக்கலாம். கம்பர் காவியப் படைப்புகளின்மேல் பல்வகைச் சுவைகளையும் பல்வேறு காலங்களில் கற்றவர் மனத்தில் தோற்றுவிக்கும் ஆற்றல் பெற்றவர். இராமனுக்கு வீரவழிபாட்டை இராவணனும் மறைமுகமாகச் செய்கிறான். மக்களின் சில குறைபாடுகளே பெருஞ்சிக்கல்களை உண்டாக்குகின்றபோது அவர்கள் வாழ்க்கையில் அவலம் தோன்றுகிறது.

**377. கம்பர் காட்டும் சினம்**

எஸ். சங்கரபாண்டியன் பிள்ளை

பொருட்கட்டுரை; மதுரைப் பல்கலைக்கழகம்; 1971; 66

தோற்றுவாய்—சினம் என்றால் என்ன?—மனமும் சினமும்—இலக்கியவாழ்வு—கதை மாந்தர்—உறுப்புகள்.

இராமன் உள்ளத்தில் தோன்றும் சினம் பல்வேறு இடங்களிலும் நியாயத்தின் அடிப்படையில் எழுகிறது. இதனால் இராமன் கொள்ளும் சினத்தைப் புனித வெஞ்சினம் என்றே கொள்ளலாம். தன் உணர்ச்சிகளை எல்லையற்ற மன உறுதியோடு அடக்கிக் கொள்கிறான். கடமையை மதியாததால் வருணன்மீது சினங்கொண்டான். ஒரே ஒரு இடத்தில் சினத்தை அடக்கத் தவறினான். அதற்குத் தண்டனையாகப் பழிச்சொல் ஏற்றான். சினத்தால் ஆராயாது முடிவெடுப்பவன் இலக்குவன். தன்னைப் போல் இராமனிடம் அன்பு செய்வோர் எவருமிலர் என்று கருதியதால் பரதன் செயலில் ஐயம் கொள்கிறான். ஆரவாரம் காட்டி அன்பின் பெருக்கை அறிவிப்பதில் இலக்குவன் ஒருவகை மன நிறைவு கொள்கிறான். ஆனால் அமைதியான அன்பு—விளம்பரம் செய்யப்படாத அன்பு பரதன் உள்ளத்தில் குடியிருப்பதை அவன் சினம்கொண்டு சீறுகையில் அறிகிறோம்.

சீதைக்குச் சினம் ஏற்பட்ட போதும் செம்மை மாறவில்லை. கோபத்தில் குகன் கூறும் சொற்கள் அவனது குழந்தை உள்ளத்தை நமக்குக் காட்டுகின்றன. இடையூறு நேர்ந்துள்ளது என்ற அளவிலேயே இராவணனிடம் சினம் முளைக்கும். தனது சினத்தின் விளைவாகத் தனக்கு இனியவர்களைக் காவு கொடுக்கும் அவலத்தை இவனிடம் காணலாம். காமம் இராவணனை அழித்தது என்பதினும் சினம் அழித்தது என்பதே பொருந்தும். பழிக்கு அஞ்சாத வெஞ்சினம் வாலியை ஆட்டிவைத்தது. மரணத்தின் வாயிலில் நிற்கும்போதும் சீற்றமும் வீரமும் குறையவில்லை. கும்பகர்ணன் முன் பிறந்தவன் செயலை முனிகின்றான்.

இராமன்மீது பக்தி அரும்பாத வகையில் தன் உள்ளத்தில் சினம் என்னும் திரையைத் தொங்கவிட்டுக் கொள்கிறான். எண்ணியதையடையச் சினத்தை ஒரு கருவியாகக் கொள்கின்றான். பெருகிவரும் பெருஞ்சீற்றத்தால் பெற விரும்பியதைப் பெறுகிறான். எவரும் தடுக்கத் துணியாத இலங்கைக்கோன் சினத்திற்கு வீடணனே அணையிட முயல்கிறான். மதிக்கண் மறுப்போல சீதையின் சினம், அவள் இலக்குவனைப் பழிக்கும் போது ஏற்படுகிறது. நியாயமான சினம் எழுகின்ற காட்சிகளையும் கம்பர் காட்டுகிறார். தன்னைத் துன்புறுத்திய அரக்கியர்மீது சீதை சினம்கொள்ளவில்லை பெருந்தன்மையுடன் அவர்கள்மீது தவறில்லை என எண்ணுகின்றாள். மந்தரையின் சினம் காவியத்தின் போக்கையே நிருணயிக்கிறது. இவள் சினம் உள்ளத்தில் நிலைத்து நிற்பது. மாதர் சினத்தில் கம்பர் முதலில் காட்டுவது தாடகையின் சினத்தையே. அரக்கனின் சினமும் அண்ணலின் வெகுளியும் அவர்கள் வளர்ந்த சமுதாயத்தின் இயல்பைக் காட்டுகின்றன.

### 378. கம்பராமாயணத்தில் மகளிர்

நா. சின்னராசு

சென்னைப் பல்கலைக் கழகம், எம். லிட் பொருட்கட்டுரை; சூலை 1973; 162

முன்னுரை, இராமாயணம் ஓர் அறிமுகம் 1-24, கோசலை 25-47, கைகேயி 48-69, சுமித்திரை 70-78, சீதை 79-115, மண்டோதரி 116-122, தாரை 123-131, மந்தரை 132-142, சூர்ப்பணகை 143-153, திரிசடை 154-159, முடிவுரை 160-162, ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள்.

கம்பர் 12-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். இராமன் முடிசூடப்போவது அறிந்த கோசலை சுமத்திரையை நாடிச்செல்வது அவளுக்கும் கைகேயிக்கும் இடையே ஒன்றுபட்ட உளநிலை

இருந்திருக்க முடியாது என்பதைக் காட்டுகிறது. தெய்வம் தொழாஅள்...என்றும் தமிழர் கருத்துக்குப் புறம்பாகக் கம்பர், கோசலை தெய்வம் தொழுததாகக் காட்டியிருப்பது வான்மீகம் கூறும் வடவாரியர் வழக்கு(36). இராமனால் பரதன் ஆட்சிக்கு இடையூறு வரும் என்று எண்ணும் போதுதான் கைகேயி தான் வளர்த்த இராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டும். இதனை எண்ணக் கூடியவன், வேண்டியவன் பரதனாகவே இருக்க வேண்டும். ஆகவே பரதனும் சூழ்ச்சிக்கு உடைந்தையாய் இருந்திருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வருகிறாள் கோசலை(43). மனு முறைப்படி ஆண்டதாகக் கூறப்படும் அந்நாளில் 14 ஆண்டுகட்குப் பின்னர் மீண்டு வந்தால் முன்னைய உரிமை இருக்க முடியுமா? இருந்தாலும் கேட்கத்தான் முடியுமா? எனவே தான் 14 ஆண்டுகள் எனக்காலவரையறை கொடுக்கப்பட்டது(49). ஒரு வேளை பரதன் கைகேயியைக் கொன்றிருந்தாலும் அவள் துன்பத்திற்கு ஓர் அமைதி கிட்டியிருக்கும், ஆனால் இருந்து பெரிய மன வேதனையை அடைவான் வேண்டிப்போலும் அவனும் அவளை விட்டுவிட்டான்,(64). விதி, சூழ்நிலை, தன்னலம் காரணமாகக் கைகேயி மாறினாள்(66). சுமித்திரையைத் தெய்வப் பிறவியாகக் கொள்ளலாம் அப்பொழுது அவள் பண்பால் கோசலையையும் விஞ்சி நிற்கிறாள்(78). பொதுநிலையில் பாத்திரங்களை விளக்கிச் செல்கிறார்.

**379. Mothers - treated by Kambar (64–71)**

The Journal of the dept. of Tamil Vol IV; L. Ruthjoy; University of Kerala; Trivandrum, March 1973

Kambar mentions about twenty two mothers in Ramayana. Though the term 'mother' itself can include five classes in the broad sense, it signifies only two categories like the mother that gave birth and the mother breeds. Koocalai and Kaikeeyi are the two typical examples for these two categories. Kambar projects the three queens of Tacaratan in three states. Koocalai considers all the four as her own children. She is ready to sacrifice her own child for the welfare of hunter - Kukan. It is no gain saying that Iraaman inherited his great virtues from his magnanimous mother. It fits to Cumittirai's sons also. Mother of giants Mantootari and Taaniamaalini. Their motherly affection is understood from their wailings and lamentations at the time of the deaths of their sons. Ape-

mother - Taarai. She becomes a mother that averts the danger befallen on her tribe.

As mother is an abode of sublime devotion, Kambar sees those who kept the highest form of love on others as mothers, eg. Ciitai, Iraaman, Tiricatai, Cavari etc. A great truth is manifest that simply because a woman gives birth to she does not become a mother, unless motherly virtues are imbued in her nature.

380. **கம்பன் கண்ட மகளிர்** (101—109)

இளவேனில்—3: வி. ரூத்ஜாய் (சிறப்பாசிரியர்) டாக்டர். ச. வே. சுப்பிரமணியன் (பதிப்பாசிரியர்) பி. ஜெயா, குமரேசன், இளங்கோ மன்ற வெளியீடு; 1974; ரூ. 10

பாத்திரங்களல்லாத பிறமகளிர் பற்றிய கட்டுரை. உயர் குடிப் பிறப்பிற்கேற்ற இயல்பு, கற்பெனும் கலங்காநிலை, கணவனையே தெய்வமென்றெண்ணல், புகழ், பொய்யொழுக்க மின்மை முதலிய பண்புகள். குலமகளிர்க்குரிய இன்றியமையாத பண்புகள். முதற்கற்பே சிறப்புடையது(104). கற்புடைய மகளிர் தம் பெருமை பேசார், தங்கள் துன்பத்தினைக் கணவனுக்குக் காட்டார், கணவன் ஒழுக்கததிற்கிடையூறாக வாழவிரும்பார், நினைப்பது மறப்பதுமிலாத நெஞ்சினராய்த் திகழ்வார். பிறர் நெஞ்சில் புகுவதையும் பிறர் கூறும் காமக்குறிப்புடைய சொற்களையும் கேட்க விரும்பார், கணவனைப் பிரிந்து வாழ விரும்பார்(105). கல்வியறிவுடைய பெண்கள் விழைவன ஈகையும் விருந்துமாகிய புண்ணியங்களேயாகும். விருந்தோம்புதல், செல்வம் முதலியவற்றிற்கும் அடிப்படைக் காரணம் பெண்களின் நற்பண்புகள்(108). கற்புடை மகளிரை மதித்துப் போற்றாத நாடு அழியும் என்பது கம்பரின் அசையாத நம்பிக்கை(109). ஆசிரியர் தன் கூற்றுக்குச் சான்றுகள் தந்து நிறுவுகிறார்.

381. **Wives - treated by Kambar** (76—83)

Research Papers Vol. V; L. Ruthjoy; Dept. of. Tamil, University of Kerala; Trivandrum; 1974

Wives are two types - low and high. High types - Ciitai, Koocalai, Cumittirai, Taarai and Mantootari. They are famous in different qualities. But Ciitai is the most prominent among them. Taaniyamaalini and Kaikeeyi are the examples of low types. These are all proved by examples.

**182. A critical study of women characters in Kambaramayanam.**

Grace Alexander

Madras University : Ph. D. Thesis. AP. 1974. 219.

Preface, The story of Kamparamayanam an outline. Part I (General Aspects) 1. Principles of characterisation in epics (1—10), place of women in society as revealed in Kamparamayanam (11—32), Kamban's views on womanhood (33—61). Part II (character sketches). The Heroine (62—98). The three queens to Kōcalam (99—130), The wives (131—171), Villanous Women characters in the epic(172—194), Minor Women characters (195—217) conclusions (218—219) Bibliography and index.

Kampan is strongly in favour of monogamy so as to enable women to enjoy almost equal rights with men in domestic life. In the social set up described in Kamparamayanam polygamy was commonly accepted as a custom, but there was deep root dissatisfaction in the mind of the affected wives. Kampan has given more credit to the beauty of character in woman than to mere physical beauty. In the character- development of women, there are three distinct stages of attainment viz. ordinary woman, chaste woman and worshipful women. The poet desires that the entire humanity should strive to attain the highest level of glory and honour so as to become worshipful. He reveals this by illustrating such glorious examples among the three different societies described by him. The poet wants to give equal rights to men and women in choosing their life partners. The queens were alloved to occupy their seats in the Kings court on certain occasions. Kampan does not favour the idea of prohibiting the entry of women to the King's court. He accords the due place for the queens by the side of King on all occasions. There was a spiritual awakening in Kocalai due to the fourteen years of separation from her son. A strong sense of attachment yielded place to a sense of detachment. Kaikeyi's degradation of character was mainly possible because of the polygamous atmosphere of the society. Cumittirai was an outstanding personality among the other women. She was noted for her spiritual supermacy and administrative capacity. curppanakai's role in epic is not completely depicted. In Kampan's

view the term arakka' does not merely denote the arakka race but also implies a degraded level of human behaviour. Women were not debarred from taking to ascetic life. There was a notable change of character for better or worse in women when they lost their husbands. Chaste woman had the rare capacity of foretelling the future. Immorality among women was a punishable offence in the Ilankai society. Widows were mostly confined to their houses in the Ilankai society.

Mantotari was the woman character in Kamparamayanam who referred to the divinity Iraman. citai remained calm and quiet in spite of the frustrations she faced. She was not fault finding. Kocalai lacked spiritual equanimity and as a result she got greatly perturbed at the time of the banishment of Iraman. There is a change of character in Tatakai and Tara) at the death of their husbands. Akalikai stands for failing humanity and her example depicts the possibility of redemption.

Kampan has introduced three desirable and significant sociological changes based on the equality of men and women and with a view to promote the status of women (choose their life partners, upholds the principles of monogamy and right to sit on the throne on all occasions along with her husband.i

**383. கம்பன் கண்ட கவிக்குலம்**

அ. சுடலைக்கண்ணு

கேரளப் பல்கலைக் கழக முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகத் தமிழ்த்துறை வாயிலாகப் படைக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரை; 1974; 8+135+1.

கம்பர் (9—11), காவியம் (12—16), காட்டிய குலங்கள் (17—25), பிறப்பியல் (26—37), கவிக்குலத்தவரின் வாழ்வியல் (38—52), கவிக்குலத்தவரின் அறிவியல் (:3—93), கவிக்குலத்தவரின் சிறப்பியல் (94—138), இராம இலக்குமணரோடும், பிற குலத்தாரோடும் கவிக்குலத்தார்க்குள்ள உறவு (139—140), கவிக்குலத்தவரின் இன்றியமையாமை (141—142) என்னும்9 தலைப்புகளோடு பல துணைத் தலைப்புகளையும் கொண்டு அமைவது இது. முன்னுரை முடிவுரையோடு, பயன்பட்ட நூல்கள் 23 தரப்படுகின்றன. அடிக்குறிப்புகள் அமையாத கட்டுரைகளும் உண்டு (இறுதி இரண்டும்). அடிக்குறிப்புகளும் சரிவர அமையவில்லை.

தொல்காப்பியர் உயிரினங்களை ஆறுபிரிவில் பாகுபடுத்துவர். நன்னூலாரும் இதனை வகைப்படுத்தி விரித்துக் கூறியுள்ளார்.

இம்முறைப்படி இவ்வுயிரினங்கள் யாவற்றையும் பாத்திரங்களாக அமைத்த காவியமே இராமாயணம். மனிதருக்கும் பிற உயிரினங்களுக்கும் உள்ள தொடர்பு அற்புதமாகச் சித்தரிக்கப் பட்டுள்ளது. கிஷ்கிந்தை நாட்டின் கொடி குரங்குக் கொடியாதல் வேண்டும். எனவேதான் இவர்களைக் கவிக்குல மன்னர் என்றனர் போலும். இவ்வாறே கரடியைக் கொடியாக உடைய சாம்பவனை எண்கின் குலவேந்தனென்றும், கழுகுக் கொடியுடைய சடாயுவையும், சம்பாதியையும் புட்குல வேந்தரென்று புகன்றது போலும். தேவர்களே வானவர்களாகப் பிறந்தார்கள். தற்போதைய குரங்குகளுக்கும் அவர்களுக்கும் ஒருவிதத் தொடர்பும் இல்லை.—அகச்சான்றுகளும் காட்டப் படுகின்றன. அனுமன் பற்றிய செய்திகள்—வாலி, சுக்கிரீவன், தாரை, உருமை, அங்கதன் முதலியோர் அறிமுகங்கள் தரப்படுகின்றன. அனுமன் வாழ்வாங்கு வாழ்ந்தமையால் வானுறை தெய்வமாக மட்டுமின்றிப் பூவுலகத்தோர் தொழுதேற்றும் தெய்வமாகத் தனிக்கோயில் பெற்று வழிபடும் சிறப்புடையவனாக விளங்குகிறான். அனுமன், சுக்கிரீவனின் பொது அறிவு, அரசிலயலறிவு, வாலியின் அரசியற் பிழைப்பு, அங்கதனின் அரசியல் நேர்மை அனுமன், வாலியின் நீதித்திறன் ஆகியன விளக்கப்படுகின்றன. கவிக்குலத்தவரின் தொண்டு, அன்பு, பண்பு, போர் பற்றியவையும் அனுமன், சுக்கிரீவன், வாலி, அங்கதன், ஏனைய வானரர் வாயிலாக விளக்கப்படுகின்றன. தாசபக்தி என்பது ஆண்டான் - அடிமை உறவு. —அனுமனது தொண்டு. அனுமனது தொண்டுகளில் தலைசிறந்தது, சிறையிருந்த சீதா தேவியைத் தேடிச் செல்லுதலேயாம். சுக்கிரீவன் தனது எழுபது வெள்ளம் வானரப் படைகளையும் இராமபிரான் நன்மைக்காகவே உபயோகித்த தொண்டு சாலச் சிறந்தது. தன் அடியவர்களை இராமனின் தொண்டிற்காகக் குறிப்பிடுதல் வாலியின் தொண்டு. அரக்கர்களை அழிப்பதற்கே வானரர் படைக்கப்பட்டனர். சீதையைத் தேடுவதிலும், போருக்கு முன்பு தூதாகச் செல்லுதலிலும், போரிலும், அணை கட்டுதலிலும் உயிர்காத்தலிலும் கவிக்குலத்தார் பெரும்பணி செய்துள்ளமை—இன்றியமையாமையைப் புலப்படுத்தும்.

இதில் பெரும்பான்மையும் அனுமன் பற்றிய செய்திகளே மிகுதி.

384. கம்பனில் தொண்டு*

கே. நீலகுமாரி

முதுகலை பொருட் கட்டுரை; கேரளப் பல்கலைக் கழகம்; 1975; 1+99+2

1. முன்னுரை 2. கற்றோர் ஏத்தும் கவிக் கம்பன் 3. தொண்டு 4. தம்பியர் தொண்டு 5. உடன் பிறந்த தம்பியர் தம் உன்னதத் தொண்டு 6. கவிக்குலச் செம்மல் தன்கவின்மிகு தொண்டு 7. வீடணன் தன் வியத்தகு தொண்டு 8. இராகவன்தனது பிற அன்பர்கள் ஆற்றிய அளப்பரும் தொண்டு 9. இறுவாய், பயன்பட்ட நூல்கள்.

385. **Female Characters in Kambaramayanam***

L. Ruthjoy

Ph. D. Thesis, Kerala University; 24+855+86

Introduction. 2. The four traditional qualities of women. 3. Main charcters. 4. Turning point characters. 5. Minor characters. 6. Characters in relative terms. 7. Description of Ladies. 8. The place of female characters in Kamparamayanam. 9. Conclusion, Appendix: Bibliography, Charts 1 to 4 External description of Ladies charts 5 to 6 Ladies and their places.

386. **இருளில் ஒளி** (145—155)

*இலக்கிய மலர்கள்: அ. சீநிவாசராகவன்*

*மெர்க்குரி புத்தகக் கம்பெனி; மு. ப.; ரூ. 2-50*

*இராமன், சீதை, இலக்குவன் ஆகியோரைக் காட்டில் விடச் சென்ற சுமந்திரன் இருளில் அயோத்தி திரும்புகிறான். அந்த இருளில், கம்பரின் கவிதை ஒளியில் காப்பிய பாத்திரங்களில் நால்வர் உள்ளங்கள் ஒரே சுருதியில் எப்படி வெவ்வேறாகத் துடிக்கின்றன என்பதைக் காட்டுகிறார். சுமந்திரனுடைய அன்பு துயரத்தில் தோய்கிறது. சீதையின் அன்பு களங்கமற்ற மதலையின் தன்மையாக வடி வெடுக்கிறது. லக்ஷ்மணனுடைய அன்பு சினமாகப் பொங்குகிறது. இராமனுடைய அன்போ, எல்லா உயிர்களையும் அணைத்துக் கொள்ளும் சலியாத தரும நீதியாக மலர்கிறது.*(154).

**பண்புகள்**

*பாத்திரங்களின் வாயிலாகக் கதைப் போக்கில் கம்பன் உணர்த்தும் பண்புகள் இடம் பெறுகின்றன. அன்பின் காரணமாகத் தோன்றும் உடன்பிறப்பு, பாசம், காதல், நட்பு, அடைக்கலம், செய்ந்நன்றியறிதல் என்ற நிலையில் இத்தொடர் தொடர்கிறது. பெண்ணின் இயல்பும், ஆணின் இயல்பும், பிறவும் இவற்றைத் தொடர்கின்றன.*

**387. கம்பரும் சகோதர வாஞ்சையும் (239—242)**
*ஆனந்த போதினி: நா. சிவபாத சுந்தரம், அக். 1940*

இராமன் காடு செல்லவேண்டும் என்பதறிந்து இலக்குவன் கொள்ளும் சீற்றம், காடு சென்றது அறிந்த பரதன் சீற்றம், காடு திரும்பியவுடன் பரதன் கொள்ளும் மகிழ்ச்சி, பரதன் சத்துருக்கனை அரசாள ஆணையிடும்போது சத்துருக்கனன் கூற்று ஆகியவற்றைக் கூறி அவற்றைச் சகோதர வாஞ்சையாகக் காட்டுகிறார்.

**388. கம்பநாடரும் உடன்பிறப்பு நோக்கத்தின் உண்மையும் (327—330)**

*செந்தமிழ்ச் செல்வி: தொகுதி 18, எஸ். ஆறுமுக முதலியார்; 1940—1941; ரூ 12*

உடன்பிறப்பு நோக்கம் பாவிகப் பண்பாக அமைந்துள்ளது. இந்நோக்கம் இராமன் வீட்டில் தொடங்கி, பல்கிப் பெருகி, பரந்த நோக்கமும், விரிந்த பார்வையும் பெற்று மொழி, திறம், குலம், முதலிய வேற்றுமைகளை வென்று செல்லுவதாகக் கம்பர் அமைத்துள்ள வகை நன்றாகக் காணப்படுகிறது.

**389. கம்பர் கண்ட தம்பியர் (103—132)**
*இலக்கிய ஓவியங்கள்: ச. ஆறுமுக முதலியார், எம் ஏ; பி.ஓ.எல்., எல்.டி.,*
*பழனியப்பா பிரதர்ஸ்; சென்னை - 5; திருச்சி - 2; மு. ப. 1958; இ. ப. 1961, ரூ. 2-50*

இராமனுடன் பிறந்த தம்பியருள் பரதனே இராமனுக்குத் தொண்டு செய்தலில் தலைமை வகிக்கின்றான். குகன், சுக்கிரீவன், விபீடணன் ஆகியோரை இராமன் தம்பியராக ஏற்றுக் கொண்டிருப்பதை அவன் சுற்றமும் ஏற்றுக்கொண்டுள்ளது. இராமன் தனது கருணை மிகுதியினால், உடன் பிறப்பு நோக்கத்தை உலகுக்கு அறிவுறுத்த வேண்டியும், குலம் முதலியவற்றால் வேறாகித் தாழ்ந்தவர்கள் எனக்கருதக் கூடியவர்களையும் உடன் பிறந்தவர்களாக ஏற்றுக்கொண்டு ஒத்த உரிமை நல்குகின்றான் (128). கதை நிகழ்ச்சிகளையும் கூறியுள்ளார்.

**390. ஜீவகவி இயற்றிய கவியரசர் (121—126)**
*இலக்கியம் என்றால் என்ன? சாமி. சிதம்பரனார்*
*இலக்கிய நிலையம், சென்னை - 24, மு. ப. 1963; ரூ. 3-50*

எந்தக் காலத்து மக்களுக்கும் ஏற்கும்படியான கருத்துகளை அமைத்துக் கவிபாடுகின்ற புலவனே ஜீவகவி, சிரஞ்சீவி, கவியரசன். இத்தன்மை கம்பனுக்கு உண்டு. கம்பன் புகழ் மொழிகளை முதலில் கூறுகிறார். பின் மனிதர்களிலே குகனைப்போல் உள்ளத்திலே குற்றமில்லாமல் கண்டபடி அலைபவர்கள், சுக்கிரீ

வனைப்போல் அசல் மிருகத் தன்மையுடனே வாழ்பவர்கள், அரக்கர்களைப்போல் அறிந்தும் அக்கிரமம் செய்பவர் என மூவகையினர் உண்டு. இவர்களை அன்பினால், சகோதரத்துவத்தினால் சீர்திருத்தலாம். இங்கு சாதி, சமய பேதத்திற்கு இடமில்லை. இந்தக் கதையையே இராமனுடைய சகோதரத்துவத்தைக் கூறுவதன் மூலம் கம்பன் காட்டுகிறான்(125) என்கிறார்.

391. **கம்பனில் மேலோங்கி நிற்கும் பண்பு**
**(புத்திர வாஞ்சையா? சகோதர பாசமா? பதிபக்தியா?)** (55-66)

*பட்டி மண்டபம்: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்*

*தசரதன், கோசலை, இராவணன், மண்டோதரி ஆகியோரின் புத்திரவாஞ்சையும், இராமன் சகோதரர் அறுவர் சிறப்பும், பதி பக்திக்கு அடிப்படையான கற்பு நெறியைக் கம்பர் சிறப்பாகக் காட்டியுள்ளமையையும் முதலில் சுட்டிப் புத்திரவாஞ்சை இயல்பு, அதனைக் கம்பர் சிறப்பாகச் செய்துள்ளார். பதிபக்தி பழந்தமிழர் மரபு. கம்பர் வழுவாதனை அமைத்துள்ளார். ஒருமைப் பாட்டைக் கம்பன் சகோதர பாசத்தின் மூலம் விளக்கிக் காட்டியிருப்பதால் சகோதர பாசமே மேலோங்கி நிற்கிறது என்று முடிவு செய்கிறார்.*

392. **கம்பரின் ஆசை**

*நான்காவது கருத்தரங்கு மலர்; இரா. சின்னத்தம்பி; கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு;* 1972; ரூ. 20

*தான் படைத்த காப்பியத்தின் வாயிலாக உடன்பிறப்பின் பாசத்தை உலகுக்குச் சொல்லவேண்டும் என்ற ஆசையைக் கும்பகருணன் வாயிலாக நிறைவேற்றிக் கொள்கிறார் கம்பர் என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர்.*

393. **கம்பன் காதல் வர்ணனைகள்**

*புலவர் செந்துறைமுத்து*

*அருணோதயம். இராயப்பேட்டை; சென்னை -* 14; *மு. ப. அக்.* 1959; 128; ரூ. 2

*கம்பர் திறனும், காதலும் இராமகதையில் எந்த அளவிற்கு விளங்குகின்றன என்பதை ஆராய்ந்து விளக்குவதே இச்சிறு நூல். காதல்விளக்கம், கம்பரும் காதலும், காவியத் தலைவனே காதல் தலைவன், இராமர் சீதையின் இரட்டைக் குழந்தைகள், சிந்தை கவர் ஓவியங்கள், மகளிர் மதுவும் காதலும், கண்டதைக் கேட்டான், ஒருதலைக்காதல், பிரிந்தவர் கூடினர் எனும் தலைப்புகளில் தன் கருத்துகளைக் கூறுகிறார்.*

தமிழ் இலக்கியங்களில் காதல்நிலை கையாளப்பட்டுள்ளதை முதற் பகுதியில் விளக்கியுள்ளார். கம்பரும் உமர்கய்யாமைப் போன்று ஓரளவு வாழ்ந்துள்ளார். மதுவும் மங்கையும் கம்பரை யும் கவர்ந்துள்ளன என்று கம்பரும் காதலும் பற்றிக் கூறுகிருர். காவியத் தலைவனே காதல் தலைவன் என்னும் கட்டுரையில் இராமன், சீதை ஆகியோரின் காதல் திருமணம் பற்றிக் கூறுபவர், அடுத்த பகுதியில் கம்பன் கவியரசானதற்குரிய காரணங்களில் அவரது உவமைச் சிறப்பு ஒன்று(50) என்றும் இணைந்திருந்த பொழுது பெற்ற இன்பத்தையும் பிரிந்திருந்தபொழுது அடைந்த துன்பத்தையும் அவர்களின் இரட்டைக் குழந்தைகளாகக் காட்டு கிருர். அடுத்த பகுதியில் சில காதல் காட்சிகளையும் காட்டுகிருர்.

கம்பர் காவியத்தில் மது உண்ணும் தொழில் மகளிர்க்கே சிறப்பாக வழங்கப்பட்டுள்ளது(70) என்று கூறிச் சான்ருகச் சில நிகழ்ச்சிகளையும் சுட்டுகிருர். கண்டதைக் கேட்டான் என்னும் தலைப்பில் காதல் மிகுந்த நிலையில் தலைவனின் செயல்களை வடித் துள்ளார். ஒருதலை காமத்தில், சூர்ப்பணகை, இராவணன் ஆகி யோரின் ஒருதலை காமத்தினை வர்ணித்துள்ளார். அவரவர் மனம் திருந்தினலல்லாமல் எதுவும் இன்பம் கொடுக்காது. காலம் மாறுதல் காமமுற்ருேர்க்குப் பரிகாரமாக மாட்டாது, அவர் மனம் திருந்தவேண்டும் என்ற கருத்துடனே கம்பர், 'வன்பனை மரமுந் தீய மலைகளுங்குளிர' எனும் பாடலைப் பாடியுள்ளார் என்கிருர். இறுதிக் கட்டுரையில் இராமனும் சீதையும் கூடியது பற்றிக் குறிப்பிடுகிருர்.

**394. சிந்தையாலும் தொடேன் (41—43)**

*கலைமகள் தீபாவளி மலர்: கி. லஷ்மணன், 1965; ரூ. 4*

பிறவற்றைவிட 'இராமனின் ஏகபத்தினி விரதத்தின் மகி மையை வற்புறுத்துவதே இராமாயணத்தின் தலைமையான சிறப்பு. தசரதனின் சோக முடிவுக்குப் பலதாரமணமே காரணம்(41). இதனைப் பிற இலக்கியங்களில் (பெரியபுராணம்—திருநீலகண்டர், புறம் 71, புறம் 73) சுட்டித் தமிழர் பண்பாடாகக் காட்டுகிருர்.

**395. கம்பனில் நட்பு**

ஜாஸ்மின் ஆசிர்

மு. ப. 1970; 147+7

இந்நூல் தோற்றுவாய் (1—9), சங்க கால நட்பு (10—29), அறநூல்களில் நட்பு, (30—42), காப்பியத்தில் நட்பு (43—59), கம்பன் பெருமை (60—64), யாரினும் இனிய நண்பன் (65—78), இரவிகுலச் செம்மலும் கவிக்குலச் செம்மலும் (79—93), சேற் றிலே பிறந்த செந்தாமரை (94—106), நிறை குணத்தவனும் தாயி

னும் நல்லானும் (107—111), தந்தைக்கு நண்பன் (112—119), தாயினும் இனியான் (120—133), வாலி—இராவணன் நட்பு (134—138), இறுவாய் (139—147) என்னும் 13 தலைப்புகளைக் கொண்டு நிறைவு பெறுகிறது. பயன்பட்ட நூல்களும் அடிக் குறிப்புகளும் தரப்பட்டுள்ளன.

அன்பின் அடிப்படையாகவே நட்பு உருவாகின்றது. குகன் இராமனிடம் காட்டும் அன்பு, கண்ணப்பநாயனர் காளத்தி நாத னிடம் கொண்ட நட்பினை நினைவூட்டுகின்றது. இராமன்—சுக்கிரீ வன் நட்பு அரசியல் நட்பு. இருவரது பேச்சிலும் நட்புணர்வும், தன்னலம் கருதாச் சால்பும் வெளிப்படுகின்றன. மனிதனும் விலங் கினமும் நட்புக்கொள்ள இயலும். 'குலத்தளவே யாகுமாம் குணம்' என்னும் முதுரையைத் தன் வாழ்க்கையில் பொய்த்துக் காட்டியவன் வீடணன். முன்னர் பெற்ற நண்பர்களை உடன் பிறந்தவர்களாக ஏற்றுக்கொண்ட இராமன் வீடணனையும் தம்பி முறையாகக் கொண்டான். தனது உயிர் நண்பனை இராமனின் தம்பி பரதன் என்பதால் குகன் அவன்பால் நட்புக் கொள்கிறன். குகன் தனது தமையனை இராமனுக்கு உதவியவன் என்ற காரணத்தால் அவனிடம் நட்புக் கொள்கிறன் பரதன். கம்பர் தனது காவியத்தில் புள்ளினத்தையும், குரங்கினத்தையும் மனித இனத்தோடு ஒப்ப வைத்துப் பாத்திரங்களாகப் படைத்துக் காவியத்துக்குப் புத்துயிர் ஊட்டியிருப்பது பாராட்டுதற்குரியது. தன் நண்பன் (தசரதன்) பிரிவால் பலவாறு வருந்தி உயிர்விடத் துடிக்கிறன் சடாயு. தன் நண்பன் மக்களைக் காப்பதில் சடாயு காட்டும் ஆர்வமும் மகிழ்ச்சியும் கபிலர், பாரி மகளிருக்கு நட்புக் கடன் ஆற்றிய செய்தியோடு ஒப்பிடுதற்குரியது.

கம்பரது காவியத்தின் நட்பு நெறியில் இராமனுக்கு விலங்கு களும் பறவைகளும் உதவுகின்றன. இப்பாத்திரத்தால் காட்டிய நட்புக்கு மனித உள்ளம் மட்டுமே தேவை, மக்கட் பிறப்பன்று என்பதை நன்கு எடுத்துக்காட்டுகின்றர் கம்பர். காப்பியத் திரை யில் மறையாது ஒளிவீசும் வண்ணம் திரிசடை சீதை நட்பு படைக்கப்பட்டுள்ளது. சீதையின் உயிரைக் காத்த பெருமை அற நெறி வழுவா உத்தமி திரிசடையையே சாரும். அறத்திலே பிறந்து, அறத்திலே வளர்ந்து, அறத்தையே சார்பாகக்கொண்ட மகளிர் இருவரும் அறச்சூழ்நிலையில் ஒன்றி நட்புக் கொண்டனர். அச்சத்தின் அடிப்படையில் உருவானது இராவணன்—வாலி நட்பு. ஆனல் இவர்களின் நட்பு இருவருக்குமே உதவவில்லை. இருவரும் அழிந்தனர். மாறுபட்ட நட்பில் அறத்தின் நட்பு வளர் வதையும், மறத்தின் நட்பு மாய்வதையும் காண்கிறேம். குகன் இராமனின் நட்பு தலையாய நட்பு என்றும் உயிரின் ஒருமைப்

பாட்டை இராமன் சடாயு நட்பினின்றும் அரசியல் நட்பினை இராம சுக்கிரீவர் நட்பினின்றும் காட்டுகின்ருர் என்றும் ஆசிரியர் முடிவாகக் கூறுகிருர்.

பண்பின் அடிப்படையில் எழுந்த ஆய்வு நூல் இது.

396. **கம்பராமாயணக் கருத்தோவியம்** (2. சரணுகதி)

சாந்தமூர்த்தி

இராம மந்திரம்; சென்னை; மு. ப. நவ 1970; 2+52 ரூ. 1-50.

அணிந்துரை மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை; நூல் தோற்றுவாய், கதை விளக்கம் என இரு பிரிவாக உள்ளது.

தோற்றுவாயில் சரணுகதித் தத்துவம் எங்கெல்லாம் பேசப்பட்டுள்ளதோ அவற்றையெல்லாம் தொகுத்துத் தந்துள்ளார். அவற்றின் கதை நிகழ்ச்சி, பாடல், பொருள் கொடுத்துத் தெளிவாக்கியுள்ளார். சரணுகதித் தன்மையின் பெருமையினை நன்கு விளக்கும் கட்டம் விபீடணன் அடைக்கலப்படலம் என்பதே என்று கூறி அதனைக் கம்பர் காட்டும் அழகைக் காட்டுவதே இந் நூல் என்று கூறுகிருர். கதைவிளக்கத்தில், இராமன் இலங்கையின் தெற்குக் கடற்கரையில் வந்திறங்கியது, இராவணன் தன் கூட்டத்தினருடன் மந்திராலோசனை செய்தது, விபீடணன் இராவணனுக்கு அறிவுரை கூறுதல், இராவணன் கோபம், இரணியன் கதை, இராவணன் விரட்டுதல், விபீடணன் அறிவுரை கூறி இராமனிடம் அடைக்கலமாதல் ஆகியவை கூறுகிருர். இரணியன் கதை கூறுமிடத்து அதனை நாடக அமைப்பில் உரை நடையில் கூறுகிருர். விபீடணன் அடைக்கலப் படலம் முழுக் கதையும் இடையே சில பாடல்களுடன் கொடுக்கப்பட்டுள்ளது.

இறுதியாக இப்படி இராமபிரானல் ஏற்றுக்கொள்ளப்பட்ட விபீடணன் ஜன்மாந்திர புண்ணிய விசேடத்தால் அரக்கனென்ற இழிபு நீங்கி அமரர்கட்கும் எட்டாத பெரும்பதமடைந்து இருப்பாரானுர் என்று கூறி நூற்பயன் உரைத்து இராமனை, சீதையை வாழ்த்தி நூலை முடிக்கிருர். ராமாயணம் சரணுகதவேதம் என்றும் திருமாலின் அவதாரங்கள் யாவுமே அடைக்கலம் புகுந்தோரைக் காப்பதே பொருளாகக் கொண்டது என்றும் கூறுகிருர். கடவுளைக் காணும் வேட்கையுடையோர் கொள்ளும் உபாயங்களில் கருமம், பக்தி, ஞானம், பிரபத்தி என்னும் நான்கனுள் பிரபத்தி என்னும் சரணுகதி ஒன்றுதான் மிக எளியதாகவும், யாவர்க்கும் அனுட்டான சாத்தியமானதுமாக இருக்கிறதென்பது தெளிவு என்பது ஆசிரியர் கூற்று.

இந்நூலுள் ராமாயணம் சரணுகத வேதம் என்பதனைத் தெளிவாக வெளிக் காட்டியுள்ளார்.

**397. கம்பனின் அடைக்கலக் கோட்பாடு** (569—574)

ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை; அ. விசுவநாதன்; பாண்டிச்சேரி தாகூர் அரசினர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு; 1974.

கம்பனிலுள்ள அடைக்கலங்கள் கொடுப்பார் — பொருள் —பெறுவார் என்ற நிலையில் முறையான அடைக்கலமாகின்றது. சுக்கிரீவன், அங்கதன், விபீடணன் ஆகியோர் இராமனிடம் வாலி, கும்பகருணன் ஆகியோர் கொடுக்க அடைக்கலமாயினர். ஒருவரிடத்து மூவர் அடைக்கலப் படுத்தப்படுதல் சிறப்பிற்குரிய தொன்றும். அடைக்கல நிகழ்ச்சியைக் காப்பியங்களில் கிளை நிகழ்ச்சியாகக் கொண்டு தோற்றுவாய் செய்தவர் இளங்கோவடிகள். இவ்வடைக்கலக் கோட்பாடு காப்பியக் கோட்பாட்டுக்கு ஏற்றது எனக்கொண்டு வளர்ச்சி கண்டவர் கம்பர்.

**398. செய்ந்நன்றி யறிதலும் கம்பரும்** (241-258, 283-292, 345-352)

செந்தமிழ் : தொகுதி 40 ஜெ. நாராயண சுந்தர மையங்கார் 1941-1942.

(21-3-1943 அன்று கம்பர் திருநாள் கூட்டத்தின்போது நிகழ்த்திய சொற்பொழிவு.)

கம்பராமாயணத்துள் செய்ந்நன்றி யறிதல் பற்றி வந்துள்ள செயயுட்கள், கம்பர் சடையப்பருக்குத் தன் நன்றியைக் காட்டியுள்ள இடங்கள், இராமனை இறைவனாகக் கம்பர் படைத்துள்ளமை, ஆழ்வார்களிடத்துள்ள ஈடுபாடு, இராமனைத் தந்தவன் தயரதனாதலால் அவனைப் பலபடச் சிறப்பித்துள்ளமை, இராமனிடத்துள்ள ஈடுபாடு முதலியவற்றை இக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

**399. கம்பனும் பெண்மையும்** (4, 9)

குமரன்; நீலாவதி ராமசுப்பிரமணியம்; ஏப். 1941

பெருந்தடங்கட் பிறை நுதலார்க்கெல்லாம், இருந்து முகந் திருத்தி முதலிய பாடல்களைச் சுட்டிப் பெண்மையை மேன்மைப் படுத்தியுள்ளமையைக் காட்டுகிறார்.

**400. கம்பனில் நாணம்** (80—83)

தமிழ்ப்பொழில் : வி. ரூத்ஜாய்; ஜூன்—ஜூலை: 1972

கம்பர் சிறந்த பாத்திரங்களை நாணுடன் படைத்திருத்தல், அரக்கியர் நாணிலாதவர். நாணே கற்பிற்கு அடிப்படை, சீதையின் நாண்விடாத் தன்மைக்கு எடுத்துக்காட்டு, நாணின் இன்றியமையாமை முதலியனவும், ஒருவரின் புகழிற்கும், பழிப்பிற்கும்,

வாழ்விற்கும், தாழ்விற்கும் நாணே என்பதும் பாத்திரங்களின் வாயிலாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

401. **Modesty in Kampar** (17—26)

Journal of the department of Tamil Vol. III; L. Ruth Joy, University of Kerala, Trivandrum. March 1972

Any woman destitute of the sayings of Tolkaappiyar's indispensable virtues for the females, though in appearance she may look like a woman cannot be claled a woman. It is proved by the characters TaaTakai and Kaikeeyi. Out of three virtues, modesty plays a predominant role. Kampar mentions modesty as a natural embellishment. Modesty is the foundation for chastity. Modesty is the basis for one's honour and dishonour, rise and fall. eg. Ciitai and Kaikeeyi. It is crys tal clear that modesty is the foundation for rectitude, that has been praised by Valluvar and Tolkaappiyar.

All the lines about modesty in Kamparamaynam are given in the footnote No. 2.

402. **கம்பனில் மடன்** (334—338)

ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை (தொகுதி—1) வி. ரூத்ஜாய்; நாகர்கோவில் தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு 1975; ரூ. 18

மடன் என்னும் சொல்லின் பல்பொருள், தொல், புறம், அகம், குறள் ஆகியவற்றில் இச்சொல் வழங்கப்பெறுதல் கம்பனில் இச்சொல்லிற்குரிய பொருள் ஆகியன முற்பகுதியில் இடம்பெறுகின்றன. பிற்பகுதியில் 'பெண்டிரின் கற்பெனும் பொற்பிற்கு அடிப்படையாக மடன் அமைகிறது' என்பது இரு வேறு பாத்திரங்களான சீதை, கைகேயி மூலம் காட்டுகள் தந்து நிறுவப்படுகின்றது.

403. **கம்பர் கண்டவீரம்** 10—48)

உரிமையும் கடமையும்: ம. ராதாகிருஷ்ண பிள்ளை பி. ஏ., பி. எல்., அல்லயன்ஸ் கம்பெனி; இ. ப. 1947; ரூ. 2-50

கற்றிருந்த வில் வித்தையினை கல்லொடித்து இராமன் காட்டியது கல்விபற்றிய வீரமாகும். தாடகையைக் கொன்றது சரியே எனும் ஆசிரியர் அஞ்சத்தக்கன கண்டவிடத்து அஞ்சாமல் காட்டுவதாகிய தறுகண்மை பற்றிய வீரம் தாடகை வதத்தில் வெளிப்படுகிறது என்கிறார். பரதன் வேண்டியும் நாடாள மறுத்த தனை பழியொடுவரும் செயலை எக்காரணம் கொண்டும் புரியாமல் புகழுடை செயலைப் புரிந்ததனை இசைபற்றிவந்த வீரமாகக் காட்டு

கிறார். விபீடணனுக்கு இலங்கையரசை அளித்தல் கொடைபற்றிய வீரமாகும் என்று தொல்காப்பியர் வழியில் இந்நான்கினையும் காட்டுகிறார். இராமன் வாக்கினை நிறைவேற்றப்புரிந்த வாலிவதம் நியாயமானதே. இராமன் யுத்தகாண்டத்தில் காட்டும் வீரங்களை யும் அவனை கும்பகர்ணன், இராவணன் போன்றோர்புகழ்வதனை யும் சுட்டுகிறார். ஹோமரைவிடச் சிறப்பாகப் போரைப் பாடி யுள்ளார் எனும் ஆசிரியர் இலக்குவன், இராவணன், இந்திரசித்து கும்பகர்ணன் ஆகியோர் வீரங்களையும் காட்டுகிறார். இராவணன் இறுதிவரைத் துணிவுடன் போராடுவதும், அடுத்தடுத்து வரும் தோல்விகண்டு தன் வீரத்தினை நொந்து கொள்வதும் சிறப்பு எனக்காட்டுகிறார்.

**404. புதிய இலங்கையில் பழைய வீரர்கள் (17—33)**

உலக இதயஒலி : ல. சண்முகசுந்தரம்; 1974

இலங்கை எரியுண்டபின் இராவணன் அதனைப் புதுக்கியது, மந்திராலோசனை செய்தது இவற்றைத் தொகுத்துரைத்து, வீர தத்துவத்தின் நவநவமான சாயல்களையெல்லாம் கையில் எடுத்துக் காட்டுவது போலக் காட்டுகின்றன கம்பருடைய கவிகள் (33) என்கிறார்.

**405. ஆண்மையும் அருளும் (1—6)**

பன்னிரு கட்டுரைகள் :

போர் தொடங்குமுன் வீரரைத் தூதனுப்புவது கோழைத் தனத்தாலன்று, அவ்வாறுவது நேர்மை கிடைக்குமாயின் போரைத் தவிர்க்கலாமே என என்னும் ஆண்மையும் அருளுமே யாம் என்று கூறிக் கம்பனிலிருந்து அங்கதன் தூதினையும், பாரதத்திலிருந்து கண்ணன் தூதினையும் கூறுகிறார்.

**406. கம்பன் கண்ட புலனடக்கம் (160—187)**

புதியகோணம் (இலக்கியக்கட்டுரைகள்); அ. ச. ஞானசம்பந்தன்,

புலனடக்கமே இக்காப்பியத்தின் அடிப்படை. புலனடக்கத் தால் இராமன் மனிதனாகப் பிறந்தது தேவனாக உயர்கின்றான். இராவணன் புலனடக்கம் இன்மையால் புலத்தியன் மரபில் தேவனாகப் பிறந்தும் கீழே சென்றுவிடுகிறான். புலனடக்கம் செய்தவருள் அனுமனுக்கே முதலிடம் தரவேண்டும் (174). அமரருள் வைக்கும் அடக்கம் அனுமனிடம் உள்ளகாரணத்தினால் தான் அடக்கத்தின் பின்னே வருகின்ற அனைத்துப் பண்புகளை யும் பெற்றுவிடுகின்றான் அனுமன் என்பதனைக் குறிப்பால் குறிப்புணர்பவனாகிய இராமனால் காணமுடிகிறது. ஒன்றும் கிடைக்காத காட்டில் வாழ்ந்த இலக்குவனுடைய புலனடக் கத்தைக் காட்டிலும் அனைத்தையும் எதிரே வைத்துக்கொண்டு தொடமாட்டேன் என்று வாழ்கின்ற அந்தப் பரதனுடைய

புலனடக்கத்தை நினைக்கும்பொழுது கம்பனுடைய சொல்நயம் தெரிகிறது(181). கொள்கை அழிந்தபோது பரதன் சீறி எழுகிறான். கைகேயி அவன் தாய் என்ற உரிமை அப்பொழுது அற்றுவிடுகிறது. ஆகவே புலனடக்கம் பேசிக்கொண்டு கொள்கையை விட்டுவிடுதல் புலனடக்கம் இல்லை. அந்தப் புலன்களை வைத்துக்கொண்டு ஆள்கின்றது தான் புலனடக்கம் என்பதைப் பரதன் வாழ்வில் காண்கிறோம்(185).

40/. கம்பன் கண்ட அறம் (154—160)

புதியகோணம் (இலக்கிய கட்டுரைகள்): அ. ச. ஞானசம்பந்தன்

தனிப்பட்டவன் அறங்கள், சமுதாய அறங்கள் என்ற இரண்டையுமே கம்பநாடன் தன்னுடைய பெருங்காவியத்தில் பரக்கப் பேசுகிறான். அரசகுமாரனாகிய பரதன், மன்னன் இல்லாமல் தனககாகக் காத்திருக்கும் நாட்டை ஆள மறுப்பது அரச அறத்திற்கு மாறுபட்டதுதான் எனினும் அந்த அறத்தைப் புறக்கணித்துத் தன்னுடைய தனி அறத்தை நிலைநாட்டுகிறான்(158). பிறன் மனைவியை விரும்பிய காரணத்தால் இராவணன் உயிரையே இழந்தான். ஆனால் அதே பிழையைச் செய்த சுக்ரீவன் உயிரை இழக்காததுடன் அந்த இராமனுடன் தம்பி முறையுங் கொண்டாடினான் என்பது எவ்வளவு முரண்பட்டது. எனவே கம்பநாடான் தான்காட்டும் சமுதாய அறத்தில் இத்தகை ஒரு முரண்பாடு தோன்றுவதை விரும்பவில்லை(159). கம்பநாடானுடைய தாரை விதவைக் கோலம் பூண்டு வாழ்கிறாள். கம்பனுடைய அறங்கள் யாவருக்கும் ஒப்பவே பேசப்படுகின்றன.

408. கம்பன் கண்ட அறநெறி (9—13) (கவிதை)

கம்பன் கண்ட அறநெறி: அரு. சோமசுந்தரன், பொன்முடி பதிப்பகம்; காரைக்குடி; மு. ப. சூன் 1971 ரூ. 2

போதையிலே இராவணனே காத்திருக்க, பொழுதெல்லாம் இராமனையே பார்த்திருக்க சீதையினைக் காத்தது யார்? தருமந் தானே. சீதையவள் அறத்திற்கே தலைவி அன்றோ(11). சீதை தீப்புகுந்து எழுந்தது அறத்தின் வெற்றி. இராமன் அறத்தின் உரு. அறம் வெல்லும் பாவம் தோற்கும்(13) எனக் கம்பன் கண்ட அறநெறி கூறுகிறார்.

409. கம்பன் அறம் வெல்லும் (68—127)

அறம்வெல்லும்: சு. சிவகாமசுந்தரி; அன்புவடிவு வெளியீட்டகம்; 538, இராணி வாய்க்கால் சந்து, தஞ்சாவூர்; ரூ. 3

கதையின் சிறப்பாலோ, காவிய ஓட்டத்தின் பெருமையாலோ, கம்பனுக்குப் புகழ் வந்துவிடவில்லை. இந்தக் கதைக்கும், நடைக்கும், புகழுக்கும் மையமாக அமையும் கருத்தான அறத்தின் வெற்றியே என்று துணிந்து கூறலாம்(92). இங்கு இராமனும்

சீதையும் காடேகிய நிகழ்ச்சியைச் சுட்டுகிறார். அறம் வெல்லும் என்பதற்கான கருத்தை மையப்படுத்துகின்றது ஆரணிய காண்டம்(98). வாலிவதையை இராமன் நிகழ்த்திய காரணம் அறம் வெல்லும் என்ற கருத்தை நினைவுபடுத்தத்தான்(109). இராமனுக்குத் தசரதன் வரமளித்தல், சூர்ப்பணகை அங்கம் பங்கப்படல், இராவணன் சீதையிடம் இரத்தல், அனுமன் சீதையின் கற்பை வியத்தல், கும்பகர்ணன் அண்ணனுக்கு அறன் உரைத்தல், இராவணன் அழிதல் முதலிய நிகழ்ச்சிகளைச் சுட்டி சீதையின் மீட்பு, தருமத்தம்பியின் தியாகம் நிறைந்தவாழ்வு, இராமன் திருமுடி சூட்டிக்கொள்ளல் இவை அறத்தின் வெற்றியாகவே அமைந்துள்ளன(126) என்கின்றார்.

410. **கம்பன் வடித்த பண்புகள்** (கடமை) 79—89 (கவிதை)

கவியரங்கக் கவிதைகள்: ரகுநாதன்; என்சிபிஎச்; 1963

வாய்மைகாத்த தசரதன் அரசியல் கடமை, அரசு உரிமை ஏற்காத பரதன் கடமையாகியவற்றைப் பாடுகிறார்.

411, **இராமாவதாரத்தில் பாவிகப் பண்பு**

செந்தமிழ்ச் செல்வி: தொகுதி 42; கா. சி. தனக்கோடி; ரூ. 10

நூல் முழுவதும் காணப்படும் ஒருமைப்பாடான 'நாகரிகத்தின் பெயரால் தம் சீரிய ஒழுக்கத்தினின்றும் மாறலாகாது' என்ற கருத்தைக் கம்பர் காவியத்தில் எவ்வாறு காட்டிச் செல்கிறார் என்பதனைச் சுட்டிச் செல்கிறார்.

(முற்றுப் பெறவில்லை)

412. **காப்பியமும் செந்நெறியும்**

Dr. R. P. Sethupillai Silver jubilee commemoration volume ர. இராமாநுஜாச்சாரியார்: 1961 Palaniappa Bros. Madras-5, Trichy-1

இராமாயணத்துள் இராமன் குகனுடன் நட்புக்கொண்டது, பரதனும் குகனை அன்புடன் ஏற்றுக்கொண்டது, கோசலை அவர்களை வாழ்த்துவது, இராமன் விபீடணனை ஏற்கும்போது, இராவணன் வந்து அடைக்கலம் கேட்டாலும் ஏற்பேன் என்பது, சீதை இராவணன் ராமனிடம் சரணடைந்தால் ஏற்றுக்கொள்வான் என்று கூறியது முதலிய நிகழ்ச்சிகளைச் சுட்டி, 'ஒரு பெருமகன் தாழ்ந்தவனாயினும் அன்புடையார் பாலொழுக வேண்டிய நெறி, உடன்பிறந்தோர், கணவன்-மனைவியர், தாயர்-புதல்வர் முதலியோர் தம்முள் கருத்து மாறுபாடின்றி ஒத்த மனப்பான்மை உடையராய் மகிழ்ந்து வாழ்தல் வேண்டுமென்ற உலகியல் முறையை, காப்பியச் செந்நெறியைக் காட்டுகிறார்.

## மெய்ப்பாடு

காப்பியக்களனில் பாத்திரங்கள் வாயிலாகக் கவிஞன் காட்டும் மெய்ப்பாடுகள் இவண் இடம்பெறுகின்றன. நகைச் சுவை, அவலம், வெகுளி, பொது என்ற வரிசையில் அமைக்கப் பட்டுள்ளன. கு. கோதண்டபாணி கம்பரின் மெய்ப்பாடுகளை உணர்த்துவதில் ஓரளவு வெற்றி பெற்றுள்ளார் (கம்பரும் மெய்ப் பாட்டியலும்).

413. **கம்பன் நகைச்சுவை**
ஆனந்த போதினி: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் டிச. 1932

'போக்கினீர் என்னுகி போய்த் தென்னீர்', 'ஆலமும் வெளி தெனும் நிறத்தர்', 'கறங்குகால் புகா', 'அளியாலிவ்வூர் காணும்', அனுமனிடம் தோற்றோடும் அரக்கர் நிலை, 'அஞ்சலை அரக்க', 'இந்திரன் செம்மல்', 'வில்லாளர் ஆனார்க்கெல்லாம்' முதலிய பாடல்களில் உள்ள நகைச்சுவையைக் காட்டுகிறார்.

414. **கம்பராமாயணத்தில் நகைச்சுவை** (27—41)
காவேரி: ராய. சொ; அழகுப்பதிப்பகம்; காரைக்குடி; மூ. ப. மார்ச் 1967; ரூ. 1-25

கம்பர் தமது காவியத்தில் ஆங்காங்கு நகைச்சுவையை அமைத்திருக்கின்றார் என்றாலும், நகைச்சுவையில் அவர் முழு வதும் இழுத்த இடம், காட்டில் வாழ்ந்த இராமனைச் சூர்ப்ப ணகை சந்தித்த கட்டம். இக்காட்சியை அப்படியே உரைநடையில் மிக அழகாக இடையிடையே சில பாடல்கள் கொடுத்து வர்ணித் துள்ளார்.

415. **கம்பரும் காப்பியச் சுவையும்** (60 —67)
கல்விக் கழகக் கட்டுரை. (புதுவைக் கல்விக் கழகத்தின் வெள்ளி விழா மலர்) ஈ. எஸ். வரதராஜ ஐயங்கார், கல்விக் கழகம், புதுச்சேரி, 1951, ரூ. 5-50

பேதமை காரணமாக நகை (நிருதர் தமருளும் பெற்றேன்), பெருமித நகை (வாலி வலியன் கொல்) எள்ளல் நகை (அதற்குக் கூறும் அனுமன் விடை), வெகுளி நகை (அங்கதன், தனக்கு இராவணன் முடிசூட்டுவதாக அறிவித்தபொழுது நகைத்தல்), அவலச்சுவை (இறந்த வாலிகண்டு சுக்கிரீவன் அழுதல், வீழ்ந்து கிடக்கும் இராம இலக்குவர் கண்டு சீதை அழுதல்...) போன்ற வற்றைக் காட்டுகிறார்.

416. **கம்பன் காட்டும் அவலம்** (41— 53 பக்)
அவலச்சுவை: P. மங்கையர்க்கரசி
பொருட்கட்டுரை. மதுரைப் பல்கலைக் கழகம். 1971

சீதையின் அவலத்திற்கு, சுற்றமனைத்தும் இழந்த இழவே நிலைக்களனுகின்றது. இதனைக் கம்பன் உளவியலறிந்து பாடுகிருன். ஆதரவற்ற நிலையிலும் கணவன்மேல் கொள்ளும் நம்பிக்கைதான் பெண்மையைக் காக்க ஆண்மைக்கு ஊட்டப்படும் வீரம். மறமழிந்து அறம் நிலைக்கச் செய்யும் புனித சேவைக்குத் தெய்வநீதி தேர்ந்தெடுக்கும் கருவி அவலமுற வேண்டியதுதான் என்பதுவே அசோகவனத்தின் மர்மம். அஞ்சனவண்ணன் அடவி அடைவது உறுதியாகிவிடுமோ என்று அவலிக்கும் அயோத்தி வேந்தன் புலம்பல் முழுவதும் அவலத்திற்கு முழுச்சான்ருக உள்ளது. இராவணன் அவலம் தானே தேடிக்கொண்டது: இராவணனுக்காக இலங்கை அழிந்தது. விதியில் நிகழும் அவலத்தைவிட தலைவனது செய்கையால் நேரும் வீழ்ச்சியின் அவலமே சிறந்தது. அவலத்திற்குக் காரணம் ஊழ் என்பதனைக் கம்பரும் ஏற்றுக் கொள்கின்ருர்.

**417. அயோத்தியா காண்டத்தில் அவலம்**

பொருட்கட்டுரை. மதுரைப் பல்கலைக் கழகம் 1972

முன்னுரை - கலையின் கண்ணீர்-விளிவில் கொள்கை அழுகை (தொல்காப்பியர் நெறி) - சிறந்த பாத்திரங்களின் சில தவறுகள் விளைக்கும் அவலம் - போராட்டம் விளைக்கும் அவலம் (ஹெகலின் கொள்கை) - மாசு கழுவும் அவலம் (அரிஸ்டாட்டில் நோக்கு) - அவலத்தைக் காட்ட கம்பர் கையாளும் உத்திகள் (பாத்திரங்களின் அவலம், இயற்கையின் அவலம், முரண்பாடான பின்புலம்) அவலத்தில் ஏற்படும் மெய்ப்பாடுகள் - முடிவுரை.

சிலம்பின் அரங்கேற்றுக்காதை எங்ஙனம் திருப்பு மையமாக அமைந்து கதையோட்டத்திற்கு உயிரோட்டம் அளிக்கின்றதோ, அதைப்போன்று அயோத்தியா காண்டம் கதையைத் திசை திருப்பி உயிரோட்டமுடையதாய் அமைகின்றது. கதையின் இறுதியில் நிகழும் பிற அவலங்களுக்குக் காரணமாய் அமைவது அயோத்தியா காண்டத்தின் அவலம். அவலச்சுவைக்கு அயோத்தியா காண்டம் என்று கூறுமளவிற்கு அவலம் பிறசுவைகளைவிட அதிகம் இடம் பெறுகின்றது. அவலச்சுவையை உயர்த்திக் காட்டுவதற்காகவே பிறசுவைகளைக் கையாளுகிருர். அவலத்தினை உயர்த்திக் காட்டுவதற்காகவே பாத்திரங்களின் உயர்ந்த தன்மைகள் கூறப்படுகின்றன. பாத்திரங்களின் உள்ளுணர்வுகளையும் உரையாடல்களையும் கூறி அவலத்தினைக் காட்டுகிருர். பாத்திரங்களின் ஒவ்வொருசெயல்களும் அவலமுடிவினை அடைவதற்காகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. கம்பர் தம் உள்ள உணர்வுக்கேற்றவாறு சுற்றமும் சூழலும் செயல்படுவதைக் காண்கிருர். எனவேதான் பாத்திரங்களின் அவலம் இயற்கைப் பொருள்களிடத்தும் பிரதிபலிப்பதனைக் காட்டுகின்ருர்.

கம்பர் தம் காப்பியத்தில் மண்டிக் கிடக்கும் துன்பத்தின் ஆழத்தினையும் பரப்பையும் உணர்த்த அதன் முன்னர் இன்பத்தையும் மகிழ்ச்சியையும் தரும் சித்திரங்களைத் தீட்டுகிறார். கம்பர் தம் காப்பியத்தின் வாயிலாக வாழ்வியல் தத்துவங்களையும் கற்பிக்கின்றார். இன்பம் தனக்குப் பின்னால் துன்பத்தை இழுத்து வரும் என்னும் தத்துவத்தைக் கூறி மக்களைச் செம்மை வழியில் செம்மாந்து நடக்க அழைக்கின்றார். உள்ளத்தை உற்று நோக்கும் கம்பரது கண்கள், உடலில் காணும் வேறுபாடுகளையும் நோக்கி அழகுறக் காட்டும் தன்மையுடையன. கம்பர் வீழ்தல், விம்மல், வெய்துயிர்த்தல் முதலிய பல அவல மெய்ப்பாடுகளைக் கூறுகின்றார். உள்ள உணர்ச்சிகளையும் உடல் மாற்றங்களையும் சித்திரமாகத் தீட்டிய உளவியல் உடலியல் கலை வல்லுனராம் கம்பர் திறன் போற்றற்குரியது.

418 **காவியச்சுவையும் கவியரசும்** (9—21)

இலக்கிய ஆய்வு நினைவுகள். வி. சீனிவாசன், பாரிநிலையம், மு.ப. 1974; ரூ. 3-75

தந்தையின் பிரிவாற்றாது தனயன் (அங்கதன்) அழுதான் ஆயினும் அதனாற் புலப்பட்டது வாலியின் பெருமிதமாம் (11). 'செருவார் தோளா நின் சிந்தை' எனும் பாடலின் மூலம் தாரை, வாலி உறவில், தாரையின் ஒட்டிய உறவிற்காக ஏங்கிய ஏக்கத்தையும் ஒட்டாத உறவிற்காக இரங்கிய மன இரக்கத்தையும் காண முடிகிறது (15).

419. **எண்சுவைக் கம்பன் (வெகுளி)** (65—74) (*கவிதை*)

*கவியரங்கக் கவிதைகள்: ரகுநாதன், என். சி. பி. எச், 6. நல்ல தம்பிச் செட்டித் தெரு, சென்னை, மு. ப. 1963; ரூ. 3*

இராமன் காடேகவேண்டும் என்பது கேட்ட இலக்குவன் சினம், கங்கைக் கரையில் பரதனைக் கண்ட குகனின் சினம் இவற்றைக் காட்டுகிறார்.

420. **கம்பரும் மெய்ப்பாட்டியலும்**

கு. கோதண்டபாணி பிள்ளை

அண்ணாமலைப் பல்கலைக் கழகம்; அண்ணாமலை நகர்; 1971; 2+4+105; ரூ. 3.

மெய்ப்பாட்டியல் 5-30, சங்கப்பாக்களில் மெய்ப்பாடுகள் 37-64, கம்பரும் மெய்ப்பாடுகளும் 65-105.

சங்க இலக்கியத்தில் காணாத ஒரு புதுமுறையைக் கம்பர் கையாளுகிறார். இரங்காத அரக்கியரும் தளர்ந்து அழுகின்றனர். பெற்றதாயும் அழுகின்றாள். பிறரும் அழுகின்றார். இவ்வாறு காண்போர் மனத்தை நெகிழ்க்கும் நிலை ஒன்றை ஏற்படுத்திய பின் சீதையின் துயரை விரிக்கின்றார். சீதை பெற்ற கொடிய

துயரை நாம் நேரே காணுமாறு கம்பர் மெய்பட முடித்து காட்டுகிறார். (களங்காண்: 7, 8, 9) பெண்மையின் மென்மை உள்ளத்தை ஆண் மக்களுக்குப் போதியதாகும் என உணர்த்தவே இங்குத் துடித்தவர் யாவரையும் கம்பர் பெண்டிர் ஆக்கினர் போலும்(69). அரசியலில் மெய்ப்பாடுகள் பயன்பட்டதைக் காட்டும் இலக்கியமே இலதாயிற்று. இக்குறைப்பாட்டை நீக்கிய பெருமை அதிலும் வெற்றி பெற்ற பெருமை கம்பருக்கே உரியது(73).

அனுமன் இராம இலக்குவரை இன்னார் என்று உணருவதைச் சுட்டி உலகியலை, வாழ்வியலை எவ்வளவு அறிந்திருக்கிறான்; இவ்வறிவெல்லாம் செறிந்து திண்மை பெற்ற அனுமன் உணர்வு, மெய்ப்பாடுகளைக் கொண்டு உணர்ச்சிகளை அறியும் வழியைக் காட்டியது. 'தேர்வது எக்கிழமையொடு?' என ஒரு கேள்வியோடு இப்பாடலை முடித்ததன் நோக்கம் கற்போர் சிந்தனையைத் தூண்டி, மெய்ப்பாடு கொண்டு உள்ளத்துணர்ச்சியைத் தேடும் வழியை உணர்த்தவே யாகும்(76). தொல்காப்பியர் கற்பு என்பதை ஓர் ஒழுக்க முறைபாகக் கொண்டாரே யன்றி ஓர் உணர்ச்சியாகக் காட்டினர் இலர்(78). சீதைகற்புடையாள் எனக் கண்டதும் அனுமன் உய்த்துணர்ந்ததேயாகும், 'கற்பெனும் பெயர தொன்று களிநடம் புரியக் கண்டேன்', 'கண்ணினும் உளை நீ, தையல் கருத்தினும் உளை நீ, வாயின் எண்ணினும் உளை நீ', என்றும், 'தவம் செய்த தவமாம் தையல்' என்றும் தான் கண்ட மெய்ப்பாடுகளைக் கூறிக் கற்பைக் கண்டேன் கண்களால் என்று உறுதி செய்கிறான்(80)

சங்கப்பாக்களிற் போலக் கண்ணின் மெய்ப்பாடுகளைக் கொண்டே இராமனுக்கும் சீதைக்கும் காதல் மூண்டது. வில்லை வளைத்தால் தான் பெறுங் கன்னி தான் கண்ட கன்னியே ஆவளோ? அன்றி பிறிதொருத்தி யாவளோ? என ஐயம் இராமன் மனத்தில் நிகழ்ந்திருத்தல் வேண்டும். இராமன் கன்னி மாடத்து இருந்த சீதையைக் கண்டிருத்தல் வேண்டும். காதல் கொண்டிருத்தல் வேண்டும் என, மேனகையிடம் காதற்கலையில் பழகிய கௌசிகன் உய்த்துணர்ந்தான் போலும். இராமன் ஐயத்தைப் போக்குவது அவன் கடமையாயிற்று(82). இவ்வாறு மெய்ப்பாடுகளைக் கொண்டு உள்ளத்து நிகழும் மாற்றங்களை அறியும் ஆற்றல் கௌசிக முனிக்கு இருந்தது(82). உலக அறிவு செறிந்து திண்ணுணர்வு பெற்றவனாதலால் அம்முகத்தின் மெய்ப்பாடு கொண்டு, இவள் பெண்ணெனக் கருதிய அம்பைத் தொடுக்கத் தயங்குகிறான் இராமன் எனக் கண்டான் கௌசிகன்(83). வில்லுங் காண்பர் என்பதில் இராமனுக்குக் கௌசிகன் இடும் ஆணை உள்ளடங்கி நிற்கிறது. நீ ஏன் ஐயப்படல் வேண்

டும் என்று இராமன் முகத்தைப் பார்த்துத் தன் பார்வையால், நீ கண்டு காதல் கொண்டவளே வில்லை வளைத்து உன்னைப் பெறு பவள் என உணர்த்தினன்(84). கௌசிகன் மெய்ப்பாடுகளால் உணர்த்தியும் தன் ஐயம் முற்றிலும் நீங்காது தான் நேரில் காணும்வரை நிலை பெற்றிருந்த ஐயம், வில்லை வளையாத முன் இராமனுக்குத் தோன்றாது இருந்திருந்தால் அவன் காதல் பொய்க் காதல் ஆதல் வேண்டும்(85). சீதை தன் கைவளையைத் திருத்து வாள் போலக் கடைக் கண்ணால் இராமனைக் கண்ணாரக் கண்டு ஐயம் தெளிந்தாள். இங்கு மெய்ப்பாடுகள் சங்கப் பாக்களில் உள்ளத்துணர்ச்சியை உணர்த்தப் பயன்பட்டமை போலன்றி, வெளிப்படுத்தாது ஒளித்து வைக்கவும் அதனைக் கம்பர் பயன் படுத்தியுள்ளார். கம்பர் காட்டிய மெய்ப்பாடுகளும் சங்க இலக் கிய மெய்ப்பாடு போலவே வாழ்வியல் உண்மைக்கு மாறானவை அல்ல. இயல் நெறி பிழையாகா(86). இராமனுடன் இலக்கு வனும் சீதையும் செல்ல உறுதி செய்யும்போது ஏற்படும் நிகழ்ச்சி களைக் கம்பர் ஓவச் செய்தியாக மெய்ப்பாடுகொண்டு விளக்கு கிறார். கம்பரைப் புதிய கோணத்தில் திறனாய்வு செய்துள்ள இந்நூல் சிறந்த முறையில் விளக்கம் அளிக்கிறது.

## இயற்கை

இலக்கியத்திற்கு இயற்கையை இன்றியமையாததொன்றாகக் கம்பன் படைத்திருப்பதனை இங்கிடம் பெறுவன காட்டுகின்றன. பொது நிலைப்பிலமைவன, தாவரங்கள் பற்றியன, விலங்கினங்கள் பற்றியன என்று அவை வகை செய்யப்பட்டுள்ளன. கம்பனில் தாவரங்கள் (கி. மோகனகுமாரி), கம்பன் கண்ட உயிரினங்கள் (மே. பிளாரன்சுதாசு), கம்பன் காவியத்தில் உயிரினங்கள் (பி. எல். சாமி) எனும் நூல்கள் கம்பன் அறிவியலறிவை ஆய்வு செய்யும் சிறப்புடையன.

421. **நாடென்ப நாடா வளத்தென (94—96)**
ஆனந்தபோதினி: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், ஆக. 1931
கோசல நாட்டின் வளம் கூறுகிறார்.

422. **கம்பன் கண்ட தமிழகம் (109—116)**
இலக்கியச் செல்வம்: ம. பொ. சி
இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை - 4; மு. ப. 1955 ரூ. 2
பாலகாண்டத்தின் முதல் நான்கு படலங்களில் வால்மீகி இராமாயணத்தையே மறந்து தமது கண்ணால் காணும் தமிழகத் தின் நடைமுறைச் சங்கதிகளையும், தமது கற்பனையில் உள்ள பொருளாதார, சமூக கொள்கைகளையும் ஒன்றுபடுத்தி, கோசல நாட்டின்

மேல் வைத்து ஒரு புதிய தமிழகத்தையே சித்தரித்துக் காட்டு கிருர். இங்குத் திருக்குறள், புறம், மேகலே, சிலம்பு முதலிய தமிழ் நூற்களின் சிறந்த கருத்துகளேக் கம்பர் கையாண்டிருக் கிருர்(111). என்று கூறி கோசலநாட்டு வருணனையைத் தருகிருர்.

**423. கம்பராமாயண கருப்பொருள் (571—574)**

*ஆனந்தபோதினி: இராமசுப்பிரமணிய நாவலர் 1959*

அயோத்தி நகர மதில், நகர், மாந்தர் வருணனையைச் சுருக்க மாகக் கூறியுள்ளார்.

**424. கம்பன் இயற்கை வருணனைகள்**

புலவர் செந்துறைமுத்து

அருணேதயம்; இராயப்பேட்டை; சென்னே - 14; மு. ப. சூலை 1959; 128; ரூ. 2

கம்பர் வம்பரோ (5—17), கதிரவனின் கற்பனைகள் (18—35), தண்மதியின் வண்ணக்காட்சி (36—46), மேகத்தில் போகம் (47—54), மின்னலும் மழையும் (55—64), இருளில் கம்பர் (65-72), கவிச்சோலையில் மலர்ச்சோலை (73—80), வயல் வளமும் வெள் ளோட்டமும் (81—90), மலேயோ கலேயோ (91—100), ஆற்றங் கரையில் கவியரசர் (101—111), வைகல் நகர் வருணனை (112-116), கற்பனை முத்தாரம் (117—128).

மருதநிலச் சிறப்பு, முல்லேநிலத் தன்மை, குறிஞ்சி வளம், சோழநாட்டு வருணனை, பாண்டிய நாட்டின் சிறப்பு, காவிரியின் சிறப்பு முதலியன கம்பரின் தாய்நாட்டுப் பற்றை விளக்கும் பகுதி களாகும்(9). தமிழ்மறைக் கருத்து, தாய்நாட்டு அரசியல் கொள்கை, தன்னுட்டு மன்னவன் காத்த முறை அனைத்தையும் உள்ளடக்கித் தசரதன்மேல் ஏற்றிக் கூறுவதின் வாயிலாகக் கம்பர் எந்த அளவிற்குத் தமிழக அரசியலே மேன்மைப்படுத்து கின்ருர் என அறிகின்ருேம்(11). கதிரவன் வருணனையைக் காலேக் காட்சி, மாலேக்காட்சிஎனப்பிரித்து கம்பன் அவற்றைச் சிறப்பாகப் பாடியுள்ளவற்றில் சிலவற்றைத் தருகிருர். கம்பர் தண்மதியினை விளக்குகையில் 'மை விளக்கியதே யன்ன வயங்கிருடுரக்க வானங் கைவிளக் கெடுத்தென்ன வந்தது கடவுட் திங்கள்' எனும் அடிகள் 'ஏற்றினுற் கிருளை நீங்கக் கைவிளக் கேந்தி யாங்கு வீறுமதியந் தோன்ற' எனச் சிந்தாமணியில் இருப்பதாகக் காட்டு கிருர்(40).

மேகத்தை வருணித்து இன்பங் கண்ட தமிழ்ப் புலவர் பெருமக்களுள் கம்பநாடர் முதன்மை வாய்ந்தவர். மற்ற புலவர் கள் வருணிப்பதைவிட, கம்பர் பொருள் பொதிந்த - நிறைந்த நிலேயில் வருணித்துள்ளார்(48). கம்பர் பெருமான் விண்ணகத்தில் உள்ள பகுதி ஒவ்வொன்றையும் தனித்தனியே விளக்கும் தன்மை,

வருணிக்கும் முறைமை தமிழுக்கே உன்னத நிலையை அளிக்கும்(64) கம்பநாடரின் பாடல்கள் ஓர் அழகான சோலை. ஒரு சோலையில் நாம் பெறக்கூடிய அனைத்தையும் கம்பர் கவிகளில் பெறலாம்(73). கம்பரின் ஒவ்வொரு கற்பனையும், தன்மையில்—சிறப்பில் ஒன்றினும் ஒன்று உயர்ந்தே செல்கிறது. கம்பர் மழைக் காற்றை வருணிக்கும் பொழுது தம் சிற்றின்ப மிகுதியை வெளிப்படுத்தி விடுகின்றார். இது எங்ஙனம் தெளிவாகிறதென்றால், பல இடங்களில் சிற்றின்பப் பகுதியையே உவமை கூறிச் செல்வதன் மூலம் எனலாம். சிறப்பாகக் கூறினால் விலைமாதரை மனங் கூசாமல் உவமை காட்டுகின்றார். பல இடங்களிலும் இப்படிக் காட்டிச் செல்வது அவருடைய உள்ளப்பண்பை அறியக் கருவியாகிறது(121). கற்பக மனையவக் கவிஞர் என்ற கம்பர் தொடரை நாம் கூறும்பொழுது கற்பகம் அனைய கம்பர் என்பது மிகவும் பொருந்தக்கூடியது(127). எளிய நடையில் சுவையாகக் கம்பன் இயற்கை வருணனைகளை வடித்துள்ளார்.

425. **கம்பர் கண்ட கோசலம்** (386—388)

திருக்கோயில்; கு. மதுரை முதலியார்; சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு; மே 1970; ரூ. 1

பெண்களுக்குச் சிறப்பும், சிறப்பின்மையும் வருவதற்கு முக்கிய காரணம் அவர்களது கண்களே. சீதையின் சிறப்புக்குக் காரணம் அவளுடைய கண்களே (சான்று: மண்ணிலும் நல்லள்...) மழையின் மாட்சிக்குக் காரணம் மகளிரின் கற்பே என்பதனை 'ஆசலம்புரி ஐம்பொறி வாளி', 'பொற்பால் நின்றன பொலிவு', எனும் பாடல்கள் காட்டுகின்றன. கோசலநாட்டில் குலம், பருவம், வடிவு, செல்வம் முதலியவற்றாலும் ஒத்துள்ள மகளிருடனே மணச் சடங்கில் ஆடவர் பொருந்தினர்: வேளாண்மை செய்யாவழி இல்லின் கண் இருத்தலும், பொருள் போற்றலும் காரணமாக வரும் துன்பச் செய்கைகட்கெல்லாம் பயன் இலலை என்றும், மனைவியோடு இல்வாழ்வதெல்லாம் விருந்தினரைப் பேணி உபகாரம் செய்தற் பொருட்டே என்றும் வள்ளுவர் கூறியுள்ளதற்கேற்ப இலக்கியமாக கோசலநாட்டினர் காட்சியளிக்கின்றனர். (சான்று: விருந்தினர் முகம் கண்டு அன்ன விழா அணி விரும்புவார்...) நீதிகள் பொய்மையில்லாத நிலைமையில் நின்றன. அறங்கள் மாதரார் அன்பில் நின்றன என்று கம்பர் கண்ட கோசலத்தைக் காட்டுகிறார்.

426. **கம்பர் கண்ட அயோத்தி** (521—523)

திருக்கோயில்; கு. மதுரை முதலியார், சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு; சூலை 1970; ரூ. 1

கம்பர் அயோத்தி நகர வருணனையில் தமிழின் தனிச் சிறப்பை விளக்கியுள்ளது. அயோத்தி மதிலைப் புகழ்ந்த பின்னர் அகழியினைப் பாடியுள்ளது முதலியவற்றைக் குறிப்பிட்டு கோபுர வாயில்களில் அமைந்துள்ள பல சித்திரங்களில் ஒன்றன் சிறப்பைக் காட்டி (தாவில் பொற்புலத்தின்) அதனால் முற்காலத்தில் சித்திரத்தில் கைதேர்ந்த மக்கள் பலர் இருந்தனர் என்பதை அறியலாம் என்கிறார். மேலும் பெண்களின் பேரழகை எடுத்துக் காட்டுவது, அயோத்தியில் கலைமகளும் திருமகளும் நடனம் புரிவது, அதன் வளமை, கல்வி, கேள்வி, தவம், அன்பு, தருமம், போகம் இவற்றில் மக்கள் சிறந்துள்ளமை ஆகியவற்றைக் கம்பர் கூறியுள்ளமை சிறப்பாக அமைந்துள்ளது என்று குறிப்பிடுகிறார்.

427. கம்பர் (102—129)

இயற்கை விருந்து: இரா. சாரங்கபாணி, அந்துவன் பதிப்பகம், 4, கல்லூரிச் சாலை; காரைக்குடி; 1974

கதைப்போக்கோடு தொடர்புபடுத்தி இயற்கையைப் பாடுவதே அவர்தம் பெருநோக்காகக் காணப்படுகிறது. அவர்தம் புனைவுகளும் உயர்வு நவிற்சியாகவே பெரிதும் அமைந்துள்ளன(102). கைகேயி வரம்பெற்ற ஞான்று நிகழ்வுகளை விடியற் பொழுதுடன் இயைபுபடுத்திக் கூறலைக் காட்டுகிறார். கானகம் வந்த இராமனைக் கண்டு கோதாவரி கண்ணீர் வடித்தல், சீதையின் துயருக்குக் கோதாவரியின் வெள்ளத்தைக் கண்ணீராகக்கொண்டு நிலமகளழுதல் இரண்டிற்குமிடையேயுள்ள கற்பனை நயம் காட்டுகிறார்.

சீதையின் கண்களைத் தன்னை வெளிப்படுத்தி இராமனுக்கு நினைவுறுத்தி அவனை அல்லல்பட விடக் கூடாது என்னும் மீன்கள், சீதையைக் காட்ட முடியாத அன்னங்கள் தீப்புகல், இராமனுக்குக் கடல் துயில்கொள்ள ஏற்பாடு செய்தல், சீதையை மீட்டுத் தரும்படி தாயாகிய கடல் அவன் கால்களில் வீழ்ந்து வேண்டுதல் முதலிய புனைவுகளையும் காட்டுகிறார். கடலின் சீற்றத்தைத் தன் நிறம் கவர்ந்தவன் இப்பொழுது தன்னைத் தூர்ப்பதற்கு வந்துள்ளமை கருதி ஆரவாரித்தலுக்கு ஒப்பிடுதலைச் சொல்கிறார். காப்பியமாந்தர் பண்பியல் கருதி அதனையே உருவமாக்கி இயற்கையைப் புனைவதும் ஆசிரியர் இயல்பாகும் என்று சான்று காட்டி நிறுவுகிறார் (தைலமாட்டு: 5, அயோமுகி: 36) இயற்கையைப் புனையும்பொழுது அவ்வப்போது நிகழும் கதை நிகழ்ச்சிகளுக்குக் காரணமான மாந்தரையே தொடர்புபடுத்திப் புனைதல் ஆசிரியர் நெறி (ஊர்தேடு: 46 தைலமாட்டு 3, 650, 52) உயர்வு நவிற்சிக்குச் சான்றாக வரைக்காட்சி: 42, 43 பாடல்களைக் காட்டுகிறார்.

மலைவாழ் உயிரினங்களை, கொடியவற்றைக் கூட அவ்வ வற்றின் செயற்றிறனுக்கு ஏற்ப அருந்தவ முனிவர்கள் தொண் டாற்ற வைத்த கம்பரின் பாடல்கள் தன்மை நவிற்சியோ உயர்வு நவிற்சியோ என்று ஐயுறுமாறு அமைந்துள்ளன(123). (சித்திர கூட: 30, 35) மயக்கஅணி படப் புனைந்து நாடுகளின் வளமுரைக் கும் பகுதி, (ஆறுசெல்: 49, 50, 43) உடன்பாடாகவும் எதிர்மறை யாகவும் கல்வியின் சிறப்பினைக் கம்பர் காட்டியுள்ளமை ஆகிய வற்றைச் சுட்டியுள்ளார். தேரையின் ஒலியைச் சிறப்பாக உவமித்துள்ளமையையும் காட்டுகிறார். (பம்பை: 21, நாட்டு: 13)

428. **கம்பராமாயணத்தில் இயற்கை**

எம்.லிட் பொருட்கட்டுரை, ஏ. சண்முகம் சென்னைப் பல்கலைக் கழகம்; ஏப். 1974;10+245

கம்பரும் இயற்கையும் 1—15, ஆறுகள் 16—42, கடலும் பொய்கை முதலிய நீர்நிலைகளும் 43—68, நிலம் 69—87, மலைகள் 88—113, பொழுது 114—136, வானும் சுடரும் 137—164, மேகம், மழை, மின்னல், இடி, காற்று, தீ முதலியன 165—178, பயிரின மும் உயிரினமும் 179—203, உவமையில் இயற்கை 204—218, நீதியும் வாழ்வும் 218—234, முடிவுரை 235—245, பயன்பட்ட நூல் களின் பட்டியல்.

இயற்கை இடம் பெறுதற்குரிய சூழ்நிலைகள், கதை நிகழ்தற் குரிய களம் இயற்கையை ஒட்டி அமைந்திருப்பதால் அதிகமாக இடம் பெற்றுள்ளன(3). கதைத் தொடர்ச்சியில் இயற்கை பெற் றுள்ள இடத்தினைச் சுட்டியுள்ளார். பெரியபுராணத்தில் சருக் கத்தின் கூறாகவும், சிந்தாமணியில் இலம்பகத்தின் பகுதியாகவும் இருந்த இயற்கை கம்பராமாயணத்தில் படலமாக வளர்ந்தது(9). கம்பர் இல்பொருள் உவமையணியாகவும் இயற்கையைப் பாடி யுள்ளார். காவியப் போக்கிற்கு உயிரூட்டும் வண்ணமும், கதையின் வளர்ச்சிக்குத் துணையாகவும், கதை மாந்தர்களின் குணநலப் பண்புகளையொட்டியும் கம்பரால் இயற்கைக் காட்சி கள் எடுத்தாளப்படுகின்றமையால் காவியத்தின் சிறப்பையும் ஒருமைப்பாட்டையும் மேலும்பன்மடங்கு அவை உயர்த்தி விட்டன(12).

இன்றியமையாக் காவிய மாந்தர்களை இயற்கையோடு உறவு உடையவர்களாகவும் காட்டியிருக்கிறார்(13). உணர்வுகளை வெளிப் படுத்தவும் இயற்கையை நன்கு பயன்படுத்தியுள்ளார்(14). இயற்கைக் காட்சிகளை எடுத்துரைக்கும் வருணனைப் பகுதியிலும் கம்பரின் தனித்திறமை விளங்குகிறது(15). அயோத்தியா காண்டம் நாட்டையும், ஆரணிய காண்டம் காட்டையும், கிட்கிந்தா காண்டம் மலையினையும் நினைவூட்டும் வண்ணம் அமைந்

துள்ளன. படலங்களின் பெயர்கள் இயற்கையை நினைவூட்டு கின்றன. கம்பர் மாபெரும் இயற்கைக் கவிஞராக இருப்பதால் தான் இந்த நூற்றாண்டின் பெருங் கவிஞர்களான பாரதியாரும், பாரதிதாசனும் தம்மைப் பின்பற்றி இயற்கையைப் பாடும் அள விற்கு உயர்வாகப் பாடியுள்ளார்(245). இயற்கைப் பொருள்கள் காவியத்தில் பெற்றுள்ள இடத்தினை அந்தந்தத் தலைப்புகளின் கீழ் விளக்கிச் செல்கிறார்.

429. **கோசல தேசம்** (41—45)
*திருக்கோயில் தமிழ் விரகன் செப். 1975*

கோசலநாட்டின் வருணனையைத் தொகுத்து அவற்றினை 29 எண்ணிக்கையில் தருகிறார்.

430 **இயற்கை அரங்கு** (93—96)
*கவிஞன் உள்ளம்: ந. சுப்பு ரெட்டியார்*

கம்பர் சடையப்ப வள்ளலுடன் வயல் வெளியைச் சுற்றிப் பார்த்து வருகையில் கண்ட காட்சியே இராமாயணத்தில், 'தண்டலை மயில்களாட' என மலர்ந்துள்ளது. இயற்கையைக் கற்பனையுடன் பாடும் புலவர்களுள் கம்பரும் ஒருவரெனக் காட்டு கிறார்.

431. **தேரையின் தாலாட்டு** (97—100)
*கவிஞன் உள்ளம்: ந. சுப்பு ரெட்டியார்*

கம்பர் கண்ட காட்சியே 'சேலுண்ட வொண்கணாரிற் றிரி கின்ற' எனும் பாடலால் மலர்ந்ததாகக் கூறுகிறார்.

432. **கம்பர் - இயற்கைப்புனைவு** (அயோத்தியா காண்டம்)
பொருட் கட்டுரை; மதுரைப் பல்கலைக் கழகம்; பக். 57.

முன்னுரை - திணைப்புனைவுகள் - இயற்கையும் கற்பனையும்- இயற்கையும் கதைப் போக்கும் - கம்பரின் புலமை - முடிவுரை.

உணர்ச்சி அதிகமாகும் இடங்களில் எல்லாம் தம்மன ஓட்டத் தைச் சற்றே இயற்கையின்பால் திருப்புகின்றார் கம்பர். இயற்கை வருணனையில் சேக்கிழார் ஆழ்ந்த நீரோட்டம் என்றால் கம்பரது வருணனை கரைபுரண்டோடும் இலக்கிய இன்ப வெள்ளம். கம்பரின் நாட்டு நகர வருணனைகளில் சிந்தாமணியின் கற்பனை கள் கலந்துள்ளதைப் பார்க்கலாம். ஐந்திணையையும் தம் காவி யத்தில் அமைத்துள்ளார். இடத்துக்கிடம் இயைபுபடும் வகை யில் தம் கற்பனைத் திறனைக் கம்பர் பயன்படுத்திக் காப்பியச் சிறப்பை மிகுவிக்கின்றார். பல பொருள் நயங்களும் ஒன்றில் தோன்றக் கூறுகிறார். ஒன்றுக்குமேல் அடுக்கிக் கூறுவாராயின் அவ்வளவும் பொருள்நயம் கருதியபடியாம். உணர்ச்சியில் ஊறிவந்த உவமானங்களைக் கம்பரது பாடல்களில் காணலாம்.

தம் பாடல்களில் இயற்கையைப் பின்னணியாகவே அமைத்துள்ளார்.

காப்பிய மாந்தர் வாழ்வில் காணப்படும் இன்பதுன்பங்கள், அறநெறிகள், இரக்கம் முதலிய உணர்வுகள், கடவுளன்பு, இன்னோரன்னவற்றை இயற்கை உணர்த்துவதாகப் பல பாடல்கள் அமைந்துள்ளன. கதைப்போக்கோடு தொடர்பு படுத்தி இயற்கையைப் பாடுவதே அவர்தம் பெருநோக்காகக் காண்கிறது. இயற்கைப் புனைவு கவிதைகளில் சொற்களை ஆளும் முறை, பின் விளைவுகளை இயற்கையில் வைத்து மொழிதல், குறிப்பால் உணர்தல், இயற்கையில் அறமுறைத்தல், நடை, ஓசை, அணி முதலிய சிறப்புகளாலே கம்பரின் புலமை தெற்றெனப் புலனாகிறது. அவரது கவிதையின் சொல்லும் பொருளும் உணர்ச்சியும் உள்ளூறிக் கிடந்து கனியக் கனியத்தான் அறக்கருத்துகள் புலப்படும். ஓர் உவமையில் முழுதும் அறியக் கருத்துப் புலப்படாதிருக்குமாறல் பல உவமைகளை அடுக்கிப் பொருளின் உண்மை இயல்பைத் தெரிவிக்கின்றார். சிறந்த பாட்டுப்பற்றி அவர் கூறும் கருத்துக்கேற்பவே இராமாயணப் பாடல்கள் அமைந்திருக்கின்றன. இயற்கையிலேயே புராணக் கருத்துகளையும் கூறிப் போந்தார். உண்மையை உள்ளவாறு கூறுவதைவிட கற்பனையை உண்மை போலச் செய்வதிலேதான் கம்பரின் கவிதைத் திறம் பொலிவுறுகின்றது. இயற்கையைத் தனியொரு பொருளாகப் பாடாது மனித வாழ்க்கையின் பல்வேறு கூறுகளையும் புனைந்து தெளிவு படுத்துவதற்காகவே பயன் படுத்தினர்.

**433. கம்பனில் தாவரங்கள்**

கி. மோகனகுமாரி

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகப் படைக்கப்பட்ட பொருளாய்வுக் கட்டுரை; 1969; பக். 18+228+2.

இந்நூல் பூக்கும் தாவரங்கள் (phanerogams), பூவாத தாவரங்கள் (Gyptogams) என்னும் பெருந் தலைப்புகளையும் மூடு விதைக் தாவரங்கள் (Angiosperms 1—196) மூடாவிதைத் தாவரங்கள் (Gymnosperms 197—200) பாசிகள் (Alqae 203—205), காளான் (Fungus 206—207) என்னும் சிறுதலைப்புகளையும் சில உட்பிரிவுகளையும் கொண்டமைகிறது. பிற்சேர்க்கையாக கம்பராமாயணத்தில் தாவரங்கள் பயிலும் இடங்கள், தமிழ், ஆங்கிலம், தாவரவியற் பெயர் அகராதி, கம்பன் பயன் படுத்தியுள்ள தாவரப் பெயர்கள் போன்றவைகள் கொடுக்கப் பட்டுள்ளன. இறுதியில் துணைபுரிந்த நூல்களோடு நூல் முற்றுகின்றது.

அடிக்குறிப்புகள் அடைப்புக் குறியினுள்ளே கொடுக்கப்பட்டுள்ளன.

மூடுவிதைத் தாவரங்கள் இரட்டை விதையிலைத் தாவரங்கள் (Dicotyledons), ஒற்றை விதையிலைத் தாவரங்கள் (Monocotyledons) என்று பகுக்கப்பட்டுள்ளன. இரட்டை விதையிலைத் தாவரங்களில் அகில், அசோகு, அடம்பு (அடும்பு) அல்லி, அவரை, அனிச்சம், ஆர் (ஆத்தி), ஆலமரம், இலஞ்சி (மகிழமரம்) இலவங்கம், இலவு, உழிஞை, ஊர்மத்தம் (ஊமத்தை), எருக்கு, எள், ஏலம், (சடாமஞ்சிகை), ஏழிலம் பாலை, கண்டில் வெண்ணெய், கரந்தை, கருவிளை, கவிர், கழற்சி, கள்ளி, கற்பகம், காயா, குசும்பை, குமிழ், குரவம், குருந்தமரம், குன்றிமணி, கூதாளம், கூவிளை, கொவ்வை, கொள்ளு, கொன்றை, கோங்கு, சண்பகம், சந்தனம், சிஞ்சுபம், சிந்து (புளி), சுரபுன்னை, செங்கிடை, செருந்தி, தாமரை, தும்பை, துழாய் (துளசி), தூதுளம் தேக்கு, நந்தி, (நந்தியாவட்டை), நரந்த மரம், நறைக் கொடி, நாவல், நெல்லி நொச்சி, பச்சிலை மரம், பலா, பாதிரி, பிடவம், புன்னை, பூளை, மந்தாரம், மராமரம், மருதம், மல்லிகை, மா, மாலைக் கொடி, மாதவி (குருக்கத்தி), முருக்கு, முல்லை, மூலர், வள்ளிக் கொடி. வாகை, வீழி, வெள்ளிலை (வெற்றிலை), வேங்கை என்னும் 76 வகையான தாவரங்கள் பற்றி இங்குப் பேசப்படுகின்றன. அகிற்புகை இன்பத்தின் உயர்வைக் காட்டவும் துன்பத்தின் உயர்வைக் காட்டவும் கம்பர் பயன்படுத்துகின்றார். அல்லி, ஆம்பல், நீலம் அல்லது நீலோற்பலம், கருநெய்தல், கருங்குவளை, பானல், காவி எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. இப்பெயர்கள் அனைத்தையுமே கம்பர் தம் காவியத்தில் பயன்படுத்துகிறார். வெள்ளாம்பல் அனுமன் பற்களுக்கு உவமையாகக் கூறப்பட்டிருப்பது புது உவமையாக உள்ளது. செவ்வாம்பல் இராமனின் கண்ணிற்கும் உவமையாக வருகின்றது. கோளி என்ற பெயரால் கம்பர் ஆலமரத்தைச் சுட்டுகிறார். ஆலமரத்தின் சிறு பொருட்களை (விதை, இலை) இராமனோடு தொடர்பு படுத்தியும், பெரும் மரத்தினை இராவணனோடு தொடர்பு படுத்தியும் கூறுகிறார்.

இராமன் மெல்லிய தனது மானிட உருவில் வலிய அற ஆற்றலை உள்ளடக்கியவன் என்று சுட்ட போலும். கற்பக மரம் கம்ப இராமாயணத்தில் ஓர் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது-52 இடங்கள். குராமலரைத் தலையில் சூடும் வழக்கமிருந்தது சந்தனம், ஆரம், சந்து என்ற பெயர்களால் குறிக்கப்படுகின்றது. தாமரை 500க்கு மேற்பட்ட இடங்களை முற்றுகையிட்டு விடுகிறது. கம்பர் தாமரையின் பல்வேறு நிலைகளையும் அழகாக வேறுபடுத்திக் காட்டுகிறார். தெய்வங்களின் உறுப்புகள் பல

வற்றிற்கும் உவமிக்கப் பெறும் சிறப்புடையது. பாதிரி பாடலம் என்ற பெயரால் வழங்கப் படுகின்றது. மானைக்கொடி என்ற பெயர் தற்போது எந்தத் தாவரத்தைக் குறிக்கின்றது என்று தெரியவில்லை. தளவம், புறவம் என்ற பெயர்களால் முல்லையைக் குறிக்கின்றார். ஐரோப்பிய இலக்கியங்களிலும் தூய, வெண்மையான லில்லி மலர் கற்பிற்கு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. ஒற்றை விதையிலைத் தாவரங்களில் இறுங்கு (சோளம்), ஏலம், கமுகு, கரும்பு, கவலைக் கிழங்கு, காந்தள், குங்குமப்பூ, சாமை, சேம்பு, தருப்பை, தாழை, தினை, தென்னை, நரந்தம்புல், நாணல், நெல், பனை, மூஞ்சிப்புல், மூங்கில், வஞ்சிக் கொடி, வாழை என்னும் 21 வகையான தாவரங்கள் பற்றி குறிப்பிடுகின்றார். வேழம், கன்னல் என்ற பெயர்களும் கரும்பினைக் குறிக்கின்றன. குங்குமப்பூச் செடியை மராவம் என்கின்றார் கம்பர்.

மனித உள்ளத்தில் எழும் ஆழ்ந்த உணர்ச்சிகளை விளக்குவதற்கும் செடி கொடிகள் கவிஞனுக்கு உதவுகின்றன. அமை, கழை, காம்பு, கிளை, டனை, பூளை, மூங்கில், வரை, வெதிர், வேணு, வேய், வேழம் என்ற பெயர்களால் மூங்கிலை உணர்த்துகின்றார். வஞ்சிக்கொடி தற்போது பிரம்பு என்றழைக்கப்படுகிறது. மூடாவிதைத் தாவரங்களில் தேவதாரம் என்ற ஒரு மரத்தை மட்டுமே குறிப்பிட்டுள்ளார். பூவாத தாவரங்களில் பாசி காளான் பற்றிக் கம்பராமாயணம் பேசுகின்றது.

இந்நூலாசிரியர் தாவரங்களின் தாவரவியற் பெயர், ஆங்கிலப் பெயர், கூடுமான வரையில் வடமொழிப் பெயர், மறுபெயர் ஆகியவற்றையும் தந்து, அவைகள் வளரும் இடம், தன்மை, அளவு பற்றியும் குறிப்பிடுகின்றார். இலக்கியத்தில் பயன்படுவதோடு வாழ்க்கையில் பயன்படுவதையும் காட்டியுள்ளார். சில உவமைகளுக்கு உள்ளுறைப் பொருளும் தரமுயன்றுள்ளார். தாவரங்கள் பூக்கும் காலம், நேரம் முதலியனவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**434. கம்பனில் தாமரை**

கு. பகவதி அம்மாள்

கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகத் தமிழ்த்துறை வாயிலாகப் படைத்த பொருளாய்வுக் கட்டுரை, 1974; 168

இயற்கையும் இலக்கியமும் (1—10), தாமரை 11—27, வருணனையும் தாமரையும் 28—46, அணியும் தாமரையும் 47—74, புராணமும் தாமரையும் 75–90, பாத்திரமும் தாமரையும்

91—119, கம்பனில் தாமரை பயிலும் இடங்கள் (122—168) துணை நின்ற நூல்கள்.

தாமரையினைக் கம்பன் 682 இடங்களில் பயன்படுத்தியுள்ளான். அம்புயம், அரவிந்தம், அல்லி, கமலம், மலர், முளரி, புண்டரீகம், பங்கயம், பூ, செந்தாமரை, கஞ்சம், போது, பதுமம், நளினம், அலர், முண்டகம், கந்தம், மரை, அலர், முகிழ் எனும் பல பெயர்களில் பயன்படுத்தியுள்ளான் (25). கம்பன் தாமரையின் பல சிறப்புகளையும் அதன் இயல்புகளையும் அடைமூலம் நன்கு எடுத்துக்காட்டுகிறான். சுமார் 95க்கும் மேற்பட்ட அடைகளைத் தாமரைக்குப் பயன்படுத்தக் காண்கிறோம் (45). இவ்வருணனைச் சிறந்துள்ள மாற்றை விளக்குகிறார்: உவமை, உருவகம், தற்குறிப்பேற்றணி, எதிர்நிலைஅணி முதலியவற்றைத் தாமரைக்குப் பயன்படுத்திய அணிகளில் சிறப்பானவைகளாகக் கூறலாம் (50). உவமையின் பல பிரிவுகளுக்கும் கம்பன் தாமரையைப் படைத்துள்ளமையைச் சான்றுகளுடன் தருகிறார். பிற அணிகட்கும், வேற்றுமை, நினைப்பணி, சொற்பொருட்பின்வருநிலை அணி, முறையிற்படர்ச்சிஅணி, தொடர்நிலைச் செய்யுட்பேறணி, உயர்வு நவிற்சிஅணி உட்பட சான்றுகள் தந்து விளக்குகிறார். நான்முகன், திருமால் (இராமன் திருமாலே என்பதைத் தாமரை வாயிலாகவும் காட்டிச் செல்கிறார் (85).)

திருமகள் (பல பாடல்களில் திருமகளே சீதை என்பதை மறைமுகமாகவும் குறிப்பாகவும் சொல்லிச் செல்கின்றார் (88).) இந்திரன் முதலாய புராணக் கடவுள்களுடன் தாமரையை இணைத்துக் கவி பாடியுள்ளமையைச் சுட்டுகிறார். பாத்திரங்களின் பண்பு, புறஅழகு, மெய்ப்பாடுகள், செயல்கள் ஆகியவற்றைத் தாமரையின் வழி கம்பன் இயம்புவதை ஒவ்வொரு பாத்திரமாக ஆராய்கிறார். ஆண், பெண் பாத்திரங்களுடன் தாமரைக்குள்ளத் தொடர்பைப் பேசும்போது ஆணின் கண்ணுக்கும், பெண்ணின் முகத்துக்கும் தாமரையை அதிக இடங்களில் இயம்புகின்றார். இது மிக்கப் பொருத்தமாக அமைந்துள்ளது (93). பாத்திர அழகினை, பண்பினை எடுத்தியம்பும் தன்மையில் தாமரையின் காப்பியப் பங்கினைத் தெளிவாக உணரலாம். இறுதியில் அமைந்துள்ள 'கம்பனில் தாமரை பயிலும் இடங்கள்' எனும் தொகுப்பு பயனுள்ள ஒன்றும்.

**435. கம்பன் கண்ட உயிரினங்கள்**

மே. பிளாரன்சு தாசு

கேரளப் பல்கலைக்கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகக் கொடுக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை; மு. ப. 1968; 10+194+15

இந்நூல் முதுகெலும்பு அற்றவை (Invertebrata), முதுகெலும்பு உள்ளவை (Vertebrata) என்னும் பெருந்தலைப்பு களின் கீழ் அமையும், புழுக்கள் (Annelida-1-2). கணுக்காலிகள் (Anthropoda-2-26), மெல்லுடலிகள் (Mollusca-27-33), மீன்கள் (Pisces 33-50), நிலம் நீர் வாழ்வன (Amphibia-50-54), ஊர்வன (Reptilia-55-70), பறவைகள் (Aves-70-123), பாலூட்டிகள் (Mammalia-123-194) என்னும் சிறு தலைப்புகளையும் கொண்டு நிறைவுபெறுகின்றது. இறுதியில் துணைபுரிந்த நூற்பட்டியல் தரப்படுவதோடு, பிற்சேர்க்கையாகச் சுருக்கக் குறியீடுகள், தமிழ் ஆங்கிலம் விலங்கியல் பெயர் அகராதி, விலங்குப் பெயர் பயிற்சி யின் விழுக்காடு, தொல்காப்பிய முறைப்படி விலங்குகளின் பாகு பாடு (அட்டவணை) விலங்கியல் முறைப்பாகுபாடு (அட்டவணை), விலங்குப் பெயர்களின் அகரவரிசையும் தரப்படுகின்றன. நூலின் முன்னர் முன்னுரைக்கு அடுத்ததாக விலங்கியல் முறைப் படி கம்பன் கண்ட உயிரினங்களின் பாகுபாடு அட்டவணையும் தரப்பட்டுள்ளது.

கம்பன் காவியத்தில் முதுகெலும்பற்ற உயிரினங்கள் வரிசை யில் முதலாவது அமைவது புழு. இந்திரகோபம், ஈக்கள், உலங்கு, எறும்பு, சிலந்தி, செல், தேள், தேனீ, நண்டு, மின்மினி, விட்டில், வண்டு என்பன கணுக்காலிகள் வகையில் அடங்குவன. வண்டுக்கு அடுத்தநிலையில் வருணனையில் சிறப்புறக் கையாளப் பெற்றுள்ள பூச்சியினம் இந்திரகோபம், கொசு உலங்கு என்று குறிப்பிடப்படுகிறது. எறும்பில் சிற்றெறும்பு, முயிறு என்னும் இரு இனங்களைச் சுட்டுகிறார். தேனீ என்னும் சொல் ஓரிடத்தில் மட்டும் விட்டில் பதங்கம், பதங்கள் என்றும் வழங்கப்பெறும். அரி, களி, அறுபதம், ஆறுடைப் பறவைகள், திமிறு, சுரும்பு, தும்பி, தேன், புள், பொறி, மதுகரம், மொய், வண்டு என்ற பல பெயர்களால் வண்டினம் குறிக்கப்படுகிறது. கம்பன்தரும் அடைகள் வண்டின் 3 இனங்களை வேறுபடுத்துவதாகக் கொள்ள லாம்.

வருணனையாகவும், உவமையாகவும், கதையைக் கோர்க்கவும், நிகழ்ச்சியை முன் உணர்த்தவும் வண்டினை அமைக்கிறார். இப்பி, சங்கு, சலஞ்சலம், நத்தை, வலம்புரி—மெல்லுடலிகள். சங்குக்குப் பல பெயர்கள்—சங்கம், சலஞ்சலம், பணிலம், வலம்புரி. சங்கின்ஒலி பண்பாட்டில் குறியீடாக நிலைத்துள்ளது. சலஞ்சலம் உயர்ந்த சாதிச்சங்கு, வலம்புரி சிறந்தது—முத்துக்களை ஈனும்—முதுகெலும்புடைய உயிரினங்கள் வரிசையில முதலாவது அமை வது மீன். 8 வகையான மீன்கள்—இருல், கயல், கெண்டை, சுறு, சேல், பனைமீன், வரால், வாளை ஆகியன. சுறு, இருல்-உப்புநீரில் வாழ்வன. இருலின் வேகம் குதிரையின் வேகத்தை

ஒத்தது. கயல், கெண்டை, சேல் மீன்கள் ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை—கம்பர் கண்ணிற்கு உவமை கூறுகிறார். மீன்களில் பெரியது சுறுமீன். கடலில் வாழ்வது. மகரம், சுறவு, சுறு என்னும் பெயர்களில் சுட்டப்படுகிறது.

சிங்கம், புலி, யானை என்னும் விலங்குகளோடு போர்புரிதல் காட்டப்படுகிறது. இதுபற்றிய செய்தி மிகுதி. நன்னீர் வாளையை மட்டுமே குறிப்பிடுகிறார். நிலத்திலும், நீரிலும் வாழும் உயிரினங்களாகத் தவளையும் தேரையுமே சுட்டப்படு கின்றன. ஆமைக்குத் துள்ளி என்னும் வடமொழிப் பெயரும் உண்டு. ஓந்தி—ஓணான்; ஓதி வேறு. பாம்புகளை அரவு, பாந்தள், பணி, பன்னகம், மாசுணம் என்பர்—காப்பிய பாத்திரங்களை மனிதநிலைக்குமேல் உயர்த்திக் கதைக்கு இயற்கைநிலையைக் கடந்த மருட்கை மெருகைப் பூசுகின்றன. முதலை - கராம், மா, நக்கரம். பறவைகளில் அன்றில், அன்னம், ஆழிப்புள், ஆண்டலை, உளில், உன்னம், ஊர்க்குருவி, ஊறு, கருடன், கவுதளி, கழுகு, காகம், காடை, கிலுக்கம், கிளி, கின்னரம், குயில், குணாலம், குரண்டம், குருவி, குருகு, குறும்பூழ், கூகை, கோழி, சக்கர வாகம், சிரல், சிவல், சென்னம், நாகணவாய்ப்புள், நாரை, நீர்க் காகம், பருந்து, புதா, புறு, மகன்றில், மயில் என்னும் 36 வகை யான பறவைகள் பற்றிக் குறிப்பிடப்படுகின்றன. சில நீர் வாழ்வன. ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் பறவைகளே காவியத்தில் பெரும்பங்கு பெற்றுப் பெரும்பணி புரிகின்றன.

அன்றில் காதல் உணர்ச்சி மிக்கபறவை. அன்னத்தின் இறகு, மயிற்பீலி ஆகியவை வீரசூடிகை என்னும் ஆபரணம் செய்யப் பயன்பட்டன. காகம், கழுகு ஆகிய பறவைகள் தீய நிமித்தத்தினை உணர்த்துகின்றன. கருடன், மயில் நல்ல நிமித் தங்கள். காகத்திற்குப் பகை கூகை. அசுணமா, அணில், ஆடு, எருமை, எலி, ஒட்டகம், கரடி, கவரிமான், கழுதை, காளை, குதிரை, குரங்கு, சிங்கம், திமிங்கலம், திமிங்கிலகிலம், துருவை, நரி, நாய், நீர்நாய், பசு, பன்றி, புலி, பூனை, மான், முயல், யானை, வருடை, வெள்ளாடு, வேசரி என்னும் 27 விலங்கு கள் பாலூட்டிகள் என்னும் பிரிவில் தரப்படுகின்றன. ஐயறிவு கொண்டு விளங்குவது விலங்குகள். காது வெளிப்படையாகத் தெரியும் விலங்கினங்கள் மட்டுமே குட்டி போடும். அசுணமா இசையுணர்ச்சிமிக்க விலங்கு. அமைதியின் சின்னமாக விளங்கும் விலங்கு ஆடு. மக்கள் பொழுதுபோக்குகளில் ஒன்று எருமைப் போர். குதிரை, யானை, கரியின்குரல், நாயின்குரல் தீயநிமித் தங்களைக் காட்டும் விலங்குகள்.

கம்பர் காவியத்தில் குரங்குகள் ஆற்றும் தொண்டு எல்லா உயிரினங்களின் எல்லையினையும் கடந்துவிட்டது. இராம

காவியத்தில் சிங்கத்தின் பண்பமையாத பாத்திரங்களைத் தேடுதல் அரிது. சிங்கம் இலக்கினமாகவும், கொடியின் சின்னமாகவும் பயன்பட்டன. பாலூட்டிகள் வரிசையில் திமிங்கலம் மட்டுமே கடல் நீரில் வாழும் இயல்புடைத்து. கொடிய பாத்திரங்களும் மானிற்கு ஒப்பாகுகின்றனர் (கைகேயி). கம்பர் யானை பற்றி மிகுதியாகக் கூறினாராயினும் பல இடங்களில் இதன் மத நீரைப்பற்றியே கூறுகிறார். விலங்கினங்களின் பயன்பாடுகள், பாத்திரங்களுக்கு உவமையாதல் முதலியனவும் இங்கு பேசப் படுகின்றன.

உயிரினங்கள் வருமிடங்கள் அனைத்தும் எண்கள் போட்டுக் காட்டப் பெற்றுள்ளன.

**436. கம்பன் கண்ட கருத்தகைய குருகு (438—442)**

செந்தமிழ்ச் செல்வி தொகுதி 49; பி. எல். சாமி; கழகம்; 1974–75

கார்காலத்தில் கைதை மடலில் சிறையொடுக்கி உடல் பேராது குருகின் பெடை இருந்ததாகக் கூறியுள்ள செய்தி மிக அரிய இயற்கைச் செய்தியாகும். குருகு கரிய நிறமாயிருப்பதைத் தெளிவாகக் கூறியுள்ளார். இக்கருத்து கல்லாடத்திலும் காணப் படுகிறது. இதுபற்றி கார்காலப் படலத்தில் 78ஆம் பாடலில் கூறியுள்ள செய்தியினை விளக்கி அது இயற்கையுடனும், பறவை நூலார் ஆராய்ச்சியுடனும் ஒத்திருப்பதைக் காட்டி, சங்க இலக்கியங்களில் அது கூறியுள்ள மாற்றையும் சுட்டுகிறார்.

**437. கம்பன் காவியத்தில் உயிரினங்கள் (ஓர் அறிவியல் விளக்கம்)**

பி. எல். சாமி

கம்பன் கழக வெளியீடு; அஞ்சல் பெட்டி எண் 24; புதுச்சேரி 605001; மு. ப. 1975; 2+99; ரூ. 6

கம்பன் கூறுவதுபோல் குருகுகள் நீண்ட அலைவரிசையாகவும் ஆங்கில எழுத்து V போன்ற வரிசையாகவும் செல்வதுண்டு(1). பெருநாரை என்ற போதா, நீர்ப்பறவைகளில் ஒன்றாகக் கூறப்பட்டுள்ளது. மரக்கால் ஆட்டம் என்பது இந்த நாரை இனத்தில் காணப்படும் ஓர் ஆட்டத்தைக் கண்டு பழந் தமிழர் பின்பற்றியதாகக் கருத இடமுண்டு(8). கொக்கின் நிழலைக்கண்டு மீன்கள் அஞ்சுவதாகக் கூறுவது இயற்கையே(10). ஆறுசெல் படலத்தில் 43, 44, 48ஆம் பாடல்களில் கூறப்படும் நாரைகள் மூன்றும் வெவ்வேறானவை என்று அவற்றின் வேறுபாட்டைச் சுட்டுகிறார். நேமிப்புள், ஆழிப்புள், சக்கரவாகப்புள் இவை ஒரே பொருளுடைய பெயர்கள்(14). அன்றில் பனைமரத்தில் தங்குவதையும், கூடு கட்டுவதையும் கூறியுள்ளார்(16).

குணலம் என்று எப்பறவையைக் கம்பர் குறிப்பிடுகின்றார் என்பது தெரியவில்லை; குணலம் என்பது ஒருவகைக் கூத்துக்குப் பெயராகும்(23). அன்னத்தைப் பற்றி உண்மைச் செய்திகளையும், வடமொழியில் காணப்பட்ட கற்பனைச் செய்திகளையும் கலந்து கம்பர் பாடியுள்ளார்(23). ஓதிமம் என்பது அரச அன்னமாக இருக்கலாம். மெல்ல நடத்தலையே ஒதுக்கும் என்ற சொல் குறிக்கும். கம்பரும் ஓதிமம் என்ற பறவையின் நடைக்கே இச் சொல்லைப் பயனபடுத்தியிருப்பதால் பிற்காலத்துப் பொருளில் அன்னம் சீதையின் நடைக்குத் தோற்று விலகியதாகக் கூறுவது சரியன்று(26).

மீன் கொத்தியை நீர்ப்பறவையாகக் கம்பர் கொண்டுள்ளார். ஆனால் மீன்கொத்தி முற்றிலும் நீரைநம்பி வாழும் பறவையன்று(27). கம்பர் சடாயு இராவணன்மேல் பாய்ந்ததைச் சிச்சிலிப் பறவை பாய்ந்து மீனைக் கொத்துவதுடன் ஒப்பிட்டே மேலே காட்டிய பாடலில் கூறியுள்ளார் என்றே கருதவேண்டும். இதற்கு வேறுவிதமாகக் கூறியுள்ள உரையாசிரியர்கள் கூற்று தவறாகும்(7). பாம்பையே உண்டுவாழும் கழுகு இயற்கையில் இருக்கிறது. இதைப் பாம்புப்பருந்து என்று தமிழில் அழைப்பர். கம்பர் கூறிய கருடன் இந்தப் பாம்புப் பருந்தாகவும் இருக்கலாம்(28). கம்பரே கழுகு, பருந்து, பாறு ஆகிய பறவைகளைத் தனித்தனியே ஒரேபாடலில் கூறியிருப்பதால் அவை வெவ்வேறு பறவைகள் என்பதை அறியலாம்(29).

கழுகின் கண்களுக்கு வெகுதூரம் பார்க்கும் சக்தி உள்ளது என்பது இயற்கைச் செய்தியாகும்(31). எருவை பார்க்கும் சக்தி உள்ளது என்பது இயற்கைச் செய்தியாகும்(31). எருவையாகிய சிவப்புப் பிணந்தின்னிக் கழுகையும் கம்பர் தெரிந்து கூறினர் என்றே கொள்ளவேண்டும்(32). வழைத்த வான்பறவை என்பதற்கு வழைத்த (மயிரை நீக்கிய தோல்) கழுத்தினையுடைய பெரிய பறவை என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமாகும்(33),

கழுகுகள் இரத்தக்கறை நீங்கக் குளிப்பது கம்பரின் நெடுங் கற்பனையன்று உண்மையே(34). காகம்பற்றிக் கம்பர் கூறிய செய்திகள் சில புராணச் செய்திகள். காகத்துக்கு இரண்டு கண்களுக்கு ஒருமணி இருப்பதாகக் கூறியது உண்மையானதன்று(37). கம்பர் கூறியுள்ள பலவகைக் குருவிகளுக்கும் விளக்கம் கூறுகிறார். தூக்கணங்குருவி மின்மினிப்பூச்சியைத் தேடிப்பிடித்து கூட்டில் விளக்காக வைப்பதாகக் கூறியது கற்பனையேயாகும்(41). கிளியின் சிவந்தவாயை முருக்கம் பூவிற்கும், முள்முருக்கம் பூவிற்கும் ஒப்பிட்டுச் சங்கநூல் மரபில் பாடி

யுள்ளார்(43). நொச்சியின் இலை மயிலடிப்போல பிரிந்து காணப் படுவதாக உவமை கூறியது பொருத்தமானதே(45).

இடி இடிக்கும்பொழுது காட்டு மயில்கள் பயந்து சிதறி ஓடு வதும் கூவுவதும் இயற்கையாகக் காணக்கூடியதென்று கூறுவர். ஒருமயில் பெற்ற குஞ்சுகள் பலவற்றுள் மூத்தகுஞ்சுக்கே கலாபம் முளைத்துவரும் என்று கம்பர் கூறியுள்ளது தவறு(46). கவுதாரி கள் ஆண்டிற்கு ஒருமுறை கூட்டங்கூட்டமாக இடம்விட்டு இடம் பெயர்தல் வழக்கமாகும்(49). கம்பர் 4-6-37இல் கூறியுள்ள இயற்கைச் சூழ்நிலை, யூகக்குரங்கு இயற்கையாக வாழும் சூழ்நிலை யைக் குறிப்பதாக உள்ளது. மந்தி பொதுவாகப் பெண்குரங்கை உணர்த்தும் பெயராயினும் சிறப்பாக ஒருவகைக் குரங்கு இனத் தையே குறிக்கும். குரங்கு பல மனிதச் செயல்களைச் செய்வதாகக் கம்பர் கற்பித்துச் சில பாடல்களில் கூறியுள்ளார்(52).

நரியைப்பற்றிய சில கற்பனைச் செய்திகளைக் கூறும் கம்பர் பூனை பற்றிய அறிவியற் செய்தி எதையும் கூறவில்லை. கரடி களுக்குப் புற்றை உடைத்துத் தள்ளுவதும் தலைகீழாக்குவதும் இயற்கையான குணமாகும்(54). கம்பர் ஒட்டகம் பற்றிக் கூறியவை உண்மைச் செய்திகள். கம்பர் காலத்திலேயே கன்றைக் கொன்று பால் கறக்கும் கொடுமை இருந்தது தெரிய வருகிறது. (2-9-105) ஆட்டைப்பற்றித் தருபவை பெரும்பாலும் கற்பனை வாய்ந்தவையே(56).

ஆமா என்ற காட்டுப் பசுவை அதன் இயற்கையான சூழ்நிலை யில் கம்பர் கூறியுள்ளார்(58). யானைக்குக் கன்னத்தில் மதம் வடியும், மதத்தில் முத்து உண்டாகுமென்று கூறியது கற்பனை(60). ஏழிலைப் பாலையின்பூ மதநாற்றம் நாறுகிறது. யானைக்கு விரோதமானது என்று கம்பர் கூறிய செய்தி உண்மை யானதாகவே தெரிகிறது. ஆபத்துவருங்கால் தலைமை வகிக்கும் ஆண் யானைத் தன் கூட்டத்தைக் காக்க வரும் என்ற செய்தி உண்மையே(62). யானை சினங்கொள்ளும்போது தும்பிக்கையை மேலே தூக்கிப் பிளறி ஓடும் என்பதும் உண்மையே(63). யானை யைச் சிற்றெறும்புகள் வருத்துவதைத் தெளிவாகக் கூறி யுள்ளார்(64).

சிங்கத்தைப் பற்றி வரும் செய்திகள் பெரும்பாலும் கற்பனையே(65). மேகத்தின் வழியாகச் சூரியனின் பசுங்கதிர்கள் பட்டுக் குதிக்கின்ற வருடையாடுகள் மரகதஒளிபட்டுத் தெரிந்தன என்ற கம்பரின் கற்பனையிலும் வருடையைப்பற்றிய செய்தி உண்மையானது(66). மயிர் நீப்பின் வாழாக் கவரிமான் என்பது பனிக்கட்டி சூழ்ந்த சூழ்நிலையில் மயிர்ப் போர்வையை இழந்து வாழாத தன்மையைக் குறித்ததேயாம். இதில் பிற்காலத்தில் கற்பனை மிகுவிக்கப்பட்டது(67). புலியின் இயற்கையான உணவு,

மான். புள்ளிமானையே விரும்பித் தின்னும். எனவே இராவணன் சீதைக்குப் புலியையும், புள்ளிமானையும் ஒப்புமைகூறியது மிகப் பொருத்தம். கண் திறக்காது மயிர் முளைக்காது இருந்த குட்டியைக் கவ்வி புலி ஓடினதாகக் கூறியது அரிய இயற்கைக் காட்சியாகும்(69). தாயின்றி இருந்தபோதிலும், புலிக்குட்டி கவரப் படாது. இதனைக் கம்பர் அழகாக உவமித்துள்ளார்(70).

முயலை நிலவுடன் சேர்த்துக் கற்பனையாகப் பல பாடல்களில் கூறியுள்ளார். கம்பர் கூறிய நீர்க்குரங்கு கற்பனை விலங்கல்ல(71), கம்பர் சொல்லாது விட்ட கடல் விலங்கு கடற்பசு எனப்படும் விலங்குதான்(73). நீர்நாய்கள் நீரில் உருண்டு சறுக்கி விளையாடுவது உண்மையே(76). இடங்கர், கராம், முதலை ஆகிய பெயர் வைத்துக் கூறினும் மூன்றையும் ஒரே விலங்காகவே கொண்டுள்ளார், இடங்கர் நீர்ப்பொய்கையைவிட்டு வெளிவந்து கரைகளில் வாயைமடித்துத் தூங்கின என்று கூறியுள்ளார். முதலைகள் வாயைத் திறந்து கிடத்தலே பழக்கமாகும்(78). தேரைகள் சாரைப்பாம்பிற்கு அஞ்சுவதாகக் கூறியது உண்மைச்செய்தி(79).

பாம்புகள் மூங்கிலில் வாழ்வதும் உண்மை(80). நஞ்சை உமிழ்ந்துவீசும் பாம்பைப்பற்றிச் செவிவழிச் செய்தியாக அறிந்து கூறியிருப்பர்(82). மாசுணம் இரையைப் பிடிக்க பேர்அவாவோடு விரைவதும், அக்கால் மூங்கில்கள் வேரற்று வீழ்வதும் நடக்கக் கூடியது(83), ஆமைபற்றிய இயற்கைச் செய்திகள் இல்லை(85). சலஞ்சலம் என்ற சங்கு வலம்புரிச் சங்கு ஆயிரம் சூழ்ந்தது என்று சொல்லப்பட்டுள்ளது. இத்தகைய சங்கு இயற்கையில் இருப்பதாகத் தெரியவில்லை(90). மண்ணில் புதைந்து நத்தை உறங்குவதும், சிலந்தியைக் குரங்கு தின்பதும் உண்மையே(91). இரத்தத்தினை மொய்க்கும் ஈக்கள் இருப்பதும்(93), தும்பிகள் மரத்தை நன்கு துளைத்து அங்கு தங்கும்(94) என்றதும் உண்மை. கம்பர் தனது காவியத்தில் ஏறக்குறைய 46 பறவைகளையும், 32 விலங்குகளையும், 14 ஊர்வனவற்றையும், 29 மீன், பூச்சிகள் முதலிய பிறவகை உயிர்களையும் பாடியுள்ளார்(99).

இவற்றைத் தெளிவாக, கம்பர் பாடியுள்ளமுறை, அவற்றில் உண்மை, கற்பனை, அவ்வுயிர்களின் இயல்புகள், ஒரே வகையைச் சேர்ந்த பல இனங்களின் வேறுபாடு முதலியவற்றுடன், பிற இலக்கியங்களுடனும் ஒப்பிட்டு, இந்நூலைச் சிறப்புடன் அமைத்துள்ளார். இந்நூலுக்கு வை. வேங்கடசுப்பா ரெட்டியார் பதிப்புரை வழங்கியுள்ளார். பிற்சேர்க்கையாக மேற்கோள் எடுத்தாண்ட நூல்களையும், கம்பன் காவியத்துள் வந்துள்ள உயிரினங்களின் ஆங்கில அறிவியல் பெயர்களின் வரிசையையும் தொகுத்துத் தந்துள்ளார்.

அரசியல்

கம்பனின் அரசியல் கொள்கைகளை நவிலும் கட்டுரைகள் இங்குள. எஸ். இராகிருஷ்ணனின் 'கம்பன் கண்ட அரசியல்' எனும் நூல் குறிப்பிடற்குரித்து.

438. **அயோத்தியரசு** (353—360)

*தமிழ்ப்பொழில்*: அ. பாண்டுரங்கன் எம். ஏ; மார்ச்—ஏப். 1961

மக்களுக்கும் மன்னனுக்கும் உள்ள தொடர்பை மக்களாட்சி முறைக்கண் கொண்டு அரசியல் வகுத்தவர் கம்பர்(356). (பால' 4:10) வள்ளுவர் கருத்துக்கேற்ப அரசனையும் அமைச்சர்களையும் அமைத்துள்ளார். (குறள். கொலையிற் கொடியாரை, பால: 4:12: குறள்: அறிகொன்றறியான் எனினும், அயோ: 1:8; குறள்: தெரிதலும் தேர்ந்து செயலும், அயோ: 1:31) அமைச்சர்களுடன் இராமனுக்குப் பட்டம்சூட்ட ஆலோசிக்கும் தயரதன் செயல் ஒன்றே, அவனின் சிறந்த பண்பாட்டிற்கு, மக்களாட்சி முறைக்கு எடுத்துக்காட்டாக அமையும். அரசாள வல்லமை மட்டும் போதாது, அறனுடைமைந்த ஒழுக்கமும் வேண்டும் என்று கம்பர் கருதுகிறார். எனவே வில்வில்வல்ல இராமனை 'வீரன் என்னாது, 'நல்லவன்' என்று பாடுகிறார். கோசலநாட்டின் வளத்தைக் கூறிய ஆசிரியர், இத்தகைய நலம்நிறைந்த கோசலநாட்டினின்று, மக்களாட்சி மலர்ந்துள்ள இக்காலம் கற்றறிந்து கடைப்பிடிக்க வேண்டிய கொள்கைகள் பலஉள(360) என்கிறார்.

439. **Political ideas in Kambaramayanam**

K. V. Dakshiyayini

Madras University, M. Litt. Thesis; 1963; 5+160

Introduction 1—5, The Colas 1—22, Forms of Government (23—37). Kingship 38—80, Land and people 81—103, Ministers 104—134, War and peace 135—145, Valluvar and Kamban 146—154, Kamban's Utopia and Epilogue 155—160 Bibliography.

Kamban's presentation of the four states of Ayodhya, Mithila, Kiskindha and Lanka reveal to us his knowledge of different systems of Government His description of Guha and his followers present yet another form of an undeveloped state. His ideal monarchy recalls to us that of the British government. It is a paradox that England enjoys a democratic form of government with a king at its helm of affairs(25). The way in which discussions were carried on in Ayodhya reveals to us the utter fulfilment of this aspect of democracy(28).

The rule of Ravana stood in striking contrast with the democratic monarchy of Ayodhya(27). Ravana's kingdom recalls to us the days of Athens and sparta(28). Through the delineation of the character of Dasaratha, Kamban outlines the characteristics of a perfect king. In Dasaratha one may recognize the model of an ideal king and his life may serve as a commentary on all the noble qualities which Shakespeare has drawn in his immortal play, 'Macbeth'(45).

The message which Kamban conveys through Mandothari and Vibishna is indeed a message that can be handed down to generations a man yet unborn(56). Vasishtha's advice to Rama on the eve of his coronation infact gives the quintessence of Kamban's political philosophy(60). Sita's administrative knowledge is very high which we can infer from her address to Ravana in her lone exile(67). Kamban who belongs to cōla period must have noted all these practices which he describes in his epic(68). Kamban's conception of education is of an all embracing nature, for it is not merely of the earth, earthy, but it flings open the doors of a life beyond(84).

Kamban is never tired describing the hearty welcome which the guests receive at the hand of the hosts who are lavish in their gifts and generous to a fault(93). Kamban describes the practice of giving paddy to the poor on the field of harvest itself(98). Kamban echoes what Valluvar observes about ministers. While introducing the ministers, Kamban sings that each one is like Brihaspati adorning the court of Indra(109). Kamban has given us an ideal picture of a minister through his delineation of the character of Vibishana(118). Kamban describes the very type and pattern of ambassodors whom Valluvar has in mind(126). In the mouth of Vibishana, Kamban put his own reflection regarding ambassadors(131). Though Kamban's ideal is in the direction of peace yet he as an epic poet has to give us a detailed picture of the might, of arms engaged in good old times of yore(139).

Kamban follows in the foot-steps of Valluvar whose very words are woven into the texture of his own song(152). What Valluvar applies to the individual Kamban applies to his state for Kamban believes in the spiritualization of politics through the magic touch of love(154). Kamban is vastly indebted to

Valluvar whose influence we feel at every stage of Kamban's evolution of political thoughts(154). Kamban picture of an ideal monarchy is not without the touches of the modern type of government and common wealth as conceived by political writers of our Era(159).

**440. கம்பன் அரசியலறிஞர் (98—111) (கவிதை)**
*கவியரங்கக் கவிதைகள்: ரகுநாதன், 1963*

*'மன்னவனும் நீயோ வளநாடும் உனதோ' என்று சோழனைப் பிரிந்த கம்பன், சோழ நாட்டை விட்டகன்றபோது மக்கள் நிலை கண்டு வாடித் தன் கனவினை நனவாக்கக் காவியத்தில் ஏற்றினார். கம்பர் காட்டும் அமைச்சர், அரசர் கடமைகள் இவற்றால் அரசியலறிஞராகக் காட்டுகிறார்.*

**441. தசரத இராச்சியமும் இராம இராச்சியமும் (124—139)**
*நாடகக் காப்பியங்கள்: தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்*
சேகர் பதிப்பகம்: 30. போஸ்ட் ஆபிஸ் தெரு; சென்னை - 1 மு. ப. ஏப். 1966; ரூ. 3-50

*ஒரு மனிதன் எவ்வாறு வாழ்ந்து உயர முடியும்? பிறரை எவ்வாறு வாழ்விக்க முடியும்? அதற்கு ஏற்ற சூழ்நிலைகள் என்ன? அப்படி உருவாகும் இராம ராஜ்யம் எப்போது யாரால் எப்படி நிலை பெறும்?—இந்த உயரிய கருத்துகளை எல்லாம் விளக்குகின்ற காப்பியமே இராமாவதாரம்(124). தசரதனுடைய அரசில் உள்ள தன்னல எண்ணத்தைக் கைகேயி பரதனுக்காக அரசுரிமை வேண்டுவது மூலம் காட்டுகிறார். இராமன். சுக்கிரீவன், விபீடணனுக்குப் பட்டம் கட்டி இராமராஜ்யம் வளரும் என எண்ணுகின்றான். எதிர்ப்பு அரசுகள் உருவாகும் என்று நினைக்கவில்லை. தசரத இராச்சியத்தில் பல மனைவியரை மணப்பது வழக்கம். இராமராச்சியத்தில் ஒரு மனைவிதான் ஒருவனுக்கு உண்டு.*

*இராமராச்சியத்தில் பிறரையே கருதுகின்ற அன்புக்கண் ஒன்றே இருத்தலின் தசரதனுக்கு நேர்ந்த சாபம் நேர வழியில்லை. ஆனால் தசரதனுடைய அறம், வீரம், அன்பு இவற்றிலிருந்து இராமராச்சியம் உருவாகியது. இராமனும் உருவாகிறான். தசரதன் தன்னலத்தை மறந்து அறத்தை வளர்த்தான். (அறத்திற்காக உயிர் கொடுத்தது) தன்னலத்தைப் பிறர் நலமாக்கினான் (விசுவாமித்திரர்க்கு மக்களைக் கொடுத்தான். கிழத் தம்பதியர்களுக்குத் தன்னையே கொடுத்தான்) இராமனுக்கு ஊன் உடம்பு கொடுத்தவள் கோசலை. புகழ் உடம்பு கொடுத்தவள் கைகேயி. தசரதன் உலகம் முழுவதும் மோட்சமடைய எண்ணம் உடையவன் என்பதனைக் காட்டவே கம்பன் அவனைப் பிரமலோகத்தில் வைத்தான்.*

இந்தத் தசரதராச்சியத்தில்தான் இராமராச்சியம் தோன்ற முடியும்.

442. கம்பன் கண்ட அரசியல்

எஸ். இராமகிருஷ்ணன்

ஸ்டார் பிரசுரம்: திருவல்லிக்கேணி; சென்னை - 5; மு. ப. 1969; 4+136; ரூ. 2

பாரம்பரியம் (5—14), இராவணன் அமைத்த ஏகாதிபத்தியம் (15—63), இராமன் ஓதிய அரசநீதி (64—93), கோசலம் தழுவிய பொதுமை நெறி (94—140) என்னும் நான்கு கட்டுரைகளை உள்ளடக்கியது இந்நூல்.

முன்னோர்களது அரசியல் கருத்துகளைக் கசடறக் கற்றுத் தெளிந்த கம்பன், கொள்வன கொண்டும், விடுப்பன விடுத்தும், புதியன புனைந்தும், ஆட்சிக் கலையில் புரட்சி செய்திருக்கிறான். அது கோசலமாக உருவெடுத்தது. அரக்கப் பேரரசின் தலைநகரே ஆக்கிரமிப்புக் கொள்கையின் சின்னமாக விளங்குகின்றது. காமமும் தாபமும் வெகுளியும் வஞ்சகமும் பொய்யும் பொல்லாங்கும் அரக்க அரசியலில் மேவிய ஏற்றத்தை மாரீசன் வதைப்படலம் புலப்படுத்துகின்றது.

மனத்துக்கு இனியன பேசுவோரையே இராவணன் தழுவினான். மாறுபட்ட அமைச்சரை மாய்ப்பதே இராவண அரசியல். தவத்தால் திருவிற்றவர் தருமம் தவறிக் கருமம் புரிந்தால் அழிவது உறுதி என்பதே இராவண வதத்தின் படிப்பினை. வாலிவதைக்குப் பின் சுக்கிரீவனுக்கு இராமன் அரசநீதி ஓதும் வகையில் சார்பறம் இடம் பெற்றிருக்கிறது. வலிய வந்து மாறுகொண்ட தீயோரையும் திருத்த முயல்வதும், அது இல்லாத போதே அவரை ஒறுப்பதும் இராமனது நடைமுறையாகும். ஆயின் இத்தகைய செவ்விய வழியில் ஒழுகும் இராமன் 'வில் உண்டு, அம்பு உண்டு. நன்றி கொன்றவனைக் கொல்வேன்' என்கிறான்... சான்றோன் சித்தம் கலங்கும்போதே சார்பறம் பேசுவான்.

அயோத்தி மக்கள் அன்பின் திறமும், அறிவின் உரமும், தவத்தின் செம்மையும், அறத்தின் ஊற்றமும் ஒருசேரப் பெற்றுப் போகம் என்ற கனியை அடைந்து நுகர்ந்தனர். சிங்க மனைய வலிமையுடைய தயரதன் மன்னுயிரெல்லாம் தன்னுயிர் போல் பாதுகாத்தலால் அவன் எல்லா உயிரும் தங்குவதாகிய உடலை ஒத்திருந்தான் என்பது கம்பர் கருத்து. தயரதன் நாற்படை பெருமையைக் கம்பன் விரித்துரைக்கவில்லை. கம்பனது கனவுலகமான முதலறம் கண்ட கோசலத்தில் படை அழகுக்கே அமைவதாயிற்று. நல்லோருக்கு நன்மை செய்யும் நண்பன் தயரதன்.—கோசிக முனிவன் இராமனை உரிமையுடன் கேட்டல்,

மாந்தர் அனைவரும் பொதுமை வழியில் தோழமை கூடி அறம் இயற்றி இன்பம் துய்க்கும் நவயுகத்தைக் காண்பதற்கான அரிய முயற்சியில், ஊக்கமும் ஊற்றமும் அளிப்பதாகக் கம்பனது கோசலம் உயிர்த்தெழுந்து ஒளிர்கிறது.

இராமகாதை சித்தரிக்கும் மூன்று வகையான கோன்மை நிலைகள் பற்றியே ஆசிரியர் இந்நூலில் ஆய்கின்றார்.

443. **கம்பன் கண்ட கனவு** (73—84)
நீங்களும் சுவையுங்கள்: தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்
தெ. பொ. மீ. வெள்ளிவிழா வெளியீடு; வசந்தம் பதிப்பகம்; திருவல்லிக்கேணி; சென்னை - 5; ரூ. 3-50

கனவெனக் கூறத்தக்க முறையில் முதலில் பாடியவன் கம்பனே எனலாம். நாட்டுப்படலம், நகரப்படலம் எனப் பிரித்து அக்கனவினை முதலில் வகுத்தவன் அவனே ஆவான்(75). பத்தாம் நூற். பிற்பட்டது அன்று இந்நூல் என்று கருத இடம் உண்டு(75). இந்நாளைய சுரண்டற் கொள்கையின் பேரொளியாக இலங்கை விளங்குகிறது. உழைப்பின் எழுந்த பேரொளியாக விளங்குகிறது, இராமஇராச்சியமாய் இனி விளையப்போகும் கோசலநாடு(77). இராமஇராச்சியம் அறமே வடிவானது, அன்பே உயிரானது, இன்பமே வெள்ளமிடுவது. இராவண இராச்சியம் மறமே வடிவானது. அறமும் உட்புகாதது என்கிறான் கம்பன் (87). அயோத்தியோ உழைப்பின் விருப்பு. அன்பின் விளைவு. அருளின் வாழ்வு. ஒற்றுமை அறிவின் விளக்கம், இன்ப வெள்ளம்(84). இதுதான் கம்பன் கண்ட கனவு.

## தத்துவம்

கம்பனுணர்த்தும் தத்துவக் கருத்துகளை இங்கிடம் பெறுவன தருகின்றன. ப. ஸ்ரீநிவாசன் (வாலிமோக்ஷம்), ந. ரா. முருகவேள் (இராமாயண நுண்பொருள்) கட்டுரைகள் சிறப்பிடம் பெறுகின்றன.

444. **சுந்தர காண்டம்**
செந்தமிழ் தொகுதி: 12, 13, சேஷையங்காரவர்கள் 1913—1915

'மீட்டுமுறை வேண்டுவனவில்லை' என்னும் பாடலுக்குப் பதவுரை கூறி மேலும் அனுமனாகிய ஆசாரியன் ராசஸ மண்டலமாகிய சம்ஸாரபந்தத்தால் நலிவடையா நின்ற சீதையாகிய சேதனனுக்குத் திருவாழியாகிய திருவஷ்டாக்ஷரத்தை வேதவிதிப்படி பிரஸாதித்தல் என்பதனையும் இச் செய்யுள் கொண்டுள்ளது போலும்(329) என்கிறார். 'இறந்தனர் பிறந்த பயன்..', 'இழந்த மணி புற்றர வெதிர்ந்த...' என்னும் பாடல்களுக்கும் பொருள்கூறி, திருவஷ்டாசரவுபதேச பூர்வமாகச் சேதனனுக்

குண்டாகும் ஆத்மானந்த வைபவத்தைப் பூர்வாசாரியர்களாற், பலவித திருஷ்டாந்தங்களுடன் விரித்தெழுதப் பெற்றதற் கிணங்க இவ்விடத்திலும் கூறியுள்ளனர் போலும் என்கிறார்(419).

'வாங்கினள் முலைக் குவையில் வைத்தனள்...', 'மோக்கு முலை வைத்துற முயங்கு...' எனும் இப்பாடல்களில் திருமந்திரத்தை அனுபவித்ததன் நிலை, 'நீண்ட விழி நேரிழை தன்...', 'இருந்து பசியாலிட...' எனும் பாடல்களில் திருமந்திரத்தின் ஸ்வாபம், பெருமை ஆகியவையும், 'இத்தகையளாகியுயிரே...' எனும் பாடலால் இருதக் கதையுடன் ஆசாரியனை ஸ்தோத்திரம் செய்தல் அடங்கியுள்ளது என்கிறார். 'மும்மையா முலகந் தந்த...', 'பாழிய பணைத்தோள்' என்னும் பாடல்களில் ஆசாரியனுக்குச் செய்யும் கைம்மாறு யாதொன்றுமில்லையே யென்று மனம் நொந்து தன்னால் செய்யக்கூடிய 'பல்லாண்டு பல்லாண்டு' என்று மங்களா சாசனம் செய்கிறான் என்பது பொருந்தும்.

### 445. வாலி மோக்ஷம் (370—376), (410—416)

ஆனந்தபோதினி: ப. ஸ்ரீநிவாசன். நவ. டிச. 1931

வாலிவதைக்குக் கூறப்படும் பிற காரணங்களை மறுத்து, வாலிவதை இராமன் மேற்கொண்டுள்ள அவதார லட்சியம் நிறைவேறுவதற்கு அவசியம். அதனால் வாலிவதை நிகழ்கிறது என்றுரைத்து, வாலிவதையின் தத்துவத்தையும் கூறுகிறார். நிராயுதபாணியான வாலி மீது மறைந்திருந்து அம்பெய்தது குற்றமே என்கிறார். சுக்கிரீவன் என்பவன் அதிகாரிபுருஷன். வாலியென்பவன் தாமத குணம். வாலியால் சுக்கிரீவன் துன்புற்றானென்றது, தாமத குணமாகிய மூட விருத்தியால் அதிகாரி புருஷன் துன்பற்றானென்பதாம்.

வாலி சுக்கிரீவன் மனைவியைக் கவர்ந்தானென்பது, தாமத குணத்தால் சத்துவ குண நீக்கம். சுக்கிரீவன் வாலிக்குப் பயந்து அவன் செல்லக் கூடாததோரிடத்தில் வானரங்களோடு வசித்து வந்தானென்பது, அதிகாரி புருஷன் தாமத குணத்தையஞ்சி அது அணுகா சாது சங்கத்தையடுத்து சாதுக்களோடு வசித்தல். அங்கு வசிக்கும் காலத்திலும் 'வாலியை யொழித்துத் தன் மனைவியை அடைவதென்றோ' என்றேக்கங் கொண்டிருந்தானென்பது, சாதுக்களிடையே வசித்திருந்த காலத்தும் தாமத குணத்தை யொழித்து மோட்சானு குணமான சத்துவ குணத்தை யடைவதென்றோ என்றேக்கங் கொண்டிருந்தானென்பதாம். இராம பிரானைக் காண்டல் சத்குரு தரிசனம். இராமனைச் சரணாகதி யடைதல் சதாசாரியனைச் சரணாகதி யடைதலாகும்.

ஏழு மரா மரங்கள் ஏழு அஞ்ஞான பூமிகள் (பீஜ சாக்கிரம், சாக்கிரம், மகா சாக்கிரம், சாக்கிர சொப்பனம், சொப்பன சாக்கிரம், சுழுத்தி) அவற்றை-அவற்றுள்ளேயேதேனு மொன்றை யாவது அழிக்க வல்லவரே தாமத குண விருத்தியாகிய வாலியைக் கொல்லவல்லவர். அம்மரங்களேழும் இராமனுல் அழிந்த வென்பது சதாசாரியனுல் அஞ்ஞான பூமிகளேழு மழிந்தனவென் பதாம்.

துந்துபியினுடலை இராமன் தம்பியாகிய இலக்குமணனுல் நீக்கினனென்றது, சதாசாரியன் தத்துவ விசாரத்தால் தேகாபி மானத்தை அகற்றியதாம். இராமன் வாலியை மறைந்திருந்து கணைதொடுத்துக் கொன்றனென்பது சற்குருவானவர் இரகசிய மாக வுபதேசித்த தத்துவமசி. மகா வாக்கிய உபதேசத்தால் (இராமபாணம்) உண்டான ஞானத்தால் சன்ன மரண சம்சாரத் திற்கேதுவாகிய அஞ்ஞானமென்கின்ற காரண சரீரம் நசித்தலே வாலி மரணமாம். பின்னர் சுக்கிரீவன் மனைவியையடைந்து மகுடாபிஷேகம் செய்யப் பெற்றவனுய்ச் சுகமா யரசாண்டிருந்தா னென்பது, அதிகாரி புருஷன் சத்துவ குணத்தையடைந்து சீவ பாவத்தை யகற்றிக் கூடஸ்தப் பிரமமாகி சச்சிதானந்த சொரூபி யாய்ச் சீவன் முக்தனுய்த் திகழ்ந்தானென்பதாம்.

யார் செய்தது சரி என்ற வினு எழுப்பி சர்ச்சை புரிவதை விட தத்துவார்த்தமாகப் பொருள் காண்பதால் குழப்பமில்லை. ஆகவே தத்துவ விளக்கம் கூறப்பட்டது என்று அன்பர் ஒருவர் கேட்ட கேள்விக்குத் தத்துவ விளக்கம் கூறியதன் காரணம் கூறுகிறுர்.

**446. கம்பரும் சமய வளர்ச்சியும்** (325—336)

Tamil Culture. Vol. 8 No. 4; ஜி. எதிராஜுலு நாயுடு; Oct. Dec. 1959.

சமரச நோக்கம் கொண்டவர். பக்தி உணர்ச்சியை ஊட்டும் விராதன் தோத்திரமும், கவந்தன் தோத்திரமும் கம்பராமா யணத்தில் தத்துவ ஞானப் பெருநிதியெனப் போற்றப்பட்டு வருகின்றன (328). தம்தம் இஷ்ட தெய்வமென்று செய்யும் வழி பாடுகளையெல்லாம் பரம்பொருள் ஒருவரே அவரவர் வழிபடு தெய்வமாய் இருந்து ஏற்றுக் கொள்கிறுர் என்பது கம்பர் சித்தாந்தப் (328).

பக்தனது குறிக்கோள் பகவானுடன் ஐக்கியமாக முயலுவதே என்பதைக் கம்பர் பரதன் மூலம் காட்டுகிறுர் (329). உலகப்பற்றை விட்டுப் பகவானைப் பற்றிவிட்டால் அவன் பேரருள் சித்திக்கும் என்பதற்கு வீடணன் தக்க சான்று (332). பற்றுவிட முடியாத கும்பகர்ணன் இறைவன் அருளுக்குப் பாத்திரமாகாமல் போர்க்

களத்தில் மடிந்து போகின்றான். எல்லா உயிர்கள் மாட்டும் இறைவனுக்கிருக்கும் கருணையையும், அவர்கள் உய்யத் தருணம் வாய்த்தபோது அவன் பரிவு காட்டுவதையும் கும்பகருணன்பால் கம்பர் எடுத்துக்காட்டுகிறார்(333). (வீடணனை அறநெறியின்பால் வருமாறு கும்பகருணனை அழைக்கத் தூண்டுதல்) பக்தன் இறைவனை நண்பனைப்போல் நேசித்து ஒழுக வேண்டுமென்பதற்குச் சுக்கிரீவன் ஒரு உதாரணம்(333). புலனடக்கம், பகவத் தியானம், திருவடி பற்றல் இவையெல்லாம் பக்தனுக்குரிய முக்கிய இலட்சணங்கள்(334).

பகவத் தியானம் இடர்களைப் போக்கி வேண்டும் நன்மை பயக்கும் (சம்பாதி சிறகு பெறல்) ஐம்புலனடக்கிப் பிராட்டியின் பாலும் பெருமாள் திருவடிக்கும் தீரா அன்பு பூண்டொழுகுபவர் பிறவிப் பெருங்கடல் நீந்தி என்றும் அழியாப் பெருவாழ்வு அருளப் பெறுவர் (அனுமன் ஆசி பெறல்) கம்பர் அன்பின் அடிப்படையில் தமது தனிப்பெரும் பக்திக் காவியத்தைச் சகோதர தர்ம சாஸ்திரமாகவும், சரணாகதி நூலாகவும் செய்து சமய வளர்ச்சியில் ஈடுபடுகிறார்(336).

**447. பாசத்திரை** (110—115)

*இலக்கியப் பலகணி: பொ. சுந்தரமூர்த்தி நாயனார் பி.ஏ., பி.எல் செல்விப் பதிப்பகம்: காரைக்குடி, மு. ப. 1961; ரு. 2*

பரதன் காட்டில் இராமனைத் தேடிவர அது கண்டு இலக்குவன் பொங்குவதையும், இராமன் மாற்றுவதையும் இலக்குவன்மேல் பரதன் கொண்டுள்ள நல்மதிப்பையும் சுட்டி, 'ஆண்டவன் எனக்கே உரியவன். நான் ஒருவனே அவனுக்குரிய தொண்டன் என்ற உரிமை வேட்கை உதவாது. அதனால் தன் முனைப்புத்தான் வளருமேயொழிய உண்மையை உணரமுடியாது. நால் வேறு கூறாக மக்களிடையே தோன்றிய பரம் பொருள் வாழ்ந்து காட்டிய நன்னெறி இதுவே. ஏழை மனிதர்கள் இதை உணர்ந்துகொண்டு விட்டால் ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் என்ற தெளிவு பிறந்துவிடும் என்கிறார்.

**448. Kamban's Philosophy**(83—88)

A climpse of Tamilology: Prof: T. S. Balasubramanian. M.A. (Editor), V. Sp. Manickam. The Academy of Tamil scholars of Tamil Nadu. Thiruchirappalli-3. South India. 1968; Rs. 10.

In praising the Lord as the mother of the Universe and Humanity, he feels supified at the stupidity of the people in not recognising Him, since it is easy for a calf to recognise

it's mother. Kamban considers Lord Vishnu as the supreme God. At the same time he is not a religious bigot (கல்லிடைப் பிறந்து போந்து) Every one considers that the god whom he worships is the Lord supreme and the other gods are secondary or no god at all. Kamban does not like this wrong attitude. (தோள் கண்டார் தோளே கண்டார்) To Kamban god is the Ocean of Mercy. To him this aspect of god appears to be more prominent than His other qualifies. Indeed the epic Ramayana is called 'Saranagathi Sastra' or the epic of Surrender. Kamban is infatuated with name, Rama. This Holy name gives one allthe pleasures bertaining to this would and also gives Moksha(87). Kamban believes in the oneness of god. Every individual can worship any god he chooses and by so doing he will attain Moksha.

449. **இராமாயண நுண்பொருள்** (392—393)

*திருக்கோயில்: ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம். ஓ. எல்., சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத்துறை வெளியீடு மே. 1971; ரூ. 1*

*ஆன்மாவானது இன்பமயமான விண்ணுலகினின்று, ஆவலும் காமமும் நிறைந்த இம்மண்ணுலகிற்கு இறங்கி வருகின்றது. நான் என்னும் அகந்தையினிடமிருந்து மனச்சான்று என்னும் தூதுவன் வருகின்றான். தீமைக்கும் ஆன்மாவிற்கும் இடையே பெரும்போர் நிகழ்கின்றது. இறுதியில் தீமை தோல்வியுற்றுத் திருந்துகின்றது. அதன்பின்னர் ஆன்மா தன்தந்தையின் இல்லமாகிய சுவர்க்கத்திற்குத் திரும்பிச் செல்கிறது. இத்தத்துவ உண்மையினையே இராமாயணக்கதை குறிப்பிடுகின்றது எனலாம். இராமன்தான் ஆன்மா, சீதைதான் உயிர்க்குரிய உடம்பு. அயோத்தி விண்ணுலகம். இராமனும் சீதையும் உயிரையும் உடலையும் குறிக்கின்றனர். தணடகாரண்யம் மண்ணுலகம்.*

*சீதை அங்கு இராவணனால் கவர்ந்து செல்லப்படுவது ஆன்மா, காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம் முதலிய தீமைகளின் வயப்பட்டுத் துன்புறுதலை உணர்த்துகின்றது. சீதை இலங்கைக்கு எடுத்துச் செல்லப்படுகின்றாள். ஆன்மா உலகியல் மாயச்சேற்றில் அழுந்தி வருந்துதலை இஃது உணர்த்துகின்றது. சீதையைத் தேட அனுமன் முயல்வது ஆன்மாவானது மனச்சான்று உலகியல் ஆகிய மாயச்சேற்றிலினின்று தன்னை விடுவித்துக் கொள்ளச்செய்யும் முயற்சியைச் சுட்டுகின்றது. தீமையை அடக்கி வெற்றிகொள்ள ஆன்மா போராடுதலை இராமன் இராவணன் போர் குறிக்கின்றது. இராவணன் கும்ப*

கர்ணனின் உதவியைப்பெறுவது ஆன்மா தீமையை எதிர்த்துப் போரிடும்போது தூக்கம், சோம்பல் முதலிய தீயகுணங்கள் இடையிடையே வந்து தொல்லை விளைத்தலைக் குறிப்பிடுகின்றது.

இந்திரசித்து, துணைக்குவருவது சிலசமயங்களில் நன்மை யிலும் தீமையே வலிமைபெற்று நிற்றலை உணர்த்துகின்றது. தீய சக்திகள் ஆன்மாவிற்கு கேடுசூழ முற்படும்போது, பூசை தியானம், செபம், தவம் முதலியன அத்தகைய சக்திகளை அழித்து ஆன்மாவிற்கு நன்மைபுரிகின்றது என்னும் உண் மையை அனுமன் சஞ்சீவி மூலிகை கொணர்தல் அறிவிக்கின்றது. இராவணன் தலை வெட்ட வெட்ட முளைப்பது நல்ல ஆன்மாதான் ஈடேறுவதற்கு எண்ணற்ற பல தீயசக்திகளை எதிர்த்துப் போரிட்டு வெற்றி கொள்ளவேண்டியதிருக்கிறது என்பதனைப் புலப்படுத்துகின்றது. ஒரு தீயகுணத்தை நாடு அரைகுறையாக ஒழித்தால் போதாது. அது மீண்டும் மீண்டும் பெருகி வளர்ந்து வருமாயின், தீயபழக்க வழக்கங்களை நாம் அறவே முற்றாக வெறுத்து விலக்கி அழித்துவிடுதல் வேண்டும் என்பதனை இதனால் அறியலாம்.

இராமன் பிரம்மாஸ்திரத்தால் இராவணனை அழிப்பது ஒரு ஆன்மா தனது துன்பங்களைக்கடந்து வெல்லுவதற்கு இறை வனின் திருவருளைத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும் என்ப தனையும், சீதைத் தீக்குளித்தல், இறையருட்பேறு விரும்பும் ஒரு தூய ஆன்மா பொல்லாப்புலாற் குரம்பையாகிய உடம்பின் புன்மை யினை உணர்ந்து வெறுத்து, அதனை நீக்கிக்கொள்ள முயல் கின்றது; அப்புன்புலால் யாக்கையே இறையருளாற் பின்னர் பொன்னெடுங் கோயிலாக மாறுகின்றது என்பதனையும் அறிவிக் கின்றது. பின்னர் சீதை இராமன் இணைந்து அயோத்தி திரும்பு வது, இன்பமாக வாழ்வது ஆன்மா பரமான்மாவுடன் கூடி, வீடு பேற்றுநிலையில் ஒன்றிநின்று இன்புற்று நிற்றலைத் தெளிவுறுத்து கின்றது.

**450. இரணியன் வதைப்படலம் (86—98)**

புரட்சிக் காப்பியம்: சோ. ந. கந்தசாமி; அபிராமி பதிப்பகம்; அண்ணாமலைநகர்; மு. ப. 1972; ரூ. 3-50

காப்பியக் கவிஞன் கம்பன் சிறந்த தத்துவமேதை என்பதை எடுத்துக்காட்டுவது இப்படலம். இதனைக் கம்பன் காவியம் புனைவதற்கு முன்பே பாடியிருக்கலாம். பின்னர் தன்காவியத்தில் இணைத்திருக்கலாம்(84). ஏகாதிபத்தியமும் முடியாட்சியும் மேலோங்கி நின்ற பழைய வார்ப்படச் சமுதாயத்தில், மன்னர் களையும் வாய்ப்பு வசதிபடைத்தவர்களையும் எச்சரிக்கை செய்வ தற்கு இக்கதைகள் பயன்பட்டிருத்தல் வேண்டும்(89). இப்

படலத்துள் இறையியல்பு (107, 61, 71, 63, 74) ஆநந்தத்துவம் (163-165), அமித்துவம் (08, 27) காணப்படுகிறது.

இறைவனின் ஐவகை வடிவத்தைப் பரத்துவம், வியூகம் விபவம், அந்தர்யாமி, அர்ச்சை எனக் குறிப்பிடுவதையும் கம்பன் காட்டுகிருன். (30, 67, 110, 112, 1-1, 120, 123, 171) முளைப்பு நினைப்பு, திரிபுணர்ச்சி, ஏகவாதம் ஆகிய வீடுபேற்றுத் தடைகளை 10, 66, 109, 62, 108, 77, 111 ஆகிய பாடல்களில் இயம்பு கிருன். பக்தி, பிரபத்தி, ஞானம் என்ற வீடுபேறு எய்தற்குரிய வழிகளை 169, 80-84, 84-86, 87-90, 91-98, 99-114, 115-116, 118, 126, 32, 60, 69 ஆகிய பாடல்களால் உணர்த்துகிருன். திருமந்திரமாக ஓம்நமோ நாராயணய என்பதனைக் கூறி அதற்குப் பொருளும் கூறுகிருன். (பாடல் எண்கள் கம்பராமாயணம் மர்ரோ பதிப்பின்படி கொடுக்கப்பட்டுள்ளன)

**451. காப்பியத்தில் தத்துவ சிதறல்** (12—14)

N. G. M. Magazine. (N. G. M. College, Pollachi) இரா. இராசகோபாலன், 1973-74

பிராட்டியின் வழியாகச் சரண் அடைந்தால் எத்தகைய பிழை புரிந்தவர்களும் கடும் தண்டனையிலிருந்து பிழைக்கலாம் என்ற தத்துவக் கொள்கை காகாசுரன் வரலாற்ருல் புலப்படு கிறது. 'கைங்கர்யமே புருஷார்த்தம்' என்ற வைணவமரபில் போற்றப்படும் நெறி இலக்குவன். வேறுகதியற்று பாதமூலம் பற்றும் பரதனின்நிலை அநந்நிய கதித்துவம் ஆகும். அடியவர்க்கு அடியவனுக இருப்பதே சிறந்தநிலை என்ற பாகவத கைங்கர்ய நெறியில் சத்ருக்கனன் நிற்கிருன். ஞானபத்தி வைராக்கியத் துடன் அடிமைசெய்யவேண்டும் என்பதை இலக்குவனும், நாத னுக்குரிய பொருள் நமக்கென்பது அபசாரம் என்பதைப் பரத னும் அறிவுறுத்துகின்றனர்.

**மதம்**

கம்பர் எம்மதத்தவர் என்பதனை அவர் பாடல்கள் வழி காட்டும் கட்டுரைகளும், பொதுநிலையில் கம்பரின் கடவுட் கொள் கைகளும், கம்பர் அவற்றைக் கூறியுள்ள முறையினையும் பேசும் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. கம்பர் சைவர் என்பது ஒரு சிலரின் கருத்து. (கம்பர் மதம், கம்பராமாயணம்—தனிவைணவக் காப்பியமா?) கம்பரை வைணவராகவும், சம நோக்குடையவராக வும் பிறர் காட்டுகின்றனர். ந. சுப்புரெட்டியார் (கம்பன் கண்ட மெய்ப்பொருள்) கட்டுரை சிறப்புடைத்து.

**452. கம்பர் மதம்** (450—452)

செந்தமிழ்: தொகுதி 8; மு. வேங்கடசாமி நாட்டார் 1909—1910

சைவர், வைணவர் என்றுரைப்பவர்களின் கருத்துகளைக் கூறி இவர் எம்மதத்தினரும் அல்ல, இரு மதத்திலும் சமநோக்குடையவர் என்று கூறுகிறார். சான்று: அரனதிக னுலகளந்த அரியதிகன்...

**453. கம்பர் மதம்** (460—465)

ஆனந்தபோதினி: 1916 ஜூன் 14

கம்பர் சைவர். உட்சான்றாகச் சிவனைப் புகழ்ந்துள்ள சில வரிகளையும் காட்டி, கம்பர் என்பது ஏகம்பநாதரின் பெயர் என்றும் தன் மகனுக்கு அம்பிகாபதி என்று பெயரிட்டதனையும் சுட்டி இவற்றால் இம் முடிவுக்கு வருகிறார்.

**454. கம்பர் கண்ட கடவுள்நிலை** (108—110)

ஆனந்தபோதினி: திருமலை இராமாநுஜன்; 1935 ஆக. 17

கம்பர் வைணவர். குலநலம் பேணாதாட் கொள்ளும் குணமும், பூனை ஒப்ப தீயோரிடத்தும் அருள் செய்தலாகிய தன்மையும் வைணவ மதத்தின் ஜீவநாடி. இதை இராமாயணத்தில் இராமன் உணர்த்துகிறான். குலநலம் பேணாது ஆட்கொள்ளும் தன்மையும், தாழ்ந்தோரை உயர்த்துதற் கெனவே இறைவன் அவதாரமெடுத்த தன்மையும் 'தீர்த்தன் நல்லருளை நோக்கிச் செய்ததோ?' எனும் பாடல் தெளிவுபடுத்தும்.

**455. கம்பர் மதம்** (865—868)

ஆனந்தபோதினி: தே. வீரராகவ அய்யங்கார்; 1936 மே. 14

கம்பர் சமநோக்குடைய வைணவர். சமரச நோக்குடை பாக்களாகக் கம்பனில் உள்ளவற்றைத் தொகுத்துரைத்து இதனை நிறுவுகிறார்.

**456. கம்பர் காட்டும் மதம்** (223—237)

அசலும் நகலும்: ஆ. முத்துசிவன்; நவயுகப் பிரசுராலயம்; காரைக்குடி; சென்னை; மு. ப. ஜூலை 1947; ரூ. 3

கம்பர் பொது நோக்குடையவர். எந்த மூர்த்தியின் பாலும் துவேஷம் பாராட்டவில்லை. வெ. ப. சு. முதலியார், செல்வக் கேசவராய முதலியார், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் முதலியோரின் கருத்துகளைக் கூறி, ஆதிப் பரம்பொருள் ஒருவரே. (இராமன்) அவரே திருமால், சிவன், பிரம்மா ஆகிய மூர்த்திகளின் வடிவங்களைத் தொழில்பற்றி ஏற்றுக்கொண்டார்.

457. **கம்பன் கண்ட சமயக் கருத்து (வேதாந்தம்) 90—98 (கவிதை)**
*கவியரங்கக் கவிதைகள்: ரகுநாதன். 1963*

வேதத்துறுதிப் பொருளைப் பாடினான் கம்பன். கவந்தன், விராதன், வாலி, சம்பாதி முதலியோர் இராமனை வேத முதற் பொருளாகக் கூறல், இரணியன் கதை, கம்பன் இராமனை முழு முதற் பொருளாகக் காட்டல் முதலியவற்றால் கம்பன் கண்ட சமயக் கருத்தாக வேதாந்தத்தைப் பாடுகிறார்.

458. **மானிடம் வென்றதம்மா (59—68)**
*கலையும் இலக்கியமும்: ப. ஜீவானந்தம்*
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (P) லிமிடெட், 6/3) மவுண்ட்ரோடு, சென்னை - 2. மு. ப. மே. 1961; ரூ 1-50

இராமகாதையின் ஆறு காண்டங்களிலும் கம்பனின் கடவுட் காட்சிகள் காப்பு பாடல்களில் காணக் கிடக்கின்றன. கம்பன் என்ற மானுடன் தான் வளர்ந்து அவ்வளர்ச்சிக்கு ஏற்ற வண்ணம் கடவுட் காட்சியை வளர்த்துக் காட்டுகிறான். பால காண்டத்தில் பிரபஞ்சம் முழுவதையும் படைத்துக் காத்து, அழிக்கும் எண்ணற்ற விளையாட்டுகளையுடைய கடவுளை கம்பன் காட்சியில் தொடக்கத்தில் விழுகிறான். அந்தப் பரம்பொருளை வணங்கு கிறான்(60). அயோத்திய காண்டத்தில் பரம்பொருள் தியாக சீலமும் செயலாற்றலும் மிக்க இராமனிடத்தில் ஊடுருவி நிற்ப தைக் கண்டு கம்பன் வணங்குகிறான் (6 ). ஆரண்ய காண்டத்தில் பரம்பொருளை (இராமனை) மக்கள் பகுதியால் பார்ப்பதைக் கம்பன் காண்கிறான் (6 ). கிட்கிந்தா காண்டததல் மக்களுக்குக் காணு கின்ற காட்சியெல்லாம் இராமனே என்று கம்பன் காண் கிறான்(62). சுந்தர காண்டத்தில் கையில் ஏந்தி இலங்கையில் போரிட்ட இராமனை மறைமுடிவான பரம்பொருள் (6 ) என்றும் யுத்த காண்டத்தில் நமக்கு வேறு வழியில்லை பிழைப்பில்லை. இராம னின் மனித வாழ்வே கடவுள் வாழ்வு என்று உணரவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

அறிவால் கடவுளை அறிய முடியாது. உணர்ச்சியாலேயே உணர முடியும். அந்த உருவிலும் அனுபவிக்கத்தக்க குணங்கள் (மனிதப பண்புகள்) வேண்டும் என்கிறார். அதற்கு இராமனைக் காட்டுகிறான். இராமனில் ஒளிவிட்டு நின்ற மனித வாழ்வைக் காட்டுகிறான். இந்த மனித வாழ்வு கடவுள் வாழ்வையும் வென்று விடுகிறது என்பதையும் காட்டுகிறான். இதனைக் கம்பன் சுக்கிரீ வன் வாய்மொழியாகக் காட்டுகிறான் (தேறினன் அமரர்க் கெல்லாம் தேவராம் தேவர் தாமே).

459. **கம்பராமாயணம் - தனி வைணவக் காப்பியமா?**
*பொருட்கட்டுரை: மதுரைப் பல்கலைக் கழகம், ஏப். 1969*

கம்பர் சைவர். சைவ, வைணவப் பேதமற்ற இரண்டிலும் சமரசம் காணும் ஓர் அறிஞர். அக்காலச் சூழ்நிலையில் பலரும் அறிந்திருந்த கதைத் தலைவன் இராமனே என்பதால், தனித் தமிழ்ப் பண்புடன் நம்முன் படைத்துள்ளான். இராமகாதை தனி வைணவக் காதையாக சைவத்திற்குப் புறம்பானதாக இல்லை. சிவனைப் பற்றிக் கவிமொழியாக 168 இடங்களில் கூறுகிறார். எல்லாவற்றிற்கும் மேலாக, திருமாலின் அவதாரமான இராமன் சிவ வழிபாடு உடையவன். சிவன் பற்றிக் காப்பியப் பாத்திரங் கள் ஒவ்வொருவரும் கூறும் இடங்களின் எண்ணிக்கைகளையும் கூற்றுகளையும் தொகுத்துத் தந்துள்ளார். இவற்றால் கம்பரது இராமாயணம் தனி வைணவ நூலல்ல. இராமரைக் கதைத் தலைவ னாகக் கொண்ட, சைவத்தைப் போற்றுகின்ற, சிவத்தை வழிபடு கின்ற வைணவத்தையும் கூறுகின்ற பொதுநூல் என்பது தெளிவு என்று தன் எண்ணத்தை நவில்கின்றார்.

**460. கம்பரின் கடவுட் கொள்கை**

ஓ. கே. ஆத்மானந்தம்

பொருட்கட்டுரை. மதுரைப் பல்கலைக் கழகம், 1971; பக். 64

தோற்றுவாய்—இறைக்காட்சி—அவதாரத்தின் நோக்கமும் சிறப்பும்—இராமனின் இருவேறு இயல்புகள்—சரணாகதித் தத்து வம்—கம்பரின் சமயமும் சமரச நோக்கமும்—முடிவுரை.

கம்பர் இராமனை மனிதத் தன்மையோடு படைத்தபோதிலும் பரம்பொருளாகவே காணுகின்றார். வைணவ முறைப்படி பரம் பொருளுக்குரிய ஒன்பது குணங்களையும் இராமனிடத்துப் படைத் துள்ளார். அவ்வொன்பது குணங்களாவன வாத்ஸல்யம், ஸௌஸீல்யம், சௌலப்யம், ஸர்வஜ்ஞத்துவம், ஸர்வசக்தித் துவம், அவாப்தஸமஸ்த, சர்வஸ்வாமித்துவம், ஸ்வாமித்துவம், காமத்வம், இரக்கம் என்பன. இராமனாகிய இறைவன் நற்பகைவ னாகப் பலருக்கும், சிலருக்கு மகனாகவும், சீதைக்குக் கணவனாக வும், சிலருக்குச் சகோதரனாகவும், சிலருக்குத் தலைவனாகவும் காட்சியளிக்கிறான். இராமன் தானே பரம்பொருள் என்று அறியாதிருந்தும் எதிர்நிலையாளர்களும் ஏனையோரும் இராமனைப் பரம்பொருளாகவே எண்ணி வழிபடுவது இராமவதாரத்தின் பெருமையைப் புலப்படுத்தும்.

கம்பராமாயணம் இறைவனின் எல்லா அவதாரங்களையும் விளக்கும் சிறப்புடையது. மனிதனுக்குரிய தன்மைகளையும் பண்புகளையும் பெற்று இராமன் அவதரித்ததனால் மானிட சாதியே சிறப்புற்ற தன்மையைக் கம்பர் அழகுறக் கூறியுள்ளார். இராமனின் தெய்வத்தன்மையையும் பற்பல செயல்களால் நமக் குப் புலப்படுத்துகிறார். கம்பராமாயணத்தை முழுவதும் ஆராயின்

அவற்றிலுள்ள பாத்திரங்கள் யாவும் இறைவனையே சரண் அடைகின்றன. எனவே இதனைச் சரணாகதிப் பெருமையை விளக்கும் நூலென்றும், 'பிரபத்தி' நூலென்றும் கூறுவர். சரணுற்றோரைக் காத்ததோடமையாது அவர்கட்கு உடன் பிறப்புரிமையையும் அளித்தது இராமனின் அருளோடு அன்பும் மிகுதியும் காட்டுகின்றதெனலாம்.

கம்பர் திருமாலை முழு முதல்வனாகக் கூறும் வைணவ சமயத்தினரே யாவர். கம்பர் எதிர்நிலைப் பாத்திரங்கள் மூலமும் இராமனையே பரம்பொருளென வழிபடச் செய்வது இராமன் மீதுள்ள பக்தியேயாகும். கம்பரின் கடவுள் வாழ்த்துப் பாடல் அவரின் சமரச நோக்கத்தைப் புலப்படுத்தும். இறைவன் ஒன்றே மக்கள் வணங்கும் நெறியே பல என்று பிற சமயத்தை இகழாதவர் கம்பர். அனுமனைக்கொண்டு, பிரம்மன், திருமால், சிவன், இந்திரன் ஆகிய அனைவரையும் வணங்கச் செய்ததும் கம்பரின் சமரச நோக்கத்தைப் புலப்படுத்தும்.

**461. கம்பன் கண்ட மெய்ப்பொருள் (41—66)**

அறிவியல் தமிழ்: ந. சுப்பு ரெட்டியார், செந்தில் குமரன் பதிப்பகம் 8, ரீடர்ஸ் குவார்ட்டர்ஸ், பிரகாசம் நகர், திருப்பதி, மு. ப. மார்ச் 1976; ரூ. 6

இராமனைத் திருமாலின் அவதாரமாகக் கம்பன் கூறும் இடங்கள், பிறப்பில்லாதவன் ஆனால் பல பிறவிகளை யுடையவன் என்பது, 'தோற்றம் என்பதொன்று உனக்கில்லை' என்று கம்பன் நான்முகன் வாக்காக வைப்பது(47) 'மெய்யே பிறந்தேயும் பிறந்திலாதான்'(48) என்பது. திருமாலே (இராமன்) முழு முதற் பொருள் என்பதனைக் கூறும் இடங்கள், திருமால் அன்னமாய் இருந்து அருமறை உரைத்தது,(52) உலகத் தோற்றத்திற்கு முதற் காரணன் நாராயணன்;(53) என்பது போன்ற கருத்துகளுக்கு ஆழ்வார் பாசுரங்களே அடிப்படை.

இறைவன் இவ்வுலகினைப் படைக்கும்பொழுது யாதொரு விகாரமும் அடைவதில்லை(54). இறைவன் எல்லாப் பொருள்களுள்ளும் இருந்து அவற்றைத் தரிசிக்கச் செய்து அவற்றிற்குத் தலைவனாக நின்றுத் தன் விருப்பம்போல் நடத்துகின்றவன்(56). தேவர்கள் மனிதர்கள் விலங்குகள் தாவரங்கள் என்ற நால் வகைப் பிறவியாகத் தோன்றிய பொருள்தோறும் இறைவன் மறைந்து அந்தர்யாமியாகப் பரந்துள்ளான்(58). (சாரங்கன் பிறப்பு நீங்கு படலம். 30) இறைவன் அநந்த கல்யாண குணங்களை யுடையவன். அவன் பெருமைகள் பேசி முடியா. இவற்றை அடக்கிக்கொண்டு அவன் ஆயிரத்திற்கு மேற்பட்ட பெயர்களைத் தாங்கி நிற்கிறான் (சித்திரகூட: 1) இத்திரு நாமத்தினை எப்படிச்

சொல்லினும் அது கொடுக்கும் பலனிலிருந்து தப்பாது. (வாலி. வதை 71) இம் மந்திரத்தைச் செபிப்பர் பரம பதத்தைபடைந்து அப்பெருமானுடைய சுயரூபம் முழுவதையும் திரிகரணங்களாலும் அனுபவித்துப் பெருமகிழ்வடைவர். சரணாகதித்வம், கைங்கர்யம் என்ற இரண்டுமே வைணவ சமயத்தின் முக்கியக் கொள்கை. (வீடணன் அடைக்கல: 108—120, அயோத்தி: நகர் நீங்கு படலம் 152) இவற்றால் கம்பன் கண்ட மெய்ப்பொருள் திருமாலே என்கிறார்.

### கவிநயம்

கம்பன் கவியின் மேன்மையினைத் தனிப் பாடல்கள் கொண்டும், பொதுநிலையிலும் விமர்சிக்கும் கட்டுரைகள் இங்கு இடம் பெறுகின்றன. இவைகள் ஓரளவிற்குக் கம்பன் திறமையினை அறுதியிடுவதில் வெற்றி பெற்றுள்ளன எனலாம். இக் கவியின் திறன்களைப் பலர் பல கோணங்களில் ஆய்வு செய்துள்ளனர். ஒவ்வொருவரின் கருத்துக்கும் ஏற்பத் தன் கவிதை அமையும்படி கவி பாடியுள்ளான் கம்பன். சிறந்த சான்றாக 'வந்தெதிரே தொழுதானை' எனும் பாடலைக் கூறலாம். கம்பன் கவிதை எனும் தொகுப்பு நூல் சிறப்பாக அமைந்துள்ளது. அ. வரதநஞ்சைய பிள்ளை (கம்பன் கவிச் சுவையமைப்பு), ஆ. கந்தையா (கம்பன் கவிநயம்), கி. இராமானுசன் (கம்பரின் கலை வளம்) கோ. சுப்பிரமணிய பிள்ளை (கவி இன்பம்) வெ. இராமலிங்கம் பிள்ளை (இலக்கிய இன்பம்), ச. வே சுப்பிரமணியன் (கம்பர் காட்டும் கண்கள்) போன்றோர் எழுத்துகள் இங்கு எடுத்துக்காட்டத் தக்கன.

**452. ஒரு கம்ப சூத்திரம் (32′—327)**

செந்தமிழ்: தொகுதி 6 தி. செல்வக்கேசவராய முதலியார்; (1907—1908)

இராமன் சீதையை ஏசுவதாக உள்ள 'பெண்மையும் பெருமையும் பிறப்பும்...' எனும் பாடலில் சிந்தனை மட்டுமன்று. 'பெண்மை முதலிய குணங்கள் நீயாக உருவெடுத்ததாலே கொடையில் சனகன் பெற்ற புகழ் அவன் மனையளவாக நின்று விட்டது. அல்லது கொடையாளனுன சனகனது ஏனைய புகழ் இல்லையாய் மாய்ந்தது. உன்னைப் பெற்ற புகழ் சிறந்தது என்பது குறிப்பெச்சம். இவ்வாறு துதியாகவும் அமைந்துள்ளது என்கிறார்.

**463. Kamban and his art**

C. P. Venkatrama Aiyar

C. Coomaraswamy Naidu & sons, Madras; 1913; 1.0

Introduction (T. V. Seshagiri Aiyar) 1—6, Treatment of Nature 7—41, Imagination 42—63, Art in Poetry 63—91, Style 92—95, Motive and message 96—99, Influence 100—110.

Kamban is a very strict follower of the nature phenomena and nowhere is his own interfluence or personality(8). He was sympathetic towards the lives of the hunters and other people living in the forest(8). Like wise he make mention of the merry part of the monkeys as truly as he observed them with the instinct of accurate observation and ideal thought characteristic of a great poet, he saw that joy and sacrifice were the ever abiding external principles of nature(9).

When he has to describe an intense satisfaction of heart, an ecstatic delight, he uses his powers of description to the best advantage without at the same time striving after effect. He explains the truth and beauty, emotions, lyric, pathos, despair, ecstasy, disguest, conflict of feelings and love and ties with examples in Ramayanam. In the next chapter describe Kamban's ability in making describtions, similes, suggestive imagination by suitable examples. He shows some wonderful characters of Rama, Sita, Hanuman, Kausalya and Sumitra. He expresses the masterpiece of Kamban by showing his epic of art, art in description, art in statements, minuteness, climax, Brevity, sound and sense, thought, Vendanta, dramatic effect, word painting, sympathy, wordly experiences. Custom and civilisation and commonsense in Ramayanam.

His style is neither turgid nor diffuse. His lines are always weightly and full of meaning but at the same time they are quite simple(93). They run as the nectar like languages. His work is a Veritable museum of all thoughts expressions and ideas found in ancient Tamil literature(94). The poet teaches great lessons and reveals the true nobility and soothing influence of Nature(96). Kamban held the optimistic View that all human suffering was but the merciful preodination of a great god, intended for the moral elevation of man(99). He also gives some incidents of Kamban's life and his fame.

461. கம்பரது கருத்தமைதி (161—172)

செந்தமிழ். தொகுதி 12; நாராயணையங்கார்; 1913—1914

'நொய்தின் நெய்ய சொன்னூற்கலுற்றேன்...', எனும் பாடலில் அமைந்துள்ள முதனூலின் வரலாறு முதலிய பல செய்திகளை மிகவிரிவாக விரித்துரைக்கின்றார்.

465. **கம்பராமாயண வினாவிடை** (95—96) (338—339)

ஆனந்தபோதினி : வினா—கே. கருப்பசாமி கவிராஜ்; செப். 1923
விடை : நரஸிம்மய்யர்; மார்ச் 1924.

கம்பர், தன் இராமாயணத்துள் அம்பிகாபதிக்கு வைத்துள்ள பாடல்களான, 'வளநகர் முனிவரன் வருமுன்...' 'வளைபயின் முன்கையோர்...', 'அண்டமூலத்துக்கப்பாலமியுங்......', 'அண் டத்தளவு மினைய பகர்ந்த...' என்னும் பாடல்களில் உள்ள சள சள, களகள, கொளகொள, கிளுகிளு என்னும் சொற்களுக்குத் தெளிந்த பொருள் யாது என்பது வினா?

விடையாக, சளசளவென்று மழைத்தாரைகள் விழுவது போல் கங்கா ஜலத்தாலும் பால், இளநீர், பன்னீர், முதாலனவை களாலும் தாரைதாரையாயபிஷேகம் செய்வதும், களகளவென நல்முத்துதிர்தல்போல் புஷ்பங்களையுதிர்த்து அர்ச்சனை செய் வதும், கொளகொள பாயஸம் முதலான வற்புதமான உண்டிகளை நைவேத்தியம் செய்வதும், கிளுகிளுவெனப் பிரகாசமாக கற்பூர ஹாரதியெடுப்பதுமே அம்பிகாபதியை வழிபடக்கூடிய சிறந்த பூஜையாகும். இந்நான்கையும் நீ கைக்கொண்டு தினந்தோறும் ஈசுவரனை யாராதித்து வந்தாயானால் உனக்கு மேலான பதவி கிடைக்குமென்று குறிக்கும்படியாக அந்நான்கு அடைமொழிகளை எடுத்துக்காட்டினார் என்று கூறுகிறார்.

466. **கம்பர் கவியின்பம்** (530—535)

ஆனந்தபோதினி : பதுமநாபபிள்ளை; ஏப். 1929

மனிதவாழ்க்கைக்கு வேண்டப்படுவனவாய் இன்றியமையாத படிப்பினைகளனைத்தும்—இன்பங்கள் எல்லாமும் கம்பராமாயணத் தில் மலிந்து கிடக்கின்றன (532). இப்பாரத மணித் திருநாட் டையே படம்பிடித்துக் காட்டுகிறார். இக்கட்டுரையின் தொடர்ச்சி யில்லை.

467. **கம்பன் கவிச்சுவை யமைப்பு**

செந்தமிழ்ச்செல்வி : தொகுதி 8; அ. வரதநஞ்சைய பிள்ளை; 1930—1931; (203-212, 328-334, 395-399, 491-498, 552-559, 668-673). ரூ. 9

இயற்கை நிகழ்ச்சியைப் புனைந்து கூறுதல் (ஏவலின் வன்மையை யெண்ணதேற்றலர், நித்த நியமத் தொழிலராய

நிறையும்), ஒரு நிகழ்ச்சியில் பேசுபவர் இத்துடன் நிறுத்திக் கொள்ளப்போகிறார் என்பதனைக் கற்போர் உணரும்படி, அச் சொல்லை வெல்லுஞ்சொல் வேறிலை யெனும்படி ஒருசொல்லைக் கூறி முடித்தல் (இராமன் இலக்குவன் சினம் தவிர்த்தது), சில அடைமொழிகளைக் கூறுவதினின்று அப்பொருளுக்கு அமைந்த சிறந்த கருத்துகள் உத்திவகையில் உணர்ந்து கொள்ளுமாறு குறிப்பித்துச் சொல்லும் இயல்பு (போரென்ன வீங்கும் பொருப் பன்ன, வாகைமண்ணுமெல்லா), ஒன்றை முற்படக் கூறியபின் அதனினுஞ் சிறந்த பொருள் தரும் சொல் இல்லையோ எனக் கருதி விழுமிய ஒன்றை விளம்புவதனைக் கம்பர் தம் கவிகளில் பல இடங்களில் ஆங்காங்கு அமைத்துவைத்திருக்கின்றனர். (வெய் யோனொளி தன்மேனியின், கல்லாமதியே கதிர்வாள் நிலவே),

அவசியமான ஓரோரிடங்களில் கற்பவர் நுணிகிய மதியால் விளங்கிக் கொள்கவென்று உய்த்துணர்வைப்பு உத்தியால் விளக் காது செல்வர் (மின்னுடன் பிறந்த வாட் பரத வேந்தற்கு, வளை பயின் முன்கையோர்) தன்மை நவிற்சியை இயற்கை ஒழுக்கங் களிற் கண்டு கருத்து அமைத்து உரிய இடங்களில் பொதிந்து வைப்பர். (தாமுறு காமத்தன்மை, அரியதன்று நின்னுற்றலுக் கேற்றதே) சொற்கள் சிலவற்றால் அரும்பெரும் பொருட்களைத் தருவர் (அரக்கனேயாக வேறோ ராமனேயாக) பிறர்க்கு வெளி யிடக் கூடாதென்றும், வெளியிட்டால் வெட்கமும் அவமானமும் நேருமென்றும் மறைத்துவைத்த ரகசியங்கள், அறிவு மயக்கத் தாலோ; அதே ஞாபகமான முதிர்ச்சியினாலோ சோர்வுற்று அயர்ந்து வெளியிட நேர்ந்து பின் அறியாது கூறினோமே என்றஞ்சி அதனை வேறொரு போக்குக்காட்டி மறைத்துச் சமர்த் தித்தல் சில பாத்திரங்களில் காணப்படுகிறது. (இராவணன்: தோயா நின்றாய் மெய்வெளுத்தாய் ஆற்றாராகிற்றம்மை கொண்டடங்காரோ. சூர்ப்பணகை: செந்தாமரைக் கண்ணொடும்) இராமாயண கதாபாத்திரங்களில் சொல்ல நினைத்த தொன்றும் சொல்லியதால் போந்த கெடுதலை விளக்கும் பொருளொன்றுமாக அமைந்ததென கம்பர் விளக்குகிறார். (இந்திரன் சசியைப் பெற்றான், பாகத்திலொருவன் வைத்தான், கிள்ளைபோற் பேச்சி னளைப் பெற்றபின்) கடிந்து கூறும் சொற்களும் உவப்பை உணர்த்தும் நற்பொருள் பயக்குமாறும் அமைந்துள்ளன. (ஆதி நான்முகன் வரத்தின்) போலிக்காரணங்களைத் தம்சொல்வன்மை யினால் மெய்யாக நிரூபித்துக் கேட்போரை மயக்கவல்ல கதாபாத் திரங்களைக் காட்டுகிறார்(மந்தரை). இவ்வாறு கம்பன் கவி நயத்தை விரிவாக விளக்கமாகக் காட்டுகிறார். (கட்டுரை முற்றுப் பெறவில்லை).

458 கம்பன் கண்டதோர் காட்சி (88–91)
ஆனந்தபோதினி: தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான், ஆக. 1932.

ஓதிமம் ஒதுங்கக் கண்ட என்னும் பாடலில் இராமன் சிறிய தோர் முறுவல் கொள்வதற்கும், சீதை புதியதோர் முறுவல் கொள்வதற்கும் பொருளாக, வனவாசம் சேர்ந்ததற்காக வருந்தும் நிலையில் சீதையின் நடையழகைக் காண்பதால் சிறுமுறுவல், தலைவனுடன் செல்கிறோம், பிரியவில்லை என்ற உவகைமிக்க மன நிலையினால் சீதையிடம் புதியமுறுவல் என்று பொருள் கூறு கிறார்.

469. கம்பர் கண்ட உலாவியல் (347—352)
ஆனந்தபோதினி: தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான் நவ. 1932

உலாவியல் படலக்காட்சிகளை விவரிக்கின்றார்

470. சிறைக்கிளியும் மடமானும் (3?7—339)
ஆனந்தபோதினி: தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான்; நவ. 1933

'பஞ்சரத்தொடு பசுநிறக்கிளி வெந்து பதைப்ப' என்னும் பாடலின் கவிநயம் கூறி இப்பாடல் சிறந்த நாடகக்காட்சியாக அமைந்துள்ளது என்கிறார்.

471. இன்கவித்திரட்டு
செந்தமிழ்: வெ. ப. சு. முதலியார்; 1934; (35, 36, 37, 38, 39, 40, 41)

ஆரணிய, கிட்கிந்தா, சுந்தர, யுத்த காண்டங்களுக்குத் தந்துள்ளார். இடையில் 'கம்பராமாயணசாரம்' எனப் பெயரிட்டுள்ளார் கம்பரின் வாக்கன்று எனினும் கம்பனுடையதாக எண்ணிப் பயிலப்படுவதால் உத்திரகாண்டத்திற்கும தந்துள் ளார்.

472. கம்ப சித்திரம் (71—80)

மணி. திருநாவுக்கரசு முதலியார்
கலைபயில் கட்டுரைகள்: 'செந்தமிழ்ச் செல்வி'யிலிருந்து தொகுத் தவை, கழகம்; மு. ப. 1934; இ. ப. 1940; ஆ. ப. நவ. 1956; நா. ப. மார்ச். 1957

இராமாயணப் பாடல்கள் ஓசை இன்பம் நிறைந்தவை. (பஞ்சியொளிர் விஞ்சுகுளிர்) உலகியல்புக்கேற்ப செய்யுள் அமைத்துள்ளார். 'சீதை மிகுந்த துன்பநிலையில் அசோகவனத் தில இராம இலக்குவன் வென்றாலும் வெல்லுக அன்றி இறந் தொழியினும் ஒழிக' என்று கூறியதும் சுருக்கென அயர்பால்

வைத்த அன்பு இடைமறுத்துத் தகைப்ப உடனே மற்றொ ரெண்ணம் தோன்ற தாம் இல்லறம் வாழவிப் பன்னாட்காறும் உயிர் வாழ்ந்தவராதலின், தம்பாழி அன்னாரைத் தொடராது. அதனால் தமது மொழியால் அவர் தமக்கு ஏதம் விளையாதெனக் கூறியது. பாத்திரங்களுக்குத் தக்கவாறு சொற்களையும் உவமை களையும் உணர்த்துவார். (குகன், பரதன் படையைக் கண்டு சீறுதல்) ஒரு பொருளை இயற்கை வழாது வினைத் திறனோடு சிறப்பித்துரைத்தல் (சேய காலம் பிரிந்தகலத திரிந்தான்) கம்பன் வடமொழிப் பெயர்களைத் தமிழோசைக்காகத் திரித்ததால் இன் னுத ஓசை விளைவித்தலை காளமேகப் புலவர் விநோதமாக இகழ்ந் துரைத்தலையும் குறிப்பிடுகிறார்.

473. கம்பன் கண்ட கவி (137— 39)

தினமணி வருஷ மலர்: இரா. இராதாகிருஷ்ணன் 1937

'சேலுண்ட ஒண்கணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்' எனும் பாடலை நயத்துடன் விளக்கி இப்பாடலின் உட்கருத்தாக எருமை வயல் வழியே வரும்போது அதன்பால் அன்னக்குஞ்சு களுக்கு உணவானாலும், அவை இல்லம் சென்ற பிறகு கன்றுக் கும் கலத்துக்குமாகும். அதுபோலவே முன்னே 14 ஆண்டுகள் இராமன் அரசு துறந்தாலும், பரதன் தவககோலத்தோடு இருந் தாலும், பாதுகை ஆண்டாலும் பின்னே இராமன் முடி சூடுவான். பரதன் இளவரசனாகி வெணகுடை கவித்து நிற்பான்(139) என்னும் கருத்தையும் இப்பாடல் உள்ளடக்கிக் காட்டுகிறது என்கிறார்.

474. கம்பன் காவிய நயம் (31—36, 40)

தினமணி வருஷ மலர்: ச. து. சு. யோகி 1937

கவிதை பற்றிக் கம்பர் கூறுவன, (எற் பெரு நாகர் தம் இருக்கை ஈது, புவியினுக்கு அணியாய), கவிதை பற்றிய பொது நீதி (மின்னெனன விளக்கென), சொல்லாட்சி (நல் இயற்கை கவிஞர் நாவில், செவ்விய மதுரஞ் சேர்ந்த நற்பொருளில சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர்) முதலியவற்றைத் தொகுத்துக் கம்பரின் கவிதா நிபுணயப் பாங்கைத் தெளிவாககுகிறார்.

475. இலக்கியச் சோலையில் கம்பன் கவிதையின் மாண்பு (!, 9)

குமரன்: டி. கே. சி. ஏப். 1940

கானகத்தில் ராமனைக் கண்ட முனிவர் மகிழ்ச்சியினை விவரித் துள்ளார்.

476 செய்யுள் இன்பம்

குமரன்: ஆர். வேங்கடாசலம் பிள்ளை பிப். 1941

'இல்லாத உலகத்தெங்கும்', 'நற்பெருந் தவத்தளாய்', 'உன் பெருந்தேவி பெண்ணும்', '...மகனே இவன் பின்செல்' 'ஏகம்

முதற் கல்வி முளைத்தெழுந்து', முதலிய பாடல்களின் சிறப்பைக் காட்டுகிருர்.

**477. கவிதா தீபம் (1, 1)**

குமரன்: வி. ஆர். எம். செட்டியார்; ஏப். 1941

ஆலம் உலகிற் பரந்ததுவோ; விரித்த பந்தர் பிரித்த தாமென மீனொளித்த வானமே; படுமதகரி, பரிசிந்தின; மண் சுழன்றது; வண்ணநறுந் தாமரை மலரும்; ஓடாநின்ற களிமயிலே முதலிய பாடல்களின் கவி நயத்தைக் காட்டி, சேக்ஸ்பியரின் புலமையுடன் ஒப்பிடுகிருர்.

**478. வந்தெதிரே தொழுதானை என்ற பாட்டின் பழைய உரையும் புதிய உரையும் (569—571)**

செந்தமிழ்: வெ. ப. சு. முதலியார். அக்—நவ. 1941

'வந்தெதிரே தொழுதானை' என்னும் பாடலுக்குப் பழைய உரையான, 'கைகூப்பித் தொழுதுகொண்டு தன்னெதிரே வந்த குகனைப் பரதன் கைகூப்பித் தொழுதான். குகன் பரதன் காலில் விழுந்து தெண்டனிட்டான். பரதன் குகனைத் தழுவினுன்', என்பதனை மறுத்துப் புதிய உரையாக குகன் தன்னெதிரே கைகூப்பித் தொழுத பரதனைக் காலில் விழுந்து தெண்டனிட்டான். பரதனும் குகன் காலில் விழுந்து தெண்டனிட்டான். குகன் பரதனைத் தழுவினுன் என்றுரைத்து விளக்கம் கூறுகிருர்.

**479. ஆராய்ச்சியின் ஆராய்ச்சி (201—202)**

செந்தமிழ்: எஸ். எஸ். பாரதியார்; பிப்—மார்ச் 1942

வெ. ப. சு. முதலியாரின், 'வந்தெதிரே தொழுதானை' என்னும் பாடலுக்கான புதிய உரையை மறுத்துத் தன் கருத்துக்கு (பழைய உரை) மிக நீண்ட விளக்கம் தந்துள்ளார். இராமாயணத்தின் பிற இடங்களிலிருந்தும் சான்று தருகிருர். இக் கட்டுரைக்கு மறுப்பை வெ. ப. சு. இதன் அடுத்த இதழில் கூறியுள்ளார்.

**480. வந்தெதிரே தொழுதானை வணங்கினுன் என்னும் கம்பராமாயணப் பாட்டின் உரை (110—120, 145—147)**

தமிழ்ப் பொழில்: மா. நா. சோமசுந்தரம் பிள்ளை; தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு, பிரமோதூத (ஆனி, ஆடி, ஆவணி)

தொழுதல், வணங்கல், அடிவீழ்தல், தழுவுதல் ஆகிய நான்கிற்கும் பொருள் சுட்டி, அப்பொருள்களுக்கு இலக்கியச் சான்றும் காட்டி, இந் நான்கும் நிகழ்த்தியவர் யார் யார்? என்ற வினு எழுப்புகிருர். பரதனை முதலில தவருக எண்ணிய காரணத்திஞல் பின் உண்மை நிலையறிந்து தன்போல் ஒரு அரசனை எனக குகன்

தொழுதான். குகன் இராமன் மீது கொண்டுள்ள பற்றில் தான் தாழ்ந்தவன் என்ற நினைப்பில் பரதன் வணங்க, பரதன் உயர் உள்ளத்தினுல்தான் மிகத் தாழ்ந்தவன் என்ற நினைவில் செய்வ தறியாது குகன் அடிவீழ அவனைப் பரதன் அணைத்துக் கொண் டான் என விடை கூறுகிறுர். தழுவிய புளினர் வேந்தன் என்பத தற்குத் தழுவப்பட்ட புளினர் வேந்தன் எனப் பொருள் கொள்ள வேண்டும் என்று கூறுகிறுர்.

## 481. கம்பராமாயணச் சிதைவின் கண்டனத் தொகுதி

(இது ஸ்ரீமாந் செ. ரா. சோமசுந்தர மணியக்காரர் அவர்களின் கம்பன் காவியச் சிதைவாற்ருமை, திரு. டி. கே. ஸி. தீமை கண்டனமும், அதன் சார்பாகப் பலர் வரைந்த கண்டனப் பாக் களும்); அமரம், கரு. மெ. இராமசாமிச் சேர்வை வெளியீடு, 1942.

முன்னுரையில் சிதம்பரநாத முதலியார் செருகுகவிகள் கம்பன் காவியத்தில் நுழைந்ததற்குக் கூறும் காரணங்களையும் அவை எப்படிப் பொருந்தாது என்பதையும் எடுத்துக்காட்டு கிருர். (1) தயரதன் ராஜ்ய பரிபாலனத்தை எச்சிலுக்கு நிகராகச் சொல்வதால் செருகு கவி எனும், 'கச்சையங் கடகரி...' பாடல் அந் நாளில் நம் நாட்டு மக்கள் செல்வத்தை எவ்வளவு தூரம் வெறுத்தார்கள் என்பதையே குறிக்கும். அரிச்சந்திர புராணத் திலும் சான்று காட்டுகிருர்(1). (2) 'இக்காவியத்தில் செருகு கவி களைக் கண்டு பிற்காலத்தவர் ஒரு கதையைக் கற்பித்தார்' என்று அக்கதையைக் கூறி, கம்பன் காலத்திலேயே செருகு கவிகள் புகுந்துவிட்டதாகக் கூறுவதனை, கற்பித்தலையே தன் கூற்றுக்குச் சான்ருக்குவது பொருந்தாது, கம்பன் காலத்து உடனிருந்த புலவர்கள் அவர்கள் காவியத்தில் செருகு கவிகள் புகுத்த ஒருக் காலும் துணிந்திருக்கவே முடியாது. ஏனெனில் அவன் காவியத் துக்குச் சாற்றுக்கவி கொடுத்த ஒவ்வொரு புலவனும் அவரைத் தெய்வமாகவே கொண்டாடுகிருன் என்கிருர்(2).

கம்பன் காவியம் பல்லாயிரம் பாக்கள் கொண்டது கதை சொல்லும் பகுதிகளில் வெறும் சொல்லடுக்குகளாக இருப்பது இயற்கை. அந்த இடங்களிலும் அவன் கவிப்போக்கும் ஓசை யின்பமும் அதிலுள்ள வேகமும் தெவிட்டாத இன்பத்தைத் தரும். அக்காவியத்தின் பல இடங்களில் அரக்கர் பெயர் முதலிய அமைத்துக் கூறுமிடத்து கவிகள் சாதாரணமாகவேதான் இருக்கும். முதலியார் தமது புத்தகத்தில் கவிகளைச் சீர் பிரித்தும் மறறும் நவீன முறைகளைக் கையாண்டு செய்யுள் வடிவங்களையே சிதைத்துள்ளார்.

கம்பன் தன் பாக்களில் ஒரு கருத்தை வைத்து அதனைப் பல பாடல்களின் பின் விளக்குவான்(4) முதலியார் இவற்றின் முன் பின் சம்பந்தமுள்ள பல பாக்களைத் தள்ளியிருக்கிறார். 'மன்னனின்னுயிர் வழிக் கொண்டாலெனப் பிரிந்தா' னென்ற கம்பன், இராமன் மீண்டும் வரும்போது, பிரிந்த உயிர் மீண்டெய்தியது போன்று திரும்பினார்கள் என்று கூறுகிறார். முதலியார் இதில் இரண்டாம்பாட்டைச் செருகல என்று தள்ளிவிட்டார். முதலியார் தாம் வெளியிட்ட இரண்டு காண்டங்களில் 204 பாக்களுக்கு மேல் திருத்தியிருக்கிறார்கள். திருத்தியதோடு அவர் திருத்தியப் பாக்களை கம்பன் பாக்களென்றும் வெளியிட்டிருக்கிறார்கள். அதற்கு யாதொரு ஆதாரமும் காட்டவில்லை(5).

கம்பன் பாக்களை டி. கே. சி. திருத்தியமை, விலக்கியமை குறித்து ஆற்றாது, தன் ஆற்றாமையை ஆசிரியர் பாக்களாக வடித்துள்ளார். இவரின் ஆற்றாமைக்கு ஆதரவு அளித்து எஸ். சோமசுந்தர பாரதியார், ப. மாசிலாமணி தேசிகர், அரு. சிவ. ராம. நா. கோவிந்தன் செட்டியார், திருவேங்கடத்தய்யங்கார், எம். வைரவய்யர், நா. வேற்சாமி நாதக் கவிராஜா, வேங்கடாத்திரி ஐயங்கார், வே. இராமநாதன் செட்டியார், திரு. இராமசுவாமி சேர்வை முதலியோர் கவி பாடியுள்ளனர். தெ. மு. ஐயாத்துரை பாகவதர் ஆதரித்து மடல் எழுதியுள்ளார்.

482. கம்பன் (39) (கவிதை)

பைந்தமிழ்ச் சோலை: சுத்தானந்த பாரதியார். அன்புநிலையம், இராமச்சந்திர புரம், திருச்சி ஜில்லா. மு. ப. ஜூலை. 1943; ரு. 5ப

கம்பன் கவிதையைப் பற்றி, சொற்கண்டார் சொல்லே கண்டார், சொற்கரும் பொருளின் செய்ப பொற்கண்டார் பொருளே கண்டார், பொருளணி சுவைத்த வாயார் கற்கண்டுந் தேனும் பாலுங் கலந்த தெள்ளமுதுண்டின்னும் எற்கொண்டு கம்பனின்பமிசைப்போம் என்பரே என்று கூறுகிறார்.

483. கம்பரின் ஒரு திவலை (30—32)

திரு. வி. க. மணிமடல்: அசலாம்பிகை அம்மாள், தமிழ் உலக வெளியீடு, 2/45 முத்துமாரிச் செட்டித் தெரு; சென்னை 1943; ரூ. 2

'மாண நோற்றீண்டிவள் இருந்த வாறெல்லாம் காண நோற்றிலன் அவன் கமலக் கண்களால்' எனும் அனுமன் கூற்றுக்கு, 'கண்கள் தம்மிடத்துள்ள கருமணியைக் காண முடியாதவாறு போல செந்தாமரையும் தன்னகத்தில் இடம்பெற்ற திருமகளை எங்ஙனம் காண முடியும் என்ற பொருளையும் தருகிறா(31)

சீதையின் சிறப்பான துறவுநிலை இத் தொடர்களால் வெளிப்படு வதைக் குறிப்பிட்டுள்ளார்.

484. கம்பன் கவிநலம் (33—46)

மணிமலர்த்திரட்டு: பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் தமிழ்நிலையப்; புதுக்கோட்டை; மு. ப. 1944; மூ. ப. 1969: ரூ. 3-50

16-4-44இல் நிகழ்ந்த சென்னை கம்பர் மாநாட்டுத் தலைமை முன்னுரை. சீவக சிந்தாமணிக் காப்பிய நடைநெறியை மேற் கொண்டு திருக்குறளின் அரியகருத்துகளில் தோய்ந்து இனிய ஓசைநயந் தோன்றப் பிற்காலத்து எழுந்த அரிய தொடர்நிலைச் செய்யுள் கம்பராமாயணம் ஆகும்(35). இப்பெருங்காப்பியத்தின் செய்யுள் நடை எளிமை, இனிமை, ஆழமுடைமை என்னும் மூன்று குணங்களையும் உடையது(35). இயற்கை வருணனையில் வைத்தும், உவமை முகமாகவும் பொருள்விளக்கம் செய்வதில் கம்பர் செல்லும் நெறி வியப்பையளிப்பதாகும்(39). காப்பிய மாந்தருட் சிறந்த இராமபிரானது பேச்சுவன்மையால் அறம் பிறழாமல் எண்ணத்தில் அரும்பிய பொருள் நாவில் மலர்ந்து தேனெனப் பாலென இனிக்கும் செம்மையும் அறிஞருக்கு அறிந்து இன்புறத் தக்கது(42). சான்றுகளுடன் இவற்றை நிறுவுகிறார்.

485. கவியாராய்ச்சி (20—29)

மன்னவர் நீதியும், மங்கையர் மாண்பும்: கு. பாலசுந்தர முதலி யார்; எஸ். வாசன் கம்பெனி; மயிலாப்பூர்; சென்னை-4; மு. ப. 1945; இ. ப. 1947; மூ. ப. 19_8; நா. ப. 1959; ரூ 2-10

'எண்ணிலா வருந்தவத்தோன் இயம்பிய சொல்' என்னும் பாடலின் உவமை நலத்தை ஆராய்கிறார்(22). எண்ணிலா வருந் தவத்தோன் என்பதற்கு. எண்ணிலா அருந்தவத்தோன், எண் ணிலா அருந்தவத்தோன் - ஒருவரது மன ஆராய்ச்சிக்கு அடங்காத அருமையாகிய தவத்தோன், எண் நிலாவு அருந்தவத்தோன் - பெரியோரது எண்ணத்தில் நிலைபெற்ற அருமையாகிய தவத் தினை உடையவன், எண்ணில் ஆ வருந் தவத்தோன் - ஆராயுங் கால் ஆவால் வந்த தவத்தினை உடையவன் என நான்கு பொருள் கூறுகிறார்(22). ஆவின் காரணமாக மேற்கொண்ட தவத்தைப் பற்றிய கதை கூறிப்பின்—ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் வழங்கி எறிவேல் பாய்ந்த புண்ணிலாம் பெரும்புழை என்னும் தொடருக்கு இராமன்பால் தயரதன் மிக்க அன்பினால், எதுவிலை யுமே என்று கொண்டிருந்த கவலையைப் புண் எனக் குறிடபிடும் உரையை மறுத்து, தசரதன் பெற்ற சாபத்தைக் கூறி, அச்

சாபத்தை எறிவேலுக்கு உவமையாக்குகிறார்(28). கட்டுரை சிறப்பாக உள்ளது.

486. **கம்பர் கவிதை** (24—33)
நான்கு கவிமணிகள் : வி. ஆர். எம். செட்டியார்; ஸ்டார் பிரசுரம்; பாலக்கரை; திருச்சி; 1946; ரூ. 1-25

கம்பர் கவிதைகளில் இயற்கை அழகோவியமாய் இலங்குவதையும், உணர்ச்சிகளைப் பாடலில் வடித்துள்ள ஆற்றலையும், பாடல்களின் இசை இன்பத்தினையும் சான்றுகள் மூலம் தருகிறார். சேக்ஸ்பியருடன் ஒப்பிட்டு எழுதும் ஆசிரியர் கம்பர் கோதவிரி எனக் கிடந்த காவிரி என்கிறார்.

487. **கம்பன் கவிதை** (தொகுப்பு)
நவயுகப் பிரசுராலயம்; காரைக்குடி; இ. ப. 1946; 140; ரூ. 2-25

கம்பராமாயண ரசனை 1-73 (வ. வே. சு. ஐயர்), கம்பர் திருநாள் 74-94 (எஸ். வீ. பி.), கம்பரும் தமிழரும் 95-109 (டி. கே. சி.), மிதிலைக் காட்சி 110-118 (ரா. பி. சே), இராமபிரானது மறக்கருணை 19-127. (மு. இராகவையங்கார்), இலக்குவன் சீற்றம் 128-137 (ரா. ஸ்ரீ. தேசிகர்), கம்பர் கவிப்பெருமை 138-140 (வித்துவான். சு. கிருஷ்ணசுவாமி முதலியார்) முதலிய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

கம்பராமாயணத்தின் ரசனைச்சுவையை உணராமல் மற்ற சுகங்களை மாத்திரம் உணருகிறவர்கள் அதன் சுவையில் செம்பாதிக்குமேல் இழந்து விடுகிறார்கள்(10). கங்காதேவியின் சமுத்திர சங்கமத்தை ஒத்தவேகமும், ஓட்டமும், பொலிவும் இருக்கிறது கம்பராமாயணத்தில். அகத்தியப் படலத்தின் விஷயத்தைக் கதையின் பிற்பாகத்தில் யாராவது இரண்டு நாயகர்கள் சம்பாஷிக்கும்போது உபாக்கியமாகச் செய்திருந்தால் இவ்விடத்தில் உள்ள ரசனையை விட உயர்ந்த ரசனையாயிருந்திருக்கும்(25). ராவணனுடைய காமநோயைக் கம்பன் 80 பாடல்களில் வர்ணிப்பது பன்னாட்டு இலக்கியங்களையும் ஆராய்ந்து சுவையறிவைச் சேகரித்தவருக்குச் சுவைகொடா. ஆயின் கும்பகர்ணன் மாண்டும், இந்திரசித்தின் தலையிழந்தும், மூலபலங்கள் மடிந்தும் அவியாத காமத்துக்கு இத்துணை விளம்பமான வர்ணனை வேண்டும் எனக் கவி நினைக்கிறான் எனக் கொள்ளலாம். ஆயினும் வேறுமாதிரி அமைக்கப்பட்டிருத்தலே முறை(31). வாலிவதை கம்பனது நாடகத் திறமையைக் காட்டி உலகத்து மகாகவிகளோடு ஒப்பவைத்துப் பேசும் சிறப்பைத் தருகிறது. கம்பராமாயணத்தின் பெருமையெல்லாம் யுத்தகாண்டத்தில்தான் காணப்படும்(55). போர் வருணனையில் கம்பர் ஹோமருக்குச் சமமாகி சில இடங்களில் வென்றும் இருக்கிறான்(61). கும்பகருணனது

போருக்கும் அதிகாயனது போருக்கும் இடையில் வேறொரு ருசியான சம்பவத்தைப் புகுத்தாமற் போனாற் ரசனையில் சுகம் குறையும் என்று கண்டு கம்பன் மாயாசனகப் படலத்தை இடைப்புகுத்தியிருக்கிறான்.

நிகும்பலை வரையில் கம்பன் சுவையைக் காட்டும் ஐயர் அவர்கள் கட்டுரையில் மீதி இல்லை. வான்மீகியுடன் ஒவ்வொரு காண்டத்தின் சிறப்பு நிகழ்ச்சிகளுடன் ஒன்றவைத்துக் கம்பன் சிறப்பாகச் செய்துள்ளமையையும் வான்மீகியிடமிருந்துக் கடன் வாங்கியவற்றையும் அவனைவிடச் சிறப்பாகச் செய்துள்ளமையையும், மேனாட்டு ஆசிரியர்களுடனும் ஒன்றவைத்துக் காட்டுகிறார்.

கம்பர் பற்றிய கதைகள் எல்லாம் கற்பனை. கம்பர் ஜாதி கவிச் சக்கரவர்த்தி ஜாதி. இதற்கு மேலான சக்தி இருக்கமுடியாது(99). கம்பரை எதிர்த்துப் பிரசாரங்கள் நடப்பதற்கு வருந்துகிறார். பாடபேதம், செருகுகவிகள் இவற்றைத் திருத்த வேண்டும். கம்பர் செய்யுளின் ஓசைநயம் முதலியவற்றைக் காட்டுகிறார். இத்துடன் கம்பர் கவிகள் பல அழிந்துவிட்டன என்று கூறிக் கவல்கின்றார் டி. கே. சி. தன் கட்டுரையில்

சீதையின் திருமணம் பற்றிப் பேசும் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் அவள் காதலைக் களவியல் நாடகமாகக் கம்பர் அமைத்திருக்கும் திறன் சிறப்பு என்கிறார்.

முதல்நாள் போரில் இராமன் தோல்வியடைந்த இராவணனிடம் அவனைக் கொல்லாமல் அறிவுரை கூறியனுப்புவதனைச் சுட்டி இறுதியில் கம்பன் கோசலநாடுடை வள்ளல் என்று அமைத்திருப்பதால் இராவணன் திருந்தி சரணடைந்தால் தன் வாக்குப்படி, அதற்குப் பங்கம் வராவகையில் தன்நாட்டையே ஈவான் என்பது பொருள் என்று கம்பரது கவித்திறனை வியக்கிறார். இன்றுபோய் நாளைவா எனும் பாடல் தழிஞ்சி எனும் புறத்துறையைச் சார்ந்ததாகும். இவ்வாறு அறிவுரை கூறி விடுப்பது இராமனது மறக்கருணை. இவை மு. இராகவையங்கார் அவர்களின் கருத்துகளாகும்.

கம்பர் உள்ளக் கிளர்ச்சிகளை உள்ளவாறு சித்தரிக்கிறார். அவைகள் அவர் கையில் பெரிய நாடகங்களாக மாறிவிடுகின்றன என உரைக்கும் ரா. ஸ்ரீ. தேசிகர் தன்கட்டுரையில் கிட்கிந்தைப் படல நிகழ்ச்சியை விவரித்து, வான்மீகியுடன் வேறுபடுவதையும், தாரை சிறப்பையும் இயம்புகிறார்.

ஹோமரது காவியம் போன்று படிப்பார் மனதில் ஆழமாகப் பதியத்தகுந்த அழுத்தமான நடை, உயர்ந்த லட்சியத்தைக் கௌரவமாகத் தெரிவிக்கக் கூடிய சொற்பொழிவுகள் உள்ளன. உணர்ச்சிகளின் உண்மைத் தத்துவங்களை நன்கு எடுத்துக்காட்டு

கிறது. இயற்கைத் தத்துவம், சடவுட்டன்மை, தர்மமார்க்கம் இவற்றைச் சொல்லுமிடங்களில் கம்பரது பத்திப் பெருக்சமானது ஹோமரை மீறிச்சென்று மில்டனோடு தோள்தட்டி நிற்கிறது(139)

சம்பாஷணைகளின் விரிவுரை, இயற்கை வருணனை விஸ்தரிப்பு ஆகியவை வர்ஜிலைவிடப் பூரண பக்குவத்தைக் காட்டி நிற்கின்றன. பாத்திரங்களின் குணங்கள் சேக்ஸ்பியர் நீங்கிய மற்றவர்களைவிடக் கவனமாக உண்மைக் குறிப்பாக உள்ளன. நகர வருணனை ஹோமரைவிட சிறப்பு. வீர வருணனையில் ஹோமரை வெகு தூரத்தில் நிறுத்திச் செல்கிறார். யாவராலும் (புலவன், விவேகி, ஞானி) செல்ல முடியாத இடமெல்லாம் சென்று, எடுக்க முடியாத புதையல்களை எல்லாம் எடுத்து அனைவர் இதயத்தையும் விரிவுறச் செய்து முன்னேற்றம் அளிப்பதற்கான வரத்துடன் தோன்றியவராகக் கம்பர் தோன்றுகிறார். இவ்வாறு கம்பர் கவிப் பெருமையைக் கிருஷ்ண சுவாமி முதலியார் கூறுகிறார்.

அறிஞர் பலரின் கருத்துகளைத் தொகுத்தளித்துள்ள இந்நூல் கம்பன் பற்றி ஓரளவிற்கு வரையறுத்துக் கூறியுள்ளது.

488. **கவிதைத் திறன்** (59–65)

மலரும் மணமும்: ஆ. கந்தையா எம்.ஏ

பாரிநிலையம்: மு. ப. 1947· ரூ. 2

கம்பர் 'உறங்குகின்ற கும்பகன்ன' எனும் பாடலில் சொற்களின் மூலம் பொருளையும், ஓசையின் மூலம் முதல் இரண்டடிகளைக் கும்பகர்ணனின் ஒருபுறத்தில் நிற்பவர் சொல்லி அவன் மேல் உலக்கையால் இடிக்கப் பின்னிரண்டு அடிகளை மறுபுறத்தில் நிற்பவர் சொல்லி இடிக்கும் காட்சியையும் உணர்த்துகிறார்(59). தன் கவிதையில் இரண்டு பொருட் சொல்லால் சிறப்புப்படும் கவிதையாக 'தஞ்சமும் தகவு மேபவர' எனும் பாடலை அமைத்துள்ளார்.

கம்பன் உள்ளத்து உச்சநிலையை 'மையோ, மரகதமோ, மறிகடலோ, மழைமுகிலோ' எனும் பாட்டு காட்டுகிறது. கம்பன் தான் படைக்கும் பாத்திரங்களாக மாறி நின்று உரையாடுவதையும், கண்ணீர் வடிப்பதையும் 'அவ்வழி இராவணன் அனைத்து நாட்டமும்' எனும் பாடலில் விளக்குகிறார். கற்பனை வளனை 'நின்ற குன்று ஒன்று நீள் நெடுங் காலொடுஞ் சென்ற குன்றைத் தழீஇயன்ன செய்கையான்' எனும் உவமையால் காட்டுகிறார். இயற்கை நிகழ்ச்சிகள் வாயிலாகக் கம்பன் தன் உள்ளக் கிடக்கையை வெளியிடுவதை 'மீன் பொலிதர வெயில் ஒதுங்க மேதியொடு' எனும் பாடல் காட்டுகிறது.

**489. மலரும் மணமும் (24—32)**

*மலரும் மணமும்: ஆ. கந்தையா எம்.ஏ.,*
*பாரிநிலையம், 59. பிராட்வே, சென்னை - 1; மு. ப. 1947; ரூ. 2*

*கம்பன் கவிதை ஒன்றிலே சொற்சிறப்பையும், பொருட் சிறப்பையும் கற்பனை வளத்தையும் காணலாம்(25) என்று 'கிடந்த போர் வலியார் மாட்டே கெடாத வானவரை எல்லாம் கடந்து போய்' என்னும் பாடலின் மூலம் அதனை நிறுவுகிறார். மூன்றுலகம் காக்கின்ற காவலாளன் என்றது இராவணன் காவலாளனாகத் திகழ்தலைக் குறிப்பிட்டது. அவன் வீரத்தை வானவர்களின் வீரத்தால் விளக்கி மேலும், 'கடந்துபோய்' என்ற சொல்லால் மிக எளிதாக வென்றான் என்கிறார் கம்பர். முதலிரண்டு அடிகளில் இராவணன் புகழும், பின்னிரண்டடிகளில் இராவணன் இகழும் கூறப்பட்டுள்ளது. இதனால் கவிதை உயிரும் உணர்வும் உள்ளதாய் திகழ்கிறது(29).*

**490. இரண்டு காட்சிகள் (75—82)**

*மலரும் மணமும்: ஆ. கந்தையா எம்.ஏ.,*

*இயற்கை நிகழ்ச்சிகளை இணைத்துக் கற்பனையில் கண்டு களிப்புற்று அவற்றைக் கவிதையிலே தீட்டிக் கம்பன் அழகு செய்வதை மருத நிலத்தை நாடக அரங்காக்கிய 'தண்டலை மயில்களாட' எனும் பாடலால் காட்டுகிறார்.*

**491. கம்பன் கவிநயம் (83—93)**

*மலரும் மணமும்: ஆ. கந்தையா*
*பாரிநிலையம், 59. பிராட்வே, சென்னை - 1. மு. ப. 1947; ரூ. 2*

*கம்பன் கற்பனை, உணர்ச்சி என்ற இரண்டினையும் கொண்டு தன் கவிதைகளை உயிரும் உணர்வும் உள்ளனவாய்த் திகழவைக்கிறான்(83). தன் மனதை மாற்றிய கூனியை அனுப்பிய பின் கைகேயி தன்னை அலங்கோலம் செய்வதை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறான். கைகேயியின் செயல் ஒவ்வொன்றையும் அழகான உவமையில் விளக்கிக் கற்போரின் கருத்திற்கு விருந்தையும், கற்பனைக்குக் களிப்பையும் தருகின்றான்(87).*

*தசரதன் துயரத்துடன் கைகேயியிடம் வேண்டுவதைச் சிறப்பாகப் பகுத்துத் தருகிறார். உள்நேர் ஆவி வேண்டினும் இன்றே உனதன்றோ! பெண்ணே—இயல்பான இரக்க குணம் வெளிப்படலாம். வண்மைக் கேகயன் மானே—வள்ளலான கேகயன் மகளான நீ கொடுத்தல் தொழிலை விட்டு ஏற்றல் தொழில் செய்வது தேவையா?—இவ்வாறு கவிதை செய்தான் கம்பன் எனலாம். மண்ணே மகாள்—இராமன் மீதான அன்புக்காக வரன் முறை மீறக் கூடத் தயார் நிலையில் இருக்கிறான், மற்றைய தொன்று மற—இன்னதுதான் என்று கூறக்கூட முடியாத*

நிலையை வடிக்கிறன் கம்பன். 'விழிக்குங் கண் வேறு இல்லா வெங்கான்' என்பது தசரதனின் உள்ளக் கொதிப்பினை வெளியிடும் பாடல்.

492. கம்பன் (86—99)
தமிழர் பண்பாடு: எஸ். வி. பி.; பி.ஏ., பி.எல்.,
தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. ஜூன் 1949. இ. ப. 1951. ரூ. 3

தமிழ்நாட்டுப் பெருமக்களால் கவிச்சக்கரவர்த்திப் பட்டம் பெற்ற கம்-ன் பெருமைகள் சிலவற்றை இக்கட்டுரை குறிப்பிடுகிறது. கம்பன் தனது அரிய யாப்புத் திறனைக் காட்டுவதற்காக செய்யுள் வளத்தை வேறுபடுத்தவில்லை. அவனது கருத்தின் இசை, செய்யுளின் சுதியாக உருவெடுத்து வெளிவந்து ஒழுகுகின்றது என்றே கொள்ளுதல் வேண்டும். கட்டங்கள்தோறும் செய்யுள் வகைகளை மாற்றுவதோடு, கதா பாத்திரங்களின் இயல்புகளுக்கேற்பவும், செயல்களுக்கேற்பவும் கம்பன் தனது செய்யுட்களை வேறுபடுத்தி அமைத்திருக்கிறன்(92). கம்பனது உவமானங்கள் அவனது மனேபாவனையினின்றும் பிறந்தனவாம்( 3). வருணனைகள், பாத்திரங்களைச் செவ்விதாக அமைப்பதுதான் மனேபாவனையின் சிகரம் என்று சொல்லலாம். கம்பனது பாத்திரங்கள் கவித்துவத்தின் நூதன சிருஷ்டியென்றே சொல்லத்தக்கன(98).

493. கல்வியில் பெரியவர் கம்பர்
ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்
பாரிநிலையம். 59, பிராட்வே, சென்னை - 1. மு. ப. 1951; இ. ப. 1970; 4+14+145, ரூ. 3

பீடிகை (21—38), கம்பரும் நமது முன்னேரும் (39—50), கம்பரும் நமது முன்னேரும் (தொடர்ச்சி) (51—64), கல்வியும் கவிதையும் (65—80), கற்பனையும் கவிதையும் (81—90), கம்பர் கவிதை—வருணனை அம்சம் (91—114), கம்பர் கவிதை நடையின் தன்மை (132—145), கம்பரின் கவிதையும் இயற்கை அழகுகள் வருணனையும் (146—161), முடிவுரை (162—163) என்னும் பத்துத் தலைப்புகளோடு அமைகின்றது இந்நூல்.

முன்னுரை தமிழ்நாட்டில் கம்பன் இயக்கம் பற்றி அமைகிறது. கல்வியில் பெரியவர் என்பது, வெகு காலமாக அறிஞரின் மன ஒருமையால் கம்பருக்கு மாத்திரம் நிலைத்திருக்கும் தனிச் சிறப்பு. தமிழ் இலக்கியத்தில் வள்ளுவரும் கம்பருமே தெய்வப் புலமை வாய்ந்தவர். கம்பரை நமது முன்னேரில் ஒரு சாரார் அவருடைய பெருமைக்குத் தக்கபடி மதிக்கவில்லை என்பதற்குச் சில சான்றுகள் இருக்கின்றன. வைணவரில் ஒருசாரார் வடமொழி மீதும், வால்மீகியின் ராமாயணம் மீதும் அதிகப் பற்றுடையவர்

களாக யிருந்ததால் கம்பராமாயணத்தைச் சரியான முறையில் போற்றிப் பயிலவில்லை. இருப்பினும் அவர் பெருமை முழுவதையும் அறிந்து ரஸித்த தமிழ்ப் புலவரும் அறிஞரும் இருந்தனர்—வைணவ, சைவ பற்றுடையோர் போற்றியிருப்பதற்குப் போதிய சான்றுகள் இருக்கின்றன.

ஈழத்திலும் கம்பனில் ஈடுபட்டோர் உண்டு. கவித்வ சக்தி கல்வியின் மூலம் பண்படுத்தப்படுகிறது. தமிழ்க் கவிதை வளர்ந்த கதையைத் தொடர்ந்து நோக்கினல், கல்வியே இந்த வளர்ச்சிக்கு முக்கிய காரணமாயிருந்திருக்கிறது என்பது விளங்கும்—குறுந், முத்தொள், கலி, சிந்தாமணி. கம்பரின் கல்வி ஜோதிமயமாக ஒளி வீசுகிறது. 'தோள் கண்டார் தோளே கண்டார்' கவிதைக்குரிய ஜீவாதாரமான குணம் கற்பனை.

பெரும்பாலும் அணிகளைக் கொண்டே கற்பனையைத் தீட்டுவர். சில சந்தர்ப்பங்களில் அணிகளின் உதவியின்றி, சொல்லும் முறையாலும் மொழியின் திட்பத்தாலும் கருத்தின் வன்மையாலும் கவிதை சிருஷ்டிக்கப்படலாம். கம்பரின் கவிதை கல்வியின் வலியாலும் சிந்தனையின் செறிவாலும் எத்துணை ஒளி பெறுகின்றது என்பது பல காட்டுக்களோடு நிறுவப்படுகின்றன. —நதி, வெள்ளம், வருணனைகள், பாத்திரங்களின் மனநிலை—சோகம், உவகை முதலியவைகள். கம்பராமாயணம் முத்தமிழும் நிரம்பிய நூல்.

அநேக பகுதிகள் நல்ல நாடகங்களே.—அயோத்தியா காண்டம் தலைசிறந்த சோக நாடகம். நாயகன் பரதன். சுந்தர காண்டத்தும் (வீரன்—அனுமான்) யுத்த காண்டத்தும் நாடக பாவம் மலிந்திருக்கின்றன. பொதுவாக பாத்திரங்களின் சம்பாஷணைப் பாகங்களிலும், அவர்களின் உணர்ச்சிகளைச் சித்தரிக்கும் பாகங்களிலும் கம்பரின் நடை மிகவும் எளியது தெளிவானது. அழகுடையது; அரிய ஆற்றலுடையது; மக்கள் பேசும் சாதாரண மொழியிலேயே அமைந்துள்ளது. காவியத்திற்கேற்ற வருணனைகளிலும், கவிக் கூற்றுகளிலும் கதையை நடத்திக்கொண்டு போகும் வேகத்திலும் தன்மையிலும் விரிந்த கற்பனையால் சமைக்கப்பட்டு கம்பீரமாய் உயர்ந்து ஆச்சரியமான வெற்றியை அடைந்திருக்கிறது.

கம்பரிடம் பெரும்பாலாக அவருடைய சிந்தனை சக்தியையும் கல்வி வினையுமே இயற்கைக் காட்சிகள் எழுப்பியிருக்கின்றன; கதையின் வளர்ச்சியையும் பாத்திரங்களின் குண விசேஷங்களையும் ஒட்டியே அவை எடுத்தாளப் பட்டிருக்கின்றன. கம்பர் இயற்கைக் காட்சிகளின் நேரடியான வருணனைக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை.

கட்டுரைகள் அடிக்குறிப்புகளோடு அமைந்துள்ளன.

**494. கம்பரின் கலைவளம் (1—32)**

இலக்கியச் செல்வம்: தி. இராமானுசன், ஏ. தி. என். நாகலிங்கம் கம்பெனி. புதுமண்டபம், மதுரை, மு. ப. 1952; ரூ. 1-75

நன்மை இது, தீமை இது என்று ஆராய்ந்து அறுதியிட்டுரைக்கும் வகையால் அறநூலாய் நமக்குத் தோன்றுகிறது. அரக்கர் நெஞ்சம், முனிவர் உள்ளம், குரங்கின் கருத்து, வீரர் நினைவு, தாயர் அன்பு இவைகளை நன்கறிந்து அவர் பேசுவனவாயுள்ள இடங்களைக் காணின் இந்நூல் உள்ளத்தின் இயலை நன்கு தெரிவிக்கும் உள நூல் எனக் காட்சியளிக்கிறது. பாடல்களில் எவரும் போற்றும்படியான பண்வகைகளை மிக இனிமையாக எடுத்தாண்டுள்ளதை நோக்கும்போது 'இசைத்தமிழ்' என்றே புகழும்படியாய் விளங்குகின்றது.

அரசியல் நுணுக்கங்களை அவர் பெய்து வைத்துள்ளதைப் பார்த்து அவரை அரச மரபினர் என்றே கூறும் ஆராய்ச்சியாளர் பலருளர் (4). இராமனது வடிவழகையும் குணவழகையும் கண்டு, 'மையோ! மரகதமோ! மறிகடலோ! மழை முகிலோ! என நான்கு உவமைகளால் புகழ்கின்றார். இவ்வுவமைகளால் முறையே இராமனது மேனிப் பொலிவையும்; புகழொளியையும், உறுதியையும், உலகினைப் படைத்துக் காத்துத் தன்னுள்ளடக்கிக் கொள்ளும் தெய்வநிலையையும் முற்கூறிய இயல்புகளுடன் விளங்கும் எல்லையற்ற அருள் திறத்தையும் உணர்ந்து வியக்கிறார்(18).

சிறந்த உவமை என்று கண்டால் அதனைப் பல இடத்தும் எடுத்தாள அவர் தயங்குவதில்லை. ஓரிடத்தில் ஒருவமை கூறிப் பிறிதோரிடத்தில் அதைச் செப்பம் செய்தமைக்கும் திறத்தை எண்ணினால் சிற்பத்தின் அழகிலேயே வைத்த கண் வாங்காது மனமொன்றி நிற்கும் சிற்பியாய் அவர் நிற்பதை நாம் உணர முடியும்(27) என்பதனைச் சான்றுகளுடன் விளக்குகிறார்.

**495. கதிரவனும் கம்பனும் (200—204)**

சைவ சித்தாந்த மகா சமாஜம் பொன்விழா மலர். சமாஜம், சி. கந்தசாமி; 1955

ஆரியமும் தமிழும் வேறு பிரித்தறிய வியலாத கலப்பெய்திய பண்பே இவர் காலத்திய தமிழ்ப் பண்பாகும்(204). கதிரவன் உருவில் கண்ணுதற் பெருமானைக் கண்டு, 'எண்ணரிய மறையினொடு கின்னரர்கள் இசைபாட' என்னும் பாடலைப் பாடியதாகக் கூறுகிறார்.

**496. கம்பன் கவிநயம் (107—110)**

ஆனந்தபோதினி: பெ. கு. ஊரப்பன் ஆக. 1955

அசோகவனத்தில் சீதையின் கூற்றான 'அருந்து மெல்லடகு வஞ்சிடுமென வருந்தும்', அனுமன் கூற்றான விற்பெருந் தடந் தோள் வீர' எனும் பாடல்களின் மூலம் பொருளுரைத்து கவி நயத்தைக் காட்டுகிறார்.

497. கம்பர் (226—234) (கவிதை)

இந்தியத் தாய் நிலை: ஜெகவீர பாண்டியனார். 1955; சி. வரத ராஜுலு நாயுடு பிரஸ், மதராஸ்

நினைத்தாலும் படித்தாலும் நேர்நின்று கேட்டாலும் நெறியே நேர்ந்த அனைத்தாலும் திக்கும் ஆரமுதாய்ப் பேரின்பம் அமைய ஆய்ந்து மனத்தாலும் வாக்காலும் இராம னுயர் மகிமைகளை வையம் காண இனிதே ஈந்தான்(227). பொறி வென்ற ஒருவனே புவனமெல்லாம் வெல்ல வல்ல புனிதன்(230) என்பதை அனுமன் வாயிலாகக் காட்டுகிறான் என்று 19 பாடல் களில கம்பன் கவிநயம் காட்டுகிறார்.

498. கம்பன் காவிய நடை

செந்தமிழ்ச் செல்வி: தொகுதி 31 ச. கணபதி முதலியார் 1956—1957); 441—448, 486—493, 537—546) ரூ. 9

காவிய திருப்பு மையங்கள், பொருள் செல்லும் நெறி (கதைத் தொடர்ச்சியமைந்துள்ள நிலை) கூறுகிறார். கம்பனின் ஈற்றடிகளெல்லாம் நினைவில் பதித்து வைத்தற்குரிய சிறந்த அடிகளாய் (493). சான்றுகள் சில தருகிறார். ஒலிநயம், தெள்ளிய நடை, சொல்வளம், கருத்துவளம், சொற்சுருக்கம், பொருள் விளக்கம், காட்சியை ஓவியப்படுத்துதல் முதலியவற்றைக் கம்பன் நயத்துடன் படைத்துள்ளமையைச் சான்றுகளுடன் தரு கிறார்.

499. கவி இன்பம்

வித்துவான். கோ. சுப்பிரமணிய பிள்ளை எம்.ஏ., பி.எல். பழனியப்பா பிரதர்ஸ்; சேப்பாக்கம்; சென்னை-5; தெப்பக்குளம்; திருச்சி-2; மு. ப. 1957; 150; ரூ. 2-50

நூலின் இடையே பிற இலக்கிய இன்பங்கள் விரவிவரினும் கம்பர்தரும் கவி இன்பத்தையே மிகுதியாகக் காட்டியுள்ளார். அவை, தமிழின் தனி உரிமை(6), வில்லம்பும் சொல்லம்பும் (24-2), கவி இன்பம் (40-41) முப்பெருந் தமிழ்க்கவிஞர்கள் (53-55), கம்பனின் தனிச்சிறப்பு (55-5), கம்பன் காட்டும் கோசலம் (56-61) கம்பரின் சொந்தப்படைப்பு (61-64), கம்பரின் தமிழ்ப்பற்று (64-65), கதை மாந்தரின் குணநலன்கள் (65-66), அணிகளின் தாய் உவமை (66-6), வேல் திருப்பியமைந்த மூன்று உவமைகள் (6-72), ஒரு பொருள் பல தோற்றம் (7-73), பாத்திரவழி நகை (93-97), கம்பனின் கற்பனைச் சித்திரம் (11

114); மற்றொரு பாடலில் நோக்கு (129-132), கம்பன் காட்டும் உலாக்காட்சி (149-150) என்னும் சிறுசிறு தலைப்புகளின் கீழ் இடம்பெறுகின்றன.

சிவப்பெருமானே என்றுமுள தமிழ்மொழியை மக்களுக்கு வழங்கினான் என்று கம்பராமாயணத்திலே கூறப்படுகிறது (உழக்குமறை நாலினும்) இராமன் தொடுத்துவிட்ட அம்புகளைக் கண்ட இராவணன் கவிஞர் தொடுக்கும் கவிதையின் கவினையே அதற்கு உவமையாய்க் கருதினான். வில்லம்பைவிட சொல்லம்பே ஆற்றல்மிக்கது என்று கம்பர் பாடிய பாடலையும் தருகிறார். சீதையின் அழகினைக் கம்பர் 'செஞ்சொற் கவியின்பம்' என்றும் நடையழகினைக் கவிஞன் சொல்லின் நடையழகு என்றும் கூறுவதைச் சுட்டி, இத்தகைய கம்பர் பாடல்களால் திருமகள் விலாசம் பெற்று விளங்குவது கவிதை என்கிறார். நாமும் உணர்ச்சி வயப்பட்டாலே கவிஞனின் உண்மை உள்ளத்தைக் காணுதல் இயலும் என்பதனைக் கம்பர் 'முத்தமிழ்த்துறையின் முறை போகிய' எனும் பாடலில் குறிப்பிடுகிறார். மனிதவாழ்க் கைக்கு வேண்டிய உயரிய லட்சியங்களைக் கம்பன், ஒரு காதலி காதலனைக் கடைக்கண் பார்வையால் இனியமொழி இங்கிதங் களால் செலுத்துதல்போல் அறிவிக்கிறார். இதனைக் காந்தா சம்மிதம் என்பர். (55). ஓர் இரசவாதியின் கைபட்டதும் இரும்பு பொன்னாவதுபோல் கம்பனுடைய கவியொளிபட்டதும் வான் மீகத்தின் மொழிபெயர்ப்பு கம்பராமாயணம் ஆகிவிட்டது(56).

பழந்தமிழ் நாட்டை நினைத்துக்கொண்டே கம்பன் கோசல நாட்டை வருணித்திருக்கிறான். அதனால்தான் 'கள்வாரிலாமை யால் காவலுமில்லை' என்று அவனுக்குப் பாட முடிந்தது(61). மிதிலைக்காட்சிப்படலம் கம்பருடைய தனிப்பட்ட அருமையான சொந்தப்படைப்பு(64). கம்பர் தனது கற்பனைத்திறனால் இராமனைத் தமிழனாகச் செய்துவிட்டார். கம்பராமாயணத்தால் தமிழ்மொழி பன்மடங்கு உயர்வும், பெருமையும், மேன்மையும், செழுமையும் அடைந்திருக்கிறது(64). கம்பரின் தமிழ்ப்பற்றினை 'அத்திருத்தகு நாட்டினை' எனும் பாடலில் காட்டி, இதனையே தமிழன் முதன்முதல் பாடிய தமிழ்நாட்டு வாழ்த்துப் பாடல் என்று கொள்ளுதல் தவறாகாது என்கிறார்(65).

கம்பர் காவியத்தில் ஒவ்வொரு பாட்டும் ஒரு சுவையுள்ள நாடகக் காட்சியாகத் திகழ்கிறது(65). தேவர்கள் கடவுளர்களைப் பற்றியும் சமய உண்மைகளைப் பற்றியும் கம்பர் அருமைதோன்ற அழகுடன் பாடியிருக்கிறார். இரணியன் வதைப்படலம் கம்பரு டைய ஒப்பற்ற மேதைத் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டாக இலங்குகிறது. கபிலரின் குறுந்தொகை 106ஆம் பாடலின் உவமையினையே மெருகேற்றி கம்பர்' பொழிந்த நெய் யாகுதிவாய்

பொங்கி' எனும் பாடலில் வைத்துள்ளார். சில பழைய உவமைகளுக்குக் கூட புதுமெருகு ஏற்றி அழகுபடுத்திக் காட்டு வார் கம்பர். பொன்னேக்கியர் தம் புலனேக்கிய எனும் பாடலில் வேலாயுதம் சடாயுவின் மார்பிற் சென்ற வேகத்திற்கும், உள் நுழைய மாட்டாது திரும்பினமைக்கும், திரும்பி நிலத்தில் வந்து விழுந்தமைக்கும் பொருந்துமாறு கம்பர் மூன்று உவமைகளைக் கூறியுள்ளமையை விவரித்து மூன்ருவது உவமையில் யோகிய ரிடத்தே காமத்தால் பெண்கள் செலுத்திய பார்வை பயனுறது திரும்புவதுபோல் என்னும் பொருள் பொருந்தாது; யோகியர் நிலையை அடைந்த கற்புடைப் பெண்டிரின் பார்வை நிலனேக்கிக் கவிழ்வதுபோல், என்று பொருள் கொள்ளவேண்டும் என்கிருர்.

மழையைப் பாடுவதில் கம்பர், பாரதி, மணிவாசகருடன் வேறுபட்டிருப்பதைச் சுட்டுகிருர். சூர்ப்பணகையின் காம விகாரத்தையும், பேதமையையும் அடிப்படையாகக் கொண்டு, அவள் தன்னையறியாமலே பிதற்றும் பிதற்றல்கள் மூலம் கம்பர் நகை விருந்தளிக்கும் திறமை மிகவும் போற்றற்பாலது என்று கூறி அதனை அவள் கூற்றுகள் மூலம் காட்டுகிருர். 'தாவில் பொற்றலததிணற் றவத்திேனார்கள்' என்னும் பாடலில் கம்பனின் கற்பனைச் சிறகினைச் சிறப்பாக எடுத்துக்காட்டுகிருர். 'போரன்ன வீங்கும் பொருப்பன்ன' என்னும் பாடலில் நோக்கு எனும் யாப்பினையும், 'மைக்கருங் கூந்தல் செவ்வாய் வாணுதலொருத்தி' என்னும் பாடலில் கம்பனின் உலாக் காட்சியினையும் காட்டுகிருர்.

கம்பர்தரும் கவி இன்பத்தைத் தெளிவாக, இனிமையாகக் காட்டுகிருர்.

**500. கம்பரின் நினைவாற்றல் (51—54)**

மாணவர் மன்றம், சென்னை, வெள்ளிவிழா மலர்; பூ. பாலசுந்தரம் செட்டியார்; 1957; 17, இரத்தினமுதலி தெரு; சென்னை-1.

தன் தாய் காடு செல்லும்போது கூறிய அறிவுரையினை (நகர் நீங்கு ; 152), இலக்குவன் எண்ணிப் பார்ப்பது (கவந்த : 31), சீதையும் நினைவுகொண்டு அரற்றுவது (சீதை களங்காண் ; 18), கைகேயி கேட்ட வரத்தினை வேலுக்கு உவமித்தது (கைகேயி சூழ்வினை: 20) யுத்தகாண்டத்தில் இராமனும் தசரதனும் சந்தித்த போது அதனை நினைவூட்டி அவ்வேல் அகன்றதாகக் கூறுவது (மீட்சிப்படலம் 118) என்னும் இருசான்றுகளைக் கம்பன் நினைவாற்றலுக்குச் சான்ருகத் தருகிருர்.

**501. கதையுள்ச் சில கவிகள் (70—81)**

தமிழ்க்கவி இன்பம் : வித்துவான் ல. சண்முகசுந்தரம், ஸ்டார் பிரசுரம்; திருவல்லிக்கேணி, சென்னை-5; மேலக்கோபுரத் தெரு, மதுரை; மு. ப. அக். 1959; ரூ. 2

தனக்கு விடுதலை வேண்டியும், தனது இளவரசனுக்குப் பட்டங்கட்ட வேண்டியும் சபையினிடத்துத் தசரதன் கேட்டுக் கொள்ளுகின்ற முறை அவனுடைய பொறுமையையும் தார்மீகத் தையும் உணர்த்துகிறது(71). ராமனுடைய இதயத்தையும் இதயத்துள் உள்ள பரிவையும் 'மேவுகானம் மிதிலையர்கோன் மகள்' 'என்று சிந்தித்து இளையவர் பார்த்திரு' எனும் பாடல்கள் அற்புதமாய் எடுத்து விளக்குகின்றன. சூர்ப்பணகைப் படலம் காதல உள்ளத்தின் பரிதாபகரமான மனவேதனைகளையும், அது கைகூடாதபோது உண்டாகின்ற கோரசொரூபங்களையும் தத்ரூப மாகக் காட்டுகிறது. சீதைமீது இராவணன் காதல் கொண்டு பேசுவதையும், சூர்ப்பணகை இராமன்மீது காதல் கொண்டு பேசுவதையும் அழாககக் காட்டுகிறார். குத்தலும் பக்கவெட்டும் நிறைந்த வாலியின் கேள்விகளுக்குமுன் இராமனுடைய பதில் சூரியனுக்கு முன்னுள்ள மின்மினிப் பூச்சிகள்தாம். வாலியினு டைய கேள்விகளை ஆணித்தரமாக்க இராமனுடைய பதிலை இளக்கி இருக்கிறார் என்று தோன்றுகிறது(81).

## 502. இலக்கிய இன்பம்

நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை

பழனியப்பா பிரதர்ஸ்: ஐ. ப. 1960; 6+248; ரூ. 3-50

பொ. திருகூட சுந்தரம் முன்னுரை வழங்கியுள்ளார். இலக்கிய இன்பம், உடலும் உயிரும், உடலுக்கு வந்த நோய், மதி யின்மறு, விதியாவது ஒன்றுவது, உதயமும் அஸ்தமனமும், சர்வகலாசாலை, மெய்ஞ்ஞானம் முதலிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

'தசரதன் என்கிற உடலுக்கு இராமன் என்பது உயிராக இருந்தது. இராமன் என்ற உயிர் பிரிந்துபோன உடனே தசரதன் என்ற உடல் பிணமாகிவிடுகிறது; இதனையே கம்பன் வழிநின்று கூறுகிறார், இராமன் உயிர் என்பதில் கம்பர் எவ்வளவு கற்பனையோடு அமைத்துள்ளார் என்று காட்டுகிறார்.

விசுவாமித்திரருடன் இராமன் பின்செல்வது தசரதனுடைய உயிர்போவதற்குச் சமானமாகக் கற்பிக்கப்பட்டுள்ளது. உயி ரற்ற உடலான தசரதனை, மீண்டும் தன் உயிரைச் சேரும் வரை யில நடக்கும் எண்ணற்ற இன்பகரமான விசயங்கள் எதிலும் தசரதனுடைய மகிழ்ச்சியோ, தொடர்போ இல்லாதபடி கம்பன் இயற்றியிருப்பது இலக்கியச் சிறப்பு(81). 790 பாடல்கள் கழித்து இராமனாகிய உயிர் மீண்டும் வந்து தசரதனாகிய உடலில் சேர்ந்து கொண்டது என்று கம்பர் கூறும் பாடலுடன் முதற்பாடலுக்கும் உள்ள ஒற்றுமையையும் சிறப்பையும் எடுத்துக்காட்டுகிறார.

பரசுராமன் முன்னிலையில் இராமனே தசரதனுடைய உயிர் என்ற கருத்தைக் கம்பன் உறுதிப்படுத்துவது போன்றவற்றையும் எடுத்தியம்பியுள்ளார். 'போயினன் என்ற போழ்தே ஆவி போயினன்' என்று கவிஞன் கொடுத்திருக்கிற தீர்மான வேலைப்பாட்டில் அமைந்துள்ள இலக்கிய அழகு எண்ணற்கரியது என்பதே இங்குள்ள இலக்கிய இன்பத்தின் சிகரம்(135). இந்த கற்பனையைப் படிப்படியாக வளர்த்துக்கொண்டு போயிருக்கிற கவிதா சாதுரியத்தை அங்கங்கே பரவிக் கிடக்கிற பல பாட்டுக்களையும் தொகுத்துப் பார்க்கிற போதுதான் காணமுடியும். அந்த இலக்கிய இன்பம்தான் இந்தக் கட்டுரையில் பிரதானமாக எடுத்துக்காட்டப்படுகிறது(136) என்று உடலுக்கு வந்த நோய் எனும் கட்டுரையில் நவில்கிறார்.

'மதியின்மறு' எனும் அடுத்த கட்டுரையில் கம்பன் ஒவ்வோர் உவமானத்தையும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடுதான் உபயோகிப்பான். அந்தக் குறிப்பை அநேக ஆயிரம் பாட்டுகளுக்கு அப்பாலும் அமைப்பான். அதை நாம் அறிய நேருகின்றபோது அதி அற்புதமான இலக்கிய இன்பத்தை அடைவோம்(137). சான்றாக கைகேயி தசரதனிடம் வரங்கேட்கத் தன்னை அலங்கோலப் படுத்திக் கொள்வதனைக் குறிப்பிட்டு, 'ஒருசுமங்கலிப் பெண் திலகத்தை அழிப்பது அமங்கலம். அதுபோல் சந்திரனுக்கு இயல்பாக இருக்கவேண்டிய களங்கம் போய்விடுவது உலகத்துக்கு உண்டாகப் போகிற உற்பாதங்களுக்கு அடையாளம் என்பது இயற்கை சாஸ்திரம்(143). கம்பன் காவியத்தில் கைகேயி நெற்றியில்திலகத்தை அழித்ததிலிருந்துதான் துன்பங்கள் ஆரம்பமாகின்றன.

இராவண சம்மாரத்துக்குப் பிறகு சீதை மீட்கப் பெற்றவளாகி அவளுடைய மனம் குளிர்ந்த பிறகுதான் காவியத்தில் சுபிட்சகாலம் ஆரம்பமாகின்றது. அந்த நல்லகாலம் வருகிற வரைக்கும் கம்பனுடைய கவியுலகத்தில் சந்திரன் களங்கம் இல்லாதவனாகவே இருந்து வந்ததாகக் கம்பன் சொல்லுகிறான் (144) இதனைக் கம்பன் நாளொடும் வருகலைக்கு வரும் மறுமான் உற' என்று கூறியிருப்பதால் உறுதிப்படுகிறது.

விதியாவது ஒன்றாவது? எனும் கட்டுரையில் விதியை மறுக்கின்றவர்களும் தம்மை மறந்து ஒப்புக்கொள்ள வேண்டும் என்ற நியாயத்தைக கம்பன் எப்படிக் கட்டாயப் படுத்துகிறான் என்பதனை காட்டுகிறார். 'விதிக்கும் விதி செய்யும் என் வில் தொழில் காண்டி' என்ற இலக்குவன் 'வெஞ்சின விதியினை விலக்க வல்லாமோ' என்று கூறுவதன் மூலம் காட்டுகிறார். அடுத்து இடம் பெறும் கட்டுரையான 'உதயமும் அஸ்தமனமும்' என்பதில் கதைத் தொடர்புடன் கம்பன் ஒவ்வொரு முறையும் சூரியனின்

உதயத்தினையும் அஸ்தமனத்தினையும் அமைத்திருக்கும் சிறப்பினை வெகு அழகாக சுமார் பத்து உதாரணங்களைச் சுட்டி அதன் இலக்கிய இன்பத்தைக் காட்டுகிறார்.

'நாம் பார்க்கிற விமானத்தைப் போலவே இராவணனுடைய ஆகாயவிமானமும் பூமியின்மேல் ஓடிய பிறகுதான் ஆகாயத்தில் கிளம்பியிருப்பதாக ஆயிரம் வருடங்களுக்கு முன் கம்பன் கூறுகிறான். இராமன் ஒரு அஸ்திரத்தை விட்டவுடன் சூழ்ந்திருந்த இருள் விலகுவது எதிர்காலத்தில் நிகழவிருக்கும் விஞ்ஞான சிருஷ்டியாக இருக்கலாம். வருணன் தாமதத்தால் இராமன் விடுகின்ற அம்பால் ஏற்பட்ட விபரீதங்களாகக் கம்பன் கூறுபவை, இன்று ஒரே ஒரு அணுகுண்டைப் பிரயோகம் செய்து என்னென்ன கேடுகளை விளைவிக்கலாம் என்று இக்காலத்து விஞ்ஞானப் பேரறிஞர்கள் ஊகிக்கிறார்களோ அத்தனை கேடுகளும் அதில் அடங்கியுள்ளன.

கற்பனை உலகில் கம்பன் நடத்தும் விஞ்ஞான வேலைகள் அத்தனையும் ஒரு காலத்தில் உண்மையாகவே நடந்தாலும் நடக்கலாம்' என்று 'சர்வகலாசாலை' எனும் கட்டுரையில் கூறுகிறார். இறுதிக் கட்டுரையான மெய்ஞ்ஞானத்தில் மனிதனுடைய ஆராய்ச்சிக்கு அகப்பட்ட உயர்ந்த தத்துவங்கள் எல்லாவற்றிற்கும் இருப்பிடம் போன்றது கம்பன் காவியம் என்று கூறி 'காந்தியடிகளும் கம்ப நாட்டாழ்வாரும்' என்ற தன் நூலின் சுருக்கத்தைத் தந்து அதனையும் ஓர் இலக்கிய இன்பமாகக் காட்டுகிறார்.

தெளிவு, எளிமை, விரிவான விளக்கம் ஆகியவை அடங்கியுள்ள இந்நூலைப் படிக்குங்கால் ஆசிரியர் கம்பனில் கொண்டுள்ள ஆழ்ந்த அறிவு, விருப்பம் ஆகியவையும் வெளியாகின்றன.

503. **காப்பியக் கவிஞன் கம்பன்** (68—80)

*தமிழ் மறுமலர்ச்சி: பிரான்சிஸ் முராயிஸ்; அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை; சென்னை - 18; ஏப். 1961; ரூ. 1-40*

பொருள்களை நேரில் கண்டனுபவித்து அவ்வனுபவத்தை மீண்டும் நினைவுக்குக் கொண்டுவந்து அப்பொருள்களின் அழகில் மீண்டும் ஈடுபடுவது போலுள்ளன அவனது வருணனைகள் (75). கம்பன் நடையின் இன்னிசையைச் சுவைத்தறிந்த போப்பையர் 'Nothing can equal the sweetness of this real poet' (76) என்று கூறுகிறார். மேனாட்டாருடன் ஆங்காங்கே ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

504. **கம்பர்** (89—130)

*கவி மன்னர் மூவர்: பண்டித வித்துவான் மு. சாம்பசிவன்; கழகம், மு. ப. 1961; இ. ப. 1962; ரூ. 1-20*

முதலில் கம்பரின் குலம், பெயர் பற்றிய கதைகளும், வரலாறும் கூறுகிறார். பின் 'கம்பர் நூலுக்கு முன்னே, உருவமும் பெயரும்கொண்டு ஒரு சமயச் சார்பு பற்றாது நிற்கும் கடவுள் வாழ்த்தைக் கூறுகின்றார். அடுத்து வான்சிறப்பை ஆற்றுப்படலம் வாயிலாய் உரைக்கின்றார். பின்பு நீத்தார் பெருமையை நாட்டுப் படலம், நகரப்படலம் இவற்றால் விளக்குகின்றார். இறுதியில் அறன்வலியுறுத்தலைப் பொதுவகையான் சொல்லுகின்றார்', என் கிறார். குறட் கருத்துகள் பல கம்பனுள் இடம் பெற்றுள்ளதைச் சுட்டுகிறார்.

கம்பராமாயணச் சிறப்புக்கள் பற்றிக் கூறுவனவற்றுள் புதியன இல்லை. பெருமிதத்திற்குரிய நான்கு நிலைக்களனும் ஒரே பாடலில் அமைத்து உள்ளார். (வண்மை இல்லை யோர் வறுமை யின்மையால்) கற்பனை நயம் (நீரிடை யுறங்கும் சங்கம்) காப்பிய மாந்தர் மனநிலையை இடத்திற்கேற்றவாறு எடுத்துரைக்கிறார். (சூர்ப்பணகை வருகை - பஞ்சியொளிர்) கம்பர், வான்மீகி வேறு பாடும் சுட்டுகிறார். யாதும் ஊரே யாவரும் கேளிர், தமிழ்மொழி, நாடு, இனம் ஆகியவை மீது பற்று, செய்ந்நன்றி, முன்னோர் மொழிப் பொருளைப் பொன்னேபோல் போற்றுதல் முதலிய வற்றைக் கம்பரின் பண்புகளாகக் காட்டுகிறார். ஏ. சி. பிராட்லி யின் சிறந்த கவிஞர் பற்றிய கூற்றுக்குக் கம்பர் பொருத்தமாக அமைகிறார் என்கிறார்.

**505. நிதிவழியும் விதிவழியும் (50—53)**

கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்? சி. என். நாச்சி யப்பன்

மாயமானின் ஓட்டத்தைக் கம்பர் பொதுப் பெண்டிரின் மனத்திற்கு ஒப்பிடுவதைச் சுட்டி பொதுப் பெண்டிரின் வழியோ நிதிவழி, மாயமானின் வழியோ விதிவழி என்று கூறி அதனால் தான் ராமனால் பிடிக்க முடியவில்லை என்கிறார்.

**506. மருதத்தின் மாண்பு (83—85)**

காவியத்தில் ஓவியங்கள்: சு. இராசேந்திரன்; அருணைப்பப்ளி கேஷன்ஸ்; தியாகராயநகர்; சென்னை - 17; மு. ப. 1962; ரூ. 1-75

'தண்டலை மயில்களாட தாமரை விளக்கம் தாங்க' என்னும் பாடலின் விளக்கம்.

**507. கம்பன் கவிகளின் தனிப்பெருமை (71—78)**

அன்பு நெறியினர் வாழ்க்கை: வை. சுந்தரேச வாண்டையார்; மணிவாசகர் நூலகம்; சிதம்பரம்; மு. ப. 1962; ரூ. 2

கம்பர் பெருமான் பிற கவிஞர்கள் மேற்கொண்ட வழிகளினும் உயர்ந்த புது வழிகளைக் கொண்டும், சாமான்ய உவமைகளிலும் ஆழ்ந்த நுண்ணிய கருத்துகளைப் புகுத்தியும் அவ்வச் சமயங்களில் கதாபாத்திரங்கள் உட்கொள்ளும் எண்ணங்களை உணர்ச்சி வேகம் பொங்க வெளிப்படுத்தும் முறையை ஊன்றி யுணர்ந்தும் பற்பல நூல்களின் இனிய கருத்துகளை மனத்திற் கொண்டு உலகியல்புக்கேற்பப் புதுக்கி பொருக்கிட்டும், தனக்கே யுரிய தனிப் பேரறிவினுல் சுவைமிக்க சொற்களையும் பொருள்களையும் கருதிக் கையாண்டும் தனது நூல் பிற்காலத்தாரால் உச்சிமேல் வைத்துப் போற்றப்பட வேண்டுமென்னும் அவாவால் மிக முயன்றும் இராமாயணத்தின் பெருமை மிக வேண்டியும் படைத்திருக்கின்ருர் என்பது புலப்படுகின்றது. இதனைக் 'கடிக்கும் வல்லரவுங் கேட்கும் மந்திரம்' என்னும் பாடலால் விளக்கியுள்ளார்.

508. கம்பனைப்போல்...? (118—129)

*தமிழே! அமுதே!*—வே. கபிலன்

*அருணோதயம்; ராயப்பேட்டை; சென்னை* - 14; மு. ப. ஜூன் 1962; ரூ. 3

பல நயங்களிலும் மகுடமாக இருப்பது கவிநயம். பாரதியார் கம்பனைச் சிறப்பித்தற்கு இதுவே காரணம். (சான்று: மன்னவன் உடல், மக்கள் உயிர்) பாரதி விரும்பும் பொதுவுடமை, பெண்ணுக்குச் சமஉரிமை அயோத்தி வருணனையில் உள்ளது. காதல் தன்மையை அழகுற விவரித்தல் (மிதிலைப்படலம் 36—37) வீரக் காதை (வில்லொடித்த நிகழ்ச்சி) ஆகியவற்றுடன் குகன் கோபாவேசம், சூர்ப்பணகையின் மறைத்த தோற்றம், இராவணன் சீதையை இதயமாம் சிறையில் வைத்தது, களத்திலே மாண்டு கிடக்கும் காட்சி, சீதை-அனுமன் சந்திப்பு, ஒரே பொருளைப் பல உவமைகளில் ஒவ்வொன்றுக்கும் தனிப்புகழ் உள்ளவாறு கவி பாடுதல் (பொன்னின் சோதி, போதின் நாற்றம்) ஆகியவற்றையும் சுட்டி பாரதியின் கூற்றுக்கு இவையும் காரணம் எனக் காட்டுகிருர்

509. கம்பர் கவித்திறன் (32—42)

*வாழ்க்கை வளம்:* லெப. கரு. இராமநாத செட்டியார்

முத்தையா நிலைய வெளியீடு, 477. பூந்தமல்லி நெடுஞ்சாலை. சென்னை – 7, மு. ப. 1962; இ. ப. 1965; மூ. ப. 1967; நா. ப. 1970; ரூ. 3-50

'தோள் கண்டார் தோளே கண்டார்' என்னும் பாடலில் இராமனுடைய தோள், தாள், கை என்னும் மூன்று உறுப்பு

களை மட்டுமே கூறியதற்குக் காரணம் என்ன?—இராமனைக் கண்ட மகளிர்க்கு அவன் தீயவன் ஒருத்தியை அழித்த செயலும், நன்மகளிர் இருவர்க்கு அருள் செய்த செயலும் நினைவில் வந்தன. அந்நினைவுகள் நிறைவேறத் துணையாக இருந்த உறுப்புக்களைக் காணும்போது தோன்றின. ஆகவே அவ்வச் செயல்களை நினைத்து அவ்வவ் உறுப்புகளில் மகளிர் ஈடுபட்டார்கள் என்பதைக் கம்பர் குறிப்பிடுகின்றார்(34).

தாடகை வதத்தில் தோள் வலிமை காட்டப்பட்டது. அகலிகைக்கு உருவளிக்கத் தாள் பயன்பட்டது. வில் முறியக் கைவலிமையே சிறப்பாகப் பேசப்பட்டுள்ளது. நிகழ்ச்சி நடந்த வரன்முறைப்படி கொடுக்கிறார். ஓரிடத்தில் கூறப்பட்ட செய்தியைப் பல பாடல்கள் கழிந்த பின்னும் நினைவுகூர்ந்து, தொடர்பு படுத்திக் கூறும் இயல்பு கம்பர் பாடலில் காணப்படும் மற்றொரு திறமாகும்(35). (தசரதனுக்கு இராமன் உயிர் என்பது பால: செய்யுள் 337, 114; ஆரணிய 967, யுத்த: 3978) இரு இடங்களிலும் பிரிதலும் கூடுதலும் உயிரின் செயலாகக் கூறப்பட்டுள்ளது. திருக்குறளையும், சிந்தாமணியையும் பயன்படுத்தியுள்ளமை, சில நிகழ்ச்சிகளை ஓவியமாகக் காட்டல் ஆகியவற்றையும் குறிப்பிடுகிறார்.

510. உருவெளித் தோற்றம் (165—168)

தமிழ்ப்பொழில்: வித்துவான் தே. ப. சின்னசாமி; அக்—நவ. 1962.

உருவெளித் தோற்றத்திற்குக் காரணமாக நிற்பது வேட்கைக் கிளர்ச்சியாகும். உறுதத நினைந்த நினைவும், உறுத்துக் கண்ட காட்சியும் உருவெளித் தோற்றமாகத் தோற்றமளிக்கும் என்று கூறும் ஆசிரியர் கம்பனில் இராவணனும், சூர்ப்பணகையும் காணும் உருவெளித் தோற்றத்தினைக் கட்டுரையில் கூறுகிறார்.

511. Kamban (81—86)

Tamil literature: M. Ramasamy; Published by Tamil Writers Association Calcutta Vol. IV. 1962—63

In Kamban and his work, Tamil culture and history found an outlet such as has been Vouchsafed seldom to any one in human history. Kamban lived in the latter half of the 12th Cent. In richness of language and words he can be compared only to keats. Unlike Valmiki Kamban has a vast panorama of gigantic, magnificant characters amongest whom towers Rama. Delineation of characters incrispsure

strokes of the brush is another of the great achievements of Kamban. The tragic end of Ravana's battle on the first day of the war is one of the most magnificant pictures of Kamban. He gives examples for his greatness from the epic.

512. இன்பஉதை (27—29)

இலக்கிய வாழ்வு: பாலூர் கண்ணப்ப முதலியார்
வள்ளுவர் பண்ணை; 137. பிராட்வே; சென்னை - 1; மு. ப. சன. 1963; ரூ. 1-50

'கிழவோன் பணிவும், கிழத்தி உயர்வும் நினையுங் காலைப் புலவியுள் உரிய' எனும் தொல்காப்பிய நூற்பாவிற்குக் கம்பனின் 'குதைவரிச் சிலை நுதல் கொவ்வை வாய்ச்சியர்' எனும் பாடலைச் சான்றாக்கி விளக்கியுள்ளார்.

513. கண்ணாம்பூச்சி (17—19)

இலக்கிய வாழ்வு: பாலூர் கண்ணப்ப முதலியார்

காதலன் எவ்வளவு உடல் உரம் படைத்துச் சிறந்த போர் வீரனாக இருந்தும் பயன் என்ன? காதலிக்கு அடங்கி அவளுக்குச் சமாதானம் கூறித்தானே வாழவேண்டும் என்ற கருத்தினைக் கூறும் 'போர் என்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொள் திண் தோள்' எனும் பாடலை விளக்கியுள்ளார்.

514. தென்னை எழுப்பிய நினைவு (29—21)

இலக்கிய வாழ்வு: பாலூர் கண்ணப்ப முதலியார்

காம மயக்கில் ஈடுபட்ட காளை ஒருவன் வம்பினை விலைக்கு வாங்கிப்பட்ட துன்பத்தை 'செம்மாந்த தெங்கின் இளநீரையோர் செம்மல் நோக்கி' எனும் பாடல் மூலம் விவரிக்கின்றார்.

515. நஞ்சினும் கொடிய நாட்டம் (21—23)

இலக்கிய வாழ்வு: பாலூர் கண்ணப்ப முதலியார்

'ஊறு ஞானத்து உயர்ந்தவரேனும் வீறு சேர் முலை மாதரை வெல்வரோ' எனும் கம்பர் கூற்றினை அவர் பாடல்களான நஞ்சினும் கொடிய நாட்டம் அமுதினும் நயந்து நோக்கி, அம்புயத் தணங்கின் அன்னார் அம்மலர்க்கைகள் தீண்ட' என்பவற்றின் மூலம் விளக்கியுள்ளார்.

516. கம்பன் காவியத்தில் காணும் கருத்து (61—66)

கவிதையும் கவிஞனும்: புலவர். எம். சி. கண்ணபிரானார்
கலையரசி வெளியீடு; சென்னை - 7; மு. ப. சூலை 1963; ரூ. 2

கம்பர் இராமனின் அழகைப் புனைந்துரைத்துள்ள பாடலான தோள் கண்டார் என்பதில், முதலில் நகர மாதர் நினைவில்

அவனைக் கண்டவுடன் வந்தது வில்லொடிந்த நிகழ்ச்சி. ஆகையால் முதலில் தோள் கண்டார். பின் சற்று முன் நடந்த அகலிகை மீட்சி எனவே, 'தாள் கண்டார் தாளே கண்டார்' என அமைத்தார். இதற்கு முன் தாடகையைக் கொன்றதைக் கருத்தில் எண்ணி 'தடக்கையும் அஃதே', என்று சுருங்கக் கூறி விளங்க வைத்துள்ளார் என்று கம்பர் கவித்திறத்தைப் பாராட்டுகிறார். இவ்விதமே இராமன் அழகைப் பாடும் ஒவ்வொரு இடத்திலும் ஒரு புதுமை தோன்றப் பாடியுள்ளார் என்கிறார்;

**517. கம்பன் சொல்நயம்** (279—283, 311—314)

*செந்தமிழ்ச் செல்வி: தொகுதி* 38 கோ. சுப்பிரமணிய பிள்ளை, 1963—1964

*கம்பன் கவியாற்றலைப் பல தனி சொற்றொடர்களாலும், சில கவிதைகளினாலும் விளக்கி அதன் நயம் காட்டுகிறார். (கோதைகள் சொரிவன..., பஞ்சு பூத்த விரற்பதும...., பஞ்சியொளிர்..., பூப் பொதி யவிழ்ந்தன...)*

**518. கம்பராமாயண முதற் செய்யுட் சங்கோத்தர விருத்தி**

மாதவச்சிவஞான யோகிகள்

திருவாவடுதுறை ஆதினம் 1964; 32

*நூற்பயன் கூறும் கம்பராமாயணச் செய்யுளினை (நாடிய பொருள் கைகூடும்) மேல் நோக்காகப் படிக்கின் எழும் குறைபாடுகளாக சுமார் இருபதினைச் சுட்டி, பின் ஆழ்ந்து ஆராயுங்கால் அவை நிறைவாகத் தோற்றமளிப்பதனைக் காட்டியுள்ளார்.*

**519. கம்பன் காவிய மாளிகை** (77—86)

*தென்றல்தந்த கவிதை:* தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் தமிழ்ப் புத்தகாலயம், 393, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-4; மு. ப. 1964; இ. ப. 1971; ரூ. 2-50

*கம்பனது அழகுணர்ச்சியும் கற்பனைசக்தியும் இசைஞானமும் கடைசிவரை அவனுடன் துணைநின்று காவியமாளிகையை உருவாக்க உதவுகின்றன. காவியத்தில் பல உறுப்புகளையும் முக்கிய நிகழ்ச்சியாகிய இராவணவதத்தோடு இணைத்துப் பார்க்கும்போது ஏகம் என்ற உணர்ச்சியை உண்டாக்கி விடுகின்றான், கம்பன்(83). இராமனையே நடுநாயகமாக வைத்துக் காவியத்தில் வரும் மற்ற பாத்திரங்கள் நாயகனோடு நாயகர்களாக ஒன்றிச்சேர்ந்து காவியத்தில் முக்கிய அங்கம் பெற்றுவிடுகிறார்கள் என்றால் அது கம்பனுடைய காவியத்திறம்தான் (84).*

*'கம்பனுடைய காவியம் பல்லவ சிற்பிகளின் பெரிய வீச்சையும், சாளுக்கிய சிற்பிகளின் சிற்றுளி வேலையையும் முகலாயர் காலத்துச் சின்னஞ்சிறு சித்திரம் வரைபவர்களின் கைநயத்தை*

யும் ஒருங்கே நினைவுக்குக் கொண்டுவருகிறது. அவன் படைப்பான சீதைக்குக் கொடுக்கும் வர்ணனை அவனுடைய காவியத்திற்கே பெரிதும் பொருந்தும்' எனும் வ. வே. சு. ஐயரின் கூற்றைச் சுட்டி இவற்றிற்கெல்லாம் மேலாகத் தெய்வீகசக்தி அவனிடம் இருந்தது எனமுடிக்கிறார்.

520. **கம்பன் காட்டும் கண்கள்** (53—69)
இலக்கிய நினைவுகள் : டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்

கம்பன் காட்டும் கண்கள் உவமையின் சூழலில் உருவாகியுள்ள திறம் இங்குப் பேசப்படுகின்றது. உள்ளத்தின் அன்பு, அருள், ஆவல், ஏக்கம், ஏமாற்றம், துன்பம் என்றின்ன உணர்வுகளுக்கு ஏற்றவாறு கம்பன் காட்டும் கண்கள் அமைகின்றன. உணர்வு அலைகளுக்கு ஏற்றவாறு கம்பன் கண்கள் அமைகின்றன. உணர்வு அலைகளுக்கு ஏற்றவாறு கொள்ளும் வண்ணங்களும் உமிழும் சின்னங்களும் பல. கண்களில் கசியும் நீரைக் கம்பன் காட்டும் நிலைகள் பல. ததும்புங் கண்ணீர் விழும் நிலையிலும் கம்பன் கண்ட நிலைகள் பல. வேதனையைக் கண்ணீரால் காட்டிய விழி, வெந்து சினக் கனல்கள் கக்கிய நிலை முதலியன பல. கண்களைத் தம் காப்பியத்தில் பாத்திரப் படைப்புகளுக்கென பகுத்தும் உணர்த்தியிருக்கிறார்.

பெண்களுக்கு வேலனைய நீண்ட விழிகளை, அகன்ற சூழ்ந்த விழிகளையே அழகிய விழிகளாகப் படைத்த கம்பன், செம்மையில்லாத சிறுமைப் பண்பினருக்குச் சிறுகணகளை அமைத்து விடுகின்றான். பாத்திரங்களின் குணங்களை, இயல்புகளை, ஓரளவு கண்களின் மூலமாகவே காட்டிவிடும் திறன் அரக்கர் தம் விழியைக் குறிப்பிடும் இடத்தில் தெளிவாகப் புலப்படுகின்றது. உவமைத் திறத்தால், வர்ணனை வகையால், உளககண்ணாடியான விழிகளைப் பலநிலையில் பேசிய கம்பன், உணர்வின் வாயிலைக் குறிப்பிட்டுக் கூறிச் செல்லும் திறன், மங்கை ஒருத்தி மொழியாகக் கவிதையில் உள்ளது.

521. **கம்பன் கட்டிய கலைக்கோவில்** (92—101)
உருவும் திருவும் : சி. பாலசுப்பிரமணியன் எம். ஏ., எம். லிட். பாரிநிலையம். 69, பிராட்வே, சென்னை-1; மு. ப. 1965; இ. ப. 1967; ரூ. 2-50

கம்பன் கட்டியக் கலைக்கோயிலில் காவியநலன்கள் பலவும் கண்டு மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கும் ஆசிரியர் அந்நலங்களை வரிசைப்படுத்தி சான்றுடன் விளக்குகிறார். கற்பனை ஆற்றல் (தண்டலை மயில்களாட) தமிழ்நாட்டை மறவாமை (காவிரி நாடன்ன கழனிநாடு, இராமன் சீதை காதல், தாரை கைம்பெண் கோலம்) நாடகபாவம் (இரணியன் வதைப்படலம், இராவணன்

இந்திரசித்து உரை) எண்ணங்களைக் கவிதையாக வடிக்கும் ஆற்றல் (வான் நகும், மண்ணும் எல்லாம் நகும்) குணத்தைக் குணியாக வருணிக்கும் கவிதைப் பண்பு (விற்பெருந்தடத்தோள் வீர, வீங்குநீர் இலங்கை வெற்பில்) ஒலிநயம், (பஞ்சியொளிர், ஆழநெடுந்திரையாறு) ஓரிடத்தில் சொன்ன கருத்தினை நினைவு கூர்ந்து அதற்கேற்பப் பின்வரும் கவிதைகளைப் படைத்தல் (வெள்ளெருக்கம்), சகோதரநேய ஒருமைப்பாடு, நன்றி மறவா நல்லுணர்வு (அரியணை அனுமன் தாங்க) என அவற்றை எடுத்துரைக்கிறார்.

522. **கம்பராமாயணம்** (70—84)

*கட்டுரைவளம் : சி. பாலசுப்பிரமணியன், எம். ஏ., எம். லிட் பாரிநிலையம்; மு. ப. 1966; ரூ. 2-75*

கம்பர் மெய்ப்பாடு தோன்ற, வரலாற்று மாந்தர் இயல்புபடச் சிறப்பாக அமைத்துள்ளார். சொல், பொருள், தொடர், ஓசை, இனிமை சான்றது. (சான்று : வண்மை இல்லையோர்...) இப்பாடலுள் புகழ் வெளிப்படக் கூறப்படவில்லை. ஆயின் பொய்யாமை கூறவே புகழ் பெறப்பட்டதாம். பெருமிதத்தைப் புலப்படுத்தும் உட்கோள் உடையராய், அது தோன்றுதற்குரிய நிலைகளைப் பொருள்களை இப்பாடலாற் புலப்படுத்திய கம்பநாடர் நுண்ணறிவு பெரிதும் போற்றத்தக்க தொன்று. இஃதே ஆழமுடைமையாகும்.

முன்னோர் காட்டிய பொருள்நயங்களைத் தேவையான இடத்தில் பயன்படுத்துபவர். (ஊறுகின்ற கிணறு உதிரம் ஒண்ணகர்) இயற்கை வருணனை, உவமை முகமாகப் பொருள் விளக்கம் சொல்வதில் கம்பர் வல்லவர். 'செல்லு மத்தினையளவையின் மணிமுடி துறந்தான்' என்னும் பாடலில் திங்களை இழந்த இரவையும், ஞாயிற்றை இழந்த பகலையும் உவமையாகக் கூறியிருப்பது பருவுடல் இருந்தும் விளக்கமற்றிருந்த தென்றும், புகழுடல் அறவே தொலைந்ததென்றும் புலப்படுத்தவாம். இராமன் அறமுறை திரும்பாதவன் என்பதையும், பேச்சுநாகரிகத்தில் சிறந்தவன் என்பதனையும் தாய்மையன்பும் சகோதர உரிமையும் உடையவன் என்பதனையும் தசரதனிடம் இராமன் வேண்டும் வரங்களின் மூலம் காட்டுகிறார்.

523. **உயிர்நிலைப் பாட்டு** (159—169)

*நாடகக் காப்பியங்கள் : தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்*

'கம்பர் புத்துலக வாழ்வைக் கண்டுப் பாட்டாகப் பாடுகின்றார். இராமன் உலகனைத்தும் உடன்பிறந்தாராகக் கொண்டு சேர்த்தணைக்கும் காட்சி கம்பன் மனத்தே ஓங்கி எழுகின்றது.

பெண்மையே கம்பன் கண்ட கடவுள் (அகலிகை, தாரை வேறு பாட்டைச் சுட்டுகிறார்) அன்பிற் பெரிய கடவுளையே உண்மைக் கடவுளையே காட்டுகிறார். கம்பர் காட்டும் கடவுட் காட்சியும் பெண்மையும் கடவுளும் இயைந்து ஒன்றாய் விளங்கக் காண்கிறோம். உலகின் உயிர்நிலையாம் இரக்கத்தைப் பெண்ணாகக் காண்கிறோம். அன்பிலே திளைக்கின்ற இரக்கமே உலகை வாழ்விக்க வருகிறது.

இராமனும் அன்பில் ஈடுபட ஈடுபட, அந்த அன்புருவமே சீதையின் மனக்கண் எதிர்தோன்றுகிறது. இரக்கத்தின் முன்னர் அதன் உயிர்நிலையாம் எதிர்கால உலக அன்பே கண்ட இடமெல்லாம் காட்சி அளிக்கின்றது. அரக்கியர் செருக்காட்டம் ஒன்றும் அங்குத் தோன்றவில்லை. புத்துலக வாழ்வின் கடவுட் நுட்பம் பொலியும் 'அரக்கர் அளவற்றார்கள் அலகையின் குழுவும் அஞ்ச' என்ற இப்பாட்டே இராமாயணத்தில் உயிர்நிலைப் பாட்டு என்று கூறி முடிக்கின்றார்.

524. கம்பர் கவிக்கு வந்தவினை (71—76)

அன்னை தயை: தென்புலோலியூர் மு. கணபதிப்பிள்ளை
பாரி நிலையம்; மு. ப. அ. 1966; ரூ. 2-50

டி. கே. சி. தான் எழுதிய 'கம்பர் யார்?' என்னும் நூலுள் 'கம்பர் கவிக்கு வந்தவினை' என்ற கட்டுரையில் செருகு கவிகளை அவ்வாறு குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பலபாடல்களை நீக்கியது தான் கம்பர் கவிக்கு வந்த வினையாகக் கூறும் இவர், அவர் நீக்கிய 'சொல்லுடையார் என்போல் இனியுள்ளாரோ தொல் வினையேன்' என்னும் பாடலில் உள்ள பல பொருட்களையும் இலக்கிய நயத்தையும் காட்டி அவர் கருத்தை மறுக்கிறார். 'எடுத்துச் சொல்லப்படத்தக்க சீரை (சீலை) உடுததவர்கள் இனியும் இருக்கின்றார்களா? முன்செய்த பாவம் பிடித்தவன் யான். என்னுடைய மனைவி காணும்படியாக சிறகுகளை உடையவன், கணககில்லா சீரைகளை உடையவன் ஆகிய உன்னை ஆயுதம் வைத்திருந்தவன் (இராவணன்) வெட்டிக் கொலை செய்துவிட்டுப் போக விலலை வைத்திருக்கின்ற யான் நின்றேன் யான் அல்லவோ வீரன்(73). இப்பொருளைப் பலவகைகளில் விரித்துரைக்கிறார்.

525, கம்பன் காவிய அனுபவம் (79—83)

நெல்லை அருணகிரி இசைக் கழகம் வெள்ளி விழா மலர்;
கே. அனந்த ராமையங்கார்; (பதிப்பாசிரியர்) கு. அருணாசலக் கவுண்டர்; 1966; ரூ. 3

சொற்றொடர்களில் காணும் கவியின்பம் (கவியமை சேர்த்தியக் காளை, செஞ்சொற் கவியின்பம், தென்தமிழ் நாட்டகன் பொதி

யில் திருமுனிவர் தமிழ்ச்சங்கம் சேர்கிற்பீரேல் என்று மவன் உவைிறடமாம்) பாத்திரப் படைப்பில் சிறந்திருப்பது (சீதை, இராமன், பிற பாத்திரங்கள்) கலையுணர்ச்சி (நாடு, மொழி, சமயம்) கதையமைப்பு, வாழ்க்கையோடு தொடர்பு கொள்வது முதலியவற்றைக் காட்டுகிறார்.

526 பறித்த மலர்கள் (150-172)

இலக்கியம் படைத்த மேதைகள்: புலவர் அரசு மணி.
அருணோதயம், இராயப் பேட்டை, சென்னை-14, மு. ப. ஆக. 1967, ரூ. 3.

கம்ப ராமாயண அறிமுகம், இராமன் கதை உத்தரகாண்டம் வரையில், அவரின் அடக்கம் (அவையடக்கப் பாடல்கள்) இயற்கையை வர்ணிக்கும் ஆற்றல் (கோசலம்), சொல்லடுக்கும் திறமை (இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்) இராமன் - சீதை காதல் நிலை, திருமணம், சோகக் காட்சி (குழைக்கின்ற கவரி யின்றி) குகனின் சினம், வீரம், கம்பரின் கற்பனைத்திறன் (ஒரு கணத்திரண்டு கண்டேன்) இராவணன் தோல்வி கண்டு நாடு திரும்புகையில் கம்பர் காட்டும் சோகம் (வாரணம் பொருத மார்பும்) முதலியவற்றை இயம்பி, கம்பர் பிறன்மனை நயவாமையை மறைமுகமாக வெள்ளெருக்கம் சடைமுடியான் எனும் பாடலால் வற்புறுத்துகிறார் என்கிறார். வைக்கவேண்டிய இடத்தில் வைக்கிறேன் என்னும் கதைக்குச் சான்றாக 'சடையன் தங்கள் மரபுளோர் கொடுக்க' என்னும் பாடலடியைக் காட்டுகிறார்,

527. ஸ்ரீ கம்பர் (111—119).

கு. மதுரை முதலியார் எழுபதாம் ஆண்டு நிறைவு விழாச் சிறப்பு மலர்; கு. பாலசுந்தர முதலியார்; 1969, ரூ. 3.

குகனுக்குப் பரதன் தன் தாயரை அறிமுகப்படுத்துவதாக அமைந்துள்ள ஆறுபாடல்களின் கவிச்சிறப்பினை எடுத்துக் காட்டுகிறார்.

528. தமிழில் வளர்ந்த இராமகதை (85—89)

கு. மதுரை முதலியார் எழுபதாம் ஆண்டு நிறைவு விழாச் சிறப்பு மலர்; அனந்தராம ஐயங்கார்; 1969, ரூ 3.

கம்பரின் சொல்வன்மையைத் தருமத்தின் தனிமை தீர்ப்பான் என அனுமனையும், 'வீரத்தின் பன்மை தீர்ப்பான்' என இந்திர சித்தையும், 'திருவின் முகததுத் திருவன்னாள்' என்று சீதையை யும் குறிப்பிடுவது போன்ற தொடர்களால் காட்டுகிறார். எளிய சொற்களையே தொடையழகுடன் கவிதையாகப் படைக்கப்பட்டுள்ளதை 'என் தாரம் பற்றுண்ண' என்னும் பாடலால் காட்டு

கிறார். இசையின்பம் இராமாயணம் முழுவதும் மலிந்து கிடப்பதை 'வங்கியம் பலதேன் விளம்பின்', 'முடிந்தன பிளந்தன' —எனும் பாடல்களாலும் காட்டுகிறார். வான்மீகியிலிருந்து வேறுபடும் சில இடங்கள் குறிப்பிடுகிறார். கதையைத் திருப்பிச் சொல்லும் இடங்களிலெல்லாம் புதியசுவையே தோன்றுகிறது. இயற்கை வருணனை மனிதப் பண்பைத்தான் மையமாகக் கொண்டிருக்கிறது(88). குணச்சித்திரத்திற்குப் பொருந்தாத சம்பாஷணையோ நிகழ்ச்சியோ கம்பனில் கிடையாது(89).

**529 கம்பன் கவிநயம் (72—78)**

*முன்னோர் வளர்த்த தமிழ்: விஜயபாரதி.*
*பழனியப்பா பிரதர்ஸ், மு. ப.* 1969 ரூ. 2-50.

இராமனின் எல்லையற்ற அருள், அன்புத் தத்துவம், கம்பரின் கவியாற்றலாலும், கற்பனைத் திறத்தினாலும், புதியஒளி பெற்றுக் கம்பராமாயணத்தில் எடுத்துக் காட்டப்படுகிறது(73). கதை நிகழும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும், வருணனையிலும், கற்பனைக் காட்சிகளிலும், பாத்திரங்களின் பண்புகள் விளக்கமுறும் பொழுதும், உரையாடல்களிலும் கம்பரின் கவிநயம் புலப்படுவதைக் காணலாம்(73). இதனைக் கடல் கடக்கும் அனுமனின் தோற்றம், இலங்கை வருணனை, சீதையின் அவலத் தோற்றம், சீதையின் வாயிலாக இராமனின் பண்பினைக் காட்டுவது ஆகியவற்றால் சுட்டுகிறார்.

சீதையின் பண்பை, பிறர் வாயிலாகவோ, வருணனை, அவள் சொற்கள் வாயிலாகவோ உணர்த்துவதைக் காட்டிலும், இராவணன் வாயிலாக உணர்த்துவது மிகுந்த ஆற்றல் பொருந்தியதாக அமையும் என்று கருதியே இராவணனைச் சீதையைப் பற்றிப் பேசவைக்கிறார் கம்பர்(76). ஆண் பெண் பாத்திரங்களின் உணர்ச்சிகளைக்காட்டும்போதும் கம்பர் தானே அப்பாத்திரங்களை, உணர்ச்சிகளை ஏற்றுப் பேசுவதை உணர்ந்துதான், பாரதி கம்பரின் மனிதத் தத்துவத்தை, அன்புள்ளத்தைப் போற்றிக் கூறுகிறான்(77). இதனை அசோகவன சீதையின் துயரங்களின் மூலம் விளக்குகிறார்.

**530. கம்பர் கவியுள்ளம் (545—552)**

*திருக்கோயில், ந. ரா. முருகவேள்; திங்கள் வெளியீடு, சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத்துறை வெளியீடு; செப்.* 1969; ரூ. 1.

பெண்களிலெல்லாம் திருமகள் போலவும், விண்மீன்களிகளிலெல்லாம் சூரியன் போலவும், உலகிலுள்ள மலைகளிலெல்லாம் இமயமலை போலவும் ஈடும் எடுப்பு மின்றிச் சிறந்துயர்ந்து திகழ்வது கம்பராமாயணம். செவ்விய மதுரம் சேர்ந்த நற்பொரு

ளிற் சீரிய கூரிய தீஞ்சொல் வவ்விய கவிஞர் எனவரும் வரிகள் கம்பரின் கவிதையுணர்வையும் அவர் கொண்டிருந்த அனுபவம் மிக்கக் கருத்துகளையும் புலப்படுத்துதல் காணலாம்(546).

கம்பர் கவிதை பற்றிக் கூறியுள்ள இடங்களைத் தொகுத்து இடஞ்சுட்டிப் பொருள் விளக்கிச் சிறப்பைக்காட்டி, கம்பரின் கவியுள்ளம் இதனால் நன்கு விளங்குகிறது என்கிறார். அவை; புன் கவிகளின் தெளிவின்மை நகரப்படலம்-14, செஞ்சொற் கவியின்பம் - மிதிலைக்காட்சி-23, சான்றோர் கவி - புவியினுக்கு அணியாய் ஆன்ற பொருள் தந்து, கவிஞர் சொற்பொருள்-பம்பை-5. நாவரும் கிளவிச் செவ்விடை - நாடவிட்ட-64, நல்லியல் நவையறு கவிஞர் சொல் - முதற்போர் புரி-114. ஆற்றற் கவிஞரின் அங்கதம் - முதற்போர் புரி - 249, பல் அலங்காரப் பண்பு - கும்பகர்ணன் வதை-22, புலவர் சொற்றுறை - கும்பகர்ணன் வதை-226, தமிழ் நெறி வழக்கம் - இராவணன் களங்காண் - 25 முதலியன.

**531. Kambaramayana - A Literary Appreciation (228—231)**

தமிழ் வட்டம். 2வது ஆண்டு விழாமலர் (11-4-1969) S. Nalla Perumal, தமிழ் வட்டம் 2. மலோனி ரோடு, தியாகராய நகர், சென்னை - 17

In Bengali we have Kritivas Ramayana, in Telugu 'Renganatha Ramayana', in Canarese 'Nagachandira Ramayana', in Malayalam 'Ezhuthacha Ramayana' and in Marathi 'Ekanath Ramayana'228). Kamban wrote to show to the world that god comes down to the world in human form whenever Dharma in endangered. Kamban can be read in any age in ones life(228). He gives the examples for moving secenes and beautiful dramatic situation in Kambaramayana. He says that Valmiki gave the characters but Kamban gave the characterization(229).

Milton can read as duty, Kamban can be read for beauty. Kamban's description of Kosala reminds us of the description in Milton beginning with the lines 'Sweet is the breath of morn'. Kamban's Ravana 'in heroic dimensions' excels Milton's Satan. He gives some more comparisions of Kamban's words with Milton. Kamban describes the unity of hearts into one while Shakespeare speaks 'combine your heart into one'. He says if we survey some situations in Shakespeare and Kamban many parallels will attract our attention and gives some examples for it. Milton hails

Shakespeare as 'Sweetest Shakespeare Faney's Child'. We feel like echoing Milton's words, when we think of Kamban.

532. **தெய்வமாக்கவி** (5—11)
உலக இதய ஒலி : எஸ் மகாராஜன்; அக். 1970

காரைக்குடி கம்பன் விழாவில் ஆற்றிய தலைமையுரை இக் கட்டுரை. அலெக்ஸ் என்னும் ஆங்கிலப் பேராசிரியர், அலைமேல் அலையாக அல்லவா அழகு புறப்பட்டு வருகிறது கம்பனிடமிருந்து; அவனை ஒத்த ஆங்கிலக் கவிஞன் ஒருவனையும் நான் கண்டதில்லை', என்று கூறுவதைச் சுட்டியுள்ளார். மெய்ப்பாட்டால் நாடகப்பாங்கினை நல்குதல் (சூடின மலர்க்கரம், சொல்லின் முன்செவி கூடின்), சோகம், அச்சம் இரண்டையும் ஒருசேர உணர்த்துதல் (ஒளிறு வேற்கரர்க்கு உற்றது உணர்த்தினன்), கவிச்சுவையும் நாடகச்சுவையும் மாறி மாறிவரப் பாடியுள்ளது (சடாயு முதன்முதலில் இராம இலக்குவரைச் சந்தித்த நிகழ்ச்சி), இராமன் காட்டுக்குச் செல்லும் நிகழ்ச்சியில் உள்ள மாற்றங்கள் (வான்மீகி, கம்பன்) ஆகியவற்றை எடுத்துக்காட்டியுள்ளார்.

533. **Kamban** (120—127)
Tamil Studies (Second Series) : A. V. Subramania Aiyar, Published by the author, 76 west St., C. N. Village, Tirunelveli-1, First Fdi. 1970, Rs. 6.

It was only after the birth of the great epic poem, that Tamil could justly lay claim to a place of rank with the classical languages in literary wealth (120). While a Kamban arose to be inspired by Valmiki's Ramayana to re-create it into the grandest epic poem in Tamil, no Tamil poet seems to have been inspired similarly by Kalidasa into enduring creative effort. Kamban's Ramayana is not only great as an epic but a great also as drama(123). He proves this with some examples. The intense mental agony Bharata suffers for no fault of his is portrayed with such power that Kamban's Bharata is one of the triamphs of his dramatic geneius.

534. **கம்பன் கண்ட செங்கனி வாய்ச்சியர்** (167—172)
நான்காவது கருத்தரங்கு மலர்; வி. ருக்ஜாய் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைச் சார்பு வெளியீடு; 1972; ரூ. 20

பொதுவாகக் கம்பர் வாய்க்குக் கூறும் உவமைகள், காப்பியத் தலைவி சீதையின் வாயினுக்குக் கொடுக்கும் உவமைகள், அரக்கியரின் வாய் வருணனை, நற்குண அரக்கியரின் வாய் வருணனை வேறுபாடு, பொதுமகளிரின் வாய் வருணனை, 'தூய', 'கொலை'

என்று அடைகளை முறையே கோசலையின் வாய்க்கும் கைகேயி யின் வாய்க்கும் கொடுத்தல் ஆகியவற்றின் வாயிலாகக் கம்பர் வருணனை வெறும் புறவருணனையாக அமையாது உள்ள நெகழ்ச்சி, உள்ளக்கொடுமை வெளிப்படும் வகையில் வருணித் துள்ளமை எடுத்துக்காட்டப்படுகின்றது.

535. கம்பன் காவிய நடையமைப்பு 52—67

Journal of the Dept. of Tamil Vot II, L. Ruthjoy, University of Kerala; Trivandrum; March. 1973

கம்பரின் நடையில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது அவரது சொல்வளம். இடத்திற்கேற்ப, செய்யுளின் கதிக்கேற்ப, சொற் கள் யாதொரு தட்டுத்தடையுமின்றி விரைந்துவந்து உதவுகிறது. கம்பனின் பாடல்கள் இனிமை, எளிமை, தெளிவு, சொற் செருக்கம், கருத்தாழம் ஆகிய தன்மைகளைக் கொண்டுள்ளன. கம்பன் கதாபாத்திரங்களின் இயல்புகளுக்கேற்பவும் செயல்களுக் கேற்பவும் தனது செய்யுட்களை வேறுபடுத்தி அமைத்திருக் கின்றான். முக்கியமான திருப்பங்களிலும் பாட்டின் சந்தத்தை மாற்றுவான். கம்பனுக்கு விருத்த ஓசை அவனை அறியாமலே வீறு கொண்டு வெளிவருகின்றது. இதனால் கம்பனின் பாடலைத் தனி யாக எங்கு கண்டாலும் நம்மால் அறிய இயலுகிறது. இதிலிருந்தே கம்பனது நடையின் தன்மையினை அறியலாம் என்று சான்றுகளுடன் விளக்குகிறார்.

536. **Kamdan's command of Language** (694—699)

ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை: Mrs. K. V. Dakshayani. சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு. 1973, ரூ. 22

Kamban has an unlimitted command of words. Rhyms and allitration come to him with effortless case. Kamban has a perfect conception of style, for instance we have a host of synonymous words with one meaning though that very subte difference. He uses several words to bring out the variety of sounds. In Kamban's anxiety to aviod repetition of words he coins severel words to signify Trinity - the creator - the preserver - the destroyer. Kamban gives special meaning by means of contest in several occasions. In the combination of words Kamban .adds a new sweetness to the words. Some words of Kamban reminds us of English construction. Kamban has untranslatable delicacies of thought and expression. The sounds in his poem echoing the sense of the poem. Kamban

uses short sentences to show the various methods of fighting. Apart from this Kamban puns sometimes upon words. His pictorial element also attracts our attention. An intimate and loving study of Kamban cannot but reveal the vast range of his vocabulary and command of Tamil language. By giving examples the author proves these facts.

537. **கம்பன் கண்ட கவிதை** (60—70)
மாந்தர் சிறப்பு : டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்; கோர்ட் ரோடு; நாகர்கோவில்; மு. ப. நவ. 1974; ரூ. 3-50

காப்பியப் போக்கில் கதையினூடே கவிதையின் தன்மைகளை உவமை வாயிலாகவும், அடைகள் வாயிலாகவும் அளிக்கின்றான். சீதை, பம்பைப் பொய்கை, தேனீ, இராமனின் அம்பறாத் தூணி, காகுத்தன் பகழி, இராமன் பகழியால் மகுடமிழந்து நிற்கும் இராவணன், கணக்கற்ற மக்கட் தொகை, கோதாவரிக் காட்சி, சீதையின் அன்னநடை முதலியவற்றிற்கு உவமையாக்கப் பட்டுள்ளது சிறப்புடையது. இன்னும் கவிஞனைப் பற்றிய பல சிறுசிறு குறிப்புகளும் தரப்படுகின்றன. முதன்முதலில் கம்பன் தான் ஆற்றைக் கவிதையாகக் காண்கின்றான் என்று கூறுகின்றார் ஆசிரியர்.

538. **கம்பன் கவித்திறன்** (22—23)
Aringnar Anna Colleage, Aramboly, vol. IV, K. S. சுப்பிர மணிய பிள்ளை. Ap. 1974.

கம்பன் பற்றிய புகழ் புதியது இல்லை. கவித்திறனை 'வீங்கி னுள் கொங்கை மெலிந்த மெலிவகல', 'செந்தாமரைக் கண் ணொடும் செங்கனி வாயினொடும்', 'பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்க', 'கமையினுடிரு முகத்தயல் கதுப்புறக் கவ்வி' எனும் பாடல்களில் எடுத்துக் காட்டுகிறார்.

539 **பரதனா? குகனா?** (67—71)
தியாகராயர் கல்லூரி, தனுக்கோடி (தி. கருமுத்து சுந்தரனார் நினைவு மலர்) 1974

'வந்தெதிரே தொழுதானை வணங்கினான்' என்பதில் வணங் கியது யார் என்பதனை முதலில் ஆய்கிறார். பரதனே வீழ்ந்து வணங்க குகன் தழுவினான். மிதிலையில் இராமன் தசரதனைப் பணிய அவர் அவனை தழுவுதலையும், சித்திர கூடத்தில் பரதன் பணிய இராமன் தழுவுதலையும் இதற்குச் சான்றாக்குகிறார். இதற்கு முதற்பாடலில் 'நாவாயில் ஒரு தனியே தான் வந்தான்' என்பதாலும் பரதன் குகன் காலில் வீழ்ந்து வணங்கப் போவ

தாகப் பாடும் போது, 'தழுவின புளினர் வேந்தன் தாமரைச் செங்கண்ணனை' எனப் பாடுவதால் தழுவியவன் குகன், குகன் தழுவியதால் பரதன் வீழ்ந்திருக்க வேண்டும் என்று முடிக்கிறார்.

**540 கம்பன் (1—24)**

*பெருங்காப்பியச் சிற்றிலக்கியப் பெருந்தமிழ்; கு. இராசவேலு மு.ப. சன. 1975. சென்னை பல்கலைக் கழகம். ரூ. 17.*

கம்பனின் பெருமையை அவனது தொடக்கச் செய்யுளே எடுத்துக் காட்டும். அறம், நெறிபிறழா ஒழுக்கம், நட்பு, மெய்மை வாய்மை, கற்பு, வீரம், உண்மைக்காதல் இவை கம்பனின் மூலக் கருத்தாக உள்ளது.(7) சங்கத் தமிழ் இளங்கோவின் சிலம்பால் புது வனப்பை எய்தியது. அவ்வனப்பு கம்பன் தமிழால் நாளும் புதியதொரு வண்ணமும் வடிவமும் பெற்றுப் பொற்கோலம் காட்டி நிற்கிறது(8). கம்பனின் போர்க்கள வருணனை கரன் வதைப்படலத்திலே தொடங்குகின்றது. ஆனால் அதன் வளர்ச்சியை முற்றும் அடையவில்லை. அதனுடைய முழு வளர்ச்சியும் யுத்தகாண்டத்தில்தான் முதிர்ச்சி அடைகிறது. எனினும் கரன் வதைப்படலம் ஒன்றே ஹோமருக்கும், மில்டனுக்கும் கம்பன் இணையானவன் என்பதை நிரூபிக்கப் போதுமானது (23). ஹோமரின் வீர வருணனை, மில்டனின் புராணக் குறிப்புகள், சேக்ஸ்பியரின் பாத்திர அமைப்பு முதலிய பெருங் கவிஞர்களின் சிறப்புகளெல்லாம் கம்பன் ஒருவனிடத்திலேயே குவிந்து நிற்கின்றன(23). சூர்ப்பனகைப்படலம், கரன் வதைப்படலம், கொண்டு கம்பன் கவிதை இனிமையை அளவிடுகிறார்.

**541. கம்பர் கவிநலம் (24—26)**

*ஹிந்துமித்திரன்; ப. இராமன், ஜூலை-செப். 1977 ரூ. 1-25*

இராமனுக்கு வசிட்டர் கூறும் அரச நீதியை எடுத்துரைத்து அவை பொதுமக்களுக்கும் பொருந்துவதாகும் என்கிறார்.

**542. கவிதைப் பட்டறை (69—74)**

*இலக்கிய மலர்கள் : அ. சீநிவாசராகவன்*

*மெர்க்குரி புத்தக கம்பெனி, கோயம்புத்தூர் - 1; மு. ப. ரூ. 2-50*

கற்பனைத் தீயிலே தோய்த்துத் தோய்த்து, நமது நெஞ்சைச் சொல், சந்தம் என்ற சம்மட்டிகொண்டு அடித்து உருவாக்குகிறான் கவிதைக் கொல்லன்(74) என்னும் ஆசிரியர் இதனைக் கலியாண மண்டபத்துக்கு நடந்து வரும் சீதையினை ஒப்பற்ற முறையில் வடித்திருக்கும் கம்பரின் 'பொன்னின் ஒளி, பூவின் வெறி' என்னும் பாடல் மூலம் விளக்குகிறார்.

**543. செவிச் சுவையும் கவிச் சுவையும் (25—31)**

*பன்னிரு கட்டுரைகள்*

'பொன்னின் சோதி போதின் நாற்றம்', 'புவியினுக்கு அணி யாய் ஆன்ற பொருள் தந்து', 'நல்லியற் கவிஞர் நாவிற் பொருள் குறித்து' போன்ற பாடல்களில் கம்பன், கவிதையை உவமை யாகக்கொண்டு தன் கவிதையை அழகுபடுத்தியுள்ளமையைக் காட்டுகிறார்.

544. கம்பன் நீதியந் தலைவர் (207—241)

கல்விக்கழகக் கட்டுரை (புதுவைக் கல்விக் கழகத்தின் வெள்ளி விழா மலர்) சுந்தரகுமரன்

வீடணனை அடைக்கலமாகக் கொள்ள முடிவு செய்த இராமன், என் பால் குற்றமில்லாதவனை, யாதொரு குற்றமும் உண்டாக்காமல் அவனை எனும் பொருள்பட 'கோதிலாதவனைக் கொணர்க' எனச் சுக்கிரீவனை ஏவினன். இது தன்னோடொப்பச் சுக்கிரீவனை உயர்வுபடுத்தித் தன்வயமாக்கிய மதிவன்மையும் வினைசெயல் திறமும் நன்கு புலப்பட ஏதுவாகிறது. அன்றியும் காமத்தின் காரணமாக ஒழுக்கக்கேடுடையவனுயிருந்த உன் தமையனை நீ என்றாற் கொல்வித்துக் கிட்கிந்தையை நினதாக்கிக் கொண்ட தன்மைபோல இவ் விபீடணனும் காமம் முதலிய ஒழுக்கக்கேடுடைய தன் தமையனை என்றாற் கொல்வித்து அவ் வரசைப் பெற்றுப் பிறர்க்கு நலஞ் செய்தலாகிய கொள்கையோடு வந்துள்ளான். ஆதலின் அத்தகையோனை நீயே சென்று அழைத்துக்கொண்டு வரல் வேண்டும் எனக் குறித்தான் என்பதும் புலனும்.

545. கம்ப சித்திரம் (123—131)

பல்பொருட் கட்டுரை (முதல் பாகம்): மணி. திருநாவுக்கரசு முதலியார். தென்னிந்திய சிந்தாந்தக் கழகம்

வெளியுலகப் பொருள்களின் நுகர்ச்சியைத் தனது அறி வாற்றலால் உள்ளவாறே கவர்ந்து கொள்ளும் வன்மையைக் கம்பர் பெற்றிருந்தார் (128). இயற்கை நவிற்சியில் கம்பர் சங்கப் புலவருடைய நிலைமையில் குறைந்து விடுகின்றனர் (131). 'பஞ்சி யொளிர் விஞ்சு குளிர்', குகன் பரதன் சேனை கண்டு குமுறுவது, 'சேயகாலம் பிரிந்தகலத் திரிந்தான்' முதலியவற்றை விரித்துரைக் கின்றார்.

546 கம்பனும் தமிழும் (94—116)

இலக்கியச் சிந்தனைகள்: எஸ். வி. பி

நவபாரதி பிரசுராலயம் லிமிடெட், திருநெல்வேலி, சென்னை.

கம்பன் தனது பெருங்கவித்வ சக்தியினாலே, தமிழ்க் கருவி யைத் திருத்த அமைத்து அற்புதத் தெய்வீகக் கருவியாக முற்று வித்தான் (110). கம்பனது தமிழ் பாத்திரங்களுக்கும் சந்தர்ப்பங்

களுக்கும் தக்கபடி எழும் இயற்கைப் பேச்சினது இயற்கை ஓசை யான இயற்கை நெறி அதனோடு நெருங்கிய தொடர்புடைய நேர்மைத் தன்மையும், தெளிவும், இனிமையும், அழகும் கொண்டது. பலவகையான உணர்ச்சிகளுக்கும் தக்கபடி சுவை யைக் கம்பனது தமிழ் மேற்கொண்டு நம்மை உணர்ச்சி உலகில் செலுத்தித் தன்னிலை அழியச் செய்கிறது. கம்பன் தமிழின் ஆற்றலில், அடைக்கலமாக விபீடணனை ஏற்றுக்கொள்ளும்படித் தூண்டும் இடத்திலும், விபீடணனும் கும்பகர்ணனும் போர்க் களத்தில் சந்தித்து தத்தம் லட்சியம் கூறி விடை பெறும் பொழுதும் தன்னையே வென்று விடுகிறான்(116).

**547. கம்பச்சுவை**

சுவாமி சுத்தானந்த பாரதியார்

பக். 28, அறு 3

வேத உண்மைகளைத் தகுந்த உபமானங்களுடன் கம்பன் விளக்கும்போது அவனை ஒரு முனிவன் என்றே உணர்கிறோம்(1). (இரணியன் வதை) இயற்கைக் காட்சிகள், (மஞ்சார் மலை வாரணம், நஞ்சினின் நளிர் நெடுங் கடலின், வஞ்சனைத் தீவினை மறந்த, மாரன் அன்னவர், கொல்லும் வேலும், குவளையின் எழிலும், யாழ்க்கும் இன்குழற்கும், தள்ளி ஓடித் தலைதடுமாற லால்) பெண்மை வீரம், (பேருவை உருவல் வேண்டின்) வீரநடை, (அங்கதன் நடை) கவியணி, (ஆறுசெல் படலம்), கம்பனின் அரசியல் நுட்பம் (கோசலம், அயோத்தி, தசரதன் ஆட்சி சிறப்பு) முதலியவற்றைக் கூறுகிறார்.

இறைவன் ஒருவன், பலபல நாம ரூபங்கள்கொண்டு விளை யாடுகிறான்(23). ஆஸ்திகம், நாஸ்திகம், ஏகாந்தம், அநேகாந்தம், வேதாந்தம், சித்தாந்தம், பாஞ்ராத்ரம் எல்லாவற்றிற்கும் கம்பன் பதில் சொல்கிறான்(24). (மூன்றவன் குணங்கள்) அனைத்தும் யாதும் தானாக நின்றருளும் சின்மயனான முதல்வனின் அனந்த கல்யாண குணங்களில் இன்ப நீராடவே கம்பன் இராமாவதாரம் பாடுகிறான் (26) கம்பனை வாழ்த்தியும் அவன் பெருமையுணர்த்தி யும் இரு கவிகள் பாடியுள்ளார்.

**548. Some characteristics of Kambans Genius and Art.**

pages 30

Kamban's construction stands as a 'stately pleasure dome' of chiselled beauty and finished perfection. The poem 'பொன் கொண்டிழைத்த' may be taken to symbolically describe the grandeur and brilliance of Kamban's own poetic mansion(7). He threw aside the marring irrelevences of உத்தரகாண்டம் as beneath notice and did not seek to embody them into his epic

strcture. Then again he carefully avoided the introduction of Lava and Kuca as narrators of Rama's story unlike Valmiki for the simple and sufficient reason that it would have detracted considerably from the dignity and importance of his epic poem and thrust it into the insignificance of an episodical narration as Valmiki's work remains to this day(11). He gives examples for description, sound, imagination, similes and intensifying an idea by gathering round it a number of appropriate imageries of the same order. The sublimitry runs through every fibre of his work(21). Kamban appears to have taken the greatest pains in equipping himself even with accademic knowledge not only of music but also of the allied arts such as dancing, sculpture and architecture. Great as a Poet, Kamban was equally great as a critic with Kamban Art has become one with nature(28).

549. **The emperors of poesy (11—14)**

*கம்பன் மலர்*: S. Maharajan

Throughout epic Kamban speaks with the assurance and self-surrender of one, who has discovered the controlling centre of life(11). Each word of his is a focus of persuasive energy, in which his living faith is transformed into the vibrations of the human voice. To him life is a full of significance, order and dignity. His roots are in the real world of character and situation(12). Kamban's rhythm has an unrivalled fullness, amplitude and sufficiency(13), He explains how Kamban is the best among all other popular Tamil poets.

**உவமைநயம்**

*கம்பன் கவிநயத்தில் உவமைக்குச் சிறப்பிடம் கொடுத்துப் பேசும் கட்டுரைகள் இவணுள. ஆர். எம். சோமசுந்தர வல்லியின் 'கம்பன் உவமைகள்' எனும் பொருட்கட்டுரை குறிப்பிடும் விதத்தில் அமைந்துள்ளது. டாக்டர். ச. வே. சு. கம்பரை உவமையில் வென்றவரிலர் எனும் முடிவினைத் தருகிறார் (கம்பன் காட்டும் உவமை நயம்)*

550. **கம்பர் உவமை நயம்** (500—505)

*ஆனந்தபோதினி: திருமலை. இராமாநுஜன் சன.* 1933

*கையடைப் படலத்தில் தசரதன் கொலுவிருத்தலை வர்ணித்துள்ள நான்கு பாடல்களின் உவமை நயத்தை விளக்குகிறார்.*

**551. Some Similes from Kambar (251—262)**

Tamil culture (Journal of the Academy of Tamil culture) Vol. VII, No. 3: C. R. Myleru, July 1958, Rs. 7 yearly

When we go through Kambar's similes we are naturally reminded of the similes used by Homer and Milton(251). The great Kambar uses grand similes in the course of his Ramayana in the best tradition of our literary men. They are beautiful by themselves and they also illustrate and explain the points he wishes to clarify(261). He fixes the context, gives the poem and then explains its meaning. Gives examples from Tātakai Vadai Padalam, Mithilai Katchip Padalam, Kārmughap Padalam, Mandirap Padalam, Mandarai Chūzhchip Padalam and Thailam Attup Padalam.

**552. கம்பர் காட்டும் உவமைநயம் (36—48)**

*இலக்கிய நினைவுகள்: டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்*
*பாரிநிலையம், மு. ப. நவ. 1964; ரூ. 1-50*

*பல புலவர்கள் கையாண்ட தாமரை கம்பரின் கைவண்ணத்தால் புதுப்புது வண்ணங்களைப் பெற்று நம் எண்ணத்திலும் அழியா இடம் பெறுகின்றது. ஒரே உவமைப் பொருளாய் தாமரையைப் பல கோணங்களிலும் கண்டு உவமித்துப் பேசுகிறார். ஒரு பொருளுக்கே பல உவமைகளைக் கூறும் திறனும் உண்டு. உவமைகளின் மூலமாகப் பாத்திரங்களின் பண்பையும் மனநிலையையும் விளக்குகின்றார். உவமையில் கம்பரை வென்றவர் இலர் என்ற முடிவுக்குத்தான் நம்மால் வர முடிகின்றது என்னும் ஆசிரியர் தகுந்த எடுத்துக்காட்டுகளின் மூலம் நிறுவுகிறார்.*

**553. உவமையின் சிகரம் (15—19)**

*தமிழ்வட்டம் 2வது ஆண்டு மலர் டி. எஸ். ராமலிங்கம் தமிழ் வட்டம், 2. மலோனி ரோடு தியாகராய நகர், சென்னை - 17; ஏப். 1969*

*சீதையினுடைய கூந்தலைச் சிக்கெடுத்து வகிர்ந்துவிட்டது, ஒழுங்கு குலைந்து குழம்பியிருந்த வேதத்தை வகைப்படுத்தி ஒழுங்குபடச் செய்த வேதவியாச முனியின் பணிபோன்று இருந்தது என்பதனை 'அயோனிஜை ஆகிய பிராட்டிக்கு அபௌருஷேயமான வேதம் உவமை கூறப்படுவது பொருத்தமே என்னும் வை. மு. கோ. கூற்றை ஆதரிக்கிறார்(17).*

*இராமனுக்கு அப்போதலர்ந்த செந்தாமரையினையும், சித்திரத்திலர்ந்த செந்தாமரையினையும் உவமை கூறுவதில் சித்திரத்திலர்ந்த செந்தாமரை வாடாதாகையால் அதுவே சிறப்புடைத்து என்கிறார். நீ காட்டிற்குச் செல் என்றபோது இராமன் மகிழ்ந்தது*

நாடாள விரும்பாததால் அன்று, தன் தம்பிக்கு அரசு கிடைப்ப தால்தான். ஒருவருக்கு முழுமையும் வேறொருவர் ஒப்பாக மாட்டார் என்பதனைக் கூறும் 'பொன்னல்லதில்லைப் பொன்னை யொப்பன' என்னும் பாடலே உவமையின் சிகரம் என நவில்கிருர்.

554. **கம்பன் உவமைச் சிறப்பு**

எஸ். ஜானகி

பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், 1971; பக். 56

சொல்லும் உவமையும்—ஒருமை எழில் மிளிர உவமையை ஆளும் திறம்—நிகழ்ச்சியை உவமை ஆக்கும் திறம்—'உயிர்' உவமை திறம்—சிறப்பு நிகழ்ச்சியில் துணை நிகழ்ச்சிகளை உவமையால் இணைத்தல்—உவமையை அடித்தளமாக்கி மறைத்தல்—இணைப்புத்திறம்—சரளமும் வளமும்—உள்ளுறை உவமை—காளிதாசனும் கம்பனும்—தொகுப்புரை.

கம்பன் தன் காப்பியத்தில் விளக்கக் கருதும் எல்லாப் பொருள்களுக்கும் புலனெறி வழக்கிலிருந்து உவமைகளைத் தேர்ந்தெடுப்பதில்லை. தன் காப்பியத்தில் கடந்த நிகழ்ச்சிகளில் சிலவற்றை, பின்வரும் நிகழ்ச்சிப் பொருளை விளக்க, ஏற்ற உவமைகளாகப் படைத்துப் பொருத்தமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் அற்புதத்தைக் காண்டந்தோறும் காணலாம். இருவரிடையே வதிந்த நட்பின் இயல்பையும் ஆழத்தையும், விளக்கவும் அளக்கவும், கம்பன் 'உயிர்' உவமையைக் கையாளுகிருன்.

இராவண வதத்தோடு இராமாயணத்தில் வரும் பல்வேறு நிகழ்ச்சிகளை, தொடர்புடைய துணை நிகழ்ச்சிகளாக்கிக் காட்டவும், காப்பியத்தின் ஒருமையழகு சிறப்பாக மிளிரவும் கவிஞன் உரிய உவமைகளை ஆங்காங்கே கையாள்வது பாராட்டிற்குரியதாகும். காவியத்தில் ஒரு நிகழ்ச்சிப் பொருளை புலப்படுத்த, பொருத்தமானதோர் உவமையை எடுத்துக்காட்டி, அதன் பொருத்தமும், சிறப்பும் நன்கு வெளிப்பட, வேறுபட்டு வரும் பின் நிகழ்ச்சியில் அந்நிகழ்ச்சிப் பொருளைப் புலப்படுத்த முன் சொன்ன உவமையையே மறுமுறை சுட்டிக்காட்டி படிப்போர் உள்ளத்தைப் பரவசப்படுத்துவது கம்பன் கையாளும் உவமைத் திறமாகும்.

ஒரு பொருளியல்பை ஒவ்வோர் உவமைக்கேற்பக் காரணங் காட்டிப் புலப்படுத்துவது, கம்பன் போல்வார்க்கு மட்டுமே கைவரக்கூடிய ஆற்றலாகும். இரு உவமைகள் தேர்ந்தமைத்து, அவற்ருல் வெளியான மாறுபட்ட பொருட் புலப்பாட்டினுல் ஒருவருக்கு நேர்ந்த மாறுபட்ட அல்லது எதிரான இரு விளைவுகளைத் திறம்படக் காட்டும் பண்பினை மகாகவிகளாகிய காளிதாசனிடத்திலும் கம்பனிடத்திலும் காணலாம்.

555. கம்பன் உவமைகள்

ஆர். எம். சோமசுந்தரவல்லி
பொருட்கட்டுரை, மதுரைப் பல்கலைக் கழகம், 1971; 59

முன்னுரை—இயற்கை உவமை—காப்பியக் கதை உவமை—சங்க நூல் தந்த உவமை—திருக்குறள் கொடுத்த உவமை—இளங்கோ ஈந்த உவமை—சிந்தாமணி தந்த உவமை—முடிவுரை.

உவமையால் கம்பர் காப்பியத்தின் பின்னிகழ்ச்சிகளையும் குறிப்பால் காட்டிப் போகிறார். தாமரை மலரையே இராமனைக் காணும் கவியுள்ளம் அவருடைய மலரீடுபாட்டை மலர வைக்கிறது. மலர்களில் தாமரை மிகுதியாக உவமை சொல்லப்பட்டது போல் விலங்குகளில் யானை பல இடங்களில் உவமையாக்கப் பட்டுள்ளது.

அன்பினால் உருகும் நிலைகளைக் காவியத்தில் காட்ட முற்படும் இடங்களில் கம்பர் கன்றினை எண்ணியுருகும் காராம்பசுவினைத் தான் உவமையாக்குகின்றார். தாம் கண்ட பொருள்களையும் கற்ற பொருள்களையும் தம் நுண்மாண் நுழை புலத்தால் காப்பியத்தில் உவமையாக்கிய பாங்கு அவருக்கு நீங்காப் புகழ் தரவல்லது. காப்பியக் கதை நிகழ்ச்சி, பாத்திரம், பண்புகளைக் கம்பர் உவமையாகப் படைத்திருப்பது அவர் இராம அவதாரத்தில் கொண்ட பேரீடுபாட்டைக் காட்டுவதுடன் இராமனுடைய வரலாறு தமிழ் மக்கள் நெஞ்சங்களில் நிறைந்து நின்ற வரலாற்றையும் உணர்த்துகிறது.

சங்க இலக்கியங்களிலும் ஏனை நூல்களிலும் மன்னவனைத் தாய்க்கு உவமை கூறியது போன்றே கம்பரும் தயரதன் மக்களிடம் கொண்ட அன்பினைத் தாயன்பிற்கு உவமையாக்குகின்றார். முன்னோர் கையாண்ட உவமையில் எவ்வித மாற்றமும் செய்யாது சிறப்புக்கருதி தன் காவியத்தில் அப்படியே கையாண்டுள்ளார். சில இடங்களில் புதுமையையும் அவற்றிற்கு அளிக்கின்றார்.

திருவள்ளுவர் உவமித்துள்ள கவரிமானின் மான உணர்ச்சி, ஊருணிச் செல்வம், சுட்ட பொன், எலிப்பகை, நீர், மாரி போன்றவற்றையும், குறளின் பொருளையும், புதைபொருளையும் கொண்டு தொகுத்து இயற்றிய கம்ப சித்திரங்கள் பல. சிலம்பு—இராமாயணம் கதையமைப்பில் கூட இரு புலவர்களுக்கிடையேயும் ஒற்றுமை காணப்படுகிறது. திருமாலின் தோற்றம், புள்ளொலி, தேம்பிக்குவிந்த செங்கழுநீர் ஆகியவற்றை இளங்கோ காட்டியது போன்று கம்பரும் காட்டியுள்ளார்.

கம்பன் பாட எடுத்துக்கொண்ட யாப்பு விருத்தமாகையால் அவன் சிந்தை சிந்தாமணியிலே தோய்ந்தது. எனவேதான் சிலப்பதிகார உவமைகளைக் காட்டிலும் சிந்தாமணி உவமைகள் கம்பன் பாவில் மிகுதியாகக் கையாளப்பட்டுள்ளன. ஓரிடத்தில்

உரைக்கப்பெற்ற உவமையைப் பல்லாயிரம் பாக்களைத் தாண்டிய பின்னும் நினைவு கூர்ந்து தொடர்புறுத்திக் கூறும் நீர்மை புது நெறியாகும். ஆழ்ந்த பொருளை – குறிப்புப் பொருளை உணர்த்த தொன்றுதொட்டு வரும் உவமையையும் மாற்றி விடுகின்றார். உள்ளங் கவரும் முறையில், உவமையைப் புது மெருகூட்டிக் காப்பியம் படைத்துள்ள கம்பரை உவமைச் சக்கரவர்த்தி என்றும் கூறலாம்.

556. ஒட்டைச் செவியர் (101—109)

கவிஞன் உள்ளம்: ந. சுப்பு ரெட்டியார்

கம்பர் உவமிக்கும் திறனை இக்கட்டுரையில் காட்டுகிறார். இராமனது அம்பைச் சொல் ஒக்கும் கடிய வேகச்சுரம் என்பதால் மிக எளிதாகச் செயலை விளைவிக்கும் ஆற்றலையும், இராமனைக் கரிய செம்மல் என்று சிறப்பாக உவமிப்பதையும் தாடகையை அல்லொக்கும் நிறத்தினள், வயிரக் குன்றக் கல்லொக்கும் நெஞ்சினள் எனக் குணம், செயல்களுக்கு ஏற்பப் பொருத்தமான உவமையைக் கம்பர் கூறுகிறார். அவள் உடம்பில் இராமன் விட்ட அம்பு கல்லாத புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று அன்றே என்று ஒட்டைச் செவியின் நிலையை உணர வைத்துள்ளார். கல்லாத நல்லோரை நீக்கியிருக்கும் திறம் பாராட்டிற்குரியது. இப்பாடலில் அன்றே என்பது விரைவுக் குறிப்பு.

ஒப்பியல்

சங்க இலக்கியம், குறள், சிலம்பு, சிந்தாமணி, பெரியபுராணம், கந்தபுராணம், மகாபாரதம் போன்ற இலக்கியங்களுடனும், வான்மீகி, துளசி, காளிதாசன் போன்ற வடமொழிப் புலவர்களுடனும். மேனாட்டுப் புலவர்களுடனும் கம்பனை ஒப்பு நோக்கித் திறனாய்வாளர்கள் ஆய்வு செய்துள்ளனர். வள்ளுவருடனும் வான்மீகியுடனும், ஒப்பிடுவது பெரும்பான்மையாக உள்ளது. ஒப்பியலுக்கு முக்கியமின்றி அமைந்த பிற இடங்களிலும் வான்மீகியுடன் ஒப்பிட்டே முடிவு செய்யும் போக்குப் பல இடங்களில் காணமுடிகிறது. அவை ஆங்காங்கே சுட்டப்பட்டுள்ளன.

ச. தண்டபாணி தேசிகரின் 'வள்ளுவரும் கம்பரும்' எனும் நூல் போன்று பிற இலக்கியங்களுடன் கம்பனை முழுநிலையில் ஒப்பிட்டாய்வு செய்யும் நூல்கள் தோன்ற வேண்டும். இலக்கிய நிலையில் மட்டுமின்றி, 'காளத்தி வேடனும் கங்கை வேடனும்', கர்ணனும் கும்பகர்ணனும் போன்று பாத்திரங்களையும் ஒப்பியல் ஆய்வு செய்துள்ளனர். கு. திருமேனி (கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா?) Dr. S. Sankarraju Naidu (A comparative

study of Kambaramayanam and Tulasiramayanam) C.R. Sarma (The Ramayana in Telugu and Tamil) எஸ். இராமகிருஷ்ணன் (கம்பனும் மில்ட்டனும்) முதலியோர் நூல்கள் குறிப்பிடத் தக்கன.

**557. கம்பரும் சங்க நூல்களும் (78—104)**

*முல்லையும் பூத்தியோ. செ. வேங்கடராமச் செட்டியார்*

*கம்பனில் வருணனையாக உள்ள 'தாறுபாய் தறுகட் குன்றந் தடமத அருவி' எனும் பாடல் பட்டினப்பாலையில் வரும் 'புகழ்நிலை இய மொழிவளர.........வெண்கோயில் மாசூட்டும்' எனும் அடிகளுடன் ஒத்துள்ளன. உருகு காதலின் தழை கொண்டு மழலை வண்டோச்சி' எனும் பாடல், நற்றிணையில் காணப்படும் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் கன்றொடு மடப்பிடி தழீஇய' எனும் பாடலை எடுத்தாண்டதாகும். இவற்றைக் கம்பர் கையாளும் விதத்தில் அமைகின்ற சிறப்பினையும் காட்டுகின்றார். இவ்விதமே சஙக இலக்கியங்களில் காணப்படும் உவமைகள், அறம், வீரம், காதல் இவற்றைக் கம்பர் கையாண்டுள்ளமையைச் சான்று களுடன் விளக்குகிறார்.*

**558. திருவள்ளுவரும் கம்பரும் (205—208)**

*செந்தமிழ்; தொகுதி 5; சி. கணேசையர் (1906—1907)*

*திருவள்ளுவரின் குறட் கருத்துகள் சில கம்பராமாயணத் துள் காணப்படுவதனை இங்குக் குறிப்பிட்டுள்ளார். (பெருமை, இகல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், வினைத் தூய்மை, மன்னரைச் சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், குற்றங் கடிதல், கண்ணோட்டம், செங்கோன்மை, நடுவுநிலைமை முதலிய அதிகாரத்துள் காணப்படும் சில குறட்பாக்கள்.)*

**559. ஒரு குறளுக்குக் கம்பர் கண்ட உரை (73—79)**

*திரு. வி. உ. அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மலர்; வ. பா. தாமரைக்கண்ணி அம்மையார். 1941*

*தனது கன்னிப் போரில் கோதண்டத்தை ஒரு பெண்ணின் மேல் பிரயோகித்து அவளைக் கொன்றதால் இராமனைக் கூட மன்னிப்பதற்குக் கம்பர் தயாராயில்லை, (சான்று: ஆடவர் நகை யுற ஆண்மை மாசுற) பரிமேலழகர் 'ஈன்ற பொழுதினும் பெரி துவக்கும்' என்னும் குறளுக்குப் பெண்களைத் தாழ்வாக உரைப் பது பொருந்ாது. அதனைக் கம்பர் பொருத்தமுற 'மற்றவன் சொன்ன வாசகம் கேட்டலும்' என்ற பாடலின் மூலம் உரைக்கின் றார். 'பெண்ணியல்பால் தானாக அறிய மாட்டாமையால்' என்னும் பரிமேலழகர் உரையினை, வசிஷ்ட முனிவர் இராம பிரானைப் புகழ்ந்துரைத்த சொற்களைக் கேட்டதும் தசரதன் பெருமகிழ்ச்சியுற்றான் என அமைத்து, மறுத்து குறளுக்குச்*

சரியான பொருளைக் காட்டுகிறார். இங்குப் பிற சான்றோர் மகனைப் புகழ்வதால் மேலும் இன்பம் வருகிறது என்பதே வள்ளுவர் கருத்து. மனவியல்படி மகனைத் தாயே அதிகமாக விரும்புவதால் வள்ளுவர் தாய் எனக் குறளை அமைத்துள்ளார் என்கிறார்.

**560. கம்பனும் வள்ளுவனும் (441—446)**

*செந்தமிழ்ச் செல்வி: தொகுதி* 23; *ஏ. மகாலிங்கம்*; கழகம், 1948—1949; ரூ. 12.

வள்ளுவர் கொள்கையினைக் கம்பர் எடுத்தாள்கிறார் என்பதற்குச் சில சான்றுகள் தருகிறார். கொடுப்பது அழுக்கறுப்பான் (கொடுப்பது விலக்குக் கொடியோய்......) கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் (எண்ணரும் நலத்தினாள் இனையள்...) ஊருணி நீர் நிறைந்தற்றே, பயன்மரம் உள்ளூர் பழுத்தற்றாற், (ஊருணி நிறையவும்......) முதலிய குறட்கருத்துகளுடன் கம்பன் பாக்கள் ஒத்துள்ளமையைச் சுட்டியுள்ளார்.

**561. கம்பராமாயணத்தில் வள்ளுவர் (60—83)**

*வழிவழி வள்ளுவர்: ரா.பி. சேதுப்பிள்ளை*

பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-5; திருச்சி-2; மு.ப. 1953; இ.ப. 1955; மூ.ப. 1957 நா.ப. 1962; ரூ. 1-50

சென்னை வானொலியில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம் இக்கட்டுரை. வாழ்க்கைத் துணையாகக் கொண்ட கணவனையும் வந்த விருந்தினரையும் பேணி உபசரிப்பவர் பெண்டிரே யாவர் என்னும் வள்ளுவர் வாய்மொழியைக் கம்பர் 'அருந்தும் மெல்லடகு ஆரிட அருந்தும்' என்னும் பாடலில் விளக்குகின்றார். விருந்தினராக வருபவரைப் பேணி உபசரித்தற்குரிய பெண்களிடம் செல்வமும், கல்வியும் அமைந்திருந்தாலன்றித் திருவள்ளுவர் வலியுறுத்திய இல்லறம் நன்றாக நடைபெறமாட்டாது என்பது கம்பர் கருத்து(63).

வள்ளுவர் கூறும் கண்ணின் பெருமையைக் கருத்தில் கொண்டு கோசல நாட்டின் பெண்களின் கண்களைப் புகழ்ந்துரைக்கிறார். இன்னோக்கியர் இல்வழி எய்திய நல்விருந்துபோல் அது மீண்டது' என்ற கம்பர் வாசகம் 'முகந்திரிந்து நோக்கக் குழையும் விருந்து என்ற வாயுரை வாழ்த்தைத் தழுவி எழுந்ததாகும்(66). 'மற்றவன் சொன்ன வாசகம் கேட்டலும்' என்ற கம்பர் பாட்டு 'ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும்' எனும் குறளுக்கு அருமையான விளக்கம் தருகிறது, யார் சொல்லக் கேட்ட தாய் அவ்வாறு இன்புறுவாள்? ஒருமகனைச் சான்றோர் என்று சொல்லுதற்குரியர் யார்? என்ற வினாக்களுக்கு விடைதருகிறார் கம்பர்(66). 'அறிகொன்று அறியான் எனினும்' என்னும் குறளின் தன்மை வாய்ந்த அமைச்சர்கள் தசரதனுடைய சபையில் இருந்

தனர். செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தனாக தசரதன் இருந்தான்.

கடிக்கும் வல்லரவம் என்று கம்பர் பாடியது வள்ளுவரின் கருத்தைத் தழுவி எழுந்ததாகும். இடிப்பாரை இல்லா ஏமரா மன்னன்......' என்று அறிவுறுத்தப்பட்ட அரசியல் உண்மைக்கு ஒரு சான்றாக நின்றது இலங்கை அரசு. புணர்ச்சிப் பழகுதல் வேண்டா... என்ற குறள் கருத்தை கம்பராமாயணம் நன்கு விளக்குவதாம். (இராமன் நட்பு குகனுடன், சுக்ரீவன், விபீடணன்) கண்ணொடு கண்ணினை நோக்கு ஒக்கின் என்னும் குறள் கருத்தை விரித்துரைக்கின்றார் கம்பர். தொடிற் சுடின் அல்லது காம நோய் போல எனும் குறட் கருத்தைக் கதைப் போக்கிலே அமைத்துக் காட்டுகிறார் கம்பர். (நின் பிரிவினும் சுடுமோ பெருங் காடு) எளியளாகிய சீதை அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அரும்படையாயிற்று, வல்லரசனை இராவணனை மாய்த்தது. அரக்கர் குலத்தையும் வேரறுத்தது என்றுரைக்கும் ஆசிரியர் தன் கருத்துகளை உட்தலைப்புகளிட்டு உரைககின்றார்.

**562. திருவள்ளுவரும் கம்பனும் (108—123)**

வள்ளுவர் வாக்கு. (வெள்ளி விழா மலர்) பி. ஸ்ரீ. ஆச்சார்யார்
திருவள்ளுவர் கழகம்; தென்காசி; இ. ப. 1957

கம்பராமாயணத்தில் காணப்படும் அறவாழ்வும் அருள்வாழ்வும். உண்மைவாழ்வும், தியாகவாழ்வும் எல்லாம் சாராம்சத்தில் திருவள்ளுவர் காட்டும் வாழ்க்கை முறைதான். திருவள்ளுவர் இவ்வுலகத்திலேயே தெய்வவாழ்வு வாழும்முறையைப் பிரஸ்தாபிக்கின்றார். அப்படித் தெய்வவாழ்வு வாழ்பவன் சடாயுவைப் போலத் தெய்வமரணத்திற்கும் துணிந்து சித்தமாயிருக்க வேண்டும் என்பது கம்பன் அக்குறளுக்கு காட்டும் உரை வளம்(119). இராமன் தன்வாழ்வுக் குறிக்கோளை வெளியிடுவதெல்லாம் திருவள்ளுவர் திருநெறிதானே?(121) எனும் ஆசிரியர் வள்ளுவரின் குறட்பாக்களைக் கம்பன் கையாண்டுள்ளமையைச் சில உதாரணங்களுடன் விளக்கிக்காட்டுகிறார்.

**563. கம்பரில் வள்ளுவர்**

சா. சுந்தரனார்

விசாலாட்சி பதிப்பகம்; 7. இராமசாமிநாயுடு கார்டன் தெரு, புதுப்பாக்கம், சென்னை-14; மு. ப. அக். 1964; 7+160; ரூ. 3

கம்பர் பதினோராவது உரையாசிரியர் என்னுமாறு பலவிடங்களில் குறளின் பொருள் தெளிவுபெறுமாறு தொடர்புறு செய்தி விளக்கங் காட்டியுள்ளார்.

பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரண்யகாண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம் என்னும் தலைப்புகளின் கீழ்

அந்தந்த காண்டங்களில் கம்பர் வள்ளுவர் கருத்துகளைக் கூறு மிடங்களைக் காட்டிச் செல்கிறார். அவர் காட்டிச் செல்லும் விதம் கதை நிகழ்ச்சி முழுமையும் அறியும்படியாக உள்ளது. வள்ளுவர் எதிர்மறை முகத்தான் கூறியுள்ள கருத்தைக் கம்பர் உடன் பாட்டு முறையில் உரைத்து விளக்குகிறார்(8). (கம்பன் நாட்டுப் : 38, குறள். உள்ளியுள்ள வெல்லா) வள்ளுவர் கூறும் நுண் பொருளைக் கம்பர் விளக்கி விரித்துக் காட்டியுள்ளார்(9) (குறள்-79. கம்பன். மாதரார் கற்பின் நின்றன அறங்கள்). வள்ளுவரின் குறளுக்குக் கம்பர் பொருளும் கூறியுள்ளார்(13) (குறள்-29) குணம் என்னும் சொல்லுக்கு மாதவம் என்னும் பொருள் கம்பர் கொண்டுள்ளார்.

கம்பர் தம் கவி வண்ணத்தால் வள்ளுவர் கருத்தினை அழகு படுத்திக் கூறியுள்ளார்(39). (மந்திரப் : 21, குறள் 8, 10, 350) கம்பரை ஆழ்வார்களோடு ஒப்பவைத்துப் போற்றப்படுவதன் பொருத்தம் ஆரணியகாண்டப் பகுதிகளில் உள்ள தோத்திரச் செய்யுட்களை ஓதும்போது தெள்ளிதின் விளங்குகின்றது(67). சிறிதுமாற்றி வள்ளுவன் குறளை அமைத்து கம்பர் தமது செய்யுளில் அமைத்துள்ளார். (மாரீசன் வதைப் 8). குறள் 376).

வள்ளுவர் துன்பததிற்குக் கூறிய குறிப்பினைக் கம்பர் இன்பததுக்கும் இணைத்து, அதனைப் பொருத்தமான நிகழ்ச்சி யோடு பிணைத்து 'இன்பமாவதும், துன்பமாவதும் உள்ளத்து இயல்பால் விளைவனவே யல்லாமல் வேறல்ல' என்ற வித்தக வுரையால் விளம்பியுள்ளார்(77). (மாரீசன் வதைப் 100, குறள் 622) குறளின் தொடரோ, கருத்தோ நேர்முகமாகத் தோன்று விடினும் குறளின் ஆதிக்கம் இடம்பெறும் பாடல்களுமுள்ளன. (மராமரம்-1, குறள் 667) வள்ளுவர் கருத்திற்கு விளக்கம் கூறு வார் போன்று கம்பர் இராம சுக்கிரீவர் நட்பினை இயம்பி யுள்ளார்(96). ஒரே பாடலில் வள்ளுவர் குறட்பாக்கள் ஒன்றுக்கு மேல் இடம்பெற்றுள்ளன. (அரசியற் 29, குறள் 829, 830) குறட்பாவிற்குக் கிளைக்கருத்து எனப்பொருள் கொள்ளும்படியும் பாடல் இயற்றியுள்ளார். (கார்காலப் : 108, குறள் 332) சிற்சில இடங்களில் வள்ளுவரினும் விஞ்சிய முறையில் தீமையை வெறுத்து உரைப்பதும் நன்மையை போற்றியுரைப்பதும் கம்பர் தம் கலையுள்ளக் கனிவின் விளைவுகளாகும்(129).

கம்பர் மங்கையர் பற்றிக் கூறும் குறிப்புகளை ஊன்றி நோக்கினால் அவர்தம் கலையுள்ளக் கவின் குறிப்புகளாக அவை விளங்கு மாறின்றி இழிதகவுக்காக சிறுமைக் குறிப்பாக அவையில்லாமை புலப்படும்(132). குறளோடு ஒத்தப் புதிய கருத்துகளையும் படைத்து தருகிறார் (குறள் 413. ஈறிலா இன்பம் யாண்டை யதோ அது துறக்கமாகும்).

கம்பர் வள்ளுவரை எவ்வாறெல்லாம் கையாண்டுள்ளார் என்பதனை அறிவதற்கு இந்நூல் உதவுகிறது.

564. **திருவள்ளுவரும் கம்பரும் கருதும் நன்மக்களின் வாழ்க்கை வழித்துறை** (6—12)

*தமிழ்ப்பொழில் : இரத்தினு நவரத்தினம் (யாழ்ப்பாணம்) அக்-நவ.* 1968

கம்பராமாயணம் நாடு, நகர், அரசு, அமைச்சு, போர், ஒழுக்கம், உலகநெறி, உயர்ந்தோரியல், மாதர், ஆடவர், தருமம் முதலியவற்றைப் பேசுமாற்றால் இலக்கண நூலுமாகும்(6). 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்...' எனும் குறளைக் கம்பர் 'ஆவுக்காயினும் அந்தணர்க்காயினும்' எனும் பாடலிலும், ஈகையாலாகும் புகழொடு கூடிய அறவாழ்க்கையுடையார் விண்ணுலகத்தே யாவராலும் போற்றப்படும் அமரவாழ்வை எய்தியவராவர் எனும் குறட்கருத்தை 'வீந்தவரேனும் ஈந்தவரல்ல திருந்தவர் யாரோ' என்னும் மாபலியின் கூற்றிலும் சித்தரித்துக் காட்டுகிறார். 105ஆம் குறளின் இலட்சியம் மாபலியின் வரலாற்றில் இடம்பெறுகிறது.

அறவாழ்க்கைக்கு அன்பும் அருளும் வாய்மையும் இன்றியமையாத சாதனங்களாகவும் இவற்றுக்கெல்லாம் மூலகாரணமாக நன்மை தீமை நாடியுணரும் அறிவும் வேண்டும். இக்கருத்து குறள் 79, 249, 298 இலும் கம்பனில் மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் 17, 11 பாடல்களிலும் காணப்படுகிறது. கம்பனுக்கு மேலும் சில சான்றுகள் காட்டுகிறார். அவை விராதன்-நன்று தீது நாடலேன் தின்று தீய தேடினேன். கவி-ஊன் சுட உணங்கு பேழ்வாயுணர்வில (சூர்ப்பணகை வர்ணனை). இராமனின் தக்க இன்ன தகாதன இன்ன எனும் கூற்று அமரவாழ்வு எய்துவதற்கு முதற் காரணமாய் பகுத்தறிவும் சிந்தனைசக்தியறிவும் இன்றியமையாதன என்பதனை உணர்த்துகிறது. குறள் 422, 410 இதனை வலியுறுத்துகிறது. கம்பராமாயணத்திலே திகழும் அறவாழ்வும் அருள்வாழ்வும் உண்மையிலே திருவள்ளுவர் குறிப்பிடும் திருநெறிதான் என்று கட்டுரையை முடிக்கின்றார்.

565. **திருவள்ளுவர் வழியில் கம்பர்** (24—34)

*திருக்குறள் கருத்தரங்கு மலர் : கு. தமோதரன்; திருவேங்கடவன் பல்கலைக் கழகம்; மு. ப. ஜூலை,* 1974

கம்பன் அடைக்கலம் காத்தலின் மேன்மையினைத் தன் காவியத்தின் அடிப்படையாகக் கொண்டுள்ளான். தந்தையின் ஆணையின் வழி நிற்றலும் அறநெறியின் வழுவாது நிற்றலும் மோதும் பான்மையில் அவர் காவியப் போக்கு அமைகின்றது. இவை திருக்குறளில் இடம்பெறவில்லை. மற்றபடி வள்ளுவர் அறம் குறித்தும்

பொருள் குறித்தும் வற்புறுத்தும் கருத்துகளும் காமம் பற்றிப் பேசும் முறையும் கம்பனில் பல இடங்களில் எதிரொலிப்பதைக் காண்கிறோம். பெண்ணின் இயல்பு பேசுதலிலும் இருவருக்கும் பொதுமை உண்டு(24). அறத்துப் பாலிலும் காமத்துப் பாலிலும் வள்ளுவர் கூறும் கருத்துகளைக் கம்பன் கையாண்டுள்ளமையைத் தொகுத்துத் தருகிறார்.

**566. வள்ளுவரும் கம்பரும்**

ச. தண்டபாணி தேசிகர்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; மு. ப. 1975; 2+542+28; ரூ. 15

முன்னுரை—1. பதிப்புரை—2, நூல்வாயில் 21, சொல்லாட்சியும் தொடராட்சியும் (1-88), முழுதாட்சி (89-143), கருத்துப் பதிவுகள் (144-152), கருத்தாட்சி (153-244), கருத்து மாற்றங்கள் (245-271), உரையாசிரியர் கம்பர் (272-326), சிலர் உரைக்கு முன்னோடி (327-340), புதிய உரைகள் (341-364), உவமைகள் (365-393), உவமை மாற்றங்கள் (394-409), பாடவேறுபாடுகளும் அதிகாரப் பெயராட்சியும் (410-416), ஒரு பாடலுள் பல குறள் வள்ளுவர் நிலையிலேயே கதையமைப்பு (417-542), என இந்நூல் அமைந்துள்ளது.

'குழந்தைகள் நீடுவாழ்க' என அனைவரும் கடவுளை வேண்டுகிறபோது, கம்பர் 'மனனுறு கடவுள் தாழ்குவர்' (312) என்றனர். வள்ளுவர் 'மலர்மிசை ஏகினான்' (3) என்றதில் மலர் என்பது நினைப்பாரது உள்ளமாகிய தாமரைமலர். அதன்கண் எழுந்தருளியிருப்பவன் இறைவன். இதனையே கம்பர் விளக்கமாக 'மனன் உறு கடவுள்' என்றே சொல்லிவிட்டார்(14). வினைப்பகை விசைக்கொரு விசும்புருவி மான'(9833) என்பது 'வினைப்பகை வீயாது பின் சென்றடும்' (207) என்ற குறட்பகுதியைக் கொண்டே யுருவானது என்பதற்கு வினைப்பகை என்ற சொல்லாட்சியே சான்றாக அமைகிறது. அங்ஙனமாகவும், தேர் இராமன் பக்கல் அல்லவா வந்து சாருகிறது. இதற்கு வினையாகிற பகைவந்து சார்வதுபோல் என்ற உவமை ஏற்குமா? என்று ஐயுற்று வினைக்குப் பகையாகிய ஞானம் விசும்பூடறுத்து வந்தது போல வந்தது எனப்பொருள் கூறுவாரும் உளர். இராமனுக்குத் தேர் வந்தவுடன் அவன் போர்க்களம் செல்லப்போகிறான். இராவணனுக்கு அழிவுக்காலம் நெருங்குகிறது என்பதே இப்போதையநிகழ்ச்சியோட்டம். அதற்கு ஏற்பவும் குறட்கருத்தைத் தழுவியும் வினையாகிய பகை வேகமாக விசும்பூடறுத்து இராவணனையடைவதுபோல தேர் இராமனையடுத்தது என்பதே இயைபுடையத்தாம்(85) என்று விளக்கம் தருகிறார்.

சொன்ன எல்லையின் இராமன் அயோத்திக்குத் திரும்பிவராமையால் பரதன் தீப்பாய்ந்து உயிர் துறக்க எண்ணுவதையறிந்த

கோசலை, இறப்பும் பிறப்பும் 'இயற்கையே நீ வருந்த வேண்டா' எனத் தேற்றுகின்றவள், 'மோகத்தால் பிறக்கையும்' (10330) என்கின்ருள். இது, 'அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ் ஞான்றும் தவாஅப் பிறப்பீனும் வித்து' (391) என்ற குறட்பா உதவிய கருத்து வளர்ச்சியாகும். 'உடம்பொடு உயிரிடையென்ன மற்றன்ன மடந்தையொடு எம்மிடை நட்பு (1122) எனும் குறளுக்குக் கம்பர் 'ஒருவருக்கொருவர் ஊனும் உயிரும் அனையார்' (966) என்று ஓருரைகாரரும் ஆகிருர்(101) என்று காட்டுகிருர்.

வள்ளுவர் கூறியதையே எண்ணுதல் போல, இணையான வற்றை எண்ணிக் கம்பர் கவிதையில் வைத்து இழைத்தலும் உண்டு. இணையாயின வள்ளுவர் கூறியதோடு ஒத்தும் இருக் கும், உயர்ந்தும் இருக்கும். இழிந்தும் இருக்கலாம். அவைகளைக் காப்பியப் பாத்திரங்களுக்கும் சூழலுக்குந் தக்கவாறு அமைத்தல் கம்பர் வழக்கம்(151). சூழல் நோக்கிச் சொல்லி அழகுக்கும் சிந்தனைக்கும் உரியதாய் வள்ளுவத்தை இடமுங் காலமும் நோக்கிச் சுருக்கியும் பெருக்கியும் கூறிக் காப்பியத்தைக் கவின் பெறச் செய்தலே கம்பர் மரபு(263).

சூர்ப்பனகையின் அழகை இராமன் வியந்து கண்டபோது, இராமனைக் கம்பர் கண்ணருள் செய் கண்ணன் (2863) என்றனர். இது 'கண் என்னும் கண்ணோட்டம் இல்லாத கண்' (573) என்ற குறட்பாவின் கருத்தை யுட்கொண்டு மிளிர்வதாம். கண்ணன் என்பது கிருஷ்ணன் என்ற ஆரியச் சிதைவாகக் கருதலாகாது. கண்களால் அருள்செய்பவனே கண்ணன் என விரித்துரைக்கத் துணையாயது இக்குறட்பகுதி. ஆகவே கண்ணன்—கண் ணோட்டம் உடையவன் என்ற பொருளதாகக் குறளைக்கொண்டு உணரவைத்தவர் கம்பர் எனலாம்(305).

'கம்பர் பெருமான் திருக்குறளைக் கற்ருய்ந்த பெற்றி, இடத் திற்கேற்பச் சொல்லையும் பொருளையும் பொருட் பொதிந்த சுவை யையும் எடுத்தாண்ட புலமை, பாத்திரங்கட்கேற்ப வள்ளுவர் கருத்துகளை வளைகது வடித்தாண்ட தனித்தன்மை என்ற கூறு களை அகல ஆழம்படச் சீர்தோறும் செய்யுள்தோறும் கண்டு எடுத்துக்காட்டிச் செல்கிறது. கம்பர் தங்காப்பியப் பண்ணையில் திருக்குறளை விதைத்த இலக்கிய உழவு நெறியைத் திறன் செய் திருப்பது தமிழரின் புதிய வரவேற்பிற்கு உரியதாகும்' என்று, வ. சுப. மாணிக்கம் அவர்கள் தன் பதிப்புரையில் கூறியிருப்பது சாலப் பொருந்தும் என்பதனை மேற்காட்டிய சில சான்றுகள் உறுதிப்படுத்தும். எனினும் ஆசிரியர் காட்டியுள்ளபடியே கம்பர் எண்ணி செயல்பட்டிருப்பாரா என்பது கேள்விக்குறியே.

**567. வள்ளுவனும் கம்பனும் (19—24)**
*கலையின்பம்: நாமக்கல் கவிஞர்*
*கவிஞர் பதிப்பகம், ராஜவீதி, கோவை, ரூ. 2*

*கோவைக் கலைக் கல்லூரியில் 15-2-57 அன்று நிகழ்த்திய ஆண்டுவிழாச் சொற்பொழிவு இக்கட்டுரை. வள்ளுவர் செய்த குறளும், கம்பராமாயணமும் மக்களுக்குப் பயன்படும் மெய்ப் பொருட்களை எடுத்துக்காட்டிச் செல்கின்றன. வால்மீகி காட்டி யிருப்பதை விடச் சிறப்பாக, உயர்ந்த பண்புகளுக்கெல்லாம் இராமனை உறைவிடமாகக் காட்டுகிறார். கம்பன் பாத்திரங்கள் குறைபாடின்றி விளங்குகின்றன. கம்பராமாயணம் காலம் கடந்த ஒரு காவியம்.*

**568 இரண்டு அமுத சுரபிகள் (53—60)**
*பாஞ்சாலி சபதம் முதலிய கட்டுரைகள்: பொ. திருகூடசுந்தரம் எம்.ஏ., பி.எல்., காந்திநிலையம், தியாகராய நகர், சென்னை-17*

*வள்ளுவர் கூறும் வாய்மை, அன்பு என்னும் இரண்டிலும் அளவற்ற ஆசையை உண்டாக்கி நம்மை வாய்மையிலும், அன்பி லும் நம்மை அறியாமலே ஈடுபட்டுவிடும்படிச் செய்யும் நோக்கத் துடனேயே எழுதப் பெற்றதுபோல் தோன்றுவது கம்பராமா யணம் என்னும் கருவூலம் ஆகும். இதில் ஒவ்வொரு கட்டத்திலும் வாய்மை அல்லது அன்பு மிளிர்கிறது.*

**569. கற்பில் சிறந்தவள் கண்ணகியா? சீதையா? (41—43)**
St. John's College Palayamkottai Annual *இரா. சண்முகவேல்*
*ஏப்.* 1972

*கற்பினைப் பற்றி வள்ளுவர் கருத்துகளைக் கூறி, இயற் கையை ஏவுதல் கற்புடை மகளிர்க்குச் சிறப்பு, கணவனின் இன்பத்தில் மகிழ்ச்சி காண்பது கற்புடைய மகளிரின் தன்மை யென்பதை நிரூபிக்கிறாள் கண்ணகி(42). வள்ளுவர் கருத்துக்கு மாறாக சீதை பிறன் நெஞ்சில் புகுந்துவிட்டாள். அதனால் வீட் டுலகை அடைந்தாளல்ல. சிறை செய்யும்போது சீதை ஏன் இயற் கையை ஏவவில்லை. அனுமனிடம் இராமன் சீதையை வர்ணித்த தால் குறைந்து விட்டது. கம்பரிடம் கற்பின் திறம் காணப்பட வில்லை. கற்பிற்கொரு கண்ணகி காதலுக்கே சீதை என்ற முடி விற்கு வருகிறார்.*

**570. மாலை வருணனை (இளங்கோவும் கம்பனும்)**
*அ. திருமால் இந்திரசிங்*
*கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதி யாகக் கொடுக்கப்பட்ட ஆய்வுக் கட்டுரை*: 1972; 110

*மாலை ஒரு முன்னுரை* (1—9), *வருணனை* (10—14), *சங்க இலக்கியத்தில் மாலை* (15—35), *சிலம்பில் மாலை* (36—53), *கம்பனில்*

மாலை (54—96), ஒப்பியலாய்வு (97—110), என்னும் ஆறு தலைப்பு களில் நிறைவு பெறுகின்றது. இப்பொருட்கட்டுரை இறுதியில் பயன்பட்ட நூல்களும் தரப்பட்டுள்ளன.

கம்பராமாயணத்தில் அமைந்துள்ள மாலைக்கால வருணனையை இயற்கைப் பொருள்கள், மாலைத் தென்றல், மாலையின் தன்மை, அஃறிணைப் பொருள்களின் செயல், மக்கள் செயல், தலைவன் தலைவி துயர், உவமை நலன் என்று 7 பிரிவாகப் பிரிக் கின்றார். கதிரவன் கடலில் மறைந்தான் என்ற செய்தியே பெரும் பாலும் பேசப்படுகிறது. மலையில் மறைந்த செய்தி ஓரிடத்தில் மட்டுமே பேசப்பட்டுள்ளது.

கதிரவன் காலையில் கடலில் எழுந்து மாலையில் மலையில் மறைதல் தமிழர் இலக்கிய மரபு. கடலில் மறைதல் மலையாள நாட்டிற்கு மட்டுமே பொருந்துவதொன்று. கதிரவன் கடலில் மறைந்தான் என்று கம்பன் குறிப்பிடுவதினின்றும் அவருக்கும் மலையாள நாட்டிற்கும் ஏதேனும் ஓர் தொடர்பு உண்டோ? என்று ஐயுறுகிறார். இறுதியில் மாலைபெறும் பங்கும் பேசப்படு கிறது. கம்பனில் மாலை வருணனை பற்றிய பாடல்களைத் தனியாகக் காண்ட வாரியாகத் தொகுத்து அளித்துள்ளார். இங்கு ஈரிடங் களில் இளங்கோ சிறந்திருப்பதைச் சுட்டிக்காட்டிவிட்டு, கம்பன் சங்க இலக்கிய மரபிலிருந்து ஓரளவு மாறித் தன் காலத்திற் கேற்ப கவிதையமைத்தான் என்கிறார்.

கம்பன் தன் வருணனையை இலக்கியத்தோடு ஒட்ட வைப்ப திலும் தன் திறனை வெளிப்படுத்துவதிலும் இளங்கோவை விஞ்சி விடுகிறான்; உவமை, தற்குறிப்பேற்றம், போன்ற அணிகளில் சிறந்திருக்கிறான்; பழையனவற்றைக் கழித்துப் புதியன புகுத்து வதில் சிறந்திருக்கின்றான் என்று கம்பன் சிறப்பிற்கு 4 காரணங் கள் தருகின்றார். இளங்கோவடிகள் மாலை வருணனையை முறை யாக அமைக்கவில்லை—காலவுணர்வுக்குத் தடையாக இருக் கின்றன. ஆனால் கம்பன் மாலைக்கால வருணனையைக் கொண்டே காப்பியத்தில் கால உணர்வை, கால ஒருமைப்பாட்டை நாமறிய வாய்ப்பளிக்கிறான் என்கிறார்.

இந்நூல் சிலம்பு, கம்பன் மாலை வருணனையின் ஒப்பியலாய்வு நூலாக விளங்குகின்றது. சங்க இலக்கியத்தினின்றும் குறிப்பு கள் தரப்படுகின்றன. ஒவ்வொரு கட்டுரையின் இறுதியிலும் கருவி நூற் பட்டியல் தரப்பட்டுள்ளது. அடிக்குறிப்புகளோடு கட்டுரை அமைந்துள்ளது.

571. **இளங்கோவடிகளும் கம்பரும் (410—415)**

ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை: கு. திருமேனி, பாண்டிச் சேரி தாகூர் அரசினர் கலைக் கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு. 1974

இக்கட்டுரையில் ஆசிரியர் இரு பெரும் புலவர்களாகிய இளங்கோ, கம்பர் ஆகியோரின் ஒற்றுமை வேற்றுமைகளைக் காப்பியத்தோடு ஒன்றித்தல், தெய்வீகம், அரங்கேற்றம், பிறந்த இடமும் பெற்றியும், சமயச்சார்பு, தத்துவம், விண்ணும் மண்ணும், காப்பிய வழக்கத்திற்கு எல்லை, காப்பிய மாந்தர், பயில்வோர் தகுதி, உவமை என்னும் பிரிவுகளில் ஆய்ந்துள்ளார். இளங்கோவடிகளினின்றும் கம்பர் மிஞ்சுவதும் சில இடங்களில் எடுத்துக்காட்டப்படுகிறது. (தத்துவம், உவமை)

**572. கம்பரும் இளங்கோவும் (11—13)**

தமிழ்வட்டம்: ம. பொ. சி., தமிழ்வட்டம், பாஸ்கர நிலையம் பி. 94, சாஸ்திரி நகர் சென்னை – 20

தமிழ் மொழியின் மரபுகள் காத்த மகாகவிகள் இவர்கள். சாதி - சமய - வருண வேற்றுமைகளிலே நம்பிக்கைக் கொண்டவர்களாயினும், பிறப்பு வழி மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு காணாத உத்தமர்களாவர்(11). இளங்கோவைப் பின்பற்றி வீடுபேறு கூறாத காப்பியத்தை வழங்கினார் கம்பர்(12). அயோத்தியிலிருந்து இராமேசுவரம் வரை கம்பர் காப்பியம் செய்தார். இளங்கோ பூம்புகார் முதல் வடநாடு வரை கதையமைத்தார். இவ்வாறு இருவரும் ஒருமைப்பாட்டுப் பணி புரிந்துள்ளனர். காப்பியங்களுக்கிடையே உள்ள பிற ஒற்றுமை, வேற்றுமைகள் சிலவும் கூறுகிறார்.

**573. திருத்தக்க தேவரும் கம்பரும் (1—9, 41—46)**

செந்தமிழ்: தொகுதி 4. ரா. ராகவையங்கார் 1905—1906

பிற இலக்கியக் கருத்துகள் கம்பனிலும் சிந்தாமணியிலும் வருமாற்றையும், சிந்தாமணிக் கருத்துகள் கம்பனில் வந்துள்ளமையும் இங்குக் கூறிச் செல்கிறார். (முற்றுப் பெறவில்லை.)

**574. கம்பர் முகந்தது (235—247)**

சிந்தாமணிச் சொற்பொழிவு நினைவு மலர்: கி.வா.ஜ. (பதிப்பாசிரியர்) மே. வீ, வேணுகோபாலப்பிள்ளை, ஜைனத் தமிழ் இலக்கிய மன்றம், காஞ்சிபுரம். 1952; ரூ 2

வெள்ளி வெண், நமரங்காள் போன்ற தொடர்களையும், கண்ணெனக் குவளையுங் காட்டல் ஓம்பினார், மயில் அத்தனைக் கண்களாலும் பார்த்திருக்கக் கூடுமோ முதலிய கற்பனை நயம் முதலியவற்றையும் கம்பர், சிந்தாமணியிலிருந்து முகந்ததாகக் காட்டுகிறார். காவியங்களில் முதலில் மழையைப் பற்றிக் கூறி, மழை பெய்த நீர் மல்கி, அருவி பாய்ந்து ஆறாகி, ஆற்று வெள்ளம் பாய்ந்து வயல் வளம் பெறுவதாக அமைப்பது மரபு. இந்த மரபிற்கு வழிகாட்டியவர் திருத்தக்கதேவர். கம்பர் அதனை விரிவாக அமைத்தார்.

திணை வருணனையும், திணை மயக்கமும் காவியத்தில் அமைவதைச் சிந்தாமணியில் முதலில் காணலாம். காப்பிய நாயகனுக்கும் நாயகிக்கும் உணர்ச்சி ஒத்திருத்தலைச் சிந்தாமணிப் பல இடங்களில் காட்டும். கம்பரும் காட்டுகிறார்(242). இராமனைப் பிரிந்த அயோத்தியும், துறவுக்காகச் சென்ற சீவகனைப் பிரிந்த நகரமும் பல இடங்களில் கருத்துகள் ஒத்து இருக்கின்றன. விருத்தங்கள், உவமைகள் சிலவற்றைக் கம்பர் முகந்ததற்குச் சான்றாகக் காட்டுகிறார்.

**575. இருபெருங் கவிஞர்கள் (234—238)**
சிந்தாமணிச் சொற்பொழிவு நினைவு மலர்: ரா. பி. சேதுப்பிள்ளை
கம்பன் கவிகள் சில சிந்தாமணியை ஒத்துத்திகழ்வதைச் சில சான்றுகள் மூலம் காட்டுகின்றார். அவை,

| சிந்தாமணி | | கம்பர் |
|---|---|---|
| கருங்கொடிப் புருவம் ஏற | — | செங்கயல் அனைய நாட்டம் |
| இன்னமுதனைய செவ்வாய் | — | மானினம் வருவ போன்றும் |
| வட்டுடைப் பொலிந்த தானை | — | சொன்னலம் கடந்த காமச் |
| வாளரம் துடைத்த வைவேல் | — | வாளரம் பொருத வேலும், வீதி வாய்ச் செல்கின்றான் போல் |

மற்றும் சில காட்டுக்களும் உள.

**576. திருத்தக்க தேவரும் கம்ப நாடரும் (81—88, 158—164)**
தமிழ்ப்பொழில்: ஆ. வரத நஞ்சைய பிள்ளை, தஞ்சைக் கரந்தை தமிழ்ச் சங்க வெளியீடு பிரமோதூத (ஆனி, ஆடி, ஆவணி)
சமயக்காழ்ப்பு இல்லையெனினும் காப்பியத்தில் சமயம் வரும்பொழுது தங்கள் சமய இலக்கணத்தையும், தம் பற்றையும் வெளிக்காட்டுவார். இருவரும் ஒரே பொருள் வருணனையின் போது வேறுபடுகின்றனர் (நாம: 22, பால:நாட்டு: 10, நாம: 65 பால: 14) இருவரும் உள்ள நிலைமையையும், அதனாற் தோன்றும் மெய்ப்பாடுகளையும் விரித்துரைத்தலில் நிகரற்றவர்கள் (சச்சந்தன் விசயையை மணந்தபின் அவன் மனநிலை, கணையாழி பெற்ற சீதை மனநிலை) தேவர் விரித்துக் கூறும் அரிய கருத்துகளினும் விழுமிய கருத்துகளைக் கம்பர் சில சொற்களாற் குறித்துணர்த்தும் ஆற்றலையுடையவர். (இலக்கணையை நோக்கும் சிலதியர் மனநிலை, சீதையை நோக்கும் ஏவல் மகளிர் நிலை) கட்டுரை முற்றுப் பெறவில்லை.

**577. காப்பியப் படைப்பில் கம்பரும் தேவரும்**
உ. சுப்பிரமணியம்
பொருட்கட்டுரை: மதுரைப் பல்கலைக்கழகம் ஏப். 1969, பக். 101
முன்னுரை. சிந்தாமணி பொதுநோக்கு, இராமகாதை பொது நோக்கு, காப்பியக் கொள்கைகள், தேவர் கம்பரின் நற்பொருள்

விளக்கம், சீவகனும் இராமனும், காப்பியம் இரண்டிலும் அவல வீரர், கற்பனை வளத்தில் தேவரும் கம்பரும், இலக்கிய உலகில் தேவரும் கம்பரும் முடிவுரை.

ஒரே சீராக ஏற்றத்தாழ்வின்றிச் செல்கின்ற கதையமைப் புடையது சிந்தாமணி. காப்பிய இலக்கணம் முழுவதும் அமையப் பெற்று இலங்குவது இராமாயணம். கம்பர் காப்பியத்தைக் காப்பியச் சுவைக்காக எழுதியவர். தேவர் அறமெனத் தனியே சீர்படக் கூறியனவற்றையெல்லாம் கம்பரது கதைமாந்தர் பெரும் பாலோர் பின்பற்றி ஒழுகுகின்றனர். கம்பரது இராமனே தேவரின் நுண்ணுணர்வுக்குப் பருப்பொருளாக அமைகின்றான்.

கம்பன் புதுமைச் சிந்தனைகளைத் தோற்றுவித்த பெருங் கவிஞன். சமுதாயப் புரட்சியை உண்டாக்கியவன் கம்பன். கம்பன் கூறிய முறையில் வீட்டின்பத்தைப் பற்றிய பேச்சேயில்லை. துறவு என்பது வேண்டாத வேட்கைகளையும் பொறுப்புகளை யும் துறத்தல் என்னும் பொருளில் கையாளுகின்றார் கம்பர். தேவரோ, உறவு, உறவு வழி வந்த உரிமை அனைத்தையும் துறத் தலைச் சிறப்பாகத் துறவு என்று குறிப்பிட்டுள்ளார். கம்பருக்கு இராம காதையைப் பாடுவதுதான் நோக்கமே தவிர இறைநெறி யைப் பரப்புவதன்று. ஆனால் தேவர் இறைநெறியைப் பரப்புவ தற்காகவே கருவியாகக் காப்பியத்தைப் பயன்படுத்தினார்.

கம்பரது இராமன் முன்னால் தேவரது சீவகன் உரமிழந்து ஒடுங்கி விடுகிறான். இராமன் தந்தையின்மேல் கொண்டிருந்த பற்றினைக் காட்டிலும், தந்தைக்கு ஒருமகன் ஆற்ற வேண்டிய கடமையை அவன் மிகுதியாக உணர்ந்திருந்தான். மகன் தமையன் எனும் நிலையில் முழுமையடையும் இராமன் சீதையின் சிந்தைக் கினிய காதலனாகவும், விரும்பியோர்க்கு உழுவலன்பனாகவும், பண் பாடுமிக்கப் பகைவனாகவும், பல நோக்கிலும் பண்பாடு மிக்க வனாகவும், தூய்மையானவனாகவும் தோற்றமளிக்கிறான்.

சீவகனது செயல்கள் பெரும்பாலும் உள்ளத்தைத் தொடு வனவாகவில்லை. அவன் அகவாழ்வும் சிறக்கவில்லை தன்னேரில்லா காப்பியத் தலைவன் என்று கூறமுடியாது. இராமன் வாலிவதை; சூர்ப்பணகையுடன் உரையாடும் முறை, சீதையைத் தீக்குளிக்கச் செய்தல் ஆகிய மூன்று இடங்களிலும் ஒரு தலைவனைப்போல் நடக்காது மிகவும் உணர்ச்சி வயப்பட்டு நடந்து கொண்டான். சீதையைத் தீக்குளிக்கச் செய்தது பழங்காலத்தில் இருந்த பெண் ணடிமை உணர்வு இராமனை விட்டு மடியவில்லை போலும் எனக் கருதச் செய்கிறது. இராமனை ஒவ்வொரு கோணத்திலும் பார்ப் பது போல் சீவகனைப் பார்க்க முடியவில்லை. இராவணனுக்கு நேரடியாக சிந்தாமணியில் கட்டியங்காரனே தென்படுவான். ஆனால் அவர்களை ஒப்பிடுதல் பொருத்தமன்று.

கம்பர் இராவணனையும் தேவர் சச்சந்தனையும் அவல வீரர்களாகப் படைத்துள்ளனர். சச்சந்தன் உணர்வில் உரிமை இருந்தது. இராவணன் உணர்வில் சிறுமையிருந்தது. அழிவு நெருங்கிய காலையும் இருவரும் அமைதி பொருந்திய ஆற்றல் நிறைந்த வீரம் உடையவராகக் காட்சியளிக்கின்றனர். பண்பாடு மிக்கப் பகைவனைப் பெற்றது இராவணனின் அவலத்தை மிகுதிப்படுத்துகின்றது. சச்சந்தன் முடிவு உடனடியாக நேரிட இராவணனோ சிறுகச் சிறுக அழிகிறான்.

நாட்டு வளத்தைப் பற்றிப் பாட வரும்போது, இருபுலவர்களும் செழிப்பை மட்டும் கூறாது, குமுகாயப் பெருமையையும் கூறாது கூறிவிட்டுச் செல்கின்றனர். இருவரும் தாங்கள் குறிக்க வந்த நாட்டைக் குறிக்கோளுடன் படம்பிடித்துக் காட்டுகின்றனர். உலகியலுக்குத் தேவையான உண்மைகளையே விளக்கிச் செல்கின்றனர். ஒரு பொருளுக்குப் பல்பொருள்களை ஒப்புமை கூறிப்பாடுவதிலும் ஓர் ஓட்டத்தையும் அழகையும் இருவரும் காட்டுகின்றனர்.

சிந்தாமணியின் காப்பியக்கரு மனதைக் கவரவில்லை. மிகச் சிறந்த சுவைமிக்கப் பாடல்களால் தொகுக்கப்பட்டதாயினும் தொடர்பு செய்யமையாக்கப்படவில்லை. தேவருக்கு ஏறத்தாழ 300 ஆண்டுகள் பிற்பட்டவர் கம்பர். ஆதலால் தேவரின் நிறைகுறைகளை ஆய்ந்து நிறைகளைப் பின்பற்றி குறைகளை அகற்றிக் கொண்டார் கம்பர். குகன் போன்றோர்க்குக் காப்பியத்தில் சிறப்பிடம் கொடுத்துப் புதுமை வடிவில் தொடர்ந்து வெற்றிநடை போடுகிறார். தேவரால் தொடங்கப்பட்ட காப்பியம் என்னும் பயிரை நன்றாகப் போற்றி வளர்த்து பூத்துக் காய்த்துக் கனியச் செய்த பெருமை கம்பரைச் சாரும்.

**578. காளத்தி வேடனும் கங்கை வேடனும் (218—228)**

*தமிழ் இன்பம்: ரா. பி. சேதுப்பிள்ளை*
*பழனியப்பா பிரதர்ஸ்; மு. ப. 1948; எ. ப. 1959; ஒ. ப. 1961; ரூ. 4*

இருவரும் ஊனை இறைவனுக்குக் கையுறையாகக் கொடுத்தனர். குகன் இராமனை ஆண்டவன் அடிமை என்ற நிலையிலேயே காணச் செல்கின்றான். முனிவர்கள் முகம் சுளித்தது போலவே அங்கும் சிவ கோசரியார் மனம் கவன்றார். காளத்திநாதன்பால் அன்பு பூண்ட கண்ணப்பனைப் போலவே குகனும் இராமனைப் பிரிந்திருக்க மாட்டாத மனப்பான்மை பெற்றான். காளத்தி வேடனைக் கருவாகக்கொண்டு கங்கை வேடனை வடித்துள்ளார் எனலாம்(219). இருவரும் பயன் கருதாத பக்தி கொண்டவர்கள். காளத்தி வேடன்போல் அன்பில்லை எனப் பட்டினத்தடிகளும்,

குகன்போல் அன்பில்லை என்று சுக்கிரீவனும் கூறுகின்றனர். பரதனைக் கண்டு குகன் பொங்கும் மொழிகள் இராமன்பால் தலையாய அன்பன் என்பதை விளக்குகின்றன.

**579. சேக்கிழாரும் கம்பரும் (53—62)**

கட்டுரைக் கதம்பம்: பாலூர் கண்ணப்ப முதலியார்
சி. சுப்பைய செட்டி அண்டு கோ; பெரிய தெரு; திருவல்லிக் கேணி, சென்னை - 5, மு. ப. 1960; இ. ப. 1962; ரூ. 2

ஞான சம்பந்தம் என்னும் மாத சஞ்சிகையில் வெளி வந்தது. கம்பர் சேக்கிழார் காலத்திற்குப் பிந்தியவர். கம்பர் இரண்டாம் ராஜ ராஜ சோழன் காலத்தவர் (1171—78)(55). கம்பர் சேக்கிழார் கவிகளில் ஈடுபட்டு அக்கவிகளின் கருத்துகளையும் தொடர்களை யும் சொற்களையும் தம் நூலுள் ஆங்காங்கு ஏற்ற இடங்களில் அமைத்துப் பாடித் தம் நூலினைச் சிறக்கச் செய்துள்ளதை பதினுன்கு சான்றுகள் காட்டி நிறுவுகிருர்.

**580. இராமாயணமும் கந்தபுராணமும் (812—816), (893—896)**

ஆனந்தபோதினி: பூ. ஸ்ரீநிவாசன் மே 1933; ஜுன் 1933

இரு கதையமைப்பிலும் உள்ள ஒற்றுமைகளைக் காட்டுகிருர். நான்முகன் மானபங்கம், சூரபத்மன் இந்திரன் மனைவியைக் கவர முயற்சித்தல், சயந்தன் சிறைமீட்சி, வீரவாகு கடல் கடந்தது, கயமுகன் வழி மறைத்தல், சயந்தனைச் சந்திக்கையில் அரக்கரைத் துயில் கொள வைத்தல், கடல் தாவுதலிலிருந்து நகரழிதல் வரை ஒரேயமைப்பு கதையில், சிங்கமுகன் அறிவுரை கூறல், இரணியன் அறநெறிவுரை கூறல் (பகைவருடன் சேரவில்லை) பானுகோபன் வீரவுரை பகர்தல், இறுதியில் தந்தையிடம் வேண்டல் முதலிய வற்றைச் சுட்டி இராமாயணத்துடன் இந் நிகழ்ச்சிகள் ஒத்துள்ள மையைக் காட்டுகிருர். இராமன்—முருகன், சூரபத்மன்—இந்திர சித்து, சீதைநிலை—சயந்தன்நிலை, இலக்குவன், அனுமன்—வீர வாகு, கும்பகர்ணன்—சங்கமுகன், விபீடணன்—இரணியன், இந்திரசித்து—பானுகோபன் என்று கதை நிகழ்ச்சிகளுக்கு ஏற்ப பாத்திரங்களின் பெயர்களையும் இணைத்துக் காட்டுகிருர்.

**581. கம்பரும் கச்சியப்பரும் (30—71)**

வேலும் வில்லும்: ரா. பி. சேதுப்பிள்ளை; பழனியப்பா பிரதர்ஸ்; ஆ. ப. 1967; ரூ. 1-25

வில்லும் வேலும் அறத்திற்குத் துணையாக நின்று மறத்தினை அறுத்த சரித்திரம் இரு காவியங்களிலும் விளக்கப்படுகிறது(31). இலங்கை—வீரமகேந்திரம், வில்—வேல், சூர்ப்பணகையும் அசமுகியும், சீதை—வானவர் சிறைவாசம், அநுமன்—வீரபாகு, இராவணன்—சூரன் சபைகள், மேகநாதன்—பானுகோபன், இராவணன்—சூரன் இறுதிப்போர் என இக் காப்பியங்கள்

தம்முள் ஒன்றுபட்டு நிற்றலைச் சுட்டியுள்ளார். இறுதியில் காப்பியப் பகுதிகளையும் எடுத்துக்காட்டியுள்ளார்.

**582. கன்னனும் கும்பகர்ணனும்** (317—319, 357—359)
*செந்தமிழ்ச் செல்வி: தொகுதி 12, மா. இராசமாணிக்கம் ரூ. 12*

*செஞ்சோற்றுக் கடன் கழித்தலில் இருவரும் ஒன்றியிருந்த தன்மையைக் குறிப்பிடுகிறது.*

**583. கர்ணனும் கும்பகர்ணனும்** (211—218)
*தமிழ் இன்பம்: ரா. பி. சேதுப்பிள்ளை*
*பழனியப்பா பிரதர்ஸ்; மு. ப. 1948; எ. ப. 1959. ஒ. ப. 1961; ரூ. 4*

*செஞ்சோற்றுக் கடன் கழிப்பதே தனக்குக் கருமமும் தருமமும் புகழும் என்ற கர்ணன், தமையன் பொருட்டு உயிர் துறந்த கும்பகர்ணன் ஆகிய இருவரும் செய்ந்நன்றியறிதலாகிய அறத்தை ஆவியினும் அருமையாக ஆதரித்த வீரர் என்று விளக்கியுரைக்கிறார்.*

**584. கர்ணனும் கும்பகர்ணனும்**
*பாரதி பாராட்டிய மூவர்: எம். நாராயணவேலு, ஜி. அங்கமுத்து; கிறிஸ்தவ இலக்கியச் சங்கம். மறுபதிப்பு. நவ. 1968*

*இருவரின் செய்ந்நன்றி மறவாமை தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளது.*

**585. அனுமன் தூதும் ஆழியோன் தூதும்** (18—33)
*செந்தமிழ்: டிச. 1976*

*'வன்றிசைக்கு நீயலால் வென்றிசைக்குரியார் பிறர் வேண்டுமோ' என்று சுக்கிரீவன் அனுமனிடம் கூறும்பொழுது அவனுக்கு முழு உரிமையும் வழங்கிச் செயல்படக் கூறுகிறான். இதனால்தான், தானே இராகவன் சார்பில் இராவணனிடம் தூது பேச முடிவெடுக்கிறான். ஒற்றுடல் செய்கிறான். 'மாருதி ஈண்டைச் சென்று தீதின்மை செப்பியத் தீயவித்து இளையோன் நின்ற நேர்மையும் நினைவும் நேர்ந்து எம்மின் நேர்தல் நன்று' என்று இராமன் அனுமனிடம், பரதனின் மனநிலையில் வேறுபாடு கண்டுள்ளதா என்று ஒற்றறியவுமே தூதனுப்புகின்றான் என்கிறார். சுக்கிரீவன் அனுப்ப இராமனிடம் சென்ற தூது, இராமன் சீதையிடம் அனுப்பிய தூது, பரதனிடம் அனுப்பிய தூது ஆகிய மூன்றிலும் அனுமனின் சொல், செயல் ஆற்றல்களைக் காட்டுகிறார்.*

**586. கர்ணனும் கும்பகர்ணனும்** (18—25)
*பன்னிரு கட்டுரைகள்*

*செய்ந்நன்றி மறவாத இச் செம்மல்களின் செயல் வீரத்தினை இங்குச் சுட்டியுள்ளார்.*

**587. கம்பனும் பாரதியும் (47—70)**

பாரதிவழி: ப. ஜீவானந்தம்; நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்; 6 நல்ல தம்பி செட்டி தெரு; சென்னை - 2, மு. ப. சன. 1964; இ. ப. அக். 1969; மூ. ப. சன. 1975; ரூ. 3-50

கம்பன் பற்றிய பாரதியார் புகழுரைகளைத் தொகுத்துரைத் துள்ளார். கம்ப சித்திரங்கள் மானிடத்தை ஆழமாகவும், விரிவாக வும், நுட்பமாகவும், 'அழகெனும் அழகும்' ஓர் அழகு பெறச் சித்திரித்துக் காட்டுவதைப் பார்க்கிருன். இதனுல் 'கம்பன் ஓர் மானிடன்' என்று நிர்ணயிக்கிருன் பாரதி(54). பாவத்திற்குத் துணை போயின், மும்மூர்த்திகள் கூட அழிவர் என்று கூறி, மனித தருமத்தின் சர்வ வல்லமையைத் தூக்கி வைத்துப் புகழ் கிருன் கம்பன்(65).

இராமன் விபீடணனை அடைக்கலமாகக் கொள்ளும்போது மனிதத் தன்மையின் உன்னதமான உணர்ச்சியை வெளியிடு கிருன்(66). தசரதனிடம், கைகேயியையும் பரதனையும் தனக்குத் தாயும் தம்பியுமாகும் வரம் பெறுவதன் மூலம் தன்னைச் சேர்ந் தோரின் குற்றத்தைத் துடைப்பது, மனிதத் தன்மையின் எத்தனை சிறந்த கடமை உணர்ச்சி என்பதை உலகம் அறியும்படி இராமன் காட்டுகிருன்(68). 'இன்றுபோய் நாளை வா' என்பது இராமனின் பேராண்மையைக் குறிக்கிறது. இதனுலேயே கம்பனைப் பாரதியார் மானிடன் என்று போற்றினுர் என்கிருர்.

**588. இரணியன் காலப்போக்கில் (234—240)**

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஒன்பதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை—தொகுதி - 1, சிவசுப்பிர மணியன்

கம்பன் படைத்த இரணியனுக்கும் பாரதிதாசன் படைத்த இரணியனுக்கும் உள்ள வேறுபாட்டினைச் சுட்டுகிருர்.

**589. இராமாயணமும் தமிழ் வழக்குகளும் (110—20, 10—118, 320—333)**

கலைமகள்: மு. இராகவையங்கார் 1934

பிற இலக்கியங்களில் அமைந்துள்ள கம்பராமாயணக் கருத்துகளைக் கூறியுள்ளார். சீதையும் இராமனும் களவு கொண்டதனைக் கம்பர் பாடியது, தொல்: பொருள் 54 (உரை), கலி: 138, பெருங்கதை 1: 32: 30—49, முதலியவற்றுடன் ஒத் துள்ளது. பரந்து மீன் அரும்பிய பசலை வானகம் (தைல: 6), பெருங் கதை 1: 33: 49—50இல் உள்ளது. வரிசிலையண்ணலும் வாட்தடங் கணங்கையு மிருவரு மாறிப்புக் கிதய மெய்தினுர், (பெருங்கதை 3: 8: 92—97), அகல்யா சாபம், (குறள், பரிபாடல் (9:50—52), சீதை கழற்றியிட்ட அணிகளும் குரங்கினமும் (புறம் 378) ஆவின்

கீழ் இராமன் புரிந்த மந்திராலோசனை (அகம் 70, சேதுபுராணம்) இது இராமாயணத்தில் இல்லை.

குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறை என சேது புராணத்தில் உள்ளது. குமரித்துறையே இராமசேது தொடங்கு மிடமாக முன்னோர் வழங்கினர். (மணி 17: 10—14, மற்றும் பிற). அணிலும் சேது பந்தனமும் தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய திருமாலை 27, இராவண யுத்தம் கலிங் 11:161, சிந்தாமணி 2353 மூன்றாந் திருவந்தாதி 48, திருவாய் 9, 8, 7, மகாபாரதம் உத்யோக பருவம் 34 முதலிய இடங்களில் காணப்படுகிறது. இராமாயணப் போர் 18 மாதங்கள் நடந்து வந்ததாகக் கூறும் செய்தி சிலம்பு 27: 5—13, ஜீவகசிந்தாமணி 2353 ஆகியவற்றில் உள்ளது. இராமாயண யுத்தத்தினை, புறத்திணை முறையில் பாடியுள்ளனர் என்பதற்கும் சில சான்றுகள் தருகிறார். வசந்தன் என்னும் வானரத் தலைவனை உயிர்ப்பித்தது, இராமன் அனுமனுடன் விருந்துண்டது, அகத்தியரும் இராவணனும் பற்றிய கதைகள் போன்ற நிகழ்ச்சிகளையும், இளையபெருமாள் தொண்டு, இராவணன் கயிலையங்கிரியை எடுத்தது முதலியனவும் கூறப் பட்டுள்ளது.

590. மெய்கொள் கம்பரும் பொய்தீர் புலவரும் (728—734)
ஆனந்தபோதினி: ரா. திம்மப்ப ஐயர் ஏப். 1938

கம்பரின் 'அகலிடும் புகையட்டி' என்றும், சேக்கிழார் 'கரும் படு களமராலை' என்றும் பாடுதற்கு ஆதாரம் சிலம்பின் 122—126 வரிகள். கம்பர் உடல் மன்னன் உயிர் மக்கள் என்று பாடியுள்ளது, புறத்தில் 'நெல்லுமுயின்றே...', குறளில் 'இயல்புளிக் கோலோச் சும்...', சிந்தாமணியில் 'நெல்லுயிர் மாந்தர்க்...', மணிமேகலையில் 'கோள்நிலை திரிந்திடில்...' என்றும் காணப்படுகிறது. கம்பர், 'கொழுமணி முடிகடோறும்' என்றுள்ளமை, சேக்கிழாரில், 'பன் முறை உயிர்களெல்லாம்...' என உள்ளது. செய்ந்நன்றியறிதலைக் கம்பர் 'சிதைவகல் காதற்றாயைத்...', வள்ளுவர் 'எந்நன்றி கொன்றார்க்கும்...', புறம் 'ஆன்முலை யறுத்த அறனிலோர்கள்...' என்றும் கூறுகின்றனர் என்கிறார்.

591. கம்பரின் சொல்லாட்சி (77—91)
வித்தகர் வாழ்க்கை: ம. ரா. போ. குருசாமி;
மெர்க்குரி புத்தகக் கம்பெனி; கோயமுத்தூர்-1; மு. ப. 1961; ரூ. 2

வள்ளுவர் சொல்லாட்சி கம்பரில் (கம்பர் ஊருணி நிறையவும் உதவும் மாடுயர். குறள் : ஊருணி நீர் நிறைந்தற்றே) இளங்கோ வின் சந்த அமைப்பு (உறங்குகின்ற கும்பகன்ன, சிலம்பு : பின்னு முன்னும் எங்கணும்) தேவர்சாயல் (சிந். 257, கும்பகர்ண; 235,

சிந் 848; கும்பகர்ண: 165-) எனக் காட்டும் ஆசிரியர், கம்பருக்குப் பிற்பட்ட இலக்கியங்களில் அவர் சொல்திறன் இடம்பெற்றிருப்பதைக் காட்டுகிறார். வீரமாமுனிவர் ஓசை பெற்றுயர் பாற்கடல் எனும் பாயிரத்தினை, குசையுற்றன வரங்கள் தூய்கடல் எனும் பாடலில் பயன்படுத்தியுள்ளார். எதுகையமைப்பிலே கம்பரின் சொல்வண்ணமே வீரமாமுனிவரைத் தூண்டியுள்ளது.

இரட்சணிய சரிதம் ஆசிரியர் கம்பரைப் பின்பற்றியே காவியத்தை அமைக்கிறார். இராமனைப் பிரிந்த அயோத்தியின் துயரை, இயேசு சிலுவை சுமக்கும் காட்சியில் வினையூட்டுகிறார். மனோன்மணியத்தில் வாணி, தந்தையும் கொடியன் தாயும் கொடியள் என்றுரைப்பது கூனி தந்தையுங் கொடியன் நற்றாயும் தீயளால் என்பது போலுள்ளது என்கிறார். சொற்களைத் தேர்ந்தெடுத்துக் கையாளும் முறை, தேர்ந்தெடுத்த சொற்களில் உள்ள அழகு கருத்தாழத்தால் விளையும் கவர்ச்சி இவையே கம்பரின் வெற்றி என்பவர் சான்றாக கைகேயி சூழ்வினையின்போது தசரதன் புலம்பலைக் காட்டுகிறார். தசரதன் முதலில் உன்மகன்மீதாணை என்றபின் படிப்படியாக என்மகன், என்கண், என்உயிர், எல்லா உயிர்கட்கும் நன்மகன் என்று அடுக்கிக் கூறும்பொழுது கம்பர் வெற்றடுக்கு மொழி கூறும் அணியிலக்கணப் புலவராக இல்லை. ஒவ்வொரு தொடரிலும் படிப்படியே இராமனது சிறப்பையும் தசரதன் அவன்பால் கொண்டிருக்கும் அன்பின் ஆழத்தையும் மிகுதியாகப் புலப்படுத்திக் கொண்டே போகின்றார் கம்பர். இக் காட்சியெல்லாம் சொல்லாட்சி திறத்தாலன்றிப் பெறலாகா என்பது ஆசிரியர் துணிபு.

**592. வான்மீகரும் கம்பரும்**

விவேகபாநு; தொகுதி, 2; சாமி. சரவணப் பிள்ளையவர்கள்; 1903

9–19, 10'-104, 133-107, 179-183, 372-374 ஆகிய பக்கங்களில் பாலகாண்டத்தில் காணப்படும் முக்கிய வேறுபாடுகளைச் சுட்டி, காவியநலத்தின் மேன்மையைப் புலப்படுத்துகின்றார்.

**593. வால்மீகரும் கம்பரும் (17—28)**

செந்தமிழ்ச்செல்வி: தொகுதி-2; ரூ. 9

தமிழின் அழகு குறையாது கூடியவரைச் செந்தமிழில் கம்பராமாயணம் அமைந்துள்ளது. கம்பரை எறம்பிற்கு ஒப்பிட்டுக் கூறியது முற்றிலும் பொருந்தும். தமிழின் சிறப்புப் பற்றியே இப்பகுதி அமைந்துள்ளது. இதன் முன்பகுதி இல்லை.

**594. மாயமான் (213—218)**

கலைமகள் (தொகுதி 3), டி. எஸ். ராமசந்திர ஐயர், 1933 ரூ 4

மாயமானைக் கண்டது முதல் இராமன் பிடிக்கச் சென்றது வரை, கம்பர் வான்மீகியிடமிருந்து வேறுபடுவதைச் சுட்டுகிறார்.

595. கம்பன் புளுகும் வால்மீகி வாய்மையும்

பா. வே. மாணிக்க நாயக்கர்

மூ. ப. சனை. 1955; ரூ. 1-40

பதிப்புரை — போ. ரா. கிருஷ்ணமூர்த்தி—1, நூன்முகம் (தா. ஏ. ஞானமூர்த்தி)—2-11, கம்பன்புளுகும் வால்மீகி வாய்மையும் 12-52, பின் இணைப்பு 55-64.

'பிற்காலத்தில் கம்பராமாயணத்தை எரித்துவிட வேண்டும்' என்ற 'ஈ. வே. இராமசாமி நாயக்கரும் கூடத்தாம் மாணிக்க நாயக்கரிடத்தில் கேட்டுக்கொண்ட பாடத்தைத்தான் காரியத்தில காட்ட முன்வந்தாரோ என்று நான் எண்ணுவதுண்டு', எனும் நாமக்கல் கவிஞரின் கூற்றை மறுத்து நூன்முகத்தில தா. ஏ. ஞானமூர்த்தி உண்மையில் அவர் கம்பன் காவியத்தை வெறுப்பவரல்லர்; அதனை விரும்பி போற்றுபவரே யாவர் என்று கூறுகிறார்.

வால்மீகி, இராமன் உடனிருந்து கண்டும் கேட்டும் அருள் பெற்றும் ஆய்ந்தும் கூறியுளளார்(1). வால்மீகி காட்டும் பாத்திரங்கள், நிகழ்ச்சிகளே உண்மையானவை கம்பன் காட்டுபவை போலியானவை என்பது ஆசிரியர் துணிபு. இராமன் ஊன் அருந்ாதவனாகவும், காட்டுக்குச்செல என்ற சொற்கேட்டும் அன்றலர்ந்த தாமரையாக இருந்தமையையும், செய்தியறிந்த கோசலை பரதனை நின்னிலும் நல்லன் என்பதனையும் சுட்டி அவைகளை வால்மீகி மாறுபட அமைந்திருப்பதைக் காட்டி வால்மீகி கூற்றே இயற்கையானது, இயல்பானது, வாய்மையானது என்று கூறுகிறார். குகனிடம் மீனை உடகொள்ள மறுத்தற்குக் காரணமாக முனிவர்கள் முன்னிலையில் ஊனுண்ணைக் கூசினானென்று எண்ணுதற்கிடனுண்டு (12). குகப்படலத்தில் பரதன் கூற்றாக 'இராமன் கிழங்கும் காயும் உண்டுவர்ததாக இருக்கிறது. ஆயின பரதனுக்கு இது கேட்டறிந்ததேயாதலால் பேள்வச் சான்று சான்றாகாது(24) என்கிறார்.

596 The first tragedy in Kamban:

E. T. Rajeswari, Tamil culture, I Vol, (1952) 3&4; 234-253, II Vol (1953) 1, 50-58

Comparative study of tragedy of Tataka as treated in Valmiki and Kampan's epic. A good piece of Theoretical criticism.

597. கம்பரும் வால்மீகியும்

நாமக்கல் கவிஞர்

இன்பநிலையம், மயிலாப்பூர், சென்னை-4; மு. ப. 1956; 4+370+2; ரூ. 4

கம்பரும் வால்மீகியும் (5-12), மாற்றியமைத்தது ஏன்? (13-17), இராமர் (17-33), சீதை (33-49), காலவேறுபாடு காரணமல்ல (50-55), இராவணன் சீதையைக் கவர்தல் (55-59), இராவணனும் சீதையும் (59-99), பெண்மைக்குப் பெருமை (100-132), இராமாவதாரம் (161-191), தசரதன் பெருமை (191-247), சரித்திரம் அல்ல (248-273) என்னும் 12 தலைப்புகளைக் கொண்டமைகிறது இந்நூல்.

முதற் கட்டுரை முன்னுரையாக அமைந்துள்ளது. வால்மீகி எந்த நற்பயனை மக்கள் அடைய வேண்டுமென்று இராமாயணத்தை ஆரம்பித்தாரோ அந்த நோக்கத்தைப் பூர்த்திசெய்யவே கம்பர் மாற்றியமைத்தார். வால்மீகி முனிவனின் வாக்கில் இராமன் என்ற பெயருடன் அவதாரம் செய்த நாராயணனை முழுமுதற் கடவுளாக்கி, கோடானு கோடி மக்களின் குலதெய்வமாக இராமனை விளங்கவைக்க வேண்டுமென்றே. இராமாயணத்தில் வருகின்ற ஒவ்வொரு பாத்திரத்தையும் அவரவர்க்குச் சேர்ந்த சொல்லிலும் செயலிலும் சுத்தமுள்ளவராக்கி அந்தந்த குணத்துக்கு அவரவரை உதாரணமாக்கி அறங்களை வலியுறுத்தினார்.

ஒரு சிறந்த மனிதனுக்கு அமையவேண்டிய சகல நற்குணங்களும் அமையப் பெற்றவராக வால்மீகி முனிவர் ஆரம்பத்திலே இராமரை அறிமுகப்படுத்துகின்றார். ஆயின் அந்தச் சிறந்த குணங்களுக்கு ஒரு சிறிதும் ஒவ்வாத வார்த்தைகளைச் சொன்னதாக எடுத்துக்காட்டுகளுடன் விளக்குகின்றார். போன்றே சீதையும் தன் பெருமைககு ஒவ்வாத வார்த்தைகள் கூறியிருப்பதை எடுத்துக் காட்டுக்களோடு விளக்கப்படுகிறது. கம்பரின் மாறுபாட்டையும் எடுத்துக்காட்டுகிறார். கம்பர் செய்திருக்கும் வேறுபாடுகள் வெறும்கால வேறுபாட்டின் காரணத்தால் செய்யப்பட்டனவல்ல — பஞ்சபூதங்களின் தத்துவம், அவற்றின் ஆதியாகவுள்ள பரம்பொருளின் தத்துவம் முதலிய நித்தியமான சத்தியங்கள் எக்காலத்திலும் மாறுவதில்லை.

வால்மீகி முனிவர் சீதையை மெய்த்தொட்டுத் தூக்கிச் சென்றதாகக் கூறுதல் முரணையும் அருவருப்பையும் உண்டாக்குகிறது. கம்பர் செய்த மாறுதல் சீதையைத் தீண்டாத கற்புடைய தெய்வத் திருமகளாக்கி நம்மை வணங்கச் செய்கிறது. வால்மீகத்தில் கபடத்துறவியுடன் சீதை உரையாடுவதும் அவள் குணத்திற்கு மாசினைத் தருகிறது. பல முரண்களையும் உண்டாக்குகிறது. மேலும் வால்மீகத்தில் கபடத்துறவி தன்னை இராவணன் என்று கூறுகிறான். கம்பனில் சன்னியாசி இராவணனுடைய பெயரைக் கூடச்சொல்லாமல் அவனுடைய பிரதாபத்

தைச் சொல்லுதல் கருதத்தக்கது. வால்மீகி இராமாயணத்தில் அடிக்கடி பெண்களை மிகவும் இழிவுப்படுத்திப் பேசப் படுகிறது—இலக்குவன் சீதையைக் கூறுதல். அகலிகையும் தாரையும் கற்பில்லாதவர்களாகச் சொல்லப்படுகின்றனர்.

கம்பர் மிகவும் பாராட்டத்தக்க மாறுதல்களைப் புகுத்திப் பெண்மைக்குப் பெருமை செய்திருக்கிறார். வால்மீகி ராமாயணத்தில்இராமர் தமது மேலான தகைமைக்குப் பொருந்தாத விதத்தில் பல இடங்களில் காணப்படுகிறார்—சூர்ப்பணகையிடம் பேசுதல். சூர்ப்பணகை இராமனிடம் தன்னை மணந்து கொள்ளும்படி கேட்பதும் மிகவும் அநாகரிகமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. கம்பர் வேறுவிதமாக மாற்றி அரக்கருடைய மாயாவித்தனத்தையும் இராமருடைய பெருந்தகைமையையும் அழகுற அமைக்கிறார். அரக்கர்களால் மனிதர்களுக்கும், தேவர்களுக்கும் செய்யப்பட்டு வந்த துன்பங்களை நீக்கி, அறங்களை நிலைநாட்டவென்றே அவதரித்த தெய்வமாகத்தான் இருவரும் சொல்லியிருக்கின்றார்கள். ஆனாலும் இராமன் யார் என்பதும் அவன் எப்படி அவதரித்தான் என்பதிலும் இருகவிகளும் வேறுபடுகின்றனர். கம்பர் அப்படி மாற்றியிருப்பது இராமனை என்றென்றும் எல்லோரும் வணங்கத் தக்க தெய்வமாக்கவேயன்றி வால்மீகி முனிவருக்குக் குறை சொல்லவல்ல. தசரதர் சொன்னசொல் தவறக்கூடாது என்று சத்தியத்துக்காக உயிரை இழக்கத் துணிந்தவர் என்றே வான்மீகி முனிவரும் கம்பரும் சொல்கிறார். ஆனால் வால்மீகியின் கதைப் போக்கில் அந்தநிலை தவறிவிட்டவர்போலத் தசரதர் காணப்படுகிறார்—3 காட்டுக்கள் தரப்படுகின்றன.

ஒவ்வொரு பாத்திரமும் அதனதன் பெருமைக்குப் பழுது வராமல் நடத்துக்கொள்ளச் செய்து, இராமகாதையை உண்மையாகவே தெய்வமாக்கதை யாக்கியிருக்கிறார், ஆரிய—திராவிட அனுமானங்களை வைத்துக்கொண்டு இராமாயணக் கதையைச் சரித்திரத்தோடு சம்பந்தப்படுத்த முயல்வது உண்மைக்கு உகந்ததல்ல. தருமத்தை நிலைநாட்டி அதருமத்தை அடக்க வென்றே அவதரித்த பரமாத்மாவேதான் இராமன் என்பதனைக் கம்பர் மிகவும் தெளிவாகச் சொல்கிறார். இலக்கியச் சிறப்பில் ஒரு முதனூலாகவே விளங்குகிறது. கம்பனுக்கு முன் இராமாயணம் தமிழ்நாட்டில் அசைக்கமுடியாத இடம் பெற்றுவிட்டது. (சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், நம்மாழ்வார், குலசேகர ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், சிலம்பு, மேகலை, புறம், அகம், கலி.)

கருத்துகள் அனைத்தும் எடுத்துக்காட்டுகளோடு நிறுவப் படுகின்றன. கம்பனைப்பற்றிய கவிதையோடு நூல் முடிவடைகிறது.

598. கம்பன் செய்த வம்பு (73—80)

இலக்கிய வழி (திருத்தப் பதிப்பு):- பண்டிதமணி சி. கணபதி பிள்ளை; திருநெல்வேலி சைவாசிரிய கலாசாலை பழைய மாணவர் வெளியீடு; திருமகள் அழுத்தகம்; சுன்னாகம்; 1964 ரூ: 3.

வான்மீகி இராமன் தந்தையின் கட்டளைப்படி காட்டிற்குப் போகவேண்டும் என்று கைகேயி கூற அவளை நிந்திப்பதையும், அரசிழந்து காட்டிற்குச் செல்லும் போது நாவற்பழம் போல் முகம் கரிந்து காணப்படுவதையும் சுட்டி, கம்பன் மாறுபடுவதை விளக்குகிறார். கம்பன் செய்த வம்பு எந்த இராமாயணத்தோடும் ஒத்துப்போகாத தாயின் கொலை என்று துளசியில் இராமன் வில் வளைக்கும் காட்சியைச் சுட்டுகிறார். ஆயின் வான்மீகிக்கும் மாறாகக் கவிதை செய்த கம்பர் ஏன் வான்மீகியின் வாக்கின்படியே கவிதை பாடுவதாகக் கூற வேண்டும்? என்று வினவி, வான்மீகத்தை இடையே எத்தனையோ பேர் தன் மனம் போனவாறு பண்ணி விட்டார்கள்; இராமனை முதலிய பாத்திரங்களை வான்மீகி எப்படி சிருட்டி செய்திருப்பார் என்று தமது அபார கற்பனா சக்தியினாலே கண்டு கவிதை செய்ததுதான் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் செய்த வம்பு என்கிறார்.

599. இராமனும் சீதையும் (129 – 137)

மண்ணும் விண்ணும்: குன்றக்குடி அடிகளார்;

தமிழ்ப்பண்ணை; தியாகராயநகரம்; சென்னை-17. மு. ப. சூலை 1966 ரூ. 4.

வான்மீகியோடு ஒப்ப வைத்து கம்பனை ஆராய்தல் கூடாது. சன்யாகல்ஃச் செய்தி கம்பனில் கிடையாது. அச்செய்தியிருப்பதாக விமர்சகர்கள் கூறும் பாடல்களில் அப்பொருள் அமையாது. கம்பன் காட்டும் இராமன் வேறு. வான்மீகி இராமன் வேறு. சீதையைத் தூக்கிச் செல்வதில் அமைந்துள்ள வேறுபாட்டைச் சுட்டிக் காட்டி சீதை மீது களங்கம் இல்லை என்கிறார். பிறிதொரு பெண் விரும்பாமல் அவளை இச்சித்தால் தலைவெடிக்கும் என்ற செய்தி இரு காவியங்களிலும் இல்லை. தீண்டினால் தான் வெடிக்கும் எனக் கம்பன் அமைத்துள்ளான். ராமன், சீதை இருவரும் பொற்புடையோர், போற்றுதலுக்குரியோர்.

600. கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா?

புலவர் கு. திருமேனி

இலக்கிய நிலையம், 30 ஆண்டார் தெரு; திருச்சிராப்பள்ளி-2. மு. ப. 1966 ரூ. 2.

அறிஞர் கருத்து (1-3), இருவர் கைபறவு (3) என் ஐயப்பாடு (3—8), உரையமைகம் (8—1). வான்மீகி இராமாயணம் வந்த

வரலாறு (14–15) மாறுபாடுகள் (15-19), எதிர் நூல் (19-20), அன்றைய சூழ்நிலை (21-24), நன்றி கொன்றவரோ கம்பர்? (24-26), தமிழில் பல இராமாயணங்கள் (26-51), ஆதிகாவிய மாறுபாடுகள் (51-58), வான்மீகர் வரலாறும் முரண்பாடுகளும் (53-63), வான்மீக - கம்பராமாயண மாறுபாடுகள் (63-69), கையடைப் படலம் (69-70), வேள்விப்படலம் (70), அகலிகைப்படலம் (70-71) மிதிலைக் காட்சிப்படலம் (7-72), குலமுறை கிளத்துப்படலம் (72-75), கார்முகப் படலம் (5), எழுச்சிப் படலம் (76), வரைக் காட்சிப் படலம் (76—77) பூக்கொய்படலம் (77), நீர் விளையாட்டுப் படலம் (77), உண்டாட்டுப்படலம் (77) எதிர்கோட்படலம் (77-78) உலாவியற்படலம் (78), கோலங்காண் படலம் (78), கடிமணப் படலம் (79), பரசுராமப் படலம் (79-81) நளகூடன் சாபம் (81-92), வான்மீகர் இராமனும் கம்பர் இராமனும் (92 - 107), புலால் உணவும் வான்மீகி இராமனும் (107-110) வான்மீகர் சீதையும் கம்பர் சீதையும் (110–13 ). மற்றைய உறுப்பினர் மாறுபாடுகள் (1 3-136)' முடிவுரை (13 ) என்று 35 சிறு தலைப்புகளினமைந்தது இந்நூல். சில அடிக்குறிப்புகளும் பயன்பட்ட நூல்களும் தரப்பட்டுள்ளன.

கம்பர் தமிழ்ச்சான்றோர் உரையின்படிதான் இராமாயணம் பாடியுள்ளார். கம்பர் பாடியது வான்மீகருக்கு எதிர் நூலாகும் ஆயிரம் பாடல்களுக்கு ஒருமுறை சடையப்ப வள்ளலுக்கு நன்றி செலுத்திய கம்பர் வான்மீகருக்கு நன்றி செலுத்தாததேன்? வள்ளுவர் நூல் இயற்றியதற்கு முன்னம் பாரதமும், இராமாயணமும் தமிழில் இருந்தன. உத்தரகாண்டம் வான்மீகி எழுதியதாகக் கூறியிருப்பது பிற்சேர்க்கை. தென்னகத்து மனுமரபில் வந்த இட்சுவாகு குலக்கொழுந்தாய இராமன் வரலாற்றினைச் செவிவழிக் கேட்ட வான்மீகி முனிவர் தாம் கற்றவற்றைப் புலப்படுத்தும் ஒருகருவியாக இதனை வைத்துக்கொண்டு ஒரு காவியம் பாடினர் என்றும் அவரைத் தொடர்ந்து வந்த பலர் தென்னாட்டுத் தமிழ் இராமாயணங்களையும், செவிவழி வந்த இராமன் வரலாற்றினையும் கேட்டுக் கேட்டுச் சேர்த்துச் சேர்த்துக் காவியத்தைப் பெரிதாக்கியுள்ளனர் என்றும் அதனால்தான் காவியத்தின் நிகழ்ச்சி முரண்பாடு, பண்பு முரண்பாடு முதலியன தோன்றியுள்ளன என்றும் நாம் முடிவு கட்ட வேண்டியிருக்கிறது.

வான்மீகி முனிவரால் இயற்றப்பெற்றதாகக் கூறப்படும் சத கோடி இராமாயணத்திலும், வான்மீகி ராமாயணத்திலும் கதை நிகழ்ச்சிகளிலும் உறுப்பினர் உறவு முறைகளிலும் பண்பாட்டிலும் வேறுபடுகின்றன வான்மீகரைப் பற்றிய வரலாறும், அவர் நூலியற்றிய செய்திகளும் பலவாறு முரணுகின்றன. கம்பருக்கும் வான்மீகருக்குக்கும் இடையே காணப்படும் முரண்பாட்டால்

வான்மீகி உண்மைக் கதையை அறிந்தவரல்லர் என்பதும் கேட்டதை வைத்து மாறுபாடு மலியத் தீட்டியுள்ளார் என்றும் தெற்றென விளங்கும். இராமன் பிறப்பினைக் கூறுகையில் கம்பர் யாகம் செய்முறைகளோ, பரி வேள்வியின் தன்மைகளோ குறிக்கப்பெறவில்லை. கலைமகளும், தமிழ்ச் சான்றோர்களும் காட்டக் கண்டு கூறிய கம்பர் இராமன் பண்பாட்டையும், வான்மீகர் இராமன் பண்பாட்டையும் ஒத்தும் உறழ்ந்தும் பார்த்தால் வான்மீகர் இராமனின் தெய்வப் பண்பினை எங்ஙனமெல்லாம் சிதைத்துவிட்டார் என்பது விளங்கும். பரதன் பண்பிலும் மாசேற்றப்படுகிறது.

கம்ப ராமாயணத்தில் இராமன் ஊன் உண்ண நேருமாறு ஓர் இடம் உண்டேயன்றி ஊன் தின்றதாகவோ, அது பெற வேட்டதாகவோ ஒரு சிறு குறிப்பும் இல்லை. வான்மீகர் தம் காலத்திருந்த மரபை இராமன்பால் ஏற்றிப் பேசிவிட்டார். கம்பர் சீதைக்கும் வான்மீகர் சீதைக்கும் பேச்சால், பண்பால், உணர்ச்சியால் செய்கையால் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடுண்டு. அகலிகை. தாரை, தசரதன், கும்பகருணன் போன்றோரைப்பற்றியும் பண்பழியவும் முரண்படவும் பேசியுள்ளார். வான்மீகி இராமயணம் முழுமையும் வான்மீகரால் இயற்றப்படவில்லை. வான்மீகர் இக்கதைக்கு என்றும் முதல்வராகார். இது இந்நாட்டில் ஆரியர் வருகைக்கு எத்தனையோ நூற்றாண்டுகட்கு முன் நடந்த நிகழ்ச்சியாகும் என்பது ஆசிரியரின் துணிந்த முடிவு.

ஈண்டு படலவாரியாகவும் வேறுபாடுகள் காட்டப் பெறுதல் குறிப்பிடத்தக்கது.

**601. கம்பரும் வான்மீகியும்**

கம்பநாடர்: (காரைக்குடியிலிருந்து வெளிவரும் மாதாந்த ராமாயண சஞ்சிகை. ஆசிரியர். மோ. வே. கோவிந்தராஜையங்கார்)

ராமன், வானரங்கள் ஆகியோரின் அவதாரநிலை பற்றிய இருவரின் கூற்றுகளையும் கூறுகிறார்.

**602. சீதை கற்பு (95—118)**

இலக்கிய உலகம்: மரிய அந்தோணி, எம்.ஏ., பூங்கொடிப் பதிப்பகம், விருதுநகர். மு. ப. 1962; இ. ப. 1967; ரூ. 2-50

இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லும் காட்சியை வால்மீகி, கம்பர், துளசி அமைத்துள்ள முறையை விளக்கிக் கம்பன் சிறப்பைக்காட்டி, 'வால்மீகியார் சீதைக்கு வேண்டாத களங்கமொன்றை விட்டு வைக்கிறார். துளசிதாசர் அக்களங்கத்தைப் போக்க முனைந்து சீதையின் கற்பு மேம்பாட்டை நிழலாக்கி விடுகிறார். கம்பர் அக்களங்கத்தை முறைப்படி போக்கியதோடு

சீதையின் கற்பிற்கு ஏற்றமும் தோற்றமும் அளிக்கிறார்', என்று முடிக்கிறார்.

603. **இராமாயண ரத்னகரம் (மோகனக்கடல்)**

ஹா. கி. வாலம்

மோகனப் பதிப்பகம்; மு. ப. 1977; பக். 16+395

முன்னுரை—கி. வா. ஜ., அணிந்துரை சா. கணேசன். வரலாறு, காவியத்தின் சிறப்பு, காவியத்திற்கான ஆதாரம் முதலியவற்றுடன் இராமாயணத்தின் பால காண்டத்தில் கம்பர், துளசி, வால்மீகி ஆகிய மூவரின் படைப்பிலும் ஒப்பாய்வு செய்கிறார்.

கம்பர் நாடகாசிரியர், வால்மீகர் சரித்திராசிரியர், துளசி சிறுகதையாசிரியர். ஒவ்வொரு பாடலாகக் கூறிச் சிறந்த விளக்கம் அமைக்கிறார். இராம இலக்குவர் தாடகையை வதைத்த பின் விசுவாமித்திரருடன் வழி நடப்பது வரை மிக விரிவாக ஒப்புமை, வேற்றுமைகளை ஆராய்ந்து கொண்டே செல்கிறார். கம்பனுடன் பிற இலக்கியங்களையும் தொடர்புபடுத்துகிறார்.

604. **Kambar and Tulasi**
or
**Pre Matrimonial love of Rama and Sita in Ramayana (in Hindi)**

S. S. Shankarraju Naidu M. A.

University of Madras, 1956, Rs. 6

605. **Unique contribution of Kambar and Tulasidas** (85—90)

Dr. R. P. Sethupillai Silverjubilee commemoration Volume, Dr. S. Shankarraju Naidu M. A., Ph. D., 1961, Palaniappa Bros., Madras - 5, Trichy - 7

The mastermind of Kambar has given entirely a Tamil Colour to it, both in form and spirit and brought out an original Tamil Ramayanam. Tulasidas's language in Ram charit Manas has taken a march over all the other earlier avadhi works and has opened a new epock in it's literary history. Among the very many source works for Tulasidas for his Rama charit Manas Kamba Ramayanam was also one. In the abduction of Sita, Tulasidas gives entirely a different pictures but ultimately fulfiling the same object of Kambar. These pictures are sufficient to prove that Kamban and Thulasidas differed very vitally from 'the Adi-kavya' and other earlier Ramayanas. These are true unique contributions in the world of Ramayana literature.

606. **A comparative study of Kambaramayanam and Tulasi ramayanam**

Dr. S. Shankarraju naidu M A., Ph D., P. R. B. S.(Lon.), University of Madras, Madras, 1971, 6+558+36

Forward Padmashri N. D. Sundaravadivelu

The book has seven chapters. They are I Ramayana - It's different versions, II Brief Survey of Ramayana in Tamil before Kamban and in Hindi before Tulasidas, III Kambar and Tulasidas, IV The story - A comparative study, V Characters, VI Literary Excellence and Socialogical concepts and VII Conclusion.

Ramayana has it's original sources in the Vedas(47). The original composer of Ramayana as we know today is Valmiki (47). Kambar was the son of the king Veera Varman. Kambar is supposed to have lived for about sixty years. Kambar and Tulasidas with them the spirit of the day and poured out their feelings of devotion to the one God, the supreme through Ramayana and created a common platform for all people to wash off their differences(101). The fourth chapter gives the whole story kanda by kanda and scene after scene, comparing the silent features of the two masterpoets with the back ground of Valmiki Ramayana and Adhyatma Ramayana whenever considered necessary, thereby clarifying the uniqueness of the trends of Kambar and Tulasi.

It is not the trend of the story alone but also the treatment of the situations, the characteristics features of persons and places concerned together with the magnitude of the picturization have been critically analysed and factual references furnished. This leads to the conclusion that Kambar was a Poet first and a Devotee next where as Tulasi was a Devotee first and a Poet next(454). The characters being the same in Kamba Ramayanam and Tulasi Ramayanam, the two poets have portrayed them independently so as to suit their Versons of the same story. In both Rama is Vishnu incornate, but in Kambar he is conscious of his being an incornation but not so in Tulasi. So is Sita too in Kambar and Tulasi. Kambar has tried to idealise all his characters as far as possible without losing the human touch, keeping in view the traditions of Tamil literature. Tulasi pictures Rama in a spirit of high de-

votion but he allows some characters to stay away from the path of human righteousness.

Kambar's characters are more colossalised than Tulasi's. Human achievement is more predominant in Kambar's characters where as in Tulasi divine powers work much more than the characters. In certain situations however, the characters of both the poets act humanly or superhumanly alike(496). Kambars language has reached greater heights than were already found in then highly evolved Tamil. Whereas Tulasi has created a refined style for himself in the Avadhi language of Avadh soil. The metrical compositions of both are onomatopoetically superb. So also figures of speech like simile and metaphor of both tho master-artists are two illuminating and exemplary. In their socialogical concepts, they differ greatly. Kambar has a cosmopolitation outlook and a high sense of brother-hood.

Tulasidas according to his own conception follows implicity the Hindu Concept of caste elevating the place of brhamins as the highest and shudras as the lowest in society. About womanhood, Kambar has not stated anything derogatory or demeaning. whereas Tulasidas has in several places expressed a frank opinion that the woman is a repository of bad qualities. He has relegated her to an inferior status in society. The social philosophy of both agree that prayer can overcome it's immutability(553). The Ramayana has entitling them with the greatest of places in their respective literary fields. It can well be stated that Kambar is the Thulasidas of the Tamil literature and Tulasidas is the Kambar of Hindi literature.

**607. கம்பரும் துளசியும் (237—241)**

*அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில் இராமேச்சுரம் மகா கும்பாபிஷேகச் சிறப்பு மலர், முதல் பகுதி: இரா. தண்டாயுதம் ஜூலை 1975; ரூ 20 பதிப்பாசிரியர் சோமலே*

*அவையடக்கத்தில் கம்பரைப் போலவே துளசியும் சிறந்து நிற்கிறார். இராம நாமத்தின் பெருமையைக் கம்பர் 'மும்மைசால் உலகுக்கு எல்லாம்' எனும் பாடலில் கூறியுள்ளதையும் துளசி கூறியுள்ளவைகளையும் கூறுகிறார். துளசி அதர்மம் தலைதூக்கும் போதெல்லாம் இராமாவதாரம் நிகழ்வதாகவும், அத்தகைய*

இராமாவதாரங்கள் பல நிகழ்ந்துள்ளதாகவும் பாட, கம்பர் இவ்வொரு இராமாவதாரத்தை மட்டுமே பாடுகின்றார்(241).

இராமர் - சீதை சந்திப்பில் வேறுபாடு, அகலிகை கதையினைத் துளசி பல நிலைகளில் பாடியுள்ளமைக்கு இரு சான்று முதலியன தருகின்றார். துளசி முதலில் பக்தராகவும் பின்பே கவிஞராகவும் விளங்குகின்றார். கம்பன் கவிஞரா? பக்தரா? என்று பிரித்தறிய முடியாத நிலையில் உள்ளார். இராம பக்தியைப் பாத்திரங்களின் வாயிலாக இருவரும் காட்டுவதைச் சுட்டியுள்ளார்.

608. **The Ramayana in Telugu and Tamil (A compartive study)**
C. R. Sarma

Lakshmi Narayana Grantha mala, Madras - 24, First Edi., 1973, 177 (Thesis submitted to the University of Madras for the Degree of Ph. D.)

Ramayana, the national epic 1—13, The Ramayana in Tamil 14—28, The Ramayana in Telugu 29—49, The Ramayana in Folk songs 50—67, Deviations from Valmiki in Ranganatha Ramayanam and Kambaramayanam 68—137, Delineation of characters 138—148, Budbha Reddi and Kambar 149—153, Conclusions 154—158. Appendix I works in Telugu based on or about the Ramayana 159—165. II works in Tamil based on or about Ramayana 166—169. Select Bibliography 170—172, Index 173—177.

Bala Kanda and Uttara Kanda in Valmiki are later interpolations and that the Ramayana has not come down to us in its purest original form(2). Valmiki is said to have lived in the second century A. D., may have developed the brief story of the original Ramayana into a big epic(20). Though Kamba Ramayanam is not as popular in the Telugu region as in the Kerala and Kannada regions, a proverb pased on, it is current among the Telugu speakers in the Chittur District. The proverb means *'what are you speaking Kambaramayanam?'* (23). However recently Kambaramayanam has been translated into Telugu and a few writings on Kamban's life and work are also available in Telugu(124). Kamban is said to be a contemporary of Kulothunga Chola III who was also known as Tyaga Vinothan. The Telugu Version appears to be closed to the original(73). Regarding the birth of Rama, R. R. speaks of the childhood of Rama and even mentions an incident while K. R. is silent about it, R. R. give detail that Indra

assumes the form of a cock(75). Though Valmiki does not say that Ahalya, after her husbands curse becomes a stone, this detail has found a permanent place in the Telugu and Tamil Versions(76). The premarital love of Sita and Rama is not found in Telugu.

The enimical reaction of Manthara is slightly different in R. R. It follows the original in the Departure of Rama from Ayodhya, The crow who approaches Sita is mentioned as merely a wicked crow and as advised by Vasistha, Bharata performs the funeral rites of Dasaratha Guga and Rama are known to each other. Lakshmana asks the Goddess of sleep to stay with his wife Urmila till the exile is over(83). The Sandals of Rama are placed on the royal elephant and the head of Bharatha(86). It is not by chance, but deliberately that Surpanaka' comes to Rama(87). Before leaving the hermitage Lakshmana draws seven lines around it and warns her not to go beyond them. He further says that if anyone tries to enter the hut crossing those lines, his head would break into several pieces the next moment(90).

When Ravana shows his real form Sita loses her courage and faints. Then he lifts her up and places her in his chariot(90). The episode of Ayomuki is not in R. R. Tara is beloved of Sugriva in R. R. He shows an intervention of Mandodari in the middle of Ravana and Sita's dilogue. The dream of Thrijada is narrated only after the Visit of Ravana and Hanuman also hears this. He has given the details about Chudamani. Ravana beats Vibhishana, The story of Hiranyakasipu is not found but the devotion of a squirrel is found.

The praising of Rama by Ravana is narrated in an interesting mannar. The false Janaka is not mentioned but Mandodari advices Ravana to give up Sita before the first battle has taken place between Ravana and Rama. One of the moving episodes in R. R. is that of Sulochana, the wife of Indrajit. The story of Kalanemi, Barata's dream also found. Rama's request to Dasaratha is not found. Installation of Sivalinga is narrated in detail. Guga comes to Nandigramma to meets Rama. He also gives 85 differences between Kamban and Ranganathan. In conclusion with 15 points he says that there should have been some common stories regarding the Ramayana among the Telugu and Tamil peoples.

**609. கவிகளும் இராமாவதாரமும் (70—79)**

நுண்பொருள் மலர்: பெ. நா. அப்புஸ்வாமி ஐயர்; 1937

இராமன் அவதாரம் எடுப்பதை வான்மீகி, காளிதாசன், கம்பர் ஆகியோர் எவ்வாறு கூறியுள்ளனர் என்பதைக் காட்டுகிறார்.

**610. கம்பனும் காளிதாசனும் (214—215)**

கலைமகள்: தொகுதி 14; பெ. நா. அப்புஸ்வாமி ஐயர் 1938 ரு. 2

கம்பனில் இராமன் தன் மனம் நாடும் பெண், கன்னிபாகவே இருத்தல் வேண்டும். (மிதிலை: 147) என்று எண்ணியது போலவே காளிதாசனின் துஷ்யந்தன் சகுந்தலை மீது விருப்புக் கொண்ட போது அவள் தன் இனத்தினுல் மணக்கத் தக்கவளாயிருக்க வேண்டும் என எண்ணினன் என்று இச்சிறு நிகழ்ச்சி ஒத்துள்ளமையைச் சுட்டுகிறார்.

**611. பாசனும் கம்பனும் (4,9)**

குமரன்; மு. கதிரேசச் செட்டியார்; ஏப். 1940

வடமொழி நூல்களில் இலக்கிய நயமுள்ள காட்சிகள் சில கம்பனில் இடம்பெற்றுள்ளமையைச் சுட்டி, கம்பன் வடமொழியை அறிந்திருந்தான் என்று கூறுகிறார்.

**612. மந்தரையும் அந்தோனியும் (10—17)**

பத்துக்கட்டுரை: து. இன்னாசி; தமிழரசன் பதிப்பகம்; 3-சி, கோச்செங்கட்சோழ நாயனர் தெரு, பாளையங்கோட்டை; நவ. 1974

பாத்திரங்கள் (மந்தரை, அந்தோனி) தங்கள் முயற்சியில் வெற்றி பெறுவதற்குக் கையாண்ட உரையின் திறனை உற்று நோக்கும்போது அவர்களைப் படைத்த கவிஞர்களது அளப்பரும் ஆற்றலை நம்மால் உணர முடிகிறது. அதிலும் கம்பனது நுண்மாண் நுழைபுலத்தை நமக்குத் தெளிவாகக் காட்டி நிற்கிறது. இருவரும் மாறுபட்ட குணமுடையோராயினும் தங்கள் குறிக்கோளை நிறைவேற்ற அவர்கள் மேற்கொண்ட உரையின் தொடக்கமும் முடிவும் ஒன்றுபட்டு இருக்கின்றன(11). எனினும் மந்தரையின் உரை அந்தோனியின் உரையினும் சில தனிச்சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கிறது(13) என்று சான்றுகளுடன் நிறுவுகிறார். உருவாக்கும் பாத்திரம் சிறிதாயினும், பெரிதாயினும் விருப்பிற்குரியதாயினும், வெறுப்பிற்குரியதாயினும் விட்டுவிட மனமின்றி ஒட்டி நின்று உறவாடவும் ஒன்றிப்போய் நின்றுவிடவும் உணர்வினைத் தட்டி விடுகின்ற வகையில் சொற்களைப் பெய்து, படிப்போரைப்பற்றி ஈர்த்து விடுகின்ற திறமை கம்பனுக்குக் கைவரப்பெற்ற ஒன்றாகும்.(17)

613. கம்பனும் மில்ட்டனும்

எஸ். இராமகிருஷ்ணன்

மீனாட்சி புத்தக நிலையம்: மதுரை. மு. ப. ஜூலை. 1956; இ.ப. நவ. 1956; மூ. ப. டிச. 1962; நா.ப. நவ. 1969; 256; ரூ. 4-75

மகாகவிகள் இருவர் (5-21), துறக்க நீக்கக்கதை (22-41) காவியக் கட்டுக்கோப்பு (42-125), இலட்சிய வாழ்வு (126-137), மந்திராலோசனை (138-152) சாத்தானும் இராவணனும் (153-195) காவியத்தலைவன் (197-245) பின்னுரை (246-256)

தமிழர் வரலாற்றின் பொற்காலத்துக்கு முன்னோடியாகத் தோன்றினான் கம்பன். அவன் பாடியது 885-ல் அரங்கேறியது(5). கம்பனும் மில்ட்டனும் ஏறமுடியாத எவரெஸ்ட் மலைமுடிமீதுஏறி நின்று அனைத்துலக மக்களையும் கண்பார்த்துக் காக்கத்துடித்த பொதுமை வாதிகளே(9). மேனாட்டுக் காவிய மரபைப் பின்பற்று வதென்றால் இராமாயணம் ஆரண்ய காண்டத்தில் தொடங்க வேண்டும். இராமனைக் கண்டு சூர்ப்பணகை காமுறுவதே காப் பியத்தின் முதற்காட்சியாக அமைய வேண்டும்(52). காலமுறைப் படி கதை செல்லும் இந்திய மரபால், பாலகாண்ட அயோத்தியா காண்ட நிகழ்ச்சிகளை நேரில் கண்டு அனுபவிப்பது போன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படுகிறது(53).

கதைக்குத் தேவையில்லாததே பரசுராமன் கர்வபங்கம். ஆயினும் இராமன் வில்லாற்றலுக்குத் தன்னேரில்லாச் சான்றாக அது விளங்குகிறது. மேலும் இராவணனைச் சிறைவைத்த கார்த்த வீரியனுடைய ஆயிரங்கைகளை வெட்டி வென்றவன் பரசுராமன். அவன் வலியை இராமன் அழித்தொழித்ததால், இராவணவதம் அவனுக்கு இயலுவதே என்பதை விளங்கச் செய்யும் வகையில் காவியப் பொருளுடன் ஒன்றுகிறது(73). ஆரண்ய, இலங்கை நிகழ்ச்சிகள் காவியத்தில் சிறப்பிடம் பெறுவதால், முன்னிகழ்ச்சி யான அயோத்திக்கதையை அளவோடு நடத்தவேண்டும். எனவே கன்யாசுல்கச் செய்தியை அராவி நீக்குவான் கம்பன்(74). கூனி வந்து, இராமன் வேறு பரதன் வேறு என்பதனைக் காட்டினாள். அதன் அடிப்படையில் அவளை அழிவு சூழும் வழியில் உந்தித் தள்ளினாள். இனத்தின் கயமையால் தூய்மை இவ்வாறே கெடும் (76).

சூர்ப்பணகையிடம் அவளது ஆவலைத் தூண்டுவான்போல் விளையாட்டாகப் பேசுவதும் பாட்டுடைத் தலைவனுக்கும் பழுதாகி விடும். ஆனால் அரக்கி ஆசையால் வந்தனளல்லள், அரசியல் சூழ்ச்சிக்காரியாகவே நண்ணினாள் என்று எண்ணியே இராமன் இப்படிப் பேசுகிறான் என்பது கம்பன் நிகழ்த்தும் காட்சி. இவ் வாறு தலைவனுக்குக் குறை நேராத வகையில் தகாத இச்சை கொண்ட தையலைக் கேலி செய்யும் காட்சியை அமைப்பதில்

வெற்றிபெறுகிறான் கம்பன்(87). இராம இராவணப் போரில் வாலி நட்புக்கு உண்மையாக நடந்து கொண்டான் எனில், இராமனை எதிர்க்கும் தீவினையாளனாக வேண்டும். இதையெல்லாம் தீர்க்க தரிசனத்துடன் உன்னியே இராமன் செயலாற்றினான் என்று துணிகிறான் வாலி(100).

இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பை வெவ்வேறு கோணங்களில் இனங்காண கம்பன் முனைகிறான்(125). மந்திராலோசனை வாதத்தில் பங்கு கொள்வோரில் இராவணன், கும்பகருணன், விபீடணன், இந்திரசித்து ஆகிய நால்வரே உயிர்த் தளிர்ப்போடு காட்சிதருகின்றனர். ஏனையோர் எவரும் தனிப்பண்புடையோராக விளக்கம் பெறாது போயினர். இக்காட்சியைக் காட்டுவதில் மில்ட்டன் கம்பனை மிஞ்சுகிறான். துடிப்பான விவாதங்களால் வளம் பெற்ற சட்டசபை அரசியலை நேரில்கண்டு அதன் நுட்பங்களைப் பயிலும் பேறு மில்ட்டனுக்கு வாய்ந்தது. கம்பனுக்கு வாய்க்கவில்லை(150). இலங்கை வேந்தன் ஆணவத்தால் ஒழுக்கம் துறந்த இழுதையானான் எனினும் தீமை இயற்றுவதில் கூட நுண்ணறிவையும் கலை உணர்வையும் பயன்படுத்துவான். இழிந்த காமத்தையும் கலையாகப் பயின்றவனாக இவன் மைதிலியிடம் பேசுவான்(178). எதிர்த் தலைவனுக்குரிய ஏற்றம் தந்து அறத்துக்கும் கடவுட் கருணைக்கும் விழுப்பம் தருவதில் கம்பன் மில்ட்டனை விஞ்சுகிறான்.

துறக்க நீக்கத்தில் தலைவன் என்று ஒருவனைச் சொல்ல முடியாதவராகிறோம். இராமவதாரத்தில் இந்தக்குறை நேரவில்லை. எதிர்பாராத திருப்பத்தினால் எழும் ஆர்வத்தோடு மீண்டும் அக்கினிப் பிரவேசக் காட்சிப்பாடல்களைப் படிக்கிறோம். அறத்தின் தலைவன் என்றும், புலவர் புந்தியான் என்றும் கருணை உள்ளத்தான் என்றும் கவி கூற்றாக இராமனைக் குறிப்பிட்டு அவன் பூண்ட கொடுமையில் கரந்திருந்த காதலையும், கருணையையும் ஞானத்தையும் கம்பன் சுட்டுவதைக் காண்கிறோம்(239) பின்னுரையில் கம்பன் வாழ்ந்த காலம் பற்றிய குறிப்புகள் தருகிறார். இந்நூலுக்கு சா. கணேசன் வாழ்த்துப்பா வழங்கியுள்ளார்.

6 14. **கம்பனும் மில்ட்டனும் (63—70)**

இலக்கியச் சுவை: ப ஜீவானந்தம்,

நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், 6/30, மவுண்ட்ரோடு, சென்னை-2. மு.ப. மார்ச் 1967 விலை ரூ. 2

ஜனசக்தியில் திரு. எஸ். இராமகிருஷ்ணன் எழுதிய 'கம்பனும் மில்ட்டனும்' என்ற நூலிற்கு ஜீவா எழுதிய மதிப்புரை.

கம்பன் பற்றிய புகழுரைகள், குறிப்பிடத் தக்க பதிப்புகள் ஆகியன கூறி, 'மில்ட்டனோடு கம்பனைக் கொண்டு வந்து நிறுத்தி ஒப்புமைகளையும் அலசிக்காட்டி, கம்பநாடான் ஏற்றத்தைப் புதிய பார்வையில், புதிய முறையில், புதிய பாணியில் சொல்கிறு(ர்)' என்ற தன் கருத்தினையும் கூறுகிறார்.

615. **Kamban and Milton** (A Comparative Study)

S. Ramakrishnan

Thesis submitted to Madurai University for the Ph.D Degree. July 1973

Chapters: The two poets in their rilicus, The Epic Tradition, The Prologues, Kosala and Paradise, The Rising action of the Ramayana, some Problems of the Rising action of Paradise Lost. The Crises of two epics, The Catastasis of the Ramayana, The denonements of the two epics., The age of Kamban - Appendix, Notes and Select bibliography.

It was the first fullscale attempt in the field of comparative literature in Tamilnad. Part I of the thesis deals with preliminaries. Chap. I relates the two poets to their milions and seeks to throw light on the parallels between to the poet's outlooks and their epics. Chap II makes a brief study of the epic tradition - Critical and creative, Indian and western in so far as it is releveant to an understanding of the two epics and to their comparison. The discussion of the epic tradition includes a study never before undertaken of the organic structure of Cillapatikaram, so that its influence on Kamban which is next only to that of Valmiki's epic may be made clear. A critical reconsideration of Miss. Helen Cardner's significant insight into the influence of Elezebethan drama on Milton's Epic is also attempted.

The thesis tries to tackle some of the Vexed problems connected with the epic age. The technique of plunging in medias res and epic unity. Part II opens with a comparison of the prologues to the two epics and it throws a new light on the role of the invocations. After comparing the two poet's Visions of perfection (Kamban's) Kosala, a communist Utopia and Milton's paradise of unfallen humanity), the thesis plunges into a Comprehensive study of the studied mechanically in isolation from themes, characters and imagery. While Chap. VII makes a structural comparison of the crises

and Chap. IX of the denouements, the rising actions of the two epics are studied separately in Chap. V and VI and the Catastasis of the Ramayana is dealt with the Chap. VIII.

Every where attention is drawn to the parallels and contrasts between the two epics in characterisation theme and imagery. Thus the thesis seeks to present the organic structures of the two epics and illuminate theme by comparative study. At the sametime, inview of the enormous advances made in Milton criticism (in contrast to the big lag in Kamban criticism), the structure of Milton's epic is not discusses in such detail as that of Kamban's epic. Thus, the mere repetition of what has been preceived and said by others is evoided as far as possible. Last but not the least the thesis has in a sense grown into a comparative study of Valmiki and Kamban as well, since Kamban's epic cannot be fruitfully studied in isolation from its Sanskrit source. In the appendix an attempt is made to settle the question of Kamban's date and give the conclusion as 9th cent..

616. **The Exordiums of Kambaramayanam and Milton's Paradise Lost—a study**(394—399)

*இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஒன்பதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, தொகுதி 1, அ. அ. மணவாளன்*

While the invocation has been conventional with the western epics to expressly beseech the muse, etc., to assist the poets in their works, KR merely affers prayer to the deity. The prayer of course implies a favour, i.e. to guide him through the work of creation(394). The muse in voked in KR is neither like a classical muse, a purely inspirational one nor like Miltons. KR invokes the Lord Supreme Himself and not any muses of lower denomination. Milton's initial invocatory passage contains the argument of the epic in nutshell. Kamban's exordium does not speak of such argument. Popularity of the story it seems probable, might his dissuaded Kamban form giving an account of the argument(396). Besides the invocation proper and the argument, Milton has initiated a tradition of personal digression which is also in KR. KR pays obeisence to human authority also, where as PL does not do so. The exordium in KR consists of eleven stanzas at the beginning of the epic from a separate section detachable with-

out detriment to the action of epic. Milton's PL does not speak in any of its exordiums of the sources meterial for his epic. On the other hand KR not only speaks of its source the Ramayana of Valmiki, but is all praise for the work and Kamban is all admiration and reverence for Valmiki(399).

617. **கம்பன் கவிதை** (66—75)

கவிஞன் குரல் (இலக்கியக் கட்டுரைகள்) வி. ஆர். எம் செட்டியார். B. A.; ஸ்டார் பப்ளிகேஷன்ஸ், No. 5, புதுச்சந்தைத் தெரு, காரைக்குடி; மு. ப. ஜூலை 1955; ரூ. 3

ஷேக்ஸ்பியரின் நாடகச்சுவையும், மில்ட்டனின் காம்பீரியமும், பைரனின் விருவிருப்பும், கீட்ஸின் அணிநடையும், டெனிஸனின் இசையோவியமும், ஷெல்லியின் பாடிமிதந்துசெல்லும் ஓசை நடையும் வேர்ட்ஸ்வொர்த்தின் சுடர்நடையும், ஹோமரின் வீராவேசச் சுவையும், வர்ஜில் தாந்தேயின் அருளினிமையும் கம்பனில் கலந்து குழைந்து இலங்குகின்றன (71). கம்பர் காவியம் ஒரு உணர்ச்சிக் கோபுரம் என்பதனைச் சீதை, இராமன் ஆகியோரின் பிரிவின் வருத்தப் புலம்பல்களைக் கொண்டும், ஓசையினிமையையும் (படுமதகரி சிந்தின) கற்பனை நயத்தையும் வடித்து, சேக்ஸ்பியரின் கவிதைகள் சிலவற்றையும் அவற்றுடன் ஒன்ற வைத்துக் காட்டுகிறார்.

618. **கவி உலகில் கம்பன் இடம்** (87—99)

தென்றல் தந்த கவிதை : தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; தமிழ்ப் புத்தகாலயம்; மு. ப. 1964; இ. ப. 1971; ரூ. 2-50

பாதகன் ஒருவன் பெண்ணினுக்குச் செய்யும் தீங்கைக் கண்டு இயற்கையே துயருரும் நிகழ்ச்சியைக் கம்பர், வான்மீகி, ஹோமர், மில்ட்டன் என நால்வரும் கூறியுள்ள விதத்தினைக் கூறி, அவற்றில் சொல்லுக்குச் சொல்லழகு ஏற்றுவதிலே கம்பன் எல்லோரையும் விஞ்சத்தான் செய்கிறான் என்கிறார். சுவர்க்கத்திலிருந்து அகற்றப்பட்ட சாத்தான் தன் சகாக்களைப் பார்த்துப் பேசும் காட்சி, இலக்குவனிடம் தோல்வியடைந்த இந்திரசித்துத் தன் தந்தையிடம் சீதையை விட்டுவிடும்படிக் கோரும்பொழுது கூறும் இராவணன் பதிலோடு ஒத்துள்ளது. இதில் கம்பன் உலக மகா கவிகளில் சிறந்தவன் என்று முடிவு செய்யப்பெற்ற மில்ட்டனையே மிஞ்சித் தலைமைபெறுகிறான்.

**அகராதி**

அ. சே. சுந்தரராஜன், கம்பராமாயண அகராதி ஒன்றினை உயிர் எழுத்துகளுக்குத் தொகுத்துள்ளார். இவரின் இம்முயற்சி முழுமைபெறின் மிக்கப்பயனுடைத்தாகும்.

**619. கம்பராமாயணம் அருஞ்சொல்லகராதி** (மாதிரிப் பிரதி)
தொகுப்பு: அ. சே. சுந்தரராஜன்
73-A, கீழவீதி, சிதம்பரம்; Dec. 1967; பக். 76
அகரத்தை முதலாகக் கொண்ட சொற்களை இதில் தொகுத்துள்ளார்.

**620. ஸ்ரீமத் கம்பராமாயண அகராதி** (தொகுதி-1. ஆ—ஔ)
ஆ. சே. சுந்தரராஜன் B.A.
79. பெருமாள்கோவில் தெரு, பாண்டிச்சேரி; ஜூலை 1971; 14+15+16+391; ரூ. 15
அணிந்துரைகள் 14 பக். முகவுரை 15 பக். செய்யுட்களின் மாற்று எண் அட்டவணை 1-16 பக். அகராதி 1-391 பக்

Dr. மு. வ, க. ச. அருள்நந்தி, கி. வா. ஜ, கிருபானந்தவாரி, ஏ. வி. சுப்பிரமணிய அய்யர், சி. கணபதிப்பிள்ளை, சா. கணேசன், வெள்ளைவாரணனார் ஆகியோரின் அணிந்துரையும், தெ. பொ. மீ. அவர்களின் முகவுரையும் கொண்டது. மேலும் முன்னுரையில் ஆசிரியர் நான்கு கம்பராமாயண வழிநூல்கள் பற்றி கூறுகிறார். மோரூர் அந்தப்ப நல்லதம்பிக் காங்கேயன் என்னும் கொடை வள்ளல் விருப்பத்திற்கிணங்கி, முத்தமிழ்ப் புலவராகிய பத்தர் பாடி எம்பெருமான் கவிராயர் தக்கை யென்னும் இசைப்பாவினால் 3245 பாடல்களாக 17ஆம் நூற். பாடித் தந்துள்ளனர். நூல் இன்னும் அச்சிடப்படவில்லை. பாரதியப்பன் என்பவரால் இயற்றப்பட்ட இராமசெயம் (இராமாயண திருப்புகழ்) முழுவதுமாக அச்சிடப்படவில்லை. இராமநாடகக் கீர்த்தனைகளை சீர்காழி அருணாசலக் கவிராயர் பாடியுள்ளார். 4000 பாடல்கள் உள்ள இராமாயண வெண்பா மற்றொன்றுங்கும். கம்பராமாயணப் பதிப்புகள் பற்றியும் கூறுகிறார். அண்ணாமலை, வை. மு. கோ, கலாஷேத்திரம், எஸ். ராஜம் ஆகிய பதிப்புகளை பயன்படுத்தி அகராதியை அமைத்துள்ளார்.

ஒருசொல் உணர்த்தும் பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் உதாரண மேற்கோள் பெரும்பாலும் கொடுக்கப்பட்டுள்ளன. பல இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட உதாரணங்களும், அதற்கும் அதிகமாக இருப்பின் வரும் இடம் மட்டும் குறிக்கபபட்டுள்ளது. எப்படி அகராதியைப் பயன்படுத்த வேண்டும் என்பது பற்றியும் தருகிறார். ஏறக்குறைய 5290 சொற்கள். பிழையும் திருத்தமும் கொடுத்துள்ளார். எந்தப் பதிப்பில் எந்த எண் என்பதற்கு எண் அட்டவணை கொடுத்துள்ளார்.

## பொது

மேற்கண்டவற்றுள் அடங்காது தனித்து நிற்பன இப்பகுதியில் அமைக்கப்பட்டுள்ளன. நச்சுமுறி (கம்பன் கெடுத்த

காவியம்), சொ. முருகப்பன் (கம்பர் காவியம்) எஸ். வையாபுரிப் பிள்ளை (கம்பன் காவியம்) நாமக்கல் கவிஞர் (காந்தியடிகளும் கம்பநாட்டாழ்வாரும்) S. Singaravelu (The Ramayana and its influence in the literature Drama and Art of south and south east Asia), V. V. S. Aiyar (Kambaramayana A Study) ம. பொ. சிவஞானம் (கம்பர் கவியின்பம்), எம். எம். இஸ்மாயில் (கம்பன் கண்ட இராமன்) தே. சொக்கலிங்கம் (இராமயணத் தும்மைப்போர்) போன்றோரின் எண்ணக் குவியல்கள் இங்குச் சுட்டத்தக்கன.

621. **Kampanology**:

C. S. Brito: Siddhanta Deepika Vot, III. (1900) lo & 11—220-222

It deals with the semantic side of some words used in Kambaramayanam. Though doubtful of its total value, for individual words, the study is quite interesting.

622. **இராமாவதாரம்** (136—139)

செந்தமிழ்: தொகுதி—1; ரா. இராகவையங்கார்; (1902-1903)

கம்பன் தான் எழுதிய நூலுக்கு வைத்தபெயர் இராமாவதாரமே என்பதனைச் சான்றுகாட்டி நிறுவுகிறார். புறத்திரட்டு நூலுள் காணப்படும் 'எய்தவின்னல் வந்த போழ்தி யாவரேனும்', 'மேவுகான மிதிலையர்கோன் மகள்' முதலிய பாடல்கள் இடைச் செருகல்கள். முன்னால் இருந்ததாகக் கூறப்படும் இராமாயண நூலின் செய்யுளாக அவை இருக்கலாம் என்கிறார்.

623. **கம்பர் குறித்த தமிழ்ப் பெருமை** (395—407)

செந்தமிழ் தொகுதி: ரா. இராகவையங்கார்; 1904—1905

மாதுலன் (மகட் கொடுத்தானுக்கு வழங்கும் சொல்), இராமன் சீதை காதல் மணம், இராவணன் பன்னசாலையோடு சீதையைக் கவர்தல், தமிழின் பெருமை கூறுமிடங்கள், தமிழ் நாட்டின் பெருமையுரைத்தல் முதலியவற்றால் கம்பர் தமிழ் நாட்டின், மொழியின் பெருமையைக் கூறியுள்ளமையைக் குறிப்பிடுகிறார். இக்கட்டுரைக்குத் தொடர்ச்சி இல்லை.

624. **கம்பராமாயண நீதிச்செய்யுட்கள்**

ஆனந்தபோதினி: பூ. ஸ்ரீநிவாசன்; ஜூலை 1922, சன, மார்ச், ஜூன், ஜூலை, செப். 1923.

நாட்டு: 10, தாடகை வதை: 15, 43, 67, 72, வேள்வி; 29, 30, 33, வரைக்காட்சி: 20, உலாவியற்: 19, மந்திர: 21, மந்தரை சூழ்ச்சி: 21, கிளை கண்டு நீங்கு: 106, 107—114, அகத்தியர் 14, வாலி வதை 112, கிட்கிந்தை: 62, 95, காட்சி: 72, சிங்கார வதை:

58, பண்ணிவிட்டு: 96, 98, விபீடணனடைக்கல: 123, 128, வருணனை வழிவேண்டு: 80, சேதுபந்தன: 20, 53, மகுடபங்க: 31, முதற் போர்புரி: 249, இராவணன் வதை 124, 129 முதலிய பாடல்களைத் தொகுத்து, மேற்கோள்களுடன் விளக்கிக் காட்டுகிறார். இதன் பின் உத்தர காண்டத்தினின்றும் பாடல்களைத் தொகுத்துள்ளார்.

625. **கம்பர் கவியின் செந்தமிழ் இன்பம் (273—279)**
ஆனந்த போதினி: தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்; அக். 1932

கம்பரின் தமிழ்ப்பற்று, நாட்டுப்பற்று, தமிழ்நாட்டுப் பண்பினை (சீதை உடன் காடேகுவது கற்பு நிலை) ஆளும் திறம் ஆகியவற்றைக் கூறுகிறார்.

626. **கம்பர்**

ஏ. சி. பால்நாடார்
கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா வெளியீடு, 1938

9-ம் நூற். திருவழுந்தூரில் உவச்சர் குலத்திலே பிறந்தார். 'தென் சொற்கடந்தோன் வடசொற்கலைக்கெல்லை தேர்ந்தான்' என்று கதாநாயகனுக்கு உரைத்தது அவருக்கே பொருந்தும். கம்பர் குறித்த பாவின் தன்மைகளனைத்தும் அவர் நூலகத்தே உள்ளன. ராமனின் பேராண்மையும், சீதாதேவியின் கற்புநிலையும், சூர்ப்பநகை இராவணன் இவர்களின் நெறிதவறிய காமமும், அதனால் அவர்களின் குலத்திற்குண்டான நாசமும் காவியத்தின் முக்கிய பொருளாகும். கம்பராமாயணத்தையே சுருக்கமாகக் கூறியுள்ளார்.

627. **பாளையங்கோட்டை ஸ்ரீமத் கம்பராமாயண ஆராய்ச்சிக் கூட்டம் நினைவுமலர்**
அக். 1939, 13+42 பக்.

ராமாயணம் (சி. வீரபாகுப்பிள்ளை) I—VIII, ஆழ்வார்கள் அருளிச் செயலமுதமும் கம்பர் கவியமுதமும் 1—26, ஸ்ரீமத் கம்பராமாயண நீதிமணிகள் (வி. சின்னத்தம்பியா பிள்ளை) 27—42

ஒரு தமிழ்மகன் கம்பராமாயணத்தைப் படிக்கவில்லையானால் அவன் தமிழ்மொழியின் செம்பாதி அழகை இழந்து விடுகின்றானென்று சொல்லவேண்டும்(II). வீரராகவ முதலியார் என்பவர் கம்பராமாயணம் முழுமையையும் நெட்டுருப் பண்ணியிருந்தார் (III). இலங்கையை அரசாண்ட பரராச சேகரரிடம் கம்பராமாயண அவதானம் செய்து யானைக்கன்றும் வளநாடும் பரிசில் பெற்றார்(IV). இத்துடன் கம்பன் பாடல்களில் சிலவற்றின் கவிநயத்தினையும் காட்டுகிறார். எனினும் இம்மலர் கட்டுரை முற்றுப் பெறவில்லை. அடுத்த கட்டுரை கம்பரை வைணவராக, காப்புச்

செய்யுட்களிலிருந்து ஆறு சான்றுகளும், நூலிலுள்ளிருந்து 37 சான்றுகளும் தந்து காட்டுகிருர். கம்பராமாயாணப் பாடல்களின் தொகுப்பே கம்பராமாயண நீதிமணிகள் ஆகும்.

628. கம்பர் யார்?

டி. கே. சிதம்பர முதலியார்

புதுமைப்பதிப்பகம்; 3, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை, மு. ப. 1941; 124; ரூ. 1

கம்பரும் உலகக் காட்சிகளும் (1—14), கம்பரும் மக்கள் இயல்பும் (15—20), கம்பரும் நாடகப் பண்பும் (28—40), கம்பரும் உடல் வனப்பும் (41—50), கம்பரும் நீதி நெறியும் (51—60), கம்பரும் அவதாரத் தத்துவமும் (61—73), கம்பர் கவிக்கு வந்தவினை (74—99) பாட்டினுல் வந்த தலைக்கிறக்கம் (101—124).

கம்பர் உலகக் காட்சிகளை வருணிக்கும்போது ஏதாவது ஒரு மனுஷ பாவத்தை உள்ளே ஏற்றி விடுவார்(6). கம்பருடைய வருணை சக்தியை, கவியின் நாலடியையும் சேர்த்து முழு உருவமாகப் பார்த்தால்தான் தெரியும்(8). யுத்த தேவதை கொலுவீற்றிருக்கும் போது இலக்குமி தேவியும் கேவலமாகத்தான் கருதப்படுவார்கள். யுத்தம் என்பது உலகத்தை விட்டு என்று நீங்குமோ அன்றுதான் உலகத்துக்குச் செல்வமும் சேமமும். அப்படி ஒரு ராஜ்யம் வேண்டும் என்பதே கம்பருடைய லட்சியம் (27). நாடகத்தில் அனுபவிப்பது இரண்டு விஷயங்கள் ஒரு இதயபாவம் மற்றொரு இதய பாவத்தைத் தாக்கும்போது எழுகிற சொல் ஒன்று (சான்று: கும்பகர்ணன்-இலக்குவன் வீரவுரை போர்க்களத்தில்). இரண்டாவது செயல் அல்லது மெய்ப்பாடு. (சான்ருக ராமன் வருகிருனென்ற செய்தியைக் கேட்டவுடன் பரதன் உள்ளத்தில் உண்டாகும் மெய்ப்பாட்டினை அவன் அடைந்த நிலையில் காட்டுகிருர்).

சக்தியோடு உயர்ந்த மனப்பண்பும் சேர்ந்துவிட்டால் அந்த உடலுக்கு உண்டாகிற அழகு மிகவும் மாற்று உயர்ந்ததாகப் போய் விடுகிறது(43). வீரன் ஒருவன், வீர தத்துவம் படைத்த சிறந்த உருவத்தைப் பார்த்துவிட்டால் அவனுக்கு வருகிற ஆனந்தத்தைச் சாமானிய மக்கள் உணரமுடியாது(45) என்று இராமனைக்கண்ட சுக்கிரீவன் சொற்களை உதாரணமாகக் காட்டுகிருர். ஆனந்தத்திலும், சிருங்காரத்திலும், கலியாண கோலத்திலும், தவக்கோலத்திலும் திகழ்ந்த சீதையின் அழகைக்காட்டி சீதையினுடைய அதிசயமான பெண்தன்மை, ஆண்தன்மையைவிட எவ்வளவோ சிறந்து விட்டது(49) என்கிருர். சொல்லில் மட்டுமல்ல செயலிலும் மனங்கட்டுப்பட்டே கிடக்கிறது. அதுதான்

நீதி தரும் என்று கூறி சான்றாகப் பரதனையும், நியாய உணர்ச்சிக்குக் கட்டுப்பட்டுள்ள ஒருவன் அநியாய உலகத்தில் அகப்பட்டுக் கொண்டால், அவன் மனத்திற்கு அதுபோல் துன்பம் கொடுக்கக் கூடியது வேறில்லை(58) என்று, அதற்கு விபீடணனையும் சான்றாகக் காட்டுகிறார்.

அடைக்கலமாக வந்தவன் நமக்கு விரோதமாகத் திரும்பி விடுகிறான் என்றாலும் அதனால் நமக்கென்ன நஷ்டம் என்னும் இராமனுடைய மனப்பாங்கே நீதியிலெல்லாம் நீதியாம். கடவுள் தத்துவத்திலேயே மனதைத் திளைக்கச்செய்து கொண்டிருக்கும் வசிஷ்டர், ராமனைக் கடவுளம்சம் என்று எண்ணுவதிலும் சொல்லுவதிலும் பொருத்தம் உள்ளது(68). வீரவழிபாட்டின் வாயிலாகக் கம்பர் இராமனைக் கடவுளாக்கினார் என்பது ஆசிரியர் கருத்து(72) கம்பராமாயாணத்தில் உள்ள இடைச்செருகலான பாடல்களைச் சுட்டி அவற்றைக் கவிக்கு வந்த வினையாகக் காட்டுகிறார். கம்பரைப் படிப்பதற்காக இலக்கணம், நிகண்டு, அகராதி படிக்கவேண்டாம். வாழ்க்கையிலுள்ள தத்துவங்களையெல்லாம் படிக்க வேண்டும் என்பது ஆசிரியர் கருத்து(98) ஆவின் கொடைச் சகரர் ஆயிரத்து நூறொழித்து' எனும் பாடலைக் கொண்டு கம்பன் காலத்தைக் கணக்கிடுவது தவறு, சகரர் ஆயிரத்து நூறு என்றால் ஏதாவது ஒரு கூட்டத்தைத்தான் குறிக்கும். ஆண்டைக் குறிக்காது (117) சாலிவாகன சகாப்தம் எண்ணூற்றேழில் நூல் அரங்கேற்றப்பட்டது எனலாம்.(113).

எளிய நடையில் விரிவான விளக்கங்களுடன் இனிமையாகத் தன் கருத்துகளைக் கூறிச் செல்கிறார்.

629. **சூர்ப்பணகையின் மகன்** (3.116—3.165)

ஸ்ரீ கோபால கிருஷ்ணமாச்சாரியர் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா மலர்மாலை, பெ. ந. அப்புசாமி ஐயர், அக். 1942

கம்பனின் பெருமையில் ஈடுபட்ட ஆந்திரர்கள் இதை ஒரு பாராயண நூலாகக் கொண்டிருக்கிறார்கள் (3.101). மலையாளத்தில் கம்பராமாயணத்தை நடிப்பதற்கென்று மண்டபங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. (இவர் கூறியுள்ள ஏடு பாலக்காட்டுப் பக்கத்துப் பிரதியாகும்) சூர்ப்பணகைப் படலத்தைக் கொடுத்து வேறுபாட்டைச் சுட்டுகிறார். இங்கு வான்மீகியும். கம்பரும் காட்டாத சம்புகுமாரன் என்பவனைச் சூர்ப்பணகையின் மகனாக சிருஷ்டித்து அவனை இலக்குவன் தவறுதலாகக் கொன்று விட்டதாக அமைத்துள்ளனர்.

630. **அரக்கர் தமிழரா?**

தமிழ்ப்பொழில்; **ஆர். பி. சேதுப்பிள்ளை; ஏப். 1943; பக். 18-20**

இக்கட்டுரை; 6-4-43 அன்று கரந்தை தமிழ்ச்சங்கப் பெரு மன்றத்தில் ஆற்றிய விரிவுரையின் சுருக்கமாகும். போர்க்களத் திணைக் காட்டி சீதையை உளம் நலியச் செய்தது, சீதை, இராவணன் என ஐயம் கொள்ளக் கூடாது என்பதற்காக அவன் அறியாத திராவிடமொழியில் அனுமன் பேசியது, வடமொழி யிசையாகிய சாமகீதம் பாடியது ஆகியவற்றைச் சுட்டி இராவணன் தமிழன் அன்று என்கிறார். கும்பகர்ணன், 'ஆரிய' என விளித்தல் புலத்தியன் மரபு தன்மரபு எனக் கூறுதல் ஆகிய வற்றால் அரக்கர்கள் ஆரியகுலத்தவர் என்கிறார். இராமன் தென் சொற்கு எல்லை சேர்த்தான் என்பதால் திராவிடன் எனக் கொள்ளினும் இழுக்காகாது(19). இக்கட்டுரையின் முடிவில் தலைவர் முடிவுரையாக (நா. மு. வேங்கடசாமி நாட்டார்) தொல். வரையறுத்த தமிழ் எல்லைக்கப்பாற்பட்ட நாட்டில் இராவணன் வாழ்ந்தான். சோதிட நூலார் தேவகணம், மனிதகணம் இராக்கத கணம் என்பதால் அரக்கர், ஆரியருமல்லர், தமிழருமல்லர். இரக்கமென்ற ஒரு பொருளிலா அரக்கர், அறம்புகா இலங்கை என்றது கவியின் உயர்வு நவிற்சி கூற்றும். சோழர்களும், தசரதன் குடியினரும் சூரிய குலத்தவரென்றே வழங்கப்படு கின்றனர். ஆதலின் இருகுடியினரும் ஒருகால் வழிவந்தவர்போல் தோன்றுகின்றனர்(20) என்று கூறியுள்ளதும் அமைந்துள்ளது.

**631. ஸ்ரீராமர் தியாகம்** (நாடகம்)

சுத்தானந்தபாரதியார்

அன்புநிலையம்; இராமசந்திரபுரம்; 1946, 106

மிதிலையில் சீதையின் திருமணத்திலிருந்து இராமன் சித்ர கூடம் ஏகுதல் வரை முழுநிலையில் கம்பனின் வாய்மொழிகளை வைத்து இந்நாடகத்தினை ஆக்கியுள்ளார். ஓரோரிடங்களில் அடிக்குறிப்பில் வால்மீகி, துளசியிடமிருந்து கம்பர் வேறுபடு வதைச் சுட்டுவது சிறப்பிற்குரியது. (பக். 26, 65, 89) இடையில் எடுத்தாண்டுள்ள பாடல்களுக்கு அருஞ்சொற் பொருளும் அதனடியில் கொடுத்துள்ளார். அரிய, இனிய கம்பன் கலைநாடகம் என்று நூலாசிரியர் கூறியிருப்பது பொருத்தமே.

**632. கம்பரச ஆராய்ச்சி**

கு. பால்சுப்பிரமணிய முதலியார்

கம்பர் பதிப்பகம்; 28, முத்துகிருஷ்ணன் தெரு; கொண்டித் தோப்பு; சென்னை-3; மு. ப.செப். 1949; 10+187

முகவுரை—8, முன்னுரை—9–10, அயோத்திமக்களின் இயல்பும் கம்பர் கவித்துவ பண்பும் 1-44, விருந்தின் விளக்கம் 45-66, கம்பநாடகம் 67-91, நல்ல எழுத்தாளர் 92-108, கம்ப சிருட்டி 109-120, பேசுவது மானம் இடைபேணுவது காமம் 121-135, கம்பசித்திரம் 136-148, கம்ப சூத்திரம் 149-158. ஏது காம

ரசம் 159-187, முதலிய தலைப்புகளின் கீழ், சி. என். அண்ணுத் துரையின் 'கம்பரசம்' எனும் நூலுக்கு மறுப்புரைக்கின்றார்.

கம்பரசத்தில் கம்பரை வரம்பிகந்து இழித்துரைக்கும் திறங்கள் மிக்குக் காணப்படுகின்றனவேயன்றி ஆராய்ச்சித் திறம் காண்பதற்கு அரிதாகவே இருக்கிறது(6). என்று, கா. ர. கோவிந்தராஜ முதலியார் முகவுரையில் கூறியுள்ளார். முன்னுரையில் நூலாசிரியர், 'கம்பருடைய கவிகள் காமரசம் நிரம்பியதென்று சி. என். அண்ணுத்துரையார் தவருக உணர்ந்தமைக்குக் காரணங்கள் பல. அவற்றுள் அல்குல், மேகலை என்னும் சொற்களுக்கு அவர் பொருளறியாமை ஒன்ருகும், அவர் அந்நூலில் காட்டும் பொருள் கம்பர் கவியின் ரசமற்ற தன்மை. இத்தன்மைக்குக் 'கம்பரசம்' என்னுந் தலைப்பு எங்ஙனம் குறிப்பதாகும்?(2) என்று வினவுகின்ருர். கம்பரசத்தின் ஒன்பது பிரிவுகளையும் ஆராய்ந்து அவற்றை ஒன்றன்பின் ஒன்ருக மறுத்தலோடு கம்பர் கவிரசத்தினையும் ஆங்காங்கே விளக்கியுள்ளார். கம்பரசத்தில் காட்டப்பட்டுள்ள குறைகளை ஒவ்வொன்ருகக் கூறி அவற்றினைத் தகுந்த காரணங்களுடன் மறுத்துரைக்கின்ருர்.

1. கம்பராமாயணத்தை முற்றிலும் படித்ததாகத் தெரியவில்லை(6). 2. இலக்கணப் பிழைகள் பல. 3. அவ்வவ் பாடல்களைக் காட்டி பொழிப்புரை, கருத்துரை, முன்பின் பொருத்திக் காட்டல் முதலியவற்ருல் மறுப்பு, 4. பொருள்களைப் பிழைபட உணர்ந்தமை(30). 5. முரண்பட்ட கூற்றுகள்(40), 6. தன் கருத்துகளை வலியுறுத்த உவமைகளில் காட்டும் பிழை(75). 7. பின்பற்றிய (வை. மு. கோ) உரையில் உள்ள பிழை(62, 57), 8. குற்றச்சாட்டுகள் பொருந்தாமை, 9. நூலில் கையாண்டுள்ள ஆபாசசொற்கள் (120, 121), 10. பிற இலக்கியங்களுடன் ஒப்பு நோக்கிக் காட்டல்(102), 11. ஒப்புமை காட்டியுள்ள பகுதிகளின் குறைகள்(167) முதலியவற்ருல் இம்மறுப்பு நூலமைந்துள்ளது.

**633. கம்பர் (41—44)**

கடற்கரையிலே : ரா. பி. சேதுப்பிள்ளை, பழனியப்பா பிரதர்ஸ்—
மு. ப. 1950; எ. ப. 1967; ரூ. 1-50

பாண்டியநாட்டுக் கடற்கரையிலுள்ள பழம் பதிகளில் ஒன்று திருப்பசயனம் என்னும் திருப்புல்லணை. திருப்புல்லாகிய தருப்பையைத் தலையணையாக வைத்து, கருங்கடலை நோக்கி கருணையங் கடலாகிய இராமன் வரங்கிடந்தமையால் திருப்புல்லணை என்று அப்பதிக்குப் பெயர். அவ்வீரன் நின்ற நிலையையும் நெடுங்கடல் அவனை வரவேற்ற நீர்மையும் கண்ட கம்பர் கூற்றினைத் தொகுத்து உரைநடையில் தருகிருர்.

634. கம்பரும் காந்தீயமும்: ஆத்தானக் கவிஞர் ஆராய்ச்சி சரியா?
தமிழ்ப்பொழில் : அ. கிருஷ்ணசாமி நாயுடு 1950; (35-40, 65-72)

கவிஞர் சொல்லும் அகிம்சை ஆராய்ச்சி கம்பர் கருத்துக்குப் பொருந்துமா? பொருந்தாதா? என்ற ஆராய்ச்சியை, கம்பரின் காவிய அமைப்பு, கம்பரின் இராவணவத அமைப்பு என இரு வகையாகப்பிரித்து ஆய்கிருர், அரக்கர்களையோ, தீயோர் களையோ இம்சை முறையால் அழிப்பதுவே இராமபிரான் திருவவதாரத்தின் அடிப்படை நோக்கம்(36). இராமன் படித்ததும் பயின்றதும் போர் படிப்பும், போர்த்தொழிலுமேயாகும். தாடகை வதம் முதல் இராவணன் வதம் வரை இராமனது செயல்கள் இம்சை முறையாகும். வாலிவதையில் அகிம்சையைக் கைக்கொண்டிருக்கலாம். அங்கும் இம்சையைக் கையாளுகிருன்.

இராமன் பகைவரை வெல்லும்முறை அகிம்சை முறையில் இருக்க வேண்டுமெனக் கம்பரும் பிற இராமாயண ஆசிரியன் மாரும் நினைக்கவில்லை(37). அங்கதன் தூதில் உள்ள போர்க்கள வீரமொழிகளில் அகிம்சையை எதிர்ப்பார்க்க முடியுமா?(38) முதல்நாள் போரில் இராவணனுக்குக் கொடுத்த உபதேசம் இம்சை உபதேசமேயாகும்.அங்கு அஹிம்சை உபதேசம் செய்ய வாய்ப்பிருந்தும் செய்யவில்லை. எண்ணவில்லை. வதைப்பதற்கு முன் பலருடன் போர் செய்கிருன். அப்பொழுது அஹிம்சையின் தத்துவம் உதயமாகவில்லை. இறுதிப்போரில் இராவணனை எவ்வாறு அழிப்பது என்று எண்ணியே தீர்மானித்துச் செயல் படுகிருன். இராவணனைக் கொன்றதினுல் இராமனுக்குண்டான வருத்தமெல்லாம், புறமுதுகிட்டவனைக் கொன்றேனே என்ற வருத்தமே அல்லாமல், காந்தீயத்தின் அகிம்சை முறையில் இராவணனைத் திருத்தவில்லையே என்ற வருத்தம் அல்லவென்று கூறி; அவ்வருத்தமும் நாணமும் விபீடணன் தழும்புக்குக் காரணம் கூறுவதால் நீங்கிற்று என்றுரைத்து கவிஞரின் கூற்றை மறுத்துரைக்கிருர். நாணமாவாது கார்த்தவீரியன், வாலி இவர் களால் இராவணன் கட்டப்பட்டிருப்பவனுகையால் ஆண்மையும் ஆற்றலும் குன்றியிருப்பானு என்பது ஆகும். பொருந்தாத கவிஞரின் கூற்றைப் பொருத்தமாக மறுத்துள்ளார்.

635. கம்பன் கெடுத்த காவியம் ?

நச்சுமுறி

கன்னி வெளியீடு; மு. ப. 1952; 39; ரூ. 0-50

மு. அண்ணுமலை எழுதிய 'கம்பன் கெடுத்த காவியம்' எனும் நூலுக்குப் பதிலாக இந்நூலமைந்துள்ளது. கம்பனின் குறை பாடுகளாக முதல்நூல் ஆசிரியர் கூறியவற்றிற்கு வரிசையாகப் பதில் தருகிருர்.

1. கம்பன் ஆரியக் கதையைப் பாடினான், கடாரம் வென்ற கன்னித் தமிழனைப் பாடக் கூடாதா?(9) எனும் வினாவிற்கு, குறை கூறுபவர்கள் பிறநாட்டுக் கதைகளை எழுதியும், இந்துஸ்தானி மெட்டுக்களில் பாடல்களை அமைத்தும் வருகின்றனர். எனப் பதிலிறுக்கிறார். 2. கம்பனில் காமரசம் கணக்கற்றுக் கிடக்கிறது(10) என்பதற்கு மாசுமறுவற்ற தியாகராசரைப் பேசும்பொழுதும், பொருளாதார சீர்திருத்தம் பேசும்போதும் அவர்கள் சொற்களில் காமமே மிகுந்துள்ளது என்கிறார். 3. சீதையின் கற்பை இராவணன் அழித்துவிட்டதாக வால்மீகி குறிப்பாகப் புலப்படுத்தியிருந்தும் ஆரிய அடிவருடிப் புழுவாகிய கம்பன் சீதையைக் கற்புடையவளாக மாற்றிவிட்டான்(11) அவர்கள் கூற்றுப்படி இராவணன் திராவிடனாயின் அத்திராவிடன் அச்செயலைப் புரியாததாகக் காட்டியது குற்றமாகிறது.

திராவிடனுக்குக் கம்பன் கொடுத்த புகழ் குறையாகுமா? 4. மறத்தமிழனாகிய இரவாணனையும் அவன் இனத்தையும் பழிக்கிறது இராமாயணம்(12). ஆதி இராமாயணத்தில் இராவணனே கிடையாது. பின்னேவந்த கதையிலே பிணைக்கப்பட்ட ஒருவனை உறவு கொண்டாடும் உணர்ச்சி, இலக்கிய எதிர்ப்பாக மலரலாமா? 5. நம்பமுடியாத நிகழ்ச்சிகளைப் புகுத்தியது இராமாயணம், பகுத்தறிவை மழுங்கவைக்கும் நிகழ்ச்சிகள் (அனுமான் கடலைத் தாண்ட முடியுமா?)—பச்சிலை தின்றால் வேற்றுமொழி பேச்சுத் தமிழிலே காதில் கேட்கும் (சஞ்சீவி பர்வதத்தின் சாயல்) என்பது மட்டும் சரியா?

6. 'பத்துப் பாட்டாதி மனம் பற்றினார் பற்றுவரோ எத்துணையும் பொருட்கிசையா இலக்கணமில் கற்பனையே' எனும் சுந்தரம் பிள்ளையின் கூற்று கம்பனை மனதில்கொண்டு எழுந்தது. இராமன் காட்டுக்குப் போகும்போது புனல் அழுவதும், பூனை அழுவதும் கருவில் இருக்கும் சிசு அழுவதும் இலங்கை எரியுண்ணும்போது மரமெரிவதும், மணல் எரிவதும் கம்பன் ஒருவனால்தான் பாட இயலும் என்று அறிந்தேன். பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் பாடலுக்குக் கம்பன்தான் சரியான பொருளை உணர்த்தினான்(20). மனோன்மணீயத்தில் தாமிரபன்னி ஆற்றின் கூற்று. சுந்தரம் பிள்ளையே கம்பராமாயணத் தொடர்களையும் கருத்துகளையும் எடுத்தாண்டுள்ளமை, இலக்கணவிதி. 7 வருணனையைக் கம்பன் மிக விரிவாகப் பாடியுள்ளது தவறு—தண்டியலங்காரச் சூத்திரம், (வருணனையின் தேவையை வற்புறுத்துவது). இடைச் செருகல்கள், காலத்தின் கவிமரபு.

8. கெட்டசெயல் உடையவனையும் கெட்டவன் என்று சொல்லி லேபிள் ஒட்டி அறிமுகப்படுத்துவதால் கலைச்சுவை கெட்டுவிடுகிறது(25). (சிலம்பில் வஞ்சிப்பத்தன், கொல்லன்

அறிமுகம், எதிர்ப்பாகக் கம்பனின் கூனி அறிமுகம்)—சிலம்பில் வஞ்சிப்பத்தன் என்ற பாத்திரமே கிடையாது. பொற் கொல்லனைக் கூற்றத் தூதுவனுக் குறிப்பிட்டுள்ளார். 9. கம்பன் ஒப்பற்ற மனோதத்துவ அறிஞனாக இருக்கவேண்டும் என்று கூற வில்லை. ஆனால் இல்லாத ஒரு பண்பைக் கம்பனிடம் இருப்பதாகக் கூறிக் கதைப்பவர்கள் கம்பனுக்கும் மனோதத்துவப் பண்புக்கும் உள்ள தொடர்பை உணரவேண்டு மென்பதே என் விருப்பம் (மந்தரையைக் கூனி எனக் கம்பன் பழித்தல்-29)—நூலாசிரியரே மந்தரை எனாது கூனி என்றே கூறுகிறார். 10. தசரதன் கைகேயியை வெறுப்பதில் தவறில்லை. கம்பன் ஏன் வெறுக்க வேண்டும்?—பாரதிதாசன் பாகவதரை ஏன் வெறுத்துரைக்க வேண்டும்.

காவியம் எழுந்த காலத்தைப் பற்றிய சூழ்நிலை கொண்டு இலக்கிய ஆராய்ச்சி வேண்டும். 11. கம்பனைப்போல் மொழி பெயர்ப்புக் காவியமாகச் செய்யக் கூடாது. தெய்வமாக்கதை என்று சொல்லி ஒரு கதாபாத்திரத்திற்கே சார்பாகி, அடிமை யாகி, வகைலாகி நேர்மையிழந்து நிற்கக்கூடாது.—பில்கிணியம் மொழி பெயர்த்தவரை என்ன செய்வது? புழுத்தப் புராணங் களுக்கு உரையாடல் எழுதமுனைகிற புரட்சித்தனத்தை என்ன செய்யலாம்? 12. கம்பனைப் படிக்கிற நாம் கம்பனைக்காட்டிலும் அருமையான காவியம் செய்ய இயலாவிட்டாலும் விரும்பாவது வேண்டாமா?(37)—தன்னையறியாதே உண்மையினை விளம்பி யுள்ளார். பாரதிதாசனை உணர்ந்து போற்றுகின்ற அண்ணாமலை யார் உணரும் முயற்சி தானும் செய்யாமல் கம்பனைப் பழிப்பது தவறு.(39).

**636. கம்பர் காவியம்**

சொ. முருகப்பன்

கம்பர் பதிப்பகம்; மகளிர் இல்லம்; அமராவதி புதூர்; பதிப்பு 1953; 6+147+3; ரூ. 2

நூற்பெயரும் பிரிவுகளும் (7—28), எதிர்ப்புகள் (29—37), செருகு கவிகள் (38—123), பாட பேதங்கள் (124—133), பதிப் புகள் (134—153), என்னும் 5 தலைப்பின் கீழ் நூல் அமை கின்றது. இறுதியில் 3 பக்க அளவில் பாட்டு முதற் குறிப்பும் இணைக்கப்பட்டுள்ளன.

'ராமாயணம்' என்று சொன்னால் அது வான்மீகி முனிவர் இயற்றியதுதான். வேறு யாரும் ராமாயணம் என்று தம் நூலுக் குப் பெயர் வைக்கவில்லை. கம்பர் 'இராமகாதை' என்றே பெயர் சூட்டியிருக்கலாம். படலங்களின் பெயர்கள் எல்லாம் தமிழி லேயே கொடுக்கப்பட்டுள்ளன. மாற்ற முடியாத சில அரக்கர்

களின் பெயர்களைத் தமிழ் இலக்கணத்திற்கு ஏற்ப கையாண்டிருப்பதைத் தவிர வடமொழியில் இருந்தபடியே கையாளவில்லை. யுத்த காண்டம் என்பது பின்னால் வந்த வழக்கு.

கம்பர் பாடல்களில் எவ்வளவு பாடபேதங்களும் செருகு கவிகளும் உள்ளனவோ அவ்வளவு பேதங்கள் படலங்களின் பெயர்களிலும் உண்டு. 113 பெயர்களையே இதுவரை அச்சிட்ட எல்லோரும் கைக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் ஏட்டுப்பிரதிகள் பலவற்றுள்ளும் காணப்படும் படலங்களின் பெயர் 260. இவை ஆசிரியரால் தரப்பட்டுள்ளன. பாடலின் தொகையும் பிரதிக்கொரு பிரதி கூடவும் குறையவும் காணப்படுகின்றன. பாடல் வரிசை மாறி இருப்பதும் சர்வ சாதாரணம். இராமகாதையைச் சைவர்களும் வைணவர்களும் ஆதரிக்கவில்லை. அரசியல் நெறியிலும் புரட்சிக் கருத்துகளை வெளியிட்டபடியினால் பெரும் எதிர்ப்புக்கும் இன்னல்களுக்கும் ஆளானார் என்பது தள்ள முடியாத உண்மையாகும்.

அரசியற் படலங்கள் சிதைந்து சீரழிந்திருப்பது தெளிவாக விளங்குகிறது. யுத்த காண்டத்தும் போர் கூறும் பாடல்கள் மட்டமாக உள்ளன. இவற்றால் பறிமுதலாகி வழக்கற்று நின்றிருக்கின்றன என்பது புலப்படுகிறது. இங்குதான் செருகுவார்க்கு வாய்ப்பு நிரம்ப கிடைத்திருக்கிறது. பொருள் முரண்படுவதை வைத்து செருகு கவிகளைப் பிரித்துக் காட்டுகிறார். 'முந்து முக்கனியின் ஆறு', 'வேசியர் உடுத்த கூறை', 'ஈந்தே கடந்தான்', 'அத்தா இதுகேள்', 'கை அவண் நெகிழ்த்தலோடும்', 'உழுந்திட இடம் இலை' போன்ற பல பாடல்களும் இராமன் விரகதாபத்தால் வருந்தியதாக வரும் பாடல்கள், மகளிர் கள் குடித்து வெறி கொண்டதாக வரும் பாடல்கள், இராவணனைச் சிவபக்தனாகக் காட்டும் பாடல்கள் போன்ற பல பாடல்கள் செருகு பாடல்கள் என்று முடிவாகக் கூறுகிறார்.

மீட்சிப் படலத்தில் 358 பாடல்கள்தான் அச்சிட்டிருக்கிறார்கள். 197 பாடல்கள் செருகு கவிகள் என்று தள்ளப்பட்டிருக்கிறது. செருகு கவிகள் தோன்றுவதற்குரிய காரணங்களும் தரப்படுகின்றது. செருகு கவிகள் போன்றே பாட பேதங்களும் மிகுதி. 'அன்னேயோ அன்னேயோ' என்னும் பாடலுக்கு 26 பாடபேதங்கள் உள்ளன. 'அரியணை அனுமன் தாங்க' என்பதற்கு 8 பாடபேதங்கள் உள்ளன என்று அனைத்தையும் தருகின்றார். பால காண்டத்தில் பாட பேதமில்லா பாடல்கள் 18. பாடபேதம் ஏற்படுவதற்குரிய காரணமும் விளக்கப்படுகிறது. இறுதியில் சில பதிப்புகள் பற்றிக் கூறுகிறார்.

'கம்பன் கவிதை' என்னும் இவர் புத்தகத்திலுள்ள 'நல்ல பதிப்பு வர வேண்டும்' என்னும் கட்டுரையும் இங்குக் கொடுக்கப்

பட்டுள்ளது. தாய்மொழியன்பரின் அன்பு, வடமொழியன்பரின் ஆர்வம், பண்டிதரின் பக்தி, சமய்வாதிகள் ஆதரவு கொண்ட எதிர்ப்பு, நகல் எடுத்தவரின் மோகம், அச்சிட்டவரின் அறியாமை, இவையும் இவ்வயன்ன பிறவும் கம்பன் கவியுடன் சேர்ந்து குழம்பி நிற்கிறது.

**637. கவிச்சக்கரவர்த்திக் கம்பன்** (88—90)

*கவிமணியின் உரை மணிகள்: சி. தேசிக விநாயகம் பிள்ளை, பாரி நிலையம். மு. ப. ஜூலை 1953; இ. ப. ஏப். 1956; ரூ. 3*

'கம்பன் கவிதைகளைத் தீயிட வேண்டும்' என்பது கேட்டு வெகுளும் ஆசிரியர். கம்பராமாயணச் சுவை நாடெங்கும் பரவுவதற்கு ஆவன செய்யவேண்டும் என்கிறார். கம்பராமாயணப் பாடல்களை நல்ல முறையில் பதிப்பிக்க வேண்டுவது மிகமிக இன்றியமையாதது என்னும் கருத்துடைய இவர் கம்பன் கவிதையைத் தீயால் அழிக்க முடியாது என்பதனை இரு கவிதைகளால் கூறுகிறார். 'ஓலை எரியும் தாள் எரியும் உள்ளத்தெழுதி வைத்து நிதம் காலை மாலை ஓதுகவி கனலில் வெந்து கரிந்திடுமோ'? எனக் கனன்று கேட்கிறார்.

**638. கம்பரின் உரையாடல்** (85—101)

*இலக்கியத் தென்றல்: ஆர். வீரபத்திரன் எம்.ஏ., எல்.டி.. பூமகள் பதிப்பகம்; நாகர்கோவில்; மு. ப. 1954; இ. ப. 1969; ரூ. 3*

உரையாடல்களைக் கலைத்திறனோடு அமைத்து நாடகத்தை உருவாக்குவதிலேயே நாடக ஆசிரியரின் மேதை வெளிப்படுகிறது என்னும் ஆசிரியர் மந்தரை சூழ்ச்சிப் படலத்தை உரையாடலாகத் தருகிறார். பட்டாபிஷேகம் நடத்த முயலுதல், தெய்வக் கற்பினள், இராமன்பால் ஆழ்ந்த பேரன்பினள் என்று முன்னுரையாகக் கூறி மந்தரை - கைகேயி உரையாடலை நாடக வடிவில் தருகிறார். இடையிடையே கூனியின் சூழ்திறனையும் வருணிக்கிறார். மந்தரை இவ்வாறு கைகேயியின் நேர்மையான உள்ளத்தைத் தன்சொல் திறமையால் திரித்து, இராமனது முடிசூட்டு நிகழ்ச்சியைத் தடுத்து, அவனைக் காட்டிற் கனுப்பி, இராவணவதம் நிறைவேறுவதற்குக் காரணமாக இருந்தாள். இதனால் மந்தரையை நாமகளின் அருள் நோக்குப் பெற்றவளாகக் கூறுவதும் உண்டு(101) என்கிறார்.

**639. கம்பன் காவியம்**

எஸ். வையாபுரிப் பிள்ளை

*தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு சென்னை - 5. மு. ப. பிப். 1955; இ. ப. மார்ச், 1957; மு. ப. டிச. 1962; நா. ப. அக். 1965; 3+149+35*

கம்பன் காவியம் 11—27, கம்ப இராமாயணமும் ஜைன இராமாயணமும் 28—35, கம்பனைக் கற்கும் நெறிகள் 36—43, கம்பன் ஆராய்ச்சி - பதிப்பு 44—79, இராமகாதை (பால காண்டம் பதிப்பு விழா தலைமை உரை) 80—103, இராமாயணப் பதிப்பு முயற்சிகள் 104—111, கம்பனும் தமிழும் 112—135, கம்பன் கவிச்சக்கரவர்த்தி 136—149, அநுபந்தம்: Kamban as edited by T. K. C. 150—155, The Age of Kamban - a rejoinder 156—161 Kamban 162—167, கவிமணியின் கடிதம் 168—169, கம்பராமா யணப் பதிப்பு விவரம் 170—175, சிறப்புப் பெயர் முதலியவற்றின் அகராதி 176—184, அபிதான விளக்கம் 185.

கி. பி. 1325இல் கம்பனது பெருங்காவியம் கன்னட தேசத்திலும் பெரும்புகழ் பெற்றுப் பரவியிருந்தது(13). கி. பி. 1178-ல் பாடி முடித்து கி. பி. 1185-ல் அரங்கேறினார்(26). காலத்தின் அடைவில் வளர்ந்து வந்தது போலவே, இடம் பற்றியும் இச் சரிதம் பல நூதன அம்சங்கள் பெற்று வளர்ந்து வந்தது(17). இராமன் தெய்வமாக மாறுவதற்குத் தென்னாட்டில் முழு வேகத்துடன் பிரவகித்துக் கொண்டிருந்த பக்தியியக்கமே காரண மாகும்(17).

கம்பராமாயணத்துடன் ஒற்றுமையுடைய பெரியபுராணத்தில் உள்ள பாடல்கள் வெள்ளியம்பலத் தம்பிரான் இயற்றிச் சேர்த்தவைகளாம்(27). காலசேப முறை, பண்டித முறை, (கம்பனது உள்ளக் கிடக்கை ஓரளவு, மிகுதி பண்டிதர்களின் கல்வித் திறன்) தர்க்க முறை (கம்பனைக் காண முயலவில்லை) அலங்கார முறை (கம்பனை விநோத உணர்ச்சிக்குரிய ஒரு பொருளாகவே செய்து விடுகிறார்கள்) பூர்வ வரலாற்று முறை, ஜாதி சூழ்ச்சி முறை, பொய் மெய் முறை, தத்துவார்த்த முறை சித்திர முறை (கம்பன் கருத்துகளை நயம்படச் சித்தரித்துக் காட்டுவதே முக்கிய நோக்கம்) ரஸிகமுறை, உளநூல்முறை, சிற்பமுறை, பொருள்கோள்முறை இவ்வாறு பல முறைகளில் கம்பராமா யணம் பயிலப்பட்டு வருகிறது என்கிறார்.

இடைச்செருகல்களாகக் கருதத்தக்க தனிச் செய்யுட்கள் சில, கம்பன் பாடிய பாடல்களில் நேர்ந்துள்ள சில பிழைகள் முதலியவற்றைக் காட்டி, இவை தவிர்த்த ஆராய்ச்சிப் பதிப்புகள் வெளிவரவேண்டும் என்கிறார். இப்பிழைகள் ஏற்படுவதற்கான காரணங்களையும் விவரித்துள்ளார். அறிஞர் பதிப்பிக்கும் பொழுது அத்தவற்றை நீக்காததற்கும் காரணம் உரைக்கிறார். அக்குறைபாடுகளை நீக்குவதற்குள்ள தடைகள் முதலியவற்றைக் குறிப்பிட்டு ஆராய்ச்சிப் பதிப்பில் என்னென்ன இருக்கவேண்டும் என்பதையும் குறிப்பிடுகிறார்.

கம்பனது பாடல்களில் உள்ள இயற்கைத் தன்மை (ஆசில் பரதாரம் அமையச்சிறை...வீரம் அன்று, விதி அன்று...) நேர்மைத் தன்மை (முன்னையோர் இறந்தார் எல்லாம்...), தெளிவு சுருக்கம் (உற்ற போதவன் உள்ள...), இனிமை அழகு (உழு கின்ற கொழு முகத்தில் கற்றை வெண்ணிலவு நீக்கி...), சுவை (அண்டத்தளவும்..., மங்கை அழலும்..., விழுந்தாள் புரண் டாள்...), தமிழின் ஆற்றல் (வீடணனடைக்கலம்: 87—105, கும்பகர்ணன் வதை 128—167) என அறிவித்து அதனைக் கம்பன் தமிழ் என்கிறார். சொல்வளம், செய்யுள்வளம், உவமை, வருணனை, பாத்திரப்படைப்பு (சத்துருக்கனன்) முதலியவற்றைச் சான்றுகளோடு விவரிக்கின்றார்.

T. K. C's conclusion is not Valid To judge of Kamban without his Ramayanam is something inconceivable(151). It indicates a poetic approach to Kamban, which is at once easy and pleasant. It shows the several pitfalls in the way of reconstructing a reliable Kamban text. It makes realise that aesthetic enjoyment of poetry must rest on a sure foundation of Critical scholarship(155). 1840—1950 வரை வெளிவந்த கம்பராமாயணப் பதிப்புகளைத் தொகுத்து கொடுத்துள்ளார்.

640. **நாரணன் விளையாட்டு** (கம்பன் கவியுள்ளம்)

மாசி

தமிழ்நாடு வெளியீடு. தபால் பெட்டி 49, மதுரை. மு. ப. 1955; இ. ப. 1957; மூ. ப. 1959; 7+400; ரூ. 2-50

ஆசிரியரின் முன்னுரையுடன் மூன்று பகுதிகளாக இந் நூல் அமைந்துள்ளது. முதற்பகுதி 17 பிரிவுகளாகவும், இரண்டாம் பகுதி 20 பிரிவுகளாகவும் மூன்றும் பகுதி 27 பிரிவுகளாகவும் உள்ளது. இக் கட்டுரைகள் தமிழ்நாடு இதழில் வெளிவந்தவை, வான்மீகியும் கம்பரும் ஒன்றியும் வேறுபட்டும் உரைக்கும் திறங் கள் ஆங்காங்கே காட்டப்படுகின்றன. அரக்கர்கள் தமிழர் களல்லர். தமிழர்களாயின் அகத்தியனால் அவர்கள் தமிழ் நாட் டிற்குள் புகாதபடி தடுத்திருக்க முடியாது.

உலக இன்பங்களிலே பற்றில்லாத மனநிலையையுடைய ஒரு பெண்ணைத்தான் கம்பன் கைகேயியின் மூலமாகக் காட்டு கிறான்(92). இராமன் பின் இலக்குவன் சென்றது அவன் தவறு. இராமன் பொய்மான் பின் சென்று பெண்வழிச் செல்லும் பேதை மைக்கு உட்பட்டிருக்கக் கூடாது. வானரங்கள் மனித இனமோ, விலங்கினமோ, தமிழினமோ அன்று. குற்றமற்ற மனிதனைப் படைத்துவிட முடியாது என்ற தத்துவத்தைக் கூறுவதற்குத் தான் இராமனிடம் ஒரு குறைபாட்டை வாலிவதையைக் காப்பியப்

புலவன் வைத்தான் போலும். சீதை இராவணனைத் தூயவனாக வும், வீரனாகவும் ஆக்கினாள்(228). இராவணனாகிய ஆன்மா, கல்வி, செல்வம், மாதர்களின் கண்கள் என்ற இடர்களிலிருந்து விடுபட்டு இறைவனுடன் கலக்கின்ற தத்துவமே(253) இராவண-இராம போர்நலம்.

கும்பகர்ணன் தூங்குவதாகக் கற்பனை செய்யப்பட்டான். அண்ணனுடைய உள்ளம் பண்பட வேண்டுமென்ற எண்ணத்திலே ஒதுங்கி நின்றான். ஏறத்தாழப் பதிமூன்று ஆண்டுகள் பரதன் பல நாடுகளுக்குச் சென்று தன் வள்ளன்மையையும் வீரத்தையும், உலகறியச் செய்து விடுகிறான். ஆனால் இராமன் அயோத்தி நாட்டை விட்டு வெளிச் செல்லாததால் யாரும் அறியா வகையில் வாழ்ந்து விடுகிறான். இக்காரணம் கொண்டுதான் வாலி, இந்திரசித்து முதலானோர் பரதனை அறிந்திருந்தார்போல இராமனையும் இலக்குவனையும் அறியாது போனார்கள்(310).

இராவணன் வடநாட்டானோ தென்னாட்டானோ அல்ல ஓர் அன்னியன். சீதையைத் திரும்பப் பெற்றாலும் அது தனக்கு இழுக்குத் தருமோ என இராமன் தனக்குள் ஐயுறுவதால்தான் அயோத்திக்கே திரும்பிச் சென்று விடுவது நலமோ என்றுகூட எண்ணுகிறான்(358). இராவணின் மனமாற்றத்தைப் பயன்படுத்திக்கொண்டு அவனைத் தூயவனாக்கி அரச பதவியைக் கொடுத்து அவன் உள்ளம் நாண நன்னயம் செய்யாது கொன்றதால், இராமனுடைய குணநலன்களைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது அது புண் பட்ட ஒரு வீரனை வென்ற புரைபட்ட செயலே என்று நேர்மை நினைக்கிறது(365).

இராமன் தமிழ் வேந்தன் என்பதை ஐயமறக் கூறவேண்டுமென எண்ணிச் சடையப்ப வள்ளலின் முன்னோர்கள் சோழ குலத்திற்கு முடிசூட்டும் உரிமையுடையவர்களாதலால் அவர்களே இராமனுக்கும் முடிசூட்டினர் என்று கூறினார்(385). ஆசைகளை விட்டு ஆண்டவன் நெறியைப் பின்பற்றிச் சித்தத்தை அவன்பால் வைத்தாலன்றி, மக்களுக்கு வாழ்வில் மன அமைதி ஏற்படாது என்ற தத்துவத்தை இராமாயணம் இசைக்கின்றது(393). முதலான கருத்துகளைக் கூறுகிறார்.

உரையாடல்களைச் சில இடங்களில் நாடக வடிவில் அமைக்கிறார். புதிய கருத்துகள் என்று உண்மைக்குப் புறம்பான பல கருத்துகளைக் கூறுகிறார். சான்றாக, தாரையைச் சுக்கிரீவன் மனைவி என்று கூறி, தாரை கைம்மை மேற்கொண்டிருந்தாள் என்பது உண்மையாயின் தனக்கு உரியவளான தாரையை வாலி தன் வயப்படுத்திக் கொண்டதாகச் சுக்கிரீவன் இராமனிடம் கூறியது பொய்யுரையாவதோடு இராமனை உண்மை காணும் திறமில்லாத புல்லியோனாகவும் ஆக்கிவிடுகிறது(176) என்கிறார்.

641. கம்பர் யார்?

டாக்டர். மா. ராசமாணிக்கனார்
சாந்தி நூலகம், 2/122 பிராட்வே, சென்னை-1, மு. ப. ஜூன் 1955; இ. ப. ஜூன் 1958; 120 ரூ. 1-75.

கம்பராமாயணம், கம்பர் யார்? கம்பர் கடவுட் கொள்கை, உரிமை வாழ்க்கை, அரசியல் நுட்பம், இசைக்கலை, மக்கட்பேறு, காதலும் மோகமும், ஊடலும் கூடலும், செய்ந்நன்றியறிதல், மாதர் இடை, காதல் மணம் எனும் பன்னிரு கட்டுரைகள் அடங்கியது இந்நூல்.

கல்வியிலும், உலகியல் அறிவிலும் எல்லா நலத்துறைகளிலும் சிறந்த தமிழர் கம்பர் என்பதை விளக்குவதே இந்நூற் கட்டுரைகளின் நோக்கமாகும் என்று முகவுரையில் கூறியுள்ளார்.

பல மொழிகளிலும், பலமதங்களிலும், உள்ள இராமாயணங்கள் பற்றிய குறிப்பும். சிலவற்றின் கதை வேறுபாடுகளையும் குறிப்பிடுகின்றார். பரமசிவ ஐய்யர், பந்தர்கர், ஹீராலால், கிபி, இராமதாசர், தீட்சிதர், மிஸ்ரா ஆகிய அறிஞர்களின் இராமாயண இலங்கை பற்றிய கருத்துகளையும் அளித்துள்ளார். இராமாயண இலங்கை தற்பொழுதுள்ள இலங்கையினின்றும் வேறுபட்டது என்பதனை அதனால் நிறுவுகிறார். இராமாயணம் உண்மை நிகழ்ச்சியன்று கற்பனை என்றும் இராமன் திருமாலவதாரம் என்பது பிற்சேர்க்கை என்றும் கூறுகிறார். கம்பர் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றினார்(29) சைவ வைணவர்க்குள் இருந்த மனக்கசப்பை மாற்ற எண்ணினார். அரசியல் இன்னின்னவாறு அமைதல் வேண்டும் என்று திட்டமிட்டார். தம் கருத்துகளை வெளியிட இராமாயணத்தைக் கருவியாகக் கொண்டார்(29).

அகத்தியர் தமிழில் முதல் இலக்கண நூல் செய்தான் என்பவர் கூற்றைக் கம்பர் ஒப்புக் கொள்ளவில்லை(34). வான்மீகியிலிருந்து முரண்படும் கம்பர் தமிழர் மரபிற்கேற்ப மாற்றியமைத்த இரு காட்சிகள், (தாரைபடைப்பு, ராமன்-சீதை காதல் திருமணம்) அவரது தமிழ்ப்பற்று, தமிழகப் பற்றினை விளக்கி அவர் தமிழர் என்கிறார்.

சிவனும் அரியும் தொழில் கருதி உருவ வேறுபாடுற்று நடிப்பவரல்லது உண்மையில் வேறுபட்டு தனித்திருப்பவரல்லர்(45), பரம்பொருள் ஒன்றுண்டு அது தன்னை நம்பினோர்க்கு வெளிப்படுத்தும். நம்பாதார்க்கு வெளிப்படுத்தாது. வீணான சமய மாறுபாட்டுணர்ச்சி வேண்டா. எம்மதத்திலும் உண்மை உண்டு. எம்மதமும் சம்மதமே(49). பிற சமயத்தையோ. சமயத்தார்களையோ வெறுத்தல் வேண்டா என்ற கொள்கையே கம்பர் வலியுறுத்துவதாம்(49). ஒவ்வொரு சமயமும் இறைவனின் ஒரு சக்தியைக்

கண்டு மயங்கி நிற்கின்றதன்றி அப்பெருமானின் முழுத்தோற்றத்தையும் சக்தியையும் அறிந்தபாடில்லை(50). இவையே கம்பர் கண்ட கடவுட் கொள்கையெனக் காட்டுகிறார்.

தெய்வபயம், மனிதபயம் கடந்ததொரு தனிநிலையில் வாழ்ந்த கோசலத்தின் வாழ்வே உரிமை வாழ்க்கை எனப்படும்(55). அகத்திலும், புறத்திலும் யாதொரு குற்றமும் செய்யாதிருப்பதால் தெய்வபயம், மனிதபயம் என்பவற்றிலிருந்து நீங்கப் பெறுவர், சீற்றத்தை ஒழிப்பதால் சகோதரத்துவம் எய்தியவராவர். இந்த வாழ்வே உரிமை வாழ்வாகும். ஆள்பவன் அரசனுகான். காப்பவனே அரசன் என்பதே கம்பர் கொண்ட அரசியல் அறிவின் சாரம்(61). அரசியலின் முற்றிய தத்துவத்தை 'அரசனும் குடிகளும் தம்முள் வேறுபாடின்றி இரண்டறக் கலந்தனர்' என்கிறார் கம்பர்.

காதல் நோய்க்கு மருந்தில்லை. மோக நோய்க்கு முடிவில்லை என்பதே கம்பர் கொண்ட கருத்தாகும். சீதையைக் கொண்டு காதலையும், சூர்ப்பணகையைக் கொண்டு மோகத்தையும் கம்பர் விரிக்கின்ற திறம் வியக்கத்தக்கது. சடையப்ப வள்ளல் செய்த உதவியைவிடப் பன்னூராயிரம் பெரிதென எண்ணுமாறு, கம்பர் தம் பதில் நன்றியை அண்ணலுக்கு அளித்துள்ளதைக் காட்டுகிறார். வள்ளலது ஏற்றத்தை உள்ளவாறே உரிய இடங்களிற் பாடியுள்ளார்(100). செய்திகளை விளக்கமாகச் சித்தரித்துக் காட்டுவதில் நிகரற்றவராய்ப் பெயர் பெற்ற கம்பர் பெருமான் மாதர் இடையைப் பலவிடங்களில் புனைந்திருக்கும் காட்சியைக் கூறி சிறிய இடையே மாதரைச் சிறப்பிப்பதென்பதையும் நுண்ணிடையுடைய மாதரே உத்தம இலக்கணம் அமைந்தவர் என்பதையும் கம்பர் அறிவிக்கின்றார் என்கிறார்.

மிகத் தெளிவாகத் தன்னுடைய கருத்துகளை உட்தலைப்பு இட்டு எளியநடையில் கூறிச் செல்கின்றார்.

**642. கம்பன் கண்ட தமிழகம்**

சாமி. சிதம்பரனார்

ஸ்டார் பிரசுரம்: 66, பெரியதெரு, சென்னை-5, மு. ப. 1955, மூ.ப. 1962; 152 விலை ரூ, 2-50

முன்னுரை:—8 கம்பன் பெருமை (9-20), கம்பன் காலத் தமிழகம் (21—27), கம்பனுக்கு முன் இராமாயணம் (28-38) கம்பனும் மதமும் (46—52), ஒழுக்கமே உயர்குடி (53—60), மதுவும் மாமிசமும் (61—69) ஒருவனும்ஒருத்தியும் (70—76), இராவணன் இழிகுணம் (77—85), இராமனும் இராவணனும் (86—98), கம்பன் கண்ட தமிழர்பண்பு (99—109) கம்பனும்வள்ளுவரும் (110—124), கம்பன் தமிழ்க்காதல் (125132), கம்பனும் நன்றியறிவும் (133—137), கம்பன் கண்ட அரசியல் (138—147), கருத்தில் சிறந்தவன்

கம்பன் (148—152) என்னும் 16 தலைப்பின் கீழ் அமைகின்றது. பல உட் தலைப்புகளையும் கொண்டது.

கம்பனுக்குப் போட்டியாகக் கந்தபுராணம் பாடப்பட்டாலும் கம்பன் பெருமை மங்கி விடவில்லை. மக்கள் விரும்பும் வழியிலே நின்று, பல நல்ல அறங்களை எடுத்துக்காட்டி, அவர்களைச் சீர் திருத்த முயற்சி செய்தவன். கம்பன் காலத்துக்கு முன்பே இராமாயணக்கதை நூல் வடிவிலும் இருந்தது. பெண்கள் கல்வி கற்றிருந்தால்தான் இல்லறம் இனிது நடக்கும் என்று கம்பன் கருதினான். சமயச் சண்டையைக் கடுமையாகக் கண்டித்தான். ஒழுக்கமுள்ளவர்களே உயர்ந்தவர்கள் என்ற தமிழர் கொள்கை கம்பன் காலத்தில் மங்கியிருந்தது. இதனை, இராமன் பிறப்புபற்றி கவலைப்படாது எல்லோரிடத்தும் அன்பாக நடந்து கொண்டமை வாயிலாக அறிவுறுத்துவதாகக் கூறுகின்றார்.

சமண புத்த மதங்களின் செல்வாக்குக் காரணமாக மாமிசம் உண்ணுதவர்கள் உயர்ந்த நாகரிகம் உள்ளவர்களாக எண்ணப் பட்டனர். இக்கால நிலையை ஒட்டி மதுவின் தீங்கு பற்றிக் கம்பன் பலவிடங்களில் கூறியிருக்கின்றான். ஒருவனுக்கு ஒருத்தி என்னும் நல்லறம் தமிழ்நாட்டில் வளர்ந்தோங்க வேண்டும் என்பது கம்பன் கருத்து. உயர்ந்த பண்புக்கு ஓர் எடுத்துக்காட்டாக இராமனும். இழிந்த பண்புக்கு எடுத்துக்காட்டாக இராவணனும் காட்சியளிக்கின்றனர். தமிழர் பண்புகள் பலவற்றைக் கம்பன் தமது காவியத்தில் அமைத்துப்பாடியிருக்கிறான். இராமாவதாரத்தின் மூலம் வள்ளுவர் அறத்தை நிலைநாட்ட வேண்டும் என்பதே கம்பன் நோக்கம்.—தன் காவியத்தைத் தொடங்கும்போதே வள்ளுவர் வகுத்த வழியில் நின்று தொடங்கல் (மேகம், மழை). குறட்பாக்களையும், அவற்றின் கருத்துகளையும் பல இடங்களில் எடுத்தாளுதல். இடம் கிடைக்கும் போதெல்லாம் தன் தமிழ்ப் பற்றை வெளியிடுகின்றான். செய்ந்நன்றி மறவாதவன். குடிகள் உயிர், மன்னன் உடம்பு. குடிகளின் ஆதரவு ஒத்துழைப்பு இல்லாவிட்டால் அரசாட்சி இயங்க முடியாது என்ற கருத்து கம்பன் காலத்தே தோன்றிவிட்டது. காலத்தே யறிந்து கவி புனைந்தவர்களில் கம்பன் சிறந்தவன்.

### 643. V. V. S. Aiyar's approach to Kamban

Tamil culture Vol. IV, Jesudasan 1955 (301—311)

In complete as it is V. V. S. Aiyar's study of Kambaramayanam deserves attention as a praise worth venture into a vast field(302). He is justified in opening the great theme of the study of Kamban by introducing the characters to his audience

A Study of Kambar's Sita would be a seperate Volume by itself and we are unfortunate in V. V. S. Aiyar's having left his work without its Heroine(304). V, V. S. Aiyar mentions one slight failing in Rama's love, but he has not been given time to explain it. Obviously it is the chrilling reception Rama gives his wife, When she is redeemed and brought to him after untold privations. Aiyar has taken great pains to prove that Vibhishna is not a time-serving traitor but purely a bhakta of Rama whose every act may be justified from that point of view(306). One finds no meaning in defending Rama's God head against human reproach when he is to be judged as a man. Lakshmana is much nearer divinity when he expresses his disapproval of the affair of brother fighting againt brother (307). He has not fully succeeded in substaintiating his statement. His enthusiasm for the Ramayana has swept him here off the stand of sensible criticism(308). In introducing the Kambaramayanam to the non Tamil world as a might work much more is needed than retelling the story or considering the characters which after all are borrowed from the Sanskrit to convince the audience of its merits. Aiyar's prose is clear and lucid and answers his purpose well. But I doubt if the same thing could be said of his Verse(309).

644. **Kamban's Modernism** (74—77)

Tamil Culture (Journal of the Academy of Tamil Culture); Vol. V No. 1; A. C. Paul Nadar; Janu. 1956; Price Rs. 7, Yearly.

Presidental address delivered at the Kambar Conference held in Rajaji Hall, Madras on Nov. 14th 1955. Kamban, belonged to the end of the 9th cent. or the begining of the 10th cent.(74). The poet combines the idealism of puranic stories with the realism of the present day(5). He has a readymade solution for the eradication of casteism, condescension and communalism from our midst. Kamban teaches us how to harmonise differences and resolveconflicts and strifes. His penetrating and forseeing eye sees unity in variety. Mere profession of love and affection however, will not save society, it must show itself in action, that is in 'tyaga' or self sacrifice. Bharatha is the model of such sacrifice(77).

**645. இலக்கியச் சுவை (முதற் பாகம்) கம்பர்**

ம. சா. மாணிக்கம்
8, இரத்தின சபாபதி முதலியார் தெரு; சென்னை-2; மே 1956 பக். 111, ரூ. 1-75

நூலின் நோக்கம் 1-16, அறிமுகப்படுத்தும் நெறி 17-26, தலைமை காத்தல் 27-37, வளர்க்கும் வகை 38-56, மாற்றுந் திறம் 57-69, மாறுவேடம் 70-81, தூதுபோதல் 82-96, அறம் வளர்க்கும் திறம் 97-111.

பரதன் கோசலையிடம் சூளுரைக்கும் இடத்தினைக் கம்பர் தனது நோக்கத்தை, இராமனிடத்துள்ள அன்பை, திருமாலிடத்துத் தாம் கொண்டிருந்த பக்தியை வெளியிட இடமென்று கண்டார்(9). இராமனைப் பிறர் புகழும் இடங்களில் பக்திச்சுவை சொட்டச் சொட்ட ஆசிரியர் பாடியிருக்கிறார். நூல் முழுவதும் வாய்ப்பு நேர்ந்த பொழுதும், நேரவில்லையாஞல் உண்டாக்கிக் கொண்டும் திருமாலை மனமாரக் கம்பர் துதித்திருக்கும் பகுதிகள் நிறைந்து கிடப்பதையறியலாம் (11). இராமனையும் சீதையையும் தேவையற்ற இடத்திலும், பாதாதி கேசமாக வர்ணித்துத் தன் ஆசையை நிறைவு செய்து கொண்டார்(14).

நூலின் நோக்கமறிந்து கற்றலே இலக்கியச்சுவை பெறுவதற்கு ஏற்ற வழியென்று கூறுகிறார். இராவணனை நல்லவன் என்றும் வாலிவதை தவறு என்றும் மாறுபட்ட கருத்து கொள்வதற்கு இடமில்லை. மந்தரை, அனுமன், இராவணன் ஆகியோரை அறிமுகப்படுத்தியுள்ள விதத்தினைக் காட்டுகிறார். இராமன் காடேகிய காரணத்தைக் குகனுக்கு இலக்குவன் விளக்குவதில் தலைவன் சிறப்புக் காக்கப்படுகிறது. இம்முறையே அனுமன் வினவிற்கும், வாலிக்குக் கொடுக்கும் பதிலிலும் பின்பற்றப்படுகிறது. சுக்கிரீவன் மனைவியிழந்த தன்மையைக் கூறலிலும், வீடணன் அடைக்கலம் அடைதலிலும், அவர்களின் அமைச்சர்களே பதிலிறுத்து தலைவர்களின் பெருமையைக் காக்கின்றனர்.

காப்பியம் வளர வளர சீதையின் பண்புகளும் படிப்படியாக வளர்ச்சியுற்று உச்சநிலை யெய்தி நிற்பதனைக் காட்டுகிறார். பிறன் மனைவியை விரும்பிய பேதையின் அவல நிலையையும் படிப்படியாக ஆசிரியர் காட்டுவதைக் குறிப்பிடுகிறார். கைகேயின் உள்ளத்தைமாற்றி நினைத்ததையும் நிறைவேற்றினுள் மந்தரை. மனத்தை மாற்றவியலாது நினைத்ததை மட்டும் நிறைவேற்றிக் கொண்டாள் கைகேயி. இலங்கை வேந்தனின் உள்ளத்தை மட்டும் மாற்றி நினைத்ததை நிறைவேற்றிக் கொள்ளாதொழிந்தாள் சூர்ப்பணகையென்று அத்திறங்களைச் சுட்டுகி ர(61).

மாறுவேடம் கொண்டு வந்த இராவணன் சீதையைக் கவர்ந்த தன்மையை அடுத்துக் காட்டுகிறார். அநுமன் சிறந்த தூதுவனாய் இலங்கியமையை வள்ளுவர் வாக்கினைக் கொண்டு விளக்குகிறார். தாயுரை போற்றல் (இராமன் காடு சென்றது) மனவுறுதி (கோசலைக்கு இராமன் ஆறுதல் கூறல்) முன்னோனைப் போற்றல் (பரதன்) உடன் பிறப்புப் பாசம் கொள்ளல், செய்ந்நன்றியறிதல் (கும்பகர்ணன்) முதலிய அறங்களை இங்குக் கூறிச் செல்கிறார். எளிய நடையில் சிறப்பாக இந்நூல் அமைந்துள்ளது.

646. **உங்கள் கம்பன்** *(கட்டுரைக் கொத்து)*

*பி. ஸ்ரீ. நூலகம்; சென்னை* - 28. 1959; 14+196; ரூ. 1-50

சௌந்தராகைலாசம், ஏ. ஸி. பால்நாடார், பொ. திருகூட சுந்தரம், ஆ. கு. ஆதித்தர், ஜி. சுப்பிரமணிய பிள்ளை, சங்கர், நீ. கந்தசாமிப் பிள்ளை, ரா. விசுவநாதையர், சுத்தானந்த பாரதியார், தி. டி. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, ரா. ஸ்ரீ. தேசிகன், ச. இராஜு செட்டியார். ரா. ல. இராஜ அரிய ரத்தினம், ச. சிவகுமாரன், கி. சந்திரசேகரன், இராஜரத்தினம், தேசிக விநாயகம் பிள்ளை, ஏ. என். பரசுராம் என்போரால் எழுதப்பட்ட மனிதன் இராமன் (15—18). பாவமும் அருந்துயரும் வேர் பறியும் (19—32) கம்பன் எதற்கு? (33—43), கம்பன் சொல்நயம் (44—57), கம்பனின் நகைச்சுவை (58—68), கம்பதத்துவம் (69—81), கம்பர் பாடியதுதானா? (82—97), கம்பன் காட்டிய காதலும் காமமும் (98—103), அன்பனைக் காத்த அருட் சிங்கம் (104—123), அந்தமில் அழகன் (124—130), திருத்தக்க தேவரும் கம்பரும் (131—146), கம்பரும் ஹோமரும் (147—152), கம்பனும் அறமும் (153—165), கவிஞனின் குழந்தையுள்ளம் (166—172), ஈழத்து அறிஞர்களும் கம்பனும் (173—178), தமிழன்னையின் இரட்டைப் பிள்ளைகள் (179—182), புகழ்க் கம்பன்; போட்டிக் கம்பன் அல்ல (183—188), கம்பன் கவித்திறன் (கவிதை 189—191) அமுதத் தமிழ் வாழ்க (கவிதை 192) Kambar and Shakespeare (193—210) என்னும் 18 கட்டுரைகளையும் 2 கவிதைகளையும் கொண்டது இந்நூல்.

நூலின் முன்னர் சிறப்பாகப் பாரதியாரின் பொன்மொழிகளும், நூலின் இறுதிப் பகுதியில் விளம்பரங்களும் கொடுக்கப் பட்டுள்ளன. சில கட்டுரைகள் சிறு தலைப்புகளையும் பெற்று விளங்குகின்றன.

இடுக்கண் வரும்பொழுது தாங்கிக் கொள்ளும் இதயம் படைத்தவன் இராமன் - 'நதியின் பிழையன்று', இன்னா செய்தார்க்கும் இனிய செய்யும் இயல்பு படைத்தவன் - தசரதனிடம் வரம் கேட்டல், இராமன் பரதன் இருவருடைய தியாகத்தால்

கோசல நாட்டில் ஒரு புது உலகம் உருவாகிறது.—அன்பின் அடிப்படையாக உள்ளது. கவிதையில் உணர்ச்சி பெறும் பொழுதே கவிதையைப் பயன்படுத்தியவர்கள் ஆவோம். கம்ப ராமாயணம் மனிதன் அடையவேண்டிய எல்லாவிதமான நல் லுணர்ச்சிகளுக்கும் தக்கவிதமாகப் பயிற்சி அளிக்கக் கூடிய கவிதை—தலையானது அன்புணர்ச்சி. கம்பரின் சொல்நயம் பல எடுத்துக்காட்டுகளுடன் விளக்கப்படுகின்றது.

பாத்திரங்களின் குணச்சித்திரங்களுக்கு இயன்றவாறு, இயல்புக்கு மாறுபடாமலும் இழிசினர் கையாளும் இகழ்ச்சிக் குரிய கேலிக்கூத்தாகி விடாமலும், உயர்நிலை பிறழாமல் நகைச் சுவையமைத்துப் பாடவல்லவர் கம்பர்.—சுந்தர காண்டத்தினின் றும் சிறந்த நகைச்சுவைப் பாடல்கள் எடுத்து விளக்கப்படுகிறது. அஞ்சலை அரக்க என்னும் பாடல் நகைச்சுவைக்கு மகுடம் என் கிறார். அனுமன் வாயிலாகக் கம்பதத்துவம் விளக்கப்படுகிறது.—வீரன் அந்தந்த சமயத்தில் செல்லும் கதியையே உணர்வுடன் எப்பொழுதும் தொடர்வான். சூழ்நிலையிலிருந்து திமிறிக்கொண்டு போக வீண் முயற்சி செய்யமாட்டான்.

நீ. கந்தசாமிப்பிள்ளைப் பாட வேறுபாடு பற்றிக் கூறுவதோடு உண்மைப் பாடங்களைக் காணும் வழிக்குக் கம்பராமாயணப் பதிப்புக் குழு ஒன்றின் நடைமுறை போன்று கற்பனைக் காட்சி ஒன்றும் அமைத்திருக்கிறார். காதலுக்கு எடுத்துக்காட்டாகச் சீதையையும் காமத்துக்குக் காட்டாகச் சூர்ப்பணகையையும் இரா வணனையும் எடுத்துக்காட்டி காதலுக்கும் காமத்துக்கு மிடையே யுள்ள வேறுபாட்டை ஆசிரியர் விளக்குகிறார். கம்பன் வடித்த கவியமுதில் அருள் மெருகேறிப் பொலிவது இரணியன் கதையே.

சாணை பிடித்த மந்திரச் சொற்கள், மலையருவி நடை; விண் ணோங்கும் வியப்பணி; வேதச்சுவை; பழுத்த யோகிகளும் வியக் கும் உள்ளனுபவம் இவை இரணியப் படலத்தின் சிறப்பு. இராமனின் அழகு - அந்தமில் அழகு - கம்பர் சொல்லோவியத் தையும் மிஞ்சுவது. சிந்தாமணியில் பயின்று வரும் சொற்களும், தொடர்களும் உவமை முதலிய அணிநலன்களும் கம்பர் காப்பியத் தில் காட்சியளிப்பவற்றைச் சில எடுத்துக்காட்டுகளோடு விளக்கப்படுகிறது. போர்களைச் சித்தரிப்பதிலோ, பாத்திரங்களைப் படைப்பதிலோ, உவமைகளை ஆள்வதிலோ ஹோமரின் கலைப் பண்பு ஒரு தனித்த நிலையை அடைந்திருக்கிறது.

கம்பரிடம் சில சமயங்களில் கற்பனை அளவு கடந்து செல் கிறது. கம்பனில் அறமும் ஒழுக்கமும் எவ்வாறு கம்பனால் வலி யுறுத்தப்படுகின்றது என்பது மாரீசன், வீடணன், மாருதி, சுக்கிரீவன், இராமன், சீதை ஆகியோரின் கூற்றுகளில் சில வற்றை எடுத்துக்காட்டி விளக்கப்படுகிறது. பாலை உறிஞ்சிப்

பருகுவதுபோல் அறிவையும் எங்கிருந்தோ எப்படியோ உறிஞ்சிச் சுவைத்துப் பருகும் இயற்கை - ஆர்வமும் ஆற்றலும் குழந்தைக்கும் உண்டு. கவிஞனுக்கும் உண்டு ஈழத்து அறிஞர்கள் பலர் குறிப்பிடப் பெறுகின்றனர். பாக்களிலுள்ள இலக்கணவமைதியை ஈழநாட்டுத் தமிழறிஞர்கள் யாவரும் விரும்பினர் எனவே அவர்களிடத்தில் புதுமை கருத்துகளும், நயங்களும் பொலிந்தன.

சேக்கிழாரும், கம்பரும் அன்பு, அறம், அருள் என்ற வளர்ச்சி முறையின் அடிப்படையில் மக்கள் வாழ்வு அமைந்திருக்க வேண்டுமென்றும், 'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே' என்றும் போதித்தனர். இரண்டு பெரிய கவிஞர்களை அனுபவிக்கையில், எவர் சிறந்தவர் என்ற விவாதத்தில் அநாவசியமாகக் காலத்தை வீணாக்கத் தேவையில்லை. பயனுள்ளதல்ல. கம்பனும் செகப்பிரியரும் வேறுபட்ட காலத்தில் இடத்தில் வாழ்ந்தபோதிலும் அவர்களிடையேயுள்ள ஒற்றுமையை இறுதிக் கட்டுரை ஆய்கிறது. 'பாரில் பெயரோங்கு பன்மொழிகளும் நாணுது நேரில் நிமிர்ந்து தமிழ் நிற்பதுதான் சீருயர்ந்து ஏறு புகழ்க் கம்பன் இராமகாதையில் வந்த வீறு கொண் டென்று விளம்பு' என்பது கவிமணி கூற்று.

**647. முதற் போர் (97-111)**

*கல்வியும் கேள்வியும்*: கு. மதுரை முதலியார், 1960; ரூ. 2

முதற்போர்புரி படலத்தினைக் கூறியுள்ளார்.

**648. கம்பன் கண்ட கனவு (132-135)**

*வரலாறும் வாழ்வும்*: க. த. திருநாவுக்கரசு, மீனாட்சி பதிப்பகம் புதுக்கோட்டை, மு. ப. டிச. 1960

சோழப் பேரரசின் இறுதிக் காலத்தின் தொடக்கத்தில் வாழ்ந்தவன் கம்பன்(132). அன்றைய தமிழகத்தில் போரினால் உண்டாகும் கொடுமையை நினைத்தான். வறுமையினால் மக்கள் வாடும் கொடுமையை மனக்கண்ணால் கண்டான். செல்வச் சிறப்பினால் சீர்கெட்டழியும் செல்வர்கள் நிலையை நினைந்து வருந்தினான். அறியாமைப்பேய் நாட்டில் தலைவிரித்து ஆடுவதை எண்ணி எண்ணி உள்ளம் உருகினான். இந்நான்கு குறைபாடுகளும் அற்ற நல்லதொரு சமுதாயமாக விளங்கினால் தமிழகம் எத்துணைப் பொலிவுடன் திகழும் என்பதைப் பன்முறைக் கற்பனை செய்து பார்த்தான். அவன் உள்ளத்தே கருக்கொண்ட இக்கனவினைத் தான் படைத்த இராமகாதையில் அயோத்திமா நகர மக்கள் வாழ்வில் வைத்துக் காட்டிச் சென்றான்(133). (பால்: 86, 166) எண்ணூறு ஆண்டுகட்கு முன்பு கம்பன் காண விரும்பிய 'புதியதோர் உலகை' இரண்டாயிரத்து நானூறு ஆண்டுகட்கு முன்பு பிளேட்டோ இலட்சிய நாடாகக் கற்பித்துச் சென்றான்.

649. ஆடவர் (கம்பர் கண்டபடி) 9-16, (கவிதை)
கவியரங்கில் முடியரசன்: முடியரசன், முத்து புத்தக நிலையம், மு. ப. மே 1960; ரூ. 2-50

கதை நிகழ்ச்சிகளைக் கனவில் கம்பன், தயரதன், சனகன், இராமன், பரசுராமன், குகனும் பரதனும், வாலி, கும்பகருணனும் இராவணனும், கனவு கலைந்தது எனும் உட்தலைப்புகளின் கீழ் கூறிச் செல்கிறார்.

330 கம்பன் ஆய்வடங்கல்

650. கம்பன் (20) (கவிதை)
குழந்தைப் பாடல்கள்: நாக முத்தையா, செல்வி பதிப்பகம் காரைக்குடி; மு. ப. ஜூன் 1960

குழந்தைகளுக்கேற்ற வகையில் கம்பனை அறிமுகப்படுத்தியுள்ளார்.

651. கம்பன் என் பகைவன் (1—5) (கவிதை)
கம்பன் என் பகைவன்: நாக முத்தையா, செல்வி பதிப்பகம், காரைக்குடி, மு. ப. ஜூன் 1960; ரூ. 0-50

தொட்ட இடமெல்லாம் தோய்ந்த கவிதை நெறி, முட்கும் சுவை நலங்கள் மோதிப் பெருக்கெடுக்கக் கட்டுந் திறனுடையோன் கம்பன். பொல்லாக் காலத்தில் பொன்றுந் துணையாகி நல்ல நெறி தம்மை நாடி எடுத்துரைத்துச் செல்லும் வழிகாட்டிச் சேரும் துயரோட்டி வெல்லுந் திறமளித்தான் கம்பன். இதயத்தைக் கொள்ளைகொண்ட கம்பன் அதனைத் திருப்பித் தராததாலும், உலகோர் அவனையே மதிப்பதாலும் கம்பனைத் தன் பகைவன் என்கிறார்.

652. கம்பராமாயணத்தின் பெருமை
அண்ணாமலைப் பல்கலைக் கழக விரிவு பணிச் சொற்பொழிவுகள் 1961; கட்டுரை ஆசிரியர் ஜி. சுப்பிரமணிய பிள்ளை

இராவணனும் மற்ற அரக்கர்களும் தமிழர் என்பதற்கும் திராவிட ஆரியப் பூசலின் அடிப்படையில் இராமாயணம் எழுந்தது என்பதற்கும் அகச் சான்றோ புறச் சான்றோ கிடையாது(4). இராவணனைத் தமிழன் என்று உறவு கொண்டாடுவதும், அவனுக்கு ஒரு ஏற்றம் கற்பிக்க முயல்வதும் பெருந்தவறாகும்(5). இராமாயணம் ஒழுக்க சீலத்தின் உயர்வை எடுத்து விளம்பும் ஒரு விழுமிய நூல். உலகில் மனிதனுக்கு வேண்டிய அறங்களையும் அவன் செய்ய வேண்டிய கடமைகளையும் பல்வேறு நீதிகளையும் விரிவாக விளக்கி நிற்கிறது. வடநாடு, தென்னாடு என்ற பாகுபாடின்றி இந்திய நாடு முழுமையும் ஒன்றாக ஒற்றுமைப் படுத்திப் பிணிக்க வல்லது ராமாயணம்.

**653. இலக்குவன் சிரித்தான் (57—60)**

*கோவலன் மாதவிபால் மனமிழந்தது ஏன்?: சி. என். நாச்சியப்பன்*

பதினான்கு ஆண்டுகள் கழித்துத் தன்னை நித்திராதேவி அணுக அதனால் இலக்குவன் சிரித்ததைக் கண்ட ராமன், சீதை, அனுமன், சுக்கிரீவன், அங்கதன், விபீடணன் ஆகியோர் தங்களை எண்ணியே இலக்குவன் சிரித்ததாகக் கருதியதைக் குறிப்பிட்டு அதனை உலக இயல்பாக்குகிறார். மனதில் உறுத்தல் உள்ளவரை இக் குழப்பம் இருக்கும் என்றுரைக்கின்றார்.

**654. கம்பர் என்ன சொன்னார்? (98—121)**

*கங்கைக் கரையில் காவிரித் தமிழ்: அ. மு. ப.,*
*தமிழ்க்கலைப் பதிப்பகம்; சென்னை-30; ப. 1961; ரூ. 2-50*

ஆதிகாவியத்துடன் கம்பர் வேறுபடும், இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றமுறை, காதல்மணம் ஆகிய இடங்களைச் சுட்டுகிறார். இராமன் இராவணன் ஆரியர்கள். இராமன் ஆரியன் என்பதற்குச் சான்று தேவையில்லை. இராவணன் சாம வேதம் கற்றவன், புலத்தியன் மரபினைச் சார்ந்தவன், அனுமன் இராவணனுடன் வடமொழியில் பேசியதாக வான்மீகர் கூற்று, ஆரியவிளி ஆகியவற்றால் ஆரியன் என்கிறார். எனவே ஆரியர் தமிழர் போராட்டமன்று. ஆரியர் போரட்டமே(102). கம்பர் சமரச உணர்வைக் கூறுகிறார். சாதாரண ஆற்றுப் பெருக்கின் மேல் வைத்துச் சமரச ஞானத்தைக் காட்டுகிறார் (ஆற்றுப் படலம் 19) பொருள் வழியில் சமரசம் (நகரப்படலம் 74) மக்களுள் தமக்கென வாழாப் பிறர்க்குறியாளராக இருப்பார் மேம்பட்டவர்(106). (தாடகை வதைப்படலம் 15) உலகில்பிறந்த வெல்லாம் அன்பில் கட்டுப்பட வேண்டுவனவே என்பதையும் அன்பகத்தில்லா வாழ்வு பசையற்ற வற்றல் வாழ்வு என்பதையும் கம்பர் நூல் முழுவதும் காட்டிக் கொண்டே செல்கிறார்(104)

உடன்பிறப்புப் பாசத்தை உள்ளத்திலே அடக்கிவைத்தவருள் வாலி சிறந்தவன் கும்பகர்ணனும் அப்படியே. மனிதன் தற்பெருமை விழையாதவனாக இருத்தல் வேண்டுமென்பதை விலங்காகிய அனுமன் வழி அப்பண்பாட்டினை விளக்குகின்றார்(110). மன்னிப்பின் சிகரத்திலே வைத்து மனமறியாக் குற்றத்தை மறந்து, அன்போடு அவர்களை ஏற்று அணைக்க வேண்டிய ஒரு மனிதகுணத்தினைக் கம்பர் அன்று சொன்னார்(114) (அகலிகை கற்பு நெறியைத் திறம்பட இங்குக் காட்டுகிறார்) இராமனாகிய மனித உள்ளத்தேத உயரிய பண்பாட்டைப் புகுத்தித் தமது கதைக்குத் தலைவனாக அவனை ஆக்கிக் கொண்டார். கைகேயியை மட்டுமின்றி யாரையுமே தீயவராக்க விரும்பவில்லை.

கொடிய இராவணனும் நல்லன் என்றும் கெட்டது விதிவழியே என்றும் காட்டுகின்றார். இது, கல்கத்தாப் பல்கலைக் கழகத் தமிழ் மாணவர் மன்றத்தில் வழங்கிய சொற்பொழிவு.

**655. கம்பரசம்**

சி. என். அண்ணாதுரை

தூயமலர் பதிப்பகம்; 9, தருமராஜா கோயில் தெரு, சென்னை-2; மு. ப. 1961; ஏ. ப. 1971; ரூ. 1-50. 6+88

கம்பராமாயணத்திற்கு எதிர்ப்பு நூலாக அமைந்த இது 3 பகுதிகளாக அமைந்துள்ளது. கம்பரசம் (7-52) கம்பர்'விழா' (53-70), கம்ப இராமாயணம் (71-94) முதலிரு பகுதிகளிலும் கம்பர் பாடல்களில் காணப்படும் இன்பச்சுவையில் சிலவற்றை ஆபாசமாக எடுத்துக்காட்டி, காகுத்தன் பெருமை கூடக் கடுகளவு ஆகிவிடும்படி செய்கிறார் என்று கூறுகிறார். புண்யகதை பாடுகையில் இத்தகைய இன்பச்சுவை வேண்டாமென்றும் வெறுப்பு வாதம் இங்குப் புலனாகின்றது. இறுதிப்பகுதியில் கன்னடக்கவி பம்பன் என்பவரால் எழுதப்பட்ட பம்ப இராமாயணத்தின் கதைச் சுருக்கம் தரப்படுகிறது. இது இராவணனை உயர்ந்தவனாகக் காட்டுகிறது. இங்ஙனம் பலவகையாக இராமாயணங்கள் உண்டு என்றும், இப்படிப் பலரால் பலவிதமாகப் புனைந்துரைக்கப்பட்ட ஒருகதையைத்தான் நற்கதிக்கு ஏடு என்றும், நடுவீட்டுப் பூஜைக்கு உகந்ததென்றும், நமது புண்ய சரிதமென்றும் கூறுகிறார்கள் என்றி கூறி இராமாயணத்தின் எதிர்ப்பிரச்சாரத்திற்குக் கிளர்ச்சியூட்டும் வகையில் முடிக்கிறார்.

**656. Kamban on tho great Paradox (81—84)**

Dr. R. P. Sethupillai silver jubilee commemoration Volume Prof. A. Srinivasaraghavan M. A., 1961, Palaniappa Bros., Madras - 5, & Tiruchi - 1

Kamban was fostered on the tradition of the Alwars. In this Ramavatara he speaks almost in the words of Nammalwar. Kamban brings out the idea that God, if analysed by man's intellect, appears a paradox. In the theme of his epic itself this idea is implicit. Kamban is ever concious of this and while he is poet enough to make of his epic a moving human document, he never fails to shed on it the light of the mystic, the great white radiance of which life is but a dome of many and conflicting colours, the truth that breaks in the mind of man as myraids of irreconcilable gleams as the great Paradox.

657. கம்பன் கருத்தாழம் (101—111)

பாட்டிலே புரட்சி: தெ. பொ. மீனுட்சிசுந்தரம்; மு. ப. 1963; தொல்காப்பியர் நூலகம், 107, கனகசபை நகர், சிதம்பரம்; ரூ. 2-75

அன்பே சிவமாகி அனைத்துலகும் ஒரு குடும்பமான காட்சியே திருமங்கை மன்னர் வழிநின்று கம்பனும் காணுகிருன். உலக மெல்லாம் அன்புக் குடும்பம் ஆவதே இராமகாதையின் கருத்தாழ மென கம்பன் கண்டான். அழகு வழிபாடும் உண்டு. எல்லோரும் இராமன் வடிவழகைக்கண்டு உயர்வடைகின்றனர். சூர்ப்பணகை அழிந்தாலும் அதுவும் ஒரு வழிபாடேயாகும். சீதையும் அழகியே. அவளழகைத் தாய்மையழகாகச் சூர்ப்பணகையும் பாடுகிருள். அனைவரும் வழிபடுகின்றனர். இங்கும் வழிபாட்டில் ஒரு கோளாறு எழுகின்றது. அதுவே இராவணன் உயிரைக் குடிக்கிறது. விலங்கின் காமம்—அசமுகி, பொருந்தாக் காமம்—சூர்ப்பணகை, கைக்கிளை—இராவணன், ஐந்திணை—இராமன். இராமன் பிறக்கும் நாட்டில் அரசனே உடம்பாகின்ருன். இங்கே விலங்கினங்களும் இராமன் படைக்கப்போகும் அன்பு லகைப் படைத்து மகிழ்கின்றன.

658. படையெழுச்சி ப்பத்து (75—78) (கவிதை)

கவியரங்கக் கவிதைகள்: ரகுநாதன், என்சிபிஎச். 1963

எல்லோரும் எல்லாமும் எய்தி மாந்தர் இந்திரராய் தெய்வத மாய் இகத்தே வாழும் உல்லாச வாழ்வியலைக் கம்பர் உணர்த்துவ தாக, சிறையிருந்த மாட்சி, இருமகளிரைச் சிந்தையாலும் தீண்டேன் எனல், இன்றுபோய் நாளைவா எனல், காவியத்துப் புலவோர்க்கெல்லாம் கோமகனுல் இராமகாதை படைத்தல், பிறன்மனை நோக்கின் அழிதல் எனும் தமிழர் பண்பு, சகோதர ராய் அடைக்கலமாயினுரை ஏற்றல், அண்ணன் பாதுகையைச் சுமந்தானைப் பாடுதல், வீடணனைப் போற்றல், அறத்தின் வலிமை கூறல் முதலியவற்ருல் காட்டுகிருர்.

659. கம்பன் கவியரங்கில் மலரமுதன் (கவிதை)

பூ. அமிர்தலிங்கன்

பாரிநிலையம்; மு. ப. சன. 1964; 112; ரூ. 2

காடு 9-14 (1952, 17), பணியாள் 15-19 (53, 14), நகரம் 20-30 (54-31), உண்மை 31-36, (53-17), நிலமாம் கம்பன் 37-46 ('56) இளிவரல் 47-52 ('57, 17), வருகைப்பத்து 53-64 (58, 14), ஆண்மை 65-70 ('59, 15), வைணவம் 71-80 (60, 25), காப்பியக் கலைஞன் 81-90 ('51, 28), திருவயிற்றுப் பெறு 91-100 ('62, 25) ஈன்றவள் பகைஞன் 101-112 (63). அடைப்புக் குறிக்குள் கவிதையை அரங்கேற்றிய ஆண்டும், பாடல் எண்ணிக்கை

களுமாம். இக்கவிதைகள் காரைக்குடிக் கம்பன் திருநாள் கவியரங்கத்தில் பாடப்பட்டவைகளின் தொகுப்பு.

தேர்க் குதிரைப் பூட்டோடு முல்லைக்கீந்து சீர்பெற்றான் பாரி; பாருக்குள்ளே முல்லைபூச் சீதைக் கற்புப் படரத்தான் காவியத்தைப் படைத்தான் கம்பன்(11). சுமித்திரை தன் மைந்தன் இலக்குவனுக்கு எடுத்துக் கூறும் வாய்மொழிகள் கேட்டிட்டால் வனத்துள்ளும் பணியாள் தேவை என்பது உணரலாம்(16). மிதிலை, அயோத்தி, இலங்கைநகர வருணனையைக் கம்பன் கூறுமாற்றையும் நவில்கிறார். அன்புசெயின் அந்தணர்; அழிவே செய்யின் அரக்கரெனப் பேர் பெறுவர் என, கம்பன் கண்ட உண்மையாகக் காட்டுகிறார். அனுமன் வாழ்வால் திண்மையெலாம் தனக்கின்றிப் பிறர்க்கே யாகும் தியாகத்தால் அமரநிலை தெளியச்செய்தான்(35).

பாலகாண்டம் மருதம், பாண்முல்லை ஆரணியம், கோலக் குறிஞ்சி குரக்கினத்துக் கிட்கிந்தை, போர்செய் நெடுங்காண்டம் பொன்னிலங்கை நெய்தலொடு சீர்கெட்டுப்போய்த் திரிந்த செம்பாலை(43) என்றுரைக்கின்றார். இராவணன் சீதை கால்களில் வீழ்ந்து கெஞ்சுவது, தயரதன் கைகேயியிடம் இறைஞ்சுவது, மூக்கறுந்த சூர்ப்பணகை முகம், கும்பகர்ணன் வடிவு, கவந்தனது வயிறு, சூர்ப்பணகை தன்காமத்தை வெளிப்படுத்துவது, சீதை பிழைபட பேசி இலக்குவனை இராமனைத் தொடர அனுப்புவது, இலக்குவன் பெண்ணின் மூக்கரிந்தது, அங்கதன் இராவணன் அரசுதர ஏற்கமறுப்பது இவற்றை இளிவரல் சுவைக்கு எடுத்துக் காட்டாகத் தருகிறார்.

கண்டின் இனிக்கக் கவியருளும் கம்பர், கன்னித்தமிழின் சுவை பழுத்தகனி, இலகு தமிழினினிமை முதிர எழுது கவிஞன். இளமைதழுவு குமரி மொழியின் இணையில் புலவன், கற்பகத்தின் சோலைப்புலவர் நினைந்தறியாச் சுவை, சுவைக்கடலின் மூலப் பொருளாயிலங்குகின்ற முதல், கலையினறிவு முதிர முதிரக் கமழு மதுர நறவம் எனக் கம்பன் 'வருகை'யில் வரவேற்கிறார். சொல்லாண்மை—தயரதன் (வாய்மைக்காக உயிர் துறந்தது), மரபாண்மை—பரதன் (அரசேற்க மறுத்தது), அருளான்மை—சடாயு (சீதையைக்காக்க உயிர் துறந்தது), அடலாண்மை—கும்பகருணன் (கடமை) பேராண்மை—இந்திரசித்து, பேராண்மைக் குறை—இராவணன் (காமம்), கற்பாண்மை—சீதை (இராமன் வில்லாற்றல் காக்கப் பொறுத்திருந்தது) தாயாண்மை—சுமத்திரை (இலக்குவனிடம் 'முன்னம் முடிவாய்' என்றது), பேராண்மை—இராமன் (சீதையைத் தவிர பிறபெண்களைச் சிந்தையாலும் தொடாமை), ஊராண்மை (இன்றுபோய் நாளைவா எனல்) என ஆண்மையைப் பாடுகிறார். குலசேகரப்பெருமாள் கொழித்து வைத்த பொங்குதமிழ்த் திருமொழியைப் புரிந்து கொண்டார்,

புகழ்க் கம்பன் வைணவத்தைப் புரிந்துக்கொள்வார்(74) என்றுரைக்கிருர்.

விதித்தொழில்செய் நான்முகன்போல விடுத்த யாப்பை
விளையாட்டுப் பொருளாக்கிக் கையி லேந்திக்
கதித்தெழுந்து கடல்கலக்கிச் சூறை யாடும்
காற்றைபோல் ஓடவிட்டும் அனிச்சப் பூவை
மிதித்தாலும் இடருழக்கும் மென்சூல் கொண்ட
மெல்லியர்போல் அசைந்தாடித் துவள வைத்தும்
குதித்தாடும் இளமான்போற் குதிக்க விட்டும்
குன்றின்வீழ் அருவியெனக் கொழிக்க வைத்தும் (84)
கொஞ்சுகின்ற சதங்கையொலி குலுங்கு மாறும்
கொட்டுகின்ற போர்முரசு முழங்கு மாறும்
குஞ்சரத்தின் மணியோசை இரட்டு மாறும்
கோதண்டச் சிலையிஞெலி தெறிக்கு மாறும்
கிஞ்சுகவாய்க் கிள்ளைமொழி கிளக்கு மாறும்
கீதமிசைக் குயிலோசை கேட்கு மாறும்
பஞ்சியொளிர் சந்தமுறை பலவும் நாட்டிப்
பசுந்தமிழுக்கு முடிசூட்டி வைத்தான் கண்டீர். (85)

என்று கம்பன் காப்பியத்தை வியக்கிருர். கோசலை, கைகேயி, சுமித்திரை, தாரை, மண்டோதரி, வீடணன் தேவி, திருமால் முதலியோரின் திருவயிற்றுப் பேற்றினைப் பரவுகிருர். அறத்திஞர் வழுவினுர் அன்னையே எனினும் அவரையும் துறத்தல் அறமெனக் காட்டிய மாண்புறு பரதனின் மாசிலா வாழ்வில் சில பகுதிகளைக் கவிதையாக வடித்துள்ளார். எளிய, இனிய நடையில் தம் கவிதைகளை யாத்துள்ளார். சிலம்பின் தாக்கம் சில இடங்களில் வெளிப்படுகிறது. ராய. சொ. பாயிரமும், முகமலரை சா. கணேசனும் வழங்கியுள்ளனர்.

**660. காந்தியடிகளும் கம்பநாட்டாழ்வாரும்**

நாமக்கல் கவிஞர்

கவிஞர் பதிப்பகம், 363, ராஜவீதி, கோயமுத்தூர்-1. மு. ப. 1964; பக் 1+68, ரூ. 1-50

முதல் அத்தியாயத்தில் கவிச்சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வார் தன் காவியத்தில் காந்தியையே காட்டுகிருர் என்னும் இவர் இரண்டாம் அத்தியாயத்தில் தம்முடைய கட்சி குற்றமற்ற நியாயமுள்ளதாக இருந்தும் எதிர்க்கும் இம்சை புரிந்து வெற்றி பெறுவதைவிட எதிரிக்கு மனமாறுதல் உண்டாக்கும் முயற்சியாக உண்ணுவிரதம் மேற்கொண்டு உயிரைத் துறப்பதே மேலான தர்மம் என்று செயல்புரிந்த காந்தியின் மனப்பண்பைத் தான் கம்பர் தமது காவியத்தில் காட்டுகிருர் என்கிருர்(25).

ஆனால் இந்தத் தத்துவத்தைக் கூறும் பாடலுக்குச் சரியானஉரை சொல்லப்படவில்லை(25), 'இராவணனைக் கொன்றதனால் வரக் கூடிய நன்மை மிகப்பெரிய சம்பத்துதான் என்றாலும் கொலை புரிந்து அடைந்த இந்த சம்பத்து இகழத்தக்கதுதான்' என்றே வாய்விட்டுச் சொல்லி வருந்துகிறான் இராமன், இந்த இடத்தில் தான் கம்பன் காந்தி என்ற சான்றோனைக் காட்டுகிறார்(29). இக் காட்சி இடம்பெறும் சூழ்நிலையை விளக்கி இராவணன் வதைப் படலத்தில் உள்ள 'பூதலத்த தாக்கு வாயாக இனிப் பொலந் தேரை' எனும் பாடலில் கிடந்தான் தன்மேனி முற்றும் உருவாகி அறம் வளர்க்கும் கண்ணுளன் தெரியக் கண்டான் என்பதற்கு, இரத்த வெள்ளத்தில் கிடந்த இராவணனுடைய உடலின் அமைப்பு முழுவதும் ஆசையோடு பார்க்கத் தகுந்த உருவமாகத் தெரிவதைக் கண்டான் என்பதுதான் பொருள்(34). இராவணன் உயிர் துறந்த போதே அவனுக்குச் சீதைமேல் இருந்த ராகம் (மயல்) அடங்கிவிட்டது. பின் எப்படி அந்த மயல் இரத்தமாகப் பொங்கி வெளியாகும் (36) என்று பழைய உரையான வை. மு. கோ. உரையை மறுக்கிறார்.

மூன்றாம் அத்தியாயத்தில் 'தளிரியல் பொருட்டின் வந்த சீற்றமும்' என்னும் பாடலின் பொருளை (வை. மு. கோ. உரை) மறுத்து சீதையை அபகரித்துச் சிறை வைத்ததற்காக அவன்மீது கொண்டிருந்த கோபமும், இப்போது அவனுடைய உடல் கிழி பட்டுக் கிடப்பதைப் பார்த்துக் கொண்டு நின்றதனால் உண்டான கோபமற்ற அமைதியும் கலந்த நிலையில் புன்சிரிப்புடன் புகலலுற்றான் என்பதுதான் பொருள்(45) என்கிறார் 'வென்றியானுலக மூன்று மெய்ம்மையான் மேவினும்' என்ற பாடலின் பொருளையும் மறுத்து இவனைக் கொன்று விட்டதில் நான் என்னுடைய இயல்பான குணத்தை விட்டுப் போரில் பின்னடைந்து விட்டதால் போரில் பின்னடைந்து முதுகில் அடிவாங்கி விட்டதுபோல் நாணமடைகின்றேன் என்பது கருத்து(49) என்கிறார்.

'கார்த்த வீரியனென்பானுற் கட்டுண்டான்' எனும் பாடலில் கார்த்தவீரியனால் வெல்லப்பெற்றுக் கட்டுப்பட்டுள்ளானதலால் அவனை வென்றதைப் பற்றி ஏற்கனவே நாணங் கொண்டு நின்ற எனக்கு, அந்த என் நாணத்தை மிகுவிக்குமாறு முதுகிற் றழும்பும் காண நேர்ந்ததே இதனை நினைக்க என் நாணம் மிகுகின்றது(50) என்ற பொருள் உள்ளதாகக் காட்டுகிறார்.

போரில் புறங்கொடுக்காத, மகனிடம் விரிவுரை பகன்ற இராவணனைக் கம்பன் போரில் புறமுதுகிட்டவனாகக் காட்டியிருப்பானா? கார்த்த வீரியனால் கட்டுண்டவன், கைலாச மலையின் கீழ் நசுக்குண்டவன் என்பதால் அவனை வென்றது நாணப்பட வேண்டிய காரியமாகுமா? எனவினவும் ஆசிரியர்: கார்த்தவீரியன்

செய்ததைப் போலவோ அல்லது சிவபிரான் செய்ததைப்போல வோ இவனை வசப்படுத்தி இவனுக்கு மனமாறுதல் உண்டாக்கி நல்லறிவு வரும்படிச் செய்து அவனையும் வாழவைத்து நானும் மகிழும்படியாகச் செய்திருந்தால் அது எனக்குப் பெருமையுண்டா கியிருக்கும். அப்படிச் செய்யாமல் இவனைக் கொன்று விட்டதில் கொலைக்குற்றம் செய்து விட்டவனைப்போல் நாணமடைகின்றேன். மேலும் என்னுடைய இயல்பான கருவியாகிய கருணையைப் பிரயோகிக்காமல் கொலைக் கருவியைப் பிரயோகித்து விட்டதில் நான் செய்துள்ள காரியம் போர் முனையில் முதுகிட்டோடிப் புண் பட்ட தழும்பு போன்றதே (61) என்பதே சரியான உரை என்கி ருர். இவனைக் கொல்லாமல் நான் பட்டினி கிடந்து உயிரைத் துறந்து உலகில் நிலைத்திற்கும்படியான மிகப்பிரகாசமாக விளங் கத்தக்க கீர்த்தியை அடைய முடியாமல் சாப்பிட்டுக் கொண்டு உயிரோடிருக்க ஆசைகொண்டு பகைவருடைய ஏளனச் சிரிப்பு என்புகழை அழிக்கும்படி போரில் முதுகிட்டது போன்ற தோளாற்றலால் இவனைக் கொலை புரிந்து நான் அடைந்த இந்த வெற்றி உணமையான வெற்றியல்ல வென்ருன்(63) மாண்டொழி வது என்பதற்குத் தாஞக உயிரைவிடுவது, தாஞக இச்சைப்பட்டு ஒரு நியாயத்தை நிலை நிறுத்த உயிர் துறப்பது(64) என்ற பொருள் கூறுகிருர்.

விபீடணன் மூலம் இராவணன் நிலையறிந்த இராமன், இராவணனைக் கொன்றபின் அவனுடைய உடலைப் பார்த்த போதுதான் அவனுடைய முதுகில் போரில் புறங்கொடுத்து அடிவாங்கிய தழும்பு இருப்பதைக் கண்டான் என்பது பொருந் தாது(69). இராமன் இராவணனுடைய முதுகில் தழும்பு இருப் பதைக்கண்டது உண்மையாஞல், அடுத்த இரு பாடலில் உள்ள பதங்கள் அவ்வாறு பொருள் கொள்ள இடம் தரவில்லை(70). ஒன்ருக நல்லது கொல்லாமையை வலியுறுத்த வேறிடமின்மை யால் இங்கு இராமன் வாக்காகவே வைக்கிருர்(72). இராவணன் முதுகில் புண் ஏற்பட்டமைக்குக் காரணத்தைப் பின்ஞல் விபீ டணனே கூறுவதால் (இராவணன் வதை: 210-211) ஆசிரியரின் ஆராய்ச்சி புதுமையாக இருந்த போதிலும் பொருந்தாததா கின்றது.

**661. மானுடம் வென்றது (9-21)**

மானுடம் வென்றது: அ. மு. பரமசிவானந்தம்.
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், 8 சின்ன ரெட்டித் தெரு; எழும்பூர், சென்னை-8 மு. ப. அக் 1965 ரூ. 3
அணுக்கதிர் பொங்கல் மலரில் (1964) வெளிவந்த கட்டுரை.

தெய்வப் பிறவியிலும் மனிதப் பிறவியே மேல் என்பதை நிறுவி மனிதன் மனிதஞக வாழ்ந்தால் வேறுள தேவர், அரக்கர்

முதலிய குழுவை யெல்லாம் இம்மானுடம் வெல்லமுடியும் என்பதைக் காட்டி, அத்தகைய செம்மை திறம்பாத நல்ல மனித வாழ்க்கையில் வாழ நம்மை யெல்லாம் ஆற்றுப்படுத்துகிருன் கம்பன்(13). இந்தியப் பண்பாட்டு அடிப்படைக் கொள்கைகள் சிலவற்றைத் தன் பெருநூலின் இடையே பாத்திரங்களின் வாயிலாகக் கம்பன் விளக்கியுள்ளதை இக்கட்டுரையில் காட்டுகிருர். நெஞ்சறியா வஞ்சகத்தில் சிக்கியவர்களுக்குக் கழுவாய் உண்டு, கற்பு அடைக்கலம், சமயப்பொறை வாழ்வின் தேவை என்பதையும் சமயம் சமூகத்தை இணைக்கும் பண்பாட்டுச் சின்னமே என்பதையும் நன்கு விளக்குகிருன்.(20)

**662. கம்ப நாடகம்** (34-55)

அறிவுச் செல்வம்: கோ. பூவராகவன், மு. ப. அக். 1965; ரூ. 2-50

முயன்ருல் முடியுமா என்ற ஐயத்துக்கும் ஆராய்ச்சிக்கும் பதில் சொல்வதுதான் கம்பரின் ராமாயணம்(38) அறநூல். சோதனைகள் நிகழும் பொழுது மனிதன் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதற்கு இராமன் ஓர் உதாரண புருஷன். அறத்தின் வழிநின்ருல் விண்ணையும் மண்ணையும் இணைக்கலாம். (இராமன் விண், சீதை மண்) தந்தை சொல்மிக்க மந்திரமில்லை, தாயன்பு (மன்னவன் பணி அன்ருகில்) சகோதர அன்பு (நின் மகன் பரதன் மூடிசூழ்வான்) நட்பு அன்பு (குகனுடன்) முதலியவற்றையும் காட்டுகிருர். கம்பநாடகத்தை அயோமுகியினைச் சான்ருக்கி, வான்மீகியுடன் வேறுபடுவதையும் சுட்டி நாடக பாணியில் காட்டுகிருர். அறத்தை நிலைநாட்ட இராமலக்குவர்களுக்குத் துயர் என்பதும் இவர் கருத்து.

**663. கம்பன் மலர்** (கம்பராமாயணக் கட்டுரைத் தொகுப்பு)

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட் (10—417), 8, சின்ன ரெட்டித் தெரு, எழும்பூர், சென்னை - 8, மு. ப. 1965; 190, ரூ. 3

மு. கதிரேசச் செட்டியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நா. மு. வேங்கடசாமி நாட்டார், எஸ். வையாபுரிப் பிள்ளை, மு. ராகவையங்கார், ரா. பி. சேதுப்பிள்ளை, சுத்தானந்த பாரதியார், டி. கே. சிதம்பரநாத முதலியார், கோவை கிழார், ஈ. த. இராசேசுவரி, தெ. பொ. மீனுட்சிசுந்தரஞர், மு. அருணுசலம், மோ. ஸ்ரீ. செல்லம், தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பி. ஸ்ரீ, கி. வா. ஜகந்நாதன், ரா. பா. மு. கனி, வெ. ராமலிங்கம் பிள்ளை என்போரின் சுவை ஊற்று (1—15), கம்பன் கவிதை (16—18), கம்பர் காட்டும் ஒழுக்க நெறிகளிற் சில (19—25), கம்பனும் தமிழும் (26—50), மாருதியின் சீரிய மாண்பு (51—69),

இருவர் சாட்சி (70—75) நவரஸ நடனத்தில் கம்பன் (76—82), ரம்பையா? மேனகையா? (83—87), கம்பர் அழகுக்கு அழகு கண்ட முறை (88—95), இராமாயணத்தின் இரு திருப்பு மையங் கள் (96—110), உயிர்நிலைப் பாட்டு (111—121), அறிமுகம் செய்தல் (122—135), இராமாயணப் பெண்மையும் கம்பர் எடுப்பும் (136—147), கம்பன் கலைக் கோயில் (148—157), கம்பனும் பாட பேதங் களும் (158—168), அவள் (169—176), நான் கண்ட கம்பன் (177—187), கம்பன் திருநாள் (கவிதை 188—190) என்னும் 16 கட்டுரைகளையும் 2 கவிதைகளையும் கொண்டது இந்நூல்.

சீவகசிந்தாமணியின் காப்பிய நடை நெறியை மேற் கொண்டு, திருக்குறளின் அரிய கருத்துகளில் தோய்ந்து, இனிய ஓசை நயந் தோன்ற பிற்காலத்து எழுந்த அரிய தொடர்நிலைச் செய்யுள் கம்பராமாயணம். இதன் செய்யுள் எளிமை, இனிமை, ஆழம் உடைமை என்னும் மூன்று குணங்களையும் உடையது. இயற்கை வருணனையில் வைத்தும், உவமை மூலமாகவும் பொருள் விளக்கம் செய்வதில் கம்பர் செல்லும் நெறி வியப்பை அளிப்பது. ஆசான் முதலான ஆன்றோர்கள் முன்னிலையில் அடங்கியிருத்த லும், கூருமை நோக்கிக் குறிப்பறிதலும், அறிந்து வினை செய்த லும் போல்வன நன்மக்களுடைய ஒழுகலாறுகள். இதற்குப் பால காண்டத்தினின்றும் 'நினைந்த முனி பகர்ந்தவெலாம்' என்னும் பாடல் கொடுத்து விளக்கப்படுகிறது.

இயற்கை நெறியென்ற தொடரால் பாத்திரங்களுக்கும் சந்தர்ப்பங்களுக்குள் தக்கபடி யெழும் இயற்கையோசை பல எடுத்துக்காட்டுகளால் விளக்கப்படுகிறது. இவை கம்பன் தமிழின் ஆற்றலை நன்கு எடுத்துக்காட்டுகின்றன. ஆற்றல் நிறை கல்வியறிவுக் கெல்லாம் திரண்டதோர் குன்றமாய் விளங்கியவன் மாருதி. அக்குணக் குன்றத்தை அலங்கரித்து விளங்கிய கொடி முடியாகப் பிரகாசித்தது தற்புகழ்ச்சியற்ற அவனது அமைதி குணம். பஞ்சவடிச் சோலையில் இருந்த சீதையின் மெய்தீண்டி அரக்கன் எடுத்துச் சென்முன் என்று வடமொழிக் காவியம் கூறும் முறையை மாற்றிப் பர்ணசாலையோடு மங்கையைக் கவர்ந்து சென்முன் என்றமைத்துக் கொண்டார் கம்பர். இருவர் சாட்சி - சடாயு, அனுமன்.

சுத்தானந்த பாரதியார், கம்பனின் கலை ஓவியங்கள் பல பரத நாட்டியங்களுக்குப் பொருத்தமாக இருக்கின்றன என்று கூறி சில பாடல்களுக்குத் தாளமும் ராகமும் இட்டுக் காட்டுகிருர். ஒரு பெண்ணுக்கு அழகைத் தருவது அவளுடைய இயற்கை ஒளி தான். அழகுக்கு அழகு செய்வது ஏழைமை. மூக்கணிகள் 16-ம் நூற்றுண்டிற்கு முந்தி தமிழ் நாட்டில் இல்லை. துருக்கி நாட்டி லிருந்து வந்தன. பேசாரி, புலாக்கு, நத்து தமிழ்ச் சொற்கள்

அல்ல. திருப்பு மையங்கள் கதையை நீட்டிப்பதோடு கதையில் வருவாரையும் சிறப்பிக்கின்றன. காதலும் காமமும் இன்பக் கூத்தும் அறிவுக்கூத்தும் புரிகின்றன. சீதையே இந்நாட்டு பெண்களின் உயிர்நிலை. அரக்கியர் அளவு அற்றார்கள் என்னும் பாடல் கம்பனது இராமவதாரக் கதையின் உயிர்நிலைப் பாட்டு என்கிறார்.

கம்பராமாயணத்தின் சுவையை அனுபவிப்பதெல்லாம் 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று கம்பரே சொல்லிய வாக்கியத்திற்கு இலக்கியமாய் முடியும். பரதன் குகனுக்குத் தாயரை அறிமுகம் செய்தல் கூறப்படுகிறது. (பக்கம் 129—144 விடுபட்டுள்ளது) கற்பென்னும் திண்மையே போதும் பெண்மையின் ஏற்றத்திற்கு. கம்பன் தமிழ்ப் பெண்மையின் மேன்மையை எடுத்துக்காட்டியுள்ளான். சௌந்தர்யத்தின் எல்லையாக நின்ற சீதை அசோகவனத்தில் குணசௌந்தர்யத்தின் எல்லையாகவும் காட்சியளிக்கிறாள்.

சில எடுத்துக்காட்டுகள் தந்து பாடபேதங்களும் பொருத்தமும் பி. ஸ்ரீ-யால் விளக்கப்படுகின்றன. குகன் சீதையை 'அவள்' என்று குறிப்பிட்டமை அவன் பிறன்மனை நோக்கப் பேராண்மையைப் புலப்படுத்துகின்றது. கம்பன் விதியிலும், தருமத்திலும், இறைவனைச் சரண் அடைவதிலும் நம்பிக்கைக் கொண்டிருந்தான் என்பதற்கும் அவன் வாழ்வில் சோகவண்ணம் படர்ந்திருக்கலாம் என்பதற்கும் மேற்கோள்கள் தந்து இறுதிக் கட்டுரை நிறைவு பெறுகிறது. இது சில துணைத்தலைப்புகளையும் கொண்டது. ஆராய்ச்சிகளால் மயங்காமல் நேராய்க் கம்பனைப் படித்து இன்பம் பெறவேண்டும் என்பது நாமக்கல் கவிஞரின் கருத்து.

இந்நூலில் சில கட்டுரைகள் அறிமுகக் கட்டுரைகளாகவே அமைந்துள்ளன.

664. **கம்பன் கவியமுதம்** (கம்பராமாயணக் கட்டுரைத் தொகுப்பு) தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் லிமிடெட்: 8, சின்ன ரெட்டித் தெரு; எழும்பூர், சென்னை - 8, இ. ப. 1965; 6+207; ரூ. 3

இந்நூல், எம். ராதாகிருஷ்ண பிள்ளை, வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ஏ. ஸி. பால் நாடார், சா. கணேசன், கே. ஞானம்பாள், கே. நயினார் முகம்மது, லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், மா. இராசமாணிக்கனார், மு. சண்முகம் பிள்ளை, அ. ச. ஞானசம்பந்தன், பெ. நா. அப்புஸ்வாமி, மு. வரதராசனார், ரா. ஸ்ரீ. தேசிகன், ந. சோமயாஜுலு, அ. முத்துசிவன், மா. சுந்தரா, ரா. சுப்பிரமணியம் என்போரின் கம்பர் (1—11), கம்பர் கடவுட் கொள்கை (12—25), கம்பராமாயணக் காவிய அமைப்பு

(26—40), கம்பன் கனவு (41—60), கைகேயி (61—70), இராமன் தண்மையும் இலக்குவன் வெம்மையும் (71-83), கம்பர் கவித்திறம் (84—92), சேக்கிழாரும் கம்பரும் (93—105), கம்பனது கதாநாயகி (106—119), பாடற் பண்பு (120—130). மாயமான் (131—142), உள்ளம் குளிர்ந்தது (143—148), காவியத்தில் கண்ட கம்பர் (149—166), நாம் வெறுக்கும் பாத்திரம் (167—174), தருமத் தம்பி (175—192), பரதன் குணநலம் (193—205), கம்பன் கலைவளம் (கவிதை 206—207) என்னும் 16 கட்டுரைகளையும் கவிதையையும் கொண்டமைவது. சில கட்டுரைகள் சிறு தலைப்புகளையும் கொண்டது.

உலக மகா காவியங்களுள் இராமாயணம்போல் எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் காவியம் வேறு ஒன்றும் இல்லை. இன்று ருஷியாவில் நிலவும் பொதுவுடைமைப் பண்பிற்குக் கம்பர் அடிகோலியவர் எனலாம். ஆனால் அவருடைய சமவுரிமை தூய சகோதரப்பான்மையாகிய அறவுணர்ச்சியில் நிலை பெற்றது. விட்டுணு கம்பராமாயணத்துக்கு ஏற்புடைக் கடவுளாவதன்றி, நூலாசிரியருக்கு வழிபடு கடவுளுமாவரென்று கொள்வதற்கு ஆதாரமான புறச்சான்றுகள் இருப்பதாகத் தெரியவில்லை.

கடவுள் சமயங்களெல்லாவற்றையும் கடந்த பரம் பொருளென்றும், கடவுளின் ஒரோர் அம்சபூதரே ஒவ்வொரு சமயக் கடவுள் என்றும் கொண்ட கொள்கையுடையவராகக் கருதற்பாலர். கதைப் போக்கையும் பாகுபாடுகளையும் முதல் நூலிற் கண்ட பிரகாரமே கம்பன் ஆளுகிறான். எல்லோரும் இராமன்பால் உள்ள அன்பினால் பிணிக்கப்பட்டு ஒருவருக்கு ஒருவர் சமரசமுடையவர்களாகிறார்கள். இதுதான் காப்பிய ஒற்றுமையின் மர்மம். கம்பன் கண்ட கோசலம்—காந்தியடிகள் கனவு கண்ட சர்வோதயம். கைகேயிக்கு—கிளியோபாட்ரா, லேடிமாக்பெத் ஒப்புமை, கைகேயியின் கொடுமையிலும் முறை இருக்கிறது.

தண்மையில் வெம்மை அடங்கி விடுதல்போன்று இலக்குவனின் சிற்றமாம் வெம்மை, இராமனது சாந்தமாம் தண்மையில் அடங்கி விடுவதற்கு 3 காட்டுகள் தரப்படுகின்றன. ஆழ்ந்த கருத்துகளைத் தெளிவான நடையிற் கூறுதல், நினைவாற்றல் தவறாமற் கருத்துகளைக் காட்டி முடித்தல், சிந்தாமணி திருக்குறள் நூற் கருத்துகளை அழகுற அமைத்தல், சில பண்புகளை அணி நலந் தோன்றக் கூறுதல், சில நிகழ்ச்சிகளை நேரில் நிகழ்வதுபோல் அறியக் கூறுதல் - கம்பனில் உண்டு - காட்டுகளுடன். கம்பர் மிதிலைக்காட்சிப் படலம் அமைத்தமைக்குப் பெரியபுராணப் பகுதி பெருந்துணை புரிந்ததாகல் வேண்டும். பல கருத்துகளும் தொடர்

களும் பெரியபுராணத்தினின்றும் எடுத்ததற்குக் காட்டப்படுகின்றன.

சீதைக்குக் கணவனே தெய்வம் - விளையாட்டுப் புத்தியுடையவள். எத்தகைய துன்பம் வந்த போதிலும் தன்நிலையில் தாழ்தல் தகாது என்னும் உயரிய தன்மையை உலகிற்குக் காட்டினாள். கம்பன் பாடல் படித்து உணர்ந்தால் படிக்கின்றவனைத் தன்னை மறந்து ஒன்றச் செய்வது.—'வெம்மடங்கல் வெகுண்டனைய'. கவிஞன் கற்பனையுலகிலுள்ள அற்புத சிருஷ்டிகளில் ஒன்று மாய மான். 'தென்சொற் கடந்தான் வடசொற் கடற் கெல்லை தேர்ந்தான்' என்பது கம்பருக்குப் பொருந்தும் என்பது பல காட்டுகளோடு நிறுவப் பெறுகிறது.

சிப்பியிலே நல்லமுத்து விளைவதுபோல் கூனியின் அடாத அதிகப்பிரசங்கங்களுக்கிடையே, தேசத்தின் தர்ம சிந்தனையையும். தாராளத் தன்மைகளையும் லாவகமாகக் காட்டும் கம்பர் உணர்ச்சியில் அமிழ வைக்கிறார். வீடணன் சிறந்தவன் என்பது, இராமன், சீதை, அனுமன், கவி, கும்பகருணன் கூற்றால் நிறுவப்படுகிறது. நீதியை அபிமானிப்பதால் உலக வரம்பில் நிற்கின்றான் கும்பகருணன். நீதியை அபிமானிப்பதில் லட்சிய வடிவிலே நின்றுவிடுகிறான் விபீஷணன். இராமாயணத்திலே சிறந்த பாத்திரம் பரதன் தான், சகோதரர்களுக்குள்ளேயே ஒப்புயர்வற்றவன் பரதன். தன்னை மறந்திடச் செய்யும் கம்பன் கவிதையின் நயம் கவிதையில் காணப்படுகிறது.

அடிக்குறிப்புகளுடைய கட்டுரைகளும் காணப்படுகின்றன. அறிமுகக் கட்டுரைகளும் உண்டு.

**665. கம்பர்**

வ. சுப. மாணிக்கம்

மணிவாசகர் நூலகம், சிதம்பரம். முதல் பதிப்பு 1965, இ. ப. 1972; ரூ. 4

சொருணம்மாள் நிதிச் சொற்பொழிவு என்பதனை முன்னிட்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற 3 நாட்கள் சொற்பொழிவே இந்நூல். இது காப்பியப் பார்வை, காப்பியக் களங்கள், காப்பிய நேர்மை என்னும் முப்பெருந் தலைப்புகளையும் பல துணைத் தலைப்புகளையும் கொண்டமைகின்றது.

காப்பியங்களில் பெரியது கம்பராமாயணம். கூடிய கனத்திற்கேற்பக் கூடுதலான காப்பிய குணங்கள் உள்ளன. ஒரு நூலின் ஆற்றல் ஒப்புமை முறையால் வெளிப்படுவதில்லை. ஒரு நூலின் உண்மையை அகத் தன்மையை வெளிக் கொணர்தற்குப் பயன்பட வேண்டும். எவ்வளவு நயம்மிக்கப் பாடலாக இருந்தாலும் தனிப்பார்வை காப்பியப் பார்வையாகாது. காப்பியத்தின் உறுப்

பெண்க் கொண்டு தொடர்பழகு காண வேண்டும். சிலப்பதிகாரம் சீவகசிந்தாமணி, குறள் போன்றவற்றிற்குப் பாடபேதங்கள் பெருகாமல் உரையாசிரியர்கள் தடுத்தது போன்று நல்ல உரை யாசிரியன் ஒருவன் கம்பராமாயணத்துக்கும் தோன்ற வேண்டும்.

ஒரு செய்யுளில் எது நல்ல பாடம் என்று தேர்ந்தெடுப் பதற்குக் கூட முழுப்பார்வை வேண்டும். தனிப்பாடலின் நயங் களால் சிந்தனைத் தொடர்பழகினைக் காண இயலாது. சங்கிலிப் பார்வைவேண்டும்.—சூளாமணிப் படலம், திருவடி தொழுத படலம், பாடல்களுக்குக் கண்டபடி சொன்னயம் பார்த்தல் கூடாது. காணும் நயம் பாத்திரத்தின் குணத்திற்குப் பொருந்த வேண்டும்.—ஆழிசூழ் உலகமெல்லாம். உலகின் ஒவ்வொரு பொரு ளையும் காப்பியத்தின் ஒரு கூருகப் பிரதிபலிக்கின்ருன் கவிஞன்— தசரதன் இறந்தபொழுது சூரிய வருணனை. அவல காண்டம் எனத் தகும் அயோத்தியா காண்டத்துக்கு ஏற்ற இன்ப காண்டம் பால காண்டம். வருணனைப் பாட்டுகள்தான் கதையைக் காப்பியம் ஆக்கும் பாடல்கள்.

பாத்திரங்களுக்கு உலக வரங்கள் எவ்வண்ணம் தொடுக் கிருன். மரஞ்செடி, கொடி, பறவை, விலங்கு, மலை, நிலம், கடல் முதலானவற்றை எவ்வாறு கதைக்குப் பக்குவப்படுத்துகிருன் என்று காண்பது காப்பியப்பார்வை. முன்னை நூல்களின் அமைப் புகளைக் கம்பர் போற்றிக் கொண்டிருப்பினும் போற்றிக் கொண்ட திறங்களில் புதுமை காண்கிேரும். கம்பராமாயண கதைக்கு வடமொழி மூலமாக இருந்தாலும், கதைமேல் எழுந்த காப்பியக் கட்டிடத்துக்குத் தமிழே மூலமாகும். மொழி வளர்ச் சிக்குக் கம்பர் பல துறையில் வழிகாட்டி,- வச்சிரத்தெயிற்றவன், மக்களைக்கொண்டு காப்பியத்தை நடத்த முயலாதபோது புலவன் தேவர்களைப் புகுத்தி நடத்துகிருன், கணவன் சாவுக்குக் கைகேயி ஒரு காரணமாக இருந்தாலும் கற்பு கெட்டவள் என்று கூற முடியாது. நன்மையும் தீமையும் சகடக்கால்போல் சுழலும்போது தான் காப்பிய இயக்கத்துக்கு வாய்ப்புண்டு. காப்பிய நீட்டத் துக்குப் புலவன் எப்பாத்திரத்தையும் துணிந்து வணக்கு கின்ருன்.

இராமன் பக்கத்துக்குக் கூனிபோன்று இராவணன் பக்கத் துக்குச் சூர்ப்பணகை. காப்பியத்தை நீட்டிக்கும் புலவன் சிலகளங் களை அமைத்தல் கூடாது. மாணவர்க்குப் பாடம் அளவாக இருந் தாலும் நிரலாக இருக்கவேண்டும். இராமன் தன்னேரில்லாத் தலைவன்.—பகைவன் இராவணனும் மதித்தல். இராவணன் மந்திரப்படலம் குடியரசு தன்மையினைக் காட்டுகிறது. இராமா யணப் போக்கில் இராமன் தவறுமிடங்கள் பல. காப்பிய விரிவுக்கு ஒரு பெருந்துணை செய்த நிகழ்ச்சி சீதையை இருவரும் விட்டுப்

பிரிந்தமை. இராவணன் செய்த குற்றம் ஒன்றாயினும் அது பெரும்பிழை—பிறன்மனை நயத்தல். மனைவியரும் தம்பியரும் புதல்வரும் உற்றாரும் பெற்றோரும் இராவணனைக் கண்டிக்கத் தவறவில்லை. எனவே சீதை கூறியது பொருந்தாது. இராமன் அறிவிற் குற்றப்பட்டவன். இராவணன் ஒழுக்கத்தில் குற்றப் பட்டவன், அறிவுவேண்டும்; அதனினும் சிறந்த ஒழுக்கம் வேண்டும் என்று காட்டுவது இராமாயணம்.

முழுப் பார்வையை வலியுறுத்துவதே இந் நூலாசிரியரின் நோக்கமாக அமைகின்றது. இது ஒரு புதிய பார்வையாக அமைகின்றது.

**666. மகுடாபிஷேகம் (141—147)**

பிரிந்தவர் கூடினால்...: மகரம்

பழனியப்பா பிரதர்ஸ், சென்னை - 14, திருச்சி 2, மு. ப. மார்ச் 1966; ரூ. 3-50

மகுடத்தைத் துறந்து வரும் ராமனை, மகுடம் கட்ட பரதன் வேண்டுகிறான். ராமன் சுக்கிரீவ, விபீடணர்களுக்கு மகுடம் சூட்டுகிறான். 'நீ அரசாள்' எனப் பரதன் கூறியவுடன் சத்துருக்கனன் அதனை வெறுத்துத் தன் கோபத்தைக் காட்டுகிறான். ராமர் இறுதியில் முடிசூட்டிக் கொள்ள கம்பன் தன் நன்றியுணர்வையும் அதன் மூலம் வெளிப்படுத்துகிறான்.

**667. கம்பராமாயணத்தைக் கற்க முடியுமா? கற்க வேண்டுமா? (174—182)**

நாடகக் காப்பியங்கள்: தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

நாவல் போன்று படிக்க வேண்டும். பதம் பிரித்த பதிப்புகள் இதற்குப் பயன்படும்(176). இதனால் இலக்கிய ஆராய்ச்சியை மாணவர்களே நேர்முகமாகச் செய்வதற்கு இடம் உண்டு. எல்லா நிலையினருக்கும் இன்பம் அளிக்கும் சிறந்த நாடகப் பாங்கில் கம்பராமாயணம் அமைந்துள்ளது. பல போர்ப் பகுதிகளில், குழந்தைகள் சுவைக்கும் வகையில் அமைந்துள்ளவைகளைப் பயன்படுத்தி அவற்றைச் சிறுவர் இலக்கியம் எனக்கொண்டு ஆட்டப் பாடல்களாகப் பயன்படுத்தலாம்(180). நாடகமாகவும் வகுத்து நடிக்கச் செய்து பயன் பெறலாம்(181). பண்பாட்டின் வேற்றுமைகளை மனித ஒற்றுமை அடிப்படையில் அறிந்து பழகுவதற்கும் உணர்வதற்கும் பலவகைக் காப்பியங்களும் உதவும். எனவே அதற்குக் கம்பராமாயணத்தைப் பயன்படுத்த வேண்டும்.

**668. கம்பன் வேண்டாமா? (118-129)**

சொல்லமுதம்: குன்றக்குடி அடிகளார்

தமிழ்ப்பண்ணை—சென்னை-17; மு. ப. அக். 1966; இ. ப. ஆக. 1971; ரூ. 5

தமிழ்நாட்டில் கம்பனுக்கு எதிர்ப்பு இருப்பதைச் சுட்டி, 'கம்பன் தமிழ் நாகரிகத்தை, தமிழ்ப் பண்பை, தமிழ் மரபைக் காத்த காவலன்' என்றுகூடக் கூறலாம் என்கிறார். கம்பன் சோஷலிச சமுதாயத்தைப் பற்றி பேசுகின்றான். கம்பன் காண விரும்பிய நாட்டில் குறிக்கோள் இல்லாதவர்கள்—குறிக்கோளை அழித்தவர்கள் யாருமேயில்லை(123), நாடு தம்பிக்கு என்றவுடன் கொண்ட இராமனின் மனப்பண்பு வேண்டும். வள்ளுவர் கருத்தினைக் கொண்டு சீதையைச் சிறந்த குடும்பத் தலைவியாக, நிறையுடையவளாகக் காட்டுகிறான். குடியாட்சி மலராத காலத்தில் குடியாட்சிக்குக் கால்கோள் செய்திருக்கிறான்(127). அருமையான போர் ஒழுக்கநெறி, அறிவியல் துறையிலும் கூட சிறந்த கருத்துகளைக் கொண்டு விளக்கினான். கம்பனை வேண்டாம் என்றால் இன்றைக்கு 800 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த சிறந்த வாழ்க்கைச் சுவட்டை அழிக்க முற்படுகிறோம் என்றுதான் பொருள். ஆகவே கம்பன் வேண்டும் என்கிறார்.

**669. கம்பர் கண்ட கனவு** (200—213)

*கற்பனைச் சிறகு*: ரா. ஸ்ரீ. தேசிகன், கலைஞன் பதிப்பகம், தியாகராயநகர், சென்னை-17; மு. ப. டிச. 1966; ரூ. 4

நரசிங்கபிரான் மீதுள்ள பற்றால் இரணியவதைப் படலம் பாடுகிறார் போலும். முற்றிலும் ஒருவைணவர் என்பது காப்பியத்தினால் தெரியவருகிறது. 12ஆம் நூற். பிற்பட்டவர், மில்டனுக்கு நிகரானவர்(201). பண்டைய இலக்கியம், நவீன இலக்கியம் இந்த இரண்டு பள்ளத்தாக்குகளுக்குக்கும் இடையே ஓர் உன்னத சிகரம் கம்பர், அறத்தின் அழுத்தமான அத்திவாரத்தின் மீதுதான் ஓர் உயர்நாகரிகம் எழவேண்டும் என்பதைக் கம்பர் வற்புறுத்துகிறார்(206). கல்வியாம் வித்திலிருந்து எல்லாம் தோன்றுகிறது. அன்புதான் எல்லாவற்றினும் ஆதாரம் என்ற தத்துவத்தை உணர்த்துகிறது.

இல்லறம் நடத்துவது மற்றவர்களின் நலத்தைக் கருதியே(207). உடல்நலத்தையும் பேணவேண்டும்(208). அரசியலில் ஓர் புதிய பாதையை வகுத்துவிட்டார்(211). தனித்த மனிதனின் நீதியையும் அரசியல் நீதியையும் வள்ளுவர் பிரித்துவிட்டார். இவ்விரண்டிற்கும் ஒரு பாலத்தை அமைத்துவிட்டார் கம்பர். எவரெவர் அன்புப் பாதையில் நிற்கின்றார்களோ அவர்களனைவரும் உடன் பிறந்தோர் என்ற கருத்தைக் கம்பர் விளக்கிக் காட்டிவிட்டார். அறத்திற்கு இருப்பிடம் அயோத்தி. ஞானத்தில் எழுந்த அருளுக்கு மிதிலை, அறத்தையும் அருளையும் சிதைக்க முயன்ற இலங்கையைப் பாவத்திற்கு உறைவிடம் என்று வான்மீகி வழியில் கம்பர் அமைத்துள்ளார்.

**670. இராமாயணப் போர்க்களங்கள்** (107—122)
*கட்டுரை வளம் : சி. பாலசுப்பிரமணியன் எம். ஏ., எம். லிட்.*
*பாரிநிலையம்; மு. ப. 1966; ரூ. 2-75*

*இராமன் தாடகையோடு போர் செய்தது, பரசுராமனோடு பொருதது, வாலியை வதைத்தது ஆகியவற்றுடன் முதல்நாள் போர், கும்பகர்ணனை வதைத்தது, இந்திரசித்து இறந்தது, மூல பலசேனை வதை, இராவணன் வதை முதலியவற்றையும் கூறி இப்போர்க்களங்கள் நல்லபல கருத்துகளை நவில்கின்றன என்கிறார்.*

**671. காப்பிய உலகில் கம்பன்** (12—28)
*கட்டுரைவளம் : சி. பாலசுப்பிரமணியன் எம்.ஏ., எம்.லிட்.*

*பிற காப்பியங்கள் சிறியவை, புறச்சமயங்களைப் போதிப்பவை, வாழ்க்கையோடு பொருந்தா பண்பு, பழக்க வழக்கம் போதிப்பவை ஆகவே பொதுமக்களிடம் ஆதரவில்லை. இந்நிலையில் கம்பன் தோன்றினான். தமிழில் இராமாயணம் எழுதித் தமிழ்ப் பண்பாட்டைக் காப்பாற்றியவன் கம்பன். சரித்திர புருஷனை அவதாரமாக்கியது குறள் நெறிப்படி சரியே (வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்). இறைக்கு, கலைக்கு, இனம், மொழி கிடையாது. பாராளும் பதவியில் பற்றுக்கொள்ளாதவன் இராமன் என்பதனை விளக்கிப் பிறபண்புகளையும் சுட்டுகிறார். ஒருத்தனுக்கு ஒருத்தி என்ற நியாயத்தைச் சமூகத்தின் சட்டமாக்குவதற்கு என்று எழுதப்பட்டதுதான் இராமாயணம்(27). இராமாயணத்தை எதிர்ப்போருக்கும் பதில் தருகிறார்.*

**672. கம்பனின் கற்பனை நயம்** (151—158)
*நாடகக் காப்பியங்கள் : தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்*

*குப்பையாகக் கிடப்பனவற்றை ஒன்றுபடுத்திப் பொருத்த முறச்செய்து நம்பும்வகையில் வடிவம் கொடுத்து வெறும் கருத்தாக இல்லாமல் ஒரு கதையின் வழியே அவை அவை விளக்கம் பெறச்செய்தே இராவணன் என்ற பாத்திரத்தைக் கம்பர் படைத்துள்ளார்(156). இவ்வாறு எங்கெங்கோ இருப்பனவற்றை ஒன்று சேர்த்து ஒரு வடிவம் தருவது படைப்புநிலைக் கற்பனை. ஒரு பொருளைக் கண்டபோது எழும் சுவையோடு மற்றொரு பொருளை இயைய வைத்துவிடும் தொனிநிலைக் கற்பனையை, இராமன் பிறந்த கோசலநாடு அன்புலகம் என்று காட்டவரும் கம்பன் அது கோசலை முழுவதும் பரந்து உள்ளது என்பதனைக் குறிக்கப் பாடும் பாடலின் (நாட்டுப் படலம் 13) வாயிலாகக் காட்டுகிறார். ஆழ்பொருள் காணும் கற்பனையைக் கம்பர் கொண்டுள்ளார். கடவுளே மனிதனாக வந்து மனிதனாகவே*

வாழ்ந்துகாட்டி உலகத்தை உயர்த்தும் நோக்கம் கொண்டதை சீதையிடமும் உள்ளதாகக் கம்பர் 'அரக்கியர் அளவு அற்றார்கள்' எனும் பாடலின் மூலம் காட்டுகிறார்.

**673. Kamban's Rāmāvatāram** (34—41)

The Pagent of Tamil literature—Prof. T. P. M., Sekar Pathippagam, 30 Post Office Street. Madras - 1, F. E. Ap. 1966. Rs. 5

Ramayana is the elaboration of the whole story as told by Thirumankai ālwar. Unless there is premarital love swayamvara cannot be justified in the Tamilian court of love. That is the reason why Kamban makes Rāmā and Sita see and fall in love with each other even before the swayamvara takes place (36). The suffering of Sita the Patni remainds us of Gandhi's Satyagraga(37). The story of Uttara Kāṇtā in Vālmiki is utilised by Kamban in a different way for emphasising the great eqality found every where in the Rāmarājya(44). The author also gives details of Rāmarājya, Rāvanarājyā and kiskintarāj. He says that the story of Rāmā is not a story of any victory on the battlefield but the story of slow development of a Rāmarājya.

**674. The Ramayana And It's Influence In The Literature Drama And Art of Soutb And South - East Asia** (303—314)

Tamil Culture: Vol. XII No. 4: S. Singaravelu Oct—Dec. 1966

The original poem along with its later additions was a Complete work by the end of the 2nd Century B. C. The most outstanding of Ramayana of the south and southeast Asian peoples in various languages being the old Javanese Rāmāyanā Kakawin of Yōgiswara, Malay Hikāyāt Sri Rāmā of an unknown author, The Hikāyāt Mahārāja Rawaṇa, the Sri Rāma, a fairy tale told by a Malay rhapsodist, the Thai Rāmākian or Rāmakīrti of king Rāmā I (1782—1809) and king Rama II (1809—1824) of Thailand, the Rāmā Jataka of Laos, the Annamita legend of Rāmā and the Combodian Rāmayan. Although the authors of some of these southeast Asian versions of the Rāmāyana are known to known to have borrowed the story and its various episodes from the original epic and

its various Indian adaptations, particulary the south Indian Version of the Tamil Kambarāmayanam and the Bengali Version(304).

Apart from literature in which the story of Rāmā has found an abiding place through the ages, there have been also dramatic representations of the story, which are performed an important religious and social occasions in the villages and towns of India, Ceylon, Malaysia, Thailand, Indonesia and other countries of south and southeast Asia. Selected episodes of the Rāmāyana form the themes of the dance - drama enacted by the famous dancers of Kerala and south India(305). In Malaysia the Wayāng Kulit (the leather puppet shadow play) is played in all important occasions. The performance lasts generally for seven nights(305). The various characters of the Rāmāyana are alive to this day through the dramatic representations of the dance - drama and the shadow play not only in India, Ceylon and Malaysia but also in Indonesia and Thailand(306).

In Indonesia particularly in Jawa and Bali, besides the Wayāng Kulit, there is also the popular theatrical form of dance drama known as Wayāng wong, in which the actors are men instead of the leather puppets, whose shadows perform the Yayāng Kulit(307). The Thai Rāmākian, the Thai version of the Rāmāyana was first composed by king Rāmā I while another Rāmākian Version regarded as the most suitable for representation on the stage is that of king Rāmā II(307). The peoples of south and southeast Asia tried to keep the characters of the Rāmāyana alive by another artistic production. This was the imperishable forms of sculpture and bas - reliefs of temples and movements raised by the princes and the peasents who were both attracted by the story of Rama(308). The influence of the Rāmāyana in the life of the Combodian people would seem to date back atleast to the 6th or 7th Cent A.D (311).

Yet another form of artistic representation of the story of Rāmā was the mural painting in Thailand, the Wat Phara Kala (The Chapel of the Emerald Buddha) built in 1784 by king Chao Phraya Chakri (Rāmā I) has such murals in the wall of its winding gallery, depicting the seems from the

Thai Rāmākian. The story of Rama has been attractive in its delienation of not only the nobler human Virtues, but also of the darker aspects of human nature(313). The name Lakshmana came to be Conferred on the Classical Malay hero, Hang Tuah, as a title great Valour an Island. If the north-west Coast of the Malay peninsula is to this day called Pulau Lankawi; one of the kingdoms of Thailnd namely the kingdom of Ayuthya (1350—1767) was named after its namesake in India; and the term Pāduka is to this day used as a formal title of address when addressing the paramount Rular of Malasia as in Sri Pādua - Baginda - yang di - Pertuan Agong.

675. **நிகும்பலை** (85—105)

*நிகும்பலை நாடகங்கள் : அ. சீநிவாசராகவன்*

*மெர்க்குரி புத்தகக் கம்பெனி; கோயமுத்தூர்—1; மு. ப. மார்ச்* 1967; ரூ. 2-75

*நிகும்பலை யாகத்தை அழித்து இந்திரஜித்தை கொன்ற நிகழ்ச்சி நாடகமாக்கப்பட்டுள்ளது. இது கம்பசித்திரத்தை ஒட்டிய குறுநாடகம் என ஆசிரியரே கூறியுள்ளார். வானொலி நாடகமாக எழுதப்பெற்றது.*

676. **கம்பன் புகழ்** (5—17)

*கம்பன் புகழ் : நா. மகாலிங்கம்*

*மணிமேகலைப் பிரசுரம்; தியாகராயநகர், சென்னை-17; மு. ப.* 1967; ரூ. 2

*காரைக்குடி கம்பன்விழாத் தலைமை உரையே இக்கட்டுரையாகும். சகோதரப் பாசத்தை வற்புறுத்துவதில் இராமாயணம் முன் நிற்கிறது. மண்ணக அரசுக்குத் தசரதன் சிறந்த வழி காட்டி(8). இருவரது காதலுறவு இறுதிவரையில் இணைந்து உறுதியோடு நிற்கும் அற்புதந்தான் இராமாயணக் காவியமாக மலர்ந்திருக்கின்றது(10). ஆண்மகன் கற்பு வலியுறுத்தியுள்ளமை சிறப்பாகும். உறுதிமொழி காப்பாற்றுதல் என்பது நன்மைக்கும் வளர்ச்சிக்கும் இன்றியமையாதது. மனிதவாழ்வில் உண்டாகும் சில தர்மசங்கடமான நிகழ்ச்சிகளை உருவாக்கி அவற்றை எப்படி சமாளிப்பது என்ற முறையில் சில நிகழ்ச்சிகள் இராமாயணத்தில் இடம் பெற்றுள்ளன. (வாலிவதை, தசரதன்-புத்திர சோகக் கட்டம், விபீடணன் ராமன் பக்கம் நின்று துணைபுரிவது) கம்பர்கால காதலே கற்புக்கு அடிப்படை. தாரை கற்பனை விஞ்ஞான ரீதியில் உண்மை. இவரின் அரசியல் கருத்துகள்*

வருங்கால புரட்சிகளுக்கு வித்து. பல இனம், நிலம், கலைகள் கொண்ட தேசிய காப்பியமான கம்பன் காவியத்திற்குச் சிற்பங்கள், ஓவியங்கள், நாட்டிய நாடகங்கள், நாடகம், ஓரங்கநாடகம், தனியொருவர் நடிப்பு, மௌன நாடகம், கதகளி, இசை அரங்கம் ஆகியவை அப்படியே மாற்றாமலே சேக்ஸ்பியர் நாடகங்களுக்கு உள்ளது போல் நடத்தவேண்டும் என்பது இவரது அவா.

**677. கம்பன் கண்ட கனவு** (கவிதை)

இ. திருமாலன்பன் (கோவிந்த ரெட்டி)

Annamalai University magazine 1967-68

கம்பன் காவியக் கருத்துகளைத் தொகுத்துக் கம்பன் கனவாக அவற்றைக் கவிதையாக்கியுள்ளார்.

**678. கம்பன் வழக்கறிஞன்** (1—14)

இன்றும் இனியும்: அ. ச. ஞானசம்பந்தன்

பாரிநிலையம்; மு. ப. 1968; ரூ. 5

இராமன் வெற்றிக்கு 'நான் ஒருவனே துணை செய்தேன் என்ற பெருமையை அடையவேண்டும் என்று சுக்கிரீவன் நினைக்கிறான். அந்நிலையில் அப்பெருமையில் பங்குபோட விபீடணன் வருவதை அவன் விரும்பவில்லை(6). இராமனை மனமாற்றம் அடையச்செய்வது ஒன்றிருக்குமாயின் அது விபீடணன் வந்தடைந்த காலமேயாகுமல்லவா? அதைப்பற்றியே அனுமன் பலப்படப் பன்னிப்பன்னிப் பேசுகிறான். தன் கருத்துக்கு விரோதமாக ஒருவரும் பேசக்கூடாத நிலையை உண்டாக்கிக் கொண்டான் ராகவன். வாதத்தின் திறனை விரிவாக எழுதியுள்ளார்.

**679. விட்டிலன் உலகையஞ்சி** (15—22)

இன்றும் இனியும்: அ. ச. ஞானசம்பந்தன்

பாரிநிலையம்; 59, பிராட்வே, சென்னை-1; மு. ப. 1968; ரூ. 5

'பிரம்மாத்திரத்தைப் பகைவன் ஏவினாலும் அதனை விலக்குவதற்காகக்கூட நீ அந்த நான்முகன் படையை விடாதே. ஏனெனில் உன்னைக் காத்துக் கொள்ளவேண்டி நீ அதை விட்டாலும் உலகம் அழிவுறும்' எனும் இராமன் பண்பாட்டில் மிக உயர்ந்த கருணையின் நிலையமானவன்(19). இந்திரசித்து, இராவணனிடம், இலக்குவனின் இச்செயலைப் புகழ்ந்துரைப்பதனைக் குறிப்பிட்டு 'விட்டிலன் உலகையஞ்சி' என்பதற்கு இருபொருள் கூறுகிறார். உலகம் அழிந்துவிடுமே என்று பயந்து என்பது ஒரு பொருள், 'உலகத்தார் பழிசொல்வார்களே' என்று பயந்து என்பது இரண்டாவது பொருள். இன்றைய நிலையில் உலகை அழியச்செய்யும் போர் முறைகளான அணுகுண்டு, ஹைடிரஜன் குண்டு ஆகியவற்றை ஒப்பிட்டுப் பேசுகிறார்.

680. கம்பர் விருந்து

ஜி. சுப்பிரமணிய பிள்ளை

மணிவாசகர் நூலகம், சிதம்பரம். மு. ப. 1968 4+136 ரூ. 3

முப்பெரும் கவிஞர்கள் (5-24), கம்பராமாயணத்தின் பெருமை (25-29) கம்பன் கண்ட இளங்கோ (30-36), கம்பன் சொல்நயம் (37-48), கம்பனின் நகைச்சுவை (49-60), வீரச் சுவை (61-55), சித்திரத் தாமரை (66-75), தன் நேர் இல்லாத் தம்பி (76-83), அங்கதனின் அங்கதம் (84-91), துன்பத்தின் துணையாம் தூயவன் (92-97), திருவடியின் பெருவடிவம் (98-102), காந்தமா மணி (103-110), சூர்ப்பநகையின் சூழ்ச்சி (111-118), கம்பராமா யணப் பதிப்பு (119-130), கம்பராமாயணத்தில் பாடவேறுபாடு கள் (131-140) என்னும் 15 தலைப்புகளையும்பல சிறுதலைப்பு களையும் பொருளாகக் கொண்டது இந்நூல்.

பழந்தமிழ் நாட்டை நினைத்துக் கொண்டே கம்பன் கோசல நாட்டை வருணித்திருக்கிறான். -கள்வாரிலமைக் காவலுமில்லை. இன்னும் கம்பன் சிறப்பு, வான்மீகத்தினின்றும் வேறுபட்டவை கள். அறவாழ்வு, கவிச்சுவை முதலானவைகள் இடம் பெறுகின் றன. இராவணன் பிராமணன். சங்க இலக்கியம், சிலம்பதிகாரம், தேவாரம், திருவாசகம், திவ்விய பிரபந்தங்களில் இராமாயணத் தைக் குறிப்பிடுவதிலிருந்து தொன்று தொட்டு நம்நாட்டினர் இராமாயணத்தை எவ்வாறு போற்றி வந்தனர் என்பது தெரிய வரும். 'மதுரை மூதூர் யாதெனகேட்டல்' ஆற்று வருணனை, கொடி அசைதல் ஆகிய மூன்று இடங்களைச் சிலப்பதிகாரத் தினின்றும் எடுத்துக் காட்டிக் கம்பனுக்கும் பொருத்திக் காட்டு காட்டுகிறார். கம்பர் சொற்களையமைக்கும் திறனும், ஓசைச் சிறப்பும் குறிப்பிடப்படுகிறது. கம்பனில் காணப்படும் சிறந்த நகைச்சுவை பகுதிகளும் எடுத்துக்காட்டப்படுகிறது.

வீரச்சுவையில் மிகச் சிறந்தது இராமாயணமா? பாரதமா? என்ற வினா எழுப்பி இராமாயணமே என்பார். 'மெய்த்திருப் பதம் மேவு என்ற போதினும்' என்ற பாடல் விளக்கம். 'என்னை முன்னே செல்லும் இளங்கோ' என்னும் பாடலைத் திருந்திய பதிப்பாக அமைந்துள்ளதாகக் கூறுகிறார். அங்கதத்திற்கு அங்க தன் இராவணனிடம் தூது சென்ற விடத்தில் உரையாடும் 3 பாடல்களை எடுத்துக் காட்டுகிறார். துன்பத்திலும் தூது கொள் ளும் சீதையின் பண்பு குறிப்படப்படுகின்றது. அனுமனின் பெரு வடிவம் பற்றிய 3 பாடல்களின் கருத்து விளக்கம் தரப்படுகின் றது. •கரந்தவள் காதல் வடிவினுனுடன் வாழ்வதே வாழ்வு' என்னும் தொடருக்குப் புதுபொருள் கொடுக்கின்றார். காந்தமா மணி என்றம் தொடர் இராமனைக் குறிப்பதன்று. சீதையைக் குறிப்பது என்று புதிய விளக்கம் தருகின்றார். திருந்திய பதிப்

பினைக்கண்டு பிடிப்பது எங்ஙனம் என்றும் கம்பராமாயணத்திற்கு வேறு எந்த நூலிற்கும் காணப்படாதவாறு பாட வேறுபாடுகள் தோன்றுவதற்குரிய காரணம் என்ன என்றும் இறுதியில் கொடுக்கப்படுகின்றது.

இந்நூலின் பல பகுதிகள் அறிமுகப்பகுதிகளாகவே அமைந்துள்ளன. சில தொடர்களுக்குப் புது விளக்கம் கொடுத்தல் சிறப்புடையது.

**681. Kambaramayana A Study**

V. V. S. Aiyer

Edited by K. M. Munshi, R. R. Diwakar. Bharatiya Vidya Bhavan; Bombay; Edi. 1970. First Edi. 1968. 342, Rs. 4 Forward by Santanam.

Introductory Remarks 1-4, The story 5-25, In Mediasres 26-32, The Architectonics 33-38. The supernatural Elements 39-44, Rama 45-67, Lakshmana 68-95, Indrajit 96-117, Vibhishana and Kumbhakarna 118-142, The Episode of Hiranyakashipu 143-156, Vali and Sugriva 157-179, Hanuman 180-211, Ravana 212-254, Bharata 255-286; Sita 287-318, (This essay is contributed by a member of the Delhi Tamil Sangam) Appendices (317-342)

The rule of opening the epic in mediasres has atleast as much disadvantage as it has advantage, while the chronological method if it does not ensure an arresting begining to the poem, has atleast the advantage of keeping it from turning sloppy in the middle(30). Valmiki proposes in the beginning of the poem, is the destruction of Ravana and every incident of the story contributes to this end. This idea is never absent from the mind of Kamban(33).

Lakshmana's adventure with Ayomuki is but a repetition of Rama's with Surpanaka and is therefore superfluous, but Kamban employs it to reveal to us the deep love that Rama has towards Lakshmana. If Kamban takes the situations from Valmiki he has treated them absolutely in his own way. In the manner of developing the situations in the gradation by which the climax of each situation is brought about(37). The supernatural element is as is natural of a character different to that of the western epics. There are mainly two classes of beings which partake of the character of the supernatural in the Ramayana. They are Rakshasas and Vanaras. The Raksha-

sas posses all the powers and qualities that are attributed to the Gods in the Greek mythology(40). The reader will not be for wrong if he imagines the Vanaras as possesing almost all the strength and powers of the Gods of the Greek epics (41).

The astras that deserve to be called machinary a term which western critics are used to apply to supernatura l beings etc, that influence the action in the gliad and other epics(42). There is the same mingled divinity and humanity about Kamban's Rama as about the christ of the Gospels and of the Paradise Regained of Rama, however is a Vairagi, when it is a question of his own personal fortunes, he is tender is a women when he sees other's suffer(47). The situation that Kamban has chosan for the expression of the sentiment and the supperession of the self-praise show him once again the grand connoiseur as well as artist that he is(51). Rama's skill in archery and the strength of his arm are admired by the poet at every step(59). Kamban would leave no littleness, no crookedness no commonness in his hero(66).

In the few words, 'I know not father, mother or Lord; theyself alone art master, mother father all to me; is contained the key to the whole character of Lakshmana(70). He also points out the difference in the characterisation of Hiranyakashipu between Kamban and Suga with Vyasa, In the character of Hiranyakushipu Kamban has shown unequalled prowess and Valour combines with extreme pride refusing to acknowledge the supremacy of Almighty power till destroyed by It in Its terrible aspects(56). He gives an outline of the important characters and their, part in the Ramayana. The last one 'Sita' also in this cast. A part of Valmigi Ramayana is translated by Griffith is given in the Appendice.

**682. கம்பர் கவியின்பம்**

ம. பொ. சிவஞானம்

இன்பநிலையம், மயிலாப்பூர், சென்னை-4. இ. ப. 1969 ரூ. 3-50

கவிஞர்கள் போற்றும் மகாகவி, கம்பரின் கருத்துப்புரட்சி, மகாகவியின் பண்பாடு, இளங்கோவின் வாரிசு, கம்பரின் மறதி? காப்பிய உலகில் கம்பர், கம்பர் ஒரு சோஷலிஸ்டு, கம்பராமாயண அரசியல், காகுத்தன் மனைவி கற்றவளே, கைகேயி இராசதந்திரம், கைகேயி தோற்றதேன்?, வாலியைக் கொன்றது நீதியா?

அநீதியா? முதலிய கட்டுரைகள் அடங்கியுள்ளன. இக்கட்டுரைகள் 'செங்கோல்' வார இதழில் வெளிவந்தவற்றின் தொகுப்பாகும்.

கவியரசர் கம்பர் தமக்கு முன் தோன்றிய புலவர் பெருமக்களின் வாரிசு. பின்தோன்றிய கவிஞர்களுக்கு வழிகாட்டி. பாரதி, கம்பரிடம் தெய்வீகத் தன்மையைப் புலப்படுத்தினும் அவரை மானிடன் என்று சொல்வதிலேதான் தனி மகிழ்ச்சி கொள்கிறார். நாத்தழும்பேறக் கம்பரைச் சிலர் திட்டிய காலத்தில் நாவினிக்கக் கம்பன் கவிதையைப் பருகுங்கள் என்கிறார் கவிமணி. கம்பராமாயணம் பாமரர்களைப் பண்டிதர்களாக்கிய காப்பியம். கம்பர் வருண வேற்றுமையை ஏற்றிருப்பினும் அவர்களிடையே உயர்வு தாழ்வு கற்பிக்கப்படுவதை எதிர்த்தார். சீதையின் திருமேனியைத் தீண்டாமல் அவள் இருந்த குடிசையோடு தூக்கிச் செல்வதாக அமைத்த மாற்றத்தால் உத்தரகாண்டம் கம்பருக்குத் தேவைப்படாமல் போய்விட்டது. இராமனிடம் குறை காட்டியதுபோல் அரக்கர்களிடமும் குணங்களைக் காட்டுகிறார். சீதையிடம் பலாத்காரமாக இன்பம் அனுபவிக்க இராவணன் எண்ணவில்லை. இரக்கமில்லா அரக்கனிடமும் கவிஞர் காட்டும் உயர்ந்த குணமிது. கும்பகர்ணனை அரக்கர் இனத்திற்குரிய தீயகுணங்களிலிருந்து பிரித்துக் காட்டுகிறார். எவ்வளவு கொடியவராயினும் சந்தர்ப்பத்தால் நல்லவர்களாக மாறக்கூடும் என்பதனை இந்திரசித்தின்பால் வெளிப்படுத்துகிறார்.

கம்பரின் பண்புள்ளம் மாபாவி கைகேயிக்கும் மன்னிப்புத் தருகின்றது. அயோத்தி இராமனைத் திருமாலாக அறிமுகப்படுத்திய முதல்கவிஞர் இளங்கோ. கொடுங்கோலன் ஆளும் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தும் கொள்கையைக் கம்பரும் ஏற்றுக் கொள்கிறார். அன்னியன் மூலம் அண்ணனைக் கொல்லத் துணிந்த சுக்கிரீவன் செயல், மிருக சாதிக்கு ஏற்றதே என்பது இராமன் கருத்து. ஆனால் இதற்கு நேர் மாறாக, தான் மறைந்திருந்து வாலிமீது அம்பெய்தது சரியென நிலைநாட்ட வடிவத்தால் வானரனாயினும், பிறப்பாலும் சிறப்பாலும் தேவகுலத்தவன் என்று பேசுகிறான். இதற்குக்காரணம் கம்பருடைய மறதி எனலாம். இல்லையேல் இராமனுக்கு இழுக்கு கற்பிக்க வேண்டும், வட இந்தியாவிற்கும் தென் இந்தியாவிற்கும் இடையே கலாசார ஒற்றுமை ஏற்படக் கம்பர் தொண்டு செய்துள்ளார். தமிழில் தோன்றிய பழங்காப்பியங்கள், கதையளவில் சிறியனவாகவும் பிற சமயங்களைப் போதிப்பவையாகவும், தமிழ் மக்களின் வாழ்க்கையோடு பொருந்தாப் பண்புகளையும் பழக்க வழக்கங்களையும் திணிப்பவையாகவும் இருந்தனவாதலால் சாதாரண மக்களிடையே அவள் செல்வாக்குப் பெறவில்லை. இச்சூழலில்தான் கம்பர் தோன்றினார்;

பருவத்தே பொழியும் மழையாக இருந்தது அவரது காப்பியப் பணி. தாம் காண விரும்பும் சமதர்ம சமுதாயத்துக்கான அடிப் படை அறங்கள் இராம காதையில் இருக்கின்றன என நினைத்துத் தான் அதனைத் தேர்ந்தெடுத்தார். கம்பனின் சமதர்ம சமுதாயத் தில் பெண்கற்பு மட்டுமின்றி ஆண்கற்பும் சிறந்து விளங்குகின் றது.

அயோத்தியா காண்டத்திலுள்ள கடவுள் வாழ்த்துப்பாடலை நூற்பாயிரமாகவோ, பதிகமாகவோ கூடக்கொள்ளலாம், மக்கள் உயிருக்குச் சமம். மந்திரிசபை உணர்வுக்கு நிகர், மன்னனே அந்த உயிரும் உணர்வும் குடிபுகுந்திருக்கும் உடம்பை யொத்த வன். சீதைக்கு இராமன் கணையாழியும், இராமனுக்குச் சீதை சூடாமணியும் அனுப்பிவைக்கக் காரணம் ஒருவரை யொருவர் நேரில் பார்த்தது போன்ற உணர்ச்சி இன்பத்தைத் துய்க்க வேண்டுமென்று எண்ணியதுதான். எனவே கடிதம் அவசியப்பட வில்லை. சீதையும் நூலறிவு பெற்றவளே. இராமன் நாட்டிலிருந் தால் சதி உள்ளிருந்தே செய்யக்கூடும் என எண்ணியே அவனைக் காட்டுக்கு அனுப்ப வரம் பெற்றாள். அரசுரிமை பெற தகுதி யற்ற கோலம் எதுவோ அதனை அணியும்படிச் செய்துவிட்டாள். கைகேயி உள்பட அயோத்தியில் அனைவரும் இராமன் ஒருவனையே நேசித்துப் பரதனுடைய பண்பை அறியாதிருந்தனர். பரதனோடு பழக வாய்ப்பற்றதாலும், இராமனிடத்து உள்ளத்தைப் பறி கொடுத்து விட்டதாலும் பரதன் உள்ளத்தை அறியக் கைகேயி தவறிவிட்டாள்.

வாலியின் வரம் பற்றி அறிந்திருந்ததால், இராமன் மறைந் திருந்து அம்பு எய்தான். 'தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத் தனை போலும் செய்கை' எனும் வாலியின் கூற்று, சக்தியில்லை யேல் சிவம் இல்லை' என்ற உண்மையை உணர்த்தும் வாக்கு. வாலிவதம் இராமாயணக் கதைக்குத் தேவையற்ற ஒரு நிகழ்ச்சி. வாலி-சுக்ரீவன் சண்டையில் இராமன் தலையிட்டது குடும்ப நீதிக்கு விரோதமான செயல். வாலியைக் கொல்வதற்கான அரச கடமையோ, உரிமையோ, கைகேயி ஆணைப்படி இராமன் வானப் பரஸ்தனுதலால் அவனுக்கு இல்லை. அனுமனுடைய வாக்கு வன் மையால் ஏற்பட்ட மதிமயக்கமும், சீதை பறிகொடுத்ததால் ஏற்பட்ட மான உணர்ச்சியும் ஒன்றன்பின் ஒன்றாகத் தவறிழைக் கத் தூண்டி; இறுதியில் மறைந்திருந்து வாலியைக் கொல்லும் அநீதிக்கு இராமனை இரையாக்கி விட்டன. ஜீவான்மாவுக்கு அருளுமுன்னர் பரமான்மா காட்சிப்படுவதில்லை. இதுவே இரா மன் மறைந்திருந்து அம்பை எய்தியதிலுள்ள அந்தரங்கம்; எனும் கருத்துகள் இந்நூலில் அடங்கியுள்ளன.

இனிய எளிய நடையில் கம்பனைப் பலபுதிய கோணங்களி லிருந்து திறனாய்வு செய்துள்ளார்.

**683. கம்பர் கண்ட கலையும் பண்பும் (62—65)**

**உலக இதய ஒலி (காலாண்டு இதழ்) ரஸிகமணி டி. கே. சி. ஏப். 1970**

இலங்கைப் புதுப்பிக்கபட்ட நிலை (சிற்பக் கலை), ஓவியத்து எழுதவொண்ணு உருவத்தாய் (சித்திரக் கலை), நைவளம் (இன்றைய சாவேரி ராகம்) எனத் தகையள் நண்ண வரலோடும் (இசை), பாணியின் நடத்திடைப் படிக்கின்ருள் என வீணையின் இசைபட வேதம் பாடுவான் (நடனம்), கவி அமை சீர்த்தி அக்காளை நாளையே புவியமை மணிமுடி புனையும் (கவி), இராவணனை சீதை அசோகவனத்தில் எதிர்த்துப் பேசுவது (வீரப்பண்பு) முதலியவற்றை இக்கட்டுரையுள் கூறியுள்ளார்.

**684. கம்பன் காட்டும் முகம் (129—140)**

காப்பியத்தில் முகம் அ. அன்னசெல்வம்

**1970.** கேரளப் பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு பகுதியாகக் கொடுக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை.

இராமன், சீதை, அரக்கியர் முதலியோர் முகம் பற்றி இங்குக் கூறப்படுகின்றது. கம்பன் காட்டும் தலைமைப் பாத்திரங்கள் ஈடிணையற்ற எழிலுடையவர்கள். அழகுக்குரிய நல்லிலக்கணத் தின் முழுமையை அவர்களில் காணலாம். நல்லிலக்கணத்திற்கு முற்றிலும் மாறுபட்ட தோற்றத்தை உடையவர்கள் அரக்கியர் கள். அரக்கர் குலத்தில் பிறந்த பண்பால் மேம்பட்ட விபீடணன், திரிசடை போன்ற சீரிய பண்புடையோரைச் சிறப்பாகவே காட்டி யுள்ளார். தாடகையின் அகப் பண்பின் வெளியீடே புறத் தோற்றம்.

முகத்தைப் பொலிவுறுத்தக் கம்பர் கொள்ளும் உத்திகளில் வண்ணமுரண் ஒன்று. உடலழகு நூல் சிவந்த தோற்றம் வேண்டிய இடங்களாக ஏழு இடங்களைக் குறிக்கின்றது.— இராமன், பெண்கள் முகம் குறிப்பாகச் சீதையின் முக ஓவியங் களை அமைக்குங்கால் இயைபுடைய பொருட்களைத் தொகுத்து வடிக்கும் உத்தியும் கம்பருக்குரியது. முனிவர்கள், அமைச்சர் களின் முகத்திற்கு அடை கொடுத்துப் பேசுவதில்லை. பாத்திரத் தின் பெயர்கள் பண்புகள் வெளியீடாகவோ, உறுப்புகளின் தோற்றத்தின் வெளியீடாகவோ அமையும்.—வச்சிரத் தெயிற் றவன், மகரக் கண்ணன், நகை, அழுகை, வெகுளி, உவகை முதலிய மெய்ப்பாடுகள் பெரும்பாலும் முகத்தின் வாயிலாகக்

காண் இயலும். ஏனைய மெய்ப்பாடுகளின் தோற்றம் முகத்தில் பிரதிபலிப்பது அரிது.

பெரும்பாலான இடங்களில் கண்களே வருணிக்கப்படும். அடுத்து வாய், முக ஓவியத்தில் குறைவாகப் பயிலப் பெறுவது காது. கண்கள் பண்பு பற்றி பண்புப் பெயர்களாகவும், தொழில் பற்றி தொழிற் பெயர்களாகவும் உவமைகளுடன் அமைகின்றன. ஆடவர் கண்களைத் தாமரைக் கண் என்றும் பெண்கள் கண்களைக் குவளைக் கண்கள் என்றும் போற்றினர் கவிஞர்கள். யுத்த காண்டத்து கள்ளுண்ட இலங்கை மகளிரை முளரி போன்று சிவந்ததாகக் குறிப்பிடுவது புறனடை.

## 685. இருவரங்கள் (540—544)

*திருக்கோயில்: திருமலை நல்லான் இராமகிருஷ்ணையங்கார், சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு ஆக. 1970 ரூ. 1*

இராமன் உண்டையால் அடித்ததாக வருணிப்பது கோபம் வரக் காரணமொன்றைக் காட்டுமேயன்றி மந்தரைக்கு, இராமனுக்கு முடி சூடுவதைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் அமைந்திருப்பதற்கு ஆதாரமாகாது(541). இராவண வதம் கைகூட தேவர்களாலனுப்பப்பட்ட மந்தரை, முடிசூடலைத் தவிர்க்கப் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று வரம் கோரும்படி செய்தாள். முடிசூடல் தவிர்ந்தாலும் அயோத்தியை விட்டு இராமபிரான் வெளியேறாதிருப்பின் இராவண வதத்திற்கு வழி ஏற்படாது. வேறு நாட்டிற்கு வெளியேறினாலும் பயனில்லை.

கானகத்தில் திரியும் அரக்கருடன் மோதல் ஏற்படுதற்காகக் கானகம் ஏகியாக வேண்டும். அதற்காக இராமனைக் காட்டுக்கனுப்புமாறு இரண்டாவது வரமும் கேட்கும்படி செய்துவிடுகிறாள். இத்தேவ ரகசியத்தைக் கம்பன் முடிவிலும் வெளியிடாது, இராமனே உய்த்துணரும் வண்ணம் தந்தையிடம் வெளிப்படுத்தியதாகக் கதையை அமைத்துள்ளார். பரதனுக்கு அரசு கிடைப்பது யோகமாகவும், இராமன் கானகம் செல்வது சேமமாகவும் கைகேயிக்கு அமைகின்றன(543). வாக்குறுதியை விட (தேவர்களைக் காத்தல்) தந்தை சொற்படி (நாடாள இசைதல்) நடப்பதே சிறந்ததென்ற முடிவுக்கு வந்தான் இராமபிரான்(543).

தேவர்களுக்குக் கொடுத்த வாக்குறுதி வீணாகாதவாறு அத்தேவர்களைக் கொண்டே முடிசூடற்குத் தடை விளையச் செய்து, பாராளச் சொன்ன தந்தையே காடேகும்படி ஏவும் நிலையை உருவாக்கினாள்(543). இழிநிலையைத் தானெய்தி இருவரங்களால் அவதாரத்தின் பயனை எய்தும் வண்ணம் உயர்த்திய கைகேயி

நன்றிக்குறியவள் எனும் ஆசிரியர் பிற இராமாயணங்களையும் இணைத்துச் சொல்கிறார்.

**686. கம்பர் வாக்கும், நோக்கும்**

ச: கணபதி ராமன்

திருமகள் நூலகம்; தூத்துக்குடி; மு. ப. 1970; 9+96, ரூ. 3-50

இந்நூல் 7 தலைப்பின் கீழ் அமைகின்றது. கம்பன் வாக்கு (10—19), இறைமை நோக்கம் (20—29), எதிர் நோக்கம் (30—45), புலமை நோக்கம் (46—61), புரட்சி நோக்கம் (62—78), பதிப்பு நோக்கம் (79—100), பல நோக்கம் (100—105) என்பன அவை. பல துணைத் தலைப்புகளும் அமையப் பெற்றது.

இந்நூல் சி. ராஜகோபாலாச்சாரியாரின் 'சக்கரவர்த்தித் திருமகன்' என்னும் நூலிலுள்ள குறிப்புகளையும், ச. சோமசுந்தர பாரதியார் அவர்களின் 'தசரதன் குறையும் கைகேயியின் நிறையும்', 'அகலிகை' என்னும் நூல்களிலுள்ள கருத்துகளையும், ரா. பி. சேதுப்பிள்ளையின் கருத்துகளையும், சி. என். அண்ணாதுரையின் 'தீபரவட்டும்', 'நாடும் ஏடும்', 'கம்பரசம்' என்னும் நூல்களிலுள்ள கருத்துகளையும், தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரின் (The pageant of Tamil literature) 'இலக்கியத்தில் அமைந்த கருவூலங்கள்' என்ற நூலில் கம்பரைப் பற்றிய கட்டுரையிலும், 'கம்ப நாடகம்' என்ற கட்டுரையிலும் குறிப்பிட்ட கருத்துகளையும் பெரும்பான்மையாகக் கொண்டமைகிறது. 'கம்பன் வாக்கு', 'பதிப்பு நோக்கம்' என்னும் தலைப்புகளோடு 'பல நோக்கம்' என்றும் தலைப்பின் இறுதிப் பகுதியுமே ஆசிரியரின் கட்டுரைகளாக அமைகின்றன.

வான்மீகி முனிவருக்கு முன்பே இந்தியப் பெருநாட்டில் இராமாயணம் இலங்கியது என்று அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர் என்கிறார். கம்பருக்கு முன்னும் தமிழ் நாட்டில் இராமன் கதை விளங்கியிருந்தது. கம்பரது உயிரே தமிழ்தான். புதிய சொல் அமைப்புகளை அமைத்துத் தமிழ்ச் சுவையினைப் பெருக்கினார். முதற் பதிப்பு 1840-ல் - திரு. வேங்கடாசல முதலியார், முதல் உரை கி. பி. 1861-ல் கிருஷ்ணசாமி முதலியார் முதற்பாட வேறுபாடு 1910 - ல் பி. ஆர். கிருஷ்ணமாச்சாரியார் - பண்டித சவரிராய பிள்ளை இதனைத் தொடர்ந்து வெ. பா. சுப்பிரமணிய முதலியாரின் 'கம்பராமாயண சாரம்', டி. கே. சியின் பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு, பி. எஸ். கருத்திருமன் 'கம்பர் கவியும் கருத்தும்' என்னும் நூல்களைப் பற்றிய சுருக்கமான விளக்கங்களும் தரப்படுகின்றன. இன்னும் மர்ரே கம்பெனியார் மலிவுப் பதிப்பு, கம்பராமாயண வசனம் என்ற நூல்களையும் குறிப்பிடத் தவறவில்லை. நூலின் இறுதிப் பகுதி

காரைக்குடி கம்பன் கழகம் பற்றிய குறிப்புகளோடு முடிவடை கின்றது.

687. **கம்பனின் சுந்தரகாண்டம்** (222—238)
வங்கத்தமிழ் : டி. வி. சித்தலிங்கய்யா பாரதி தமிழ்ச்சங்க வெளியீடு; 93-ஏ, ராஷ்விஹாரி அவென்யு; கல்கத்தா-26; 1970; ரூ. 5

சுந்தரமான முடிவுக்குக் காரணமாயும், முன்பு நிகழ்ந்த ஆரணிய, கிட்கிந்தா காண்டங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிப் பின்னணிக்குப் பொருத்தமாயும் இருத்தலால் இஃதே இராமா யணத்துள் சிறந்ததும் இப்பெயர் பெறப் பொருத்தமானதென வும் கொள்ளலாம்(225). சீதையைக் கவர்ந்தது மட்டுமன்றி வேறுசில காரணங்களையும் காட்டிக் கருதியக் கம்பர் யுத்த காண்டத்தின் முன்பாகச் சுந்தர காண்டத்தையமைத்தார். கறங்கு கால் புகாமையும், கதிரவனொளி உட்புகாமையும், இயமனின் ஆற்றல் செல்லாததும், அந்நகருக்கும் அரசனுக்கும் பெருமையெனினும் அவை தெய்வநீதிக்கு அப்பாற்பட்டன வாம்(226). கிட்கிந்தா காண்டத்தில் சீதை பற்றிக் கூறுதிருப்பது கதைத் தலைவியின் நிலைபற்றியறிய விரும்பும் நம்மாவலை அதிகப் படுத்தவேதான் (228).

இராமனது வடிவழகையும், சீதையின் பண்புநலனையும் பாடு வதற்கு ஏற்ற இடமாக இதனைக் கவி கொண்டுள்ளார்(229). பெண்ணின் உளப்பாங்கை இங்குக் காணவியலுகிறது(231). சீதையைத் தேடும் அனுமனுக்கு ஏற்படும் தடைகள், சீதையைக் காணுமல் ஏற்படும் ஏமாற்றம் ஆகியவை நாடகக் காட்சிக்குரிய நிலை கொள்ளாமை அல்லது சந்தேகத்தில் ஆழ்த்துதல் என்ற இலக்கணத்திற்குரியன(236), பின்னுக்கு முறையை அந்நாளி லேயே தன் காப்பியத்திற் காட்டிய கம்பனை ஒருநாடகவாசிரியன் என்றும் சுந்தர காண்டத்தை நாடகக் கலைச்சுவை மிகுந்த ஒரு பகுதி யென்றும் கூறலாம்(238).

688. **ஆலமர்வித்தின் அருங்குறள்** (172—174)
திருக்கோயில், கு. மதுரை முதலியார் சென்னை அரசாங்க அற நிலைய பாதுகாப்புத்துறை வெளியீடு; சன. 1971; ரூ. 1

விசுவாமித்திரர், இராம இலக்குவர்களுக்குக் கூறும் மாபலிச் சக்கரவர்த்தியின் கதையை உரைநடையில் இடையில் சில பாடல் களும் கொடுத்துத் தருகிறுர்.

689. **கம்பராமாயணத்தில் ஆடை வகைகள்** (96—122)
தமிழ் இலக்கியத்தில் ஆடைவகைகள் — அ. மீராமுகைதீன்; கேரளப்பல்கலைக் கழகத் தமிழ் முதுகலைத் தேர்வின் ஒரு

பகுதியாகக் கொடுக்கப்பட்ட ஆய்வுக்கட்டுரை; 1971; 11+128;

இது மகளிர் ஆடை, ஆடவர் ஆடை, வான மகளிர், தவ மகளிர், இறையோர்—போன்றோர் ஆடை, இயற்கையில் ஆடை, ஆடையின் பயன்கள் என்பது பற்றிப் பேசுகிறது. கம்பராமாயணத்தில் தழையுடையைக் காணோம். 'மரவுரி' சிறப்புற அமைகிறது. மகளிர் மரவுரியாடை (துறவு மேற்கொள்ளும் சீதை), பருத்தியாடை, பட்டாடை, கச்சு, மேலாடை முதலியவற்றைப் பயன்படுத்தினர். அகலத்திலும் நீளத்திலும் மிக்க ஆடைகளை அணிந்தனர். சீதை கொய்சகம் (கோசிகம்) என்னும் அமைப்பு வைத்து உடுத்தியிருந்தாள். கைம்மை நிலைக்குத் தனியாடை—வெள்ளையாடையாக இருக்கலாம். ஆடவர் தோல் ஆடை (குகன்), மரவுரியாடை (துறவு மேற்கொண்டோர்), பருத்தியாடை, பட்டாடை, கச்சு, சட்டை முதலியவற்றை அணிந்திருந்தனர். இராவணன் கொய்சகம் வைத்து உடுத்தியிருந்தான். சட்டை கம்பனில் 'கஞ்சுகம்' என்று காணப்படுகிறது. சட்டை அணிந்தோர் பெரும்பாலும் அரசனின் பல்வேறு நம்பிக்கைக்குரிய பணிமக்களாகவே காணப்படுகின்றனர். அங்கார தாரை என்னும் அரக்கி யானைத்தோல் போர்த்தியிருந்தாள். வானுலக மகளிர் செந்துகில் அணிந்தனர். மகளிரும் ஈருடை அணிந்தனர். தோலாடை அணிந்த கடவுளாக விளங்குபவர் சிவபெருமான். விராதனும் தோலாடை உடையவன். பரத்துவாசன்—மான் தோல் போர்வை, ஆறுபருவ தேவர் 'துகில்' அணிந்திருந்தனர். திருமால்—பட்டாடை. இராவணனுக்கும் பணிபுரிந்த தேவர்—சட்டை, கடல், திசை, ஆற்றின் அலை, சோலை; அருவித்திரள், இருள், பசும்புல் தரை முதலியவைகள் ஆடையாக உவமிக்கப்படுகிறது. விதானம், அணையாடை, கொடிச்சீலை, கொடி, முதலியவற்றிற்கும் சிவிகை செய்வதற்கு, தீ மூட்ட, பொருள்களைக் கட்ட, பெருமைக்காக, மகிழ்ச்சி ஆரவாரத்திற்கு, பரிசுப் பொருளாக, அழகூட்டுவதற்கு எனப் பயன்பட்டது. இங்கு உலோகச் சட்டை, கூடாரத்துணி முதலியன காணப்படுகிறது.

இக்கட்டுரையில் 129 அடிக்குறிப்புகள் உள்ளன.

690. **கம்பராமாயணம்** (76—93)

தமிழகப் பெண்கள் வாழ்வும் வளர்ச்சியும் : சு. சிவகாமசுந்தரி எம். ஏ., மெர்க்குரி புத்தகக் கம்பெனி; கோயமுத்தூர்-1; மு. ப. 1971 ரூ. 3

கம்பர் காலத்தில் ஆண் பெண் சமத்துவ நிலைமை இல்லை. கணவனுடன் சேர்ந்து நின்று அவள் செய்யும் தருமமே ஏற்றுக் கொள்ளப்பட்டது. தனித்த வாழ்க்கையை மேற்கொள்ள

முடியாது. அரசியலில் இடம் கிடையாது. பெண்கள் கல்வி கற்பது தவறு. எனவே கம்பன் பெண்கள் வாழ்வு குறித்து புதிய சமுதாயத்தைக் காண்கிறான்(77). ஏகபத்தினி விரதனுன இராமன் தன் தந்தையின் கண் முன்பாகவே தந்தை காலத்து மரபை, பலதார மணத்தை மாற்றுகிறான்(81). மனித சமுதாயம் மாற்றமடைய வேண்டுமானுல் பெண்மை தலைநிமிர்ந்து, வீறு கொண்டெழாமல் சமுதாயமாற்றம் சாத்தியமில்லை என்பதைக் கம்பர் ஒருகுரலில் கூறினார்(85). சீதை தன் விருப்பப்படி மணம் செய்துகொள்ளும் உரிமைக்கு வழிகோலுகிறார். திரிசடையின் அறிவுத் திறத்தையும், சூட்சும புத்தியையும் வைராக்கியத்தையும் பார்க்கும்பொது அரக்கர் குலத்து மகளிர் பெண்மையின் ஞானத் தோற்றத்தைக் காணமுடிகிறது(91). சபரி அந்நாளைய பெண் விடுதலை மார்க்கமாக இருந்த துறவுநெறியில் ஈடுபட்டுத் தனித்து வாழமுடியுமென்ற போக்கையும், தாழ்ந்தகுடியில் பிறந்த பெண்களுக்குக் கல்விகற்கும் உரிமையும், ஆடவரோடும், பிறரோடும் தாராளமாகப் பழகும் உரிமையும் பெற்றிருந்தார் களென்றும் தெரிகிறது(93).

**691. இரணியன்** (65—88) (நாடகம்)

மானவீரம்: க. வெள்ளிமலை; மெர்க்குரி புத்தகக் கம்பெனி; மு. ப. 1971; ரூ. 3

இரணியன் வதையைக் கம்பன் வழிநின்று சிற்சில மாற்றங்களுடன் நாடகமாக்கியுள்ளார்.

**692. கடமை தவருச் செம்மல்** (49—64) (நாடகம்)

மானவீரம்: க. வெள்ளிமலை

கும்பகர்ணன் இராவணனுக்காகப் போருக்குச் சென்று செய்ந்நன்றி மறவாத செம்மலாக உயிர் விடுவதைக் கம்பன் வழி நின்று நாடகமாக ஆக்கித்தந்துள்ளார்.

**693. கம்பர் கவிதை** (73—80)

மலேசியா—சிங்கப்பூர் சுற்றுப்பிரயாணச் சொற்பொழிவுகள்: தங்கம்மா அப்பாக்குட்டி; 1971

சமுதாயத்தின் சென்ற காலநிலை, நிகழ்காலநிலை, எதிர்கால நிலை என்பவற்றைப் புரிந்துகொண்டு குறையை நிறைவாக்கிச் சமுதாய மலர்ச்சிக்கு வழிகாட்டும் இலக்கியம் படைக்கவேண்டும். இந்தவகையிலே கம்பர் சிறப்பிடம் பெறுகிறார்(74). தசரதன் ஆட்சிசிறப்பு, சகோதர பாசம், சீதை கற்பு, கோசலை பண்பு இவற்றைச் சுட்டுகிறார்.

**694. கம்பராமாயணத்தில் திருப்புமுனைகள் (உணர்ச்சி காவியம்)**
பொருட்கட்டுரை : மதுரைப் பல்கலைக் கழகம்; S. நாராயணன்; ஏப். 1971; 63

முன்னுரை இலக்கிய ஆராய்ச்சி, பொதுவான ஆராய்ச்சி, தனி ஆராய்ச்சி திருப்புமுனைகளைப் பற்றிய சிறப்பாராய்ச்சி, உணர்ச்சி காவியம், முடிவுரை.

இராமன் காடேக ஏற்பட்டநிலை கதையின் முதல் திருப்பம் சூர்ப்பணகை இராவணனை நேரடியாக இராமரோடு பகை கொள்ளத் தூண்டியது இரண்டாவது திருப்பம். சூர்ப்பணகை சூழ்ச்சிதான், இராவணவதத்திற்கு எழுச்சியாகிறது. திருப்பங்கள் அமைந்திருப்பதால் நிச்சயிக்கப்பட்ட கதையோட்டம் தடையில்லாமல் செல்கிறது. இராமாவதாரச் சிறப்புக் கூறப்பட முடிகிறது. காலத்திற்கு ஏற்ற படைப்பு படைக்கமுடிகிறது; சோக உணர்விற்கு ஒரு மாற்றமாக இருக்கிறது. கம்பனின் கடவுட் கொள்கை விளக்கம் பெறுகிறது.

இராமனின் குணச்சிறப்பும் அவன் அவதாரபுருடன் என்பதும் விளக்கப்படுகின்றன. தத்துவக் கருத்துகள் விளக்கப் படுகின்றன. கம்பன் உண்டாகின்ற கதைச் சிக்கலுக்குக் கடைசிப்பதிலாக விதியை நம்பும்படி வைக்கிறான். குணக் குன்றான பரதனைப் பெற்றவளும், தயரதனை வாய்மையும், மரபும் காக்கும் தூய்வனாகச் செய்பவளும் ஆகிய கைகேயியை நெஞ்சில் உரமின்றிக் கூனியின் கைப்பாவையானாள் என நினைப்பது தவறு. கன்யாசுல்கச் செய்தியைக் கம்பன் குறிப்பிட்டிருப்பதால் அவனும் அதனை ஏற்றுக் கொள்கிறான். மகவாசையைக் குறைத்து, மனத் தூய்மையேற்றி, அவாவகற்றி, அறம் ஆற்றச் செய்விப்பதற்குச் சிலகாலமேனும் இராமனின்றும் பிரித்துவைத்தல் இன்றியமையாதது, என எண்ணியே இராமனைக் காட்டுக்கனுப்பினாள்.

அண்ணலை எதிர்பார்த்திருக்கும் பல கோடி உயிர்கட்கும் இக் கதைத் திருப்பம் அவசியமாகிறது. இரண்டாவது திருப்பந்தான் சீதையின் கனன்றெழும் கற்புத்திறனும், அனுமனின் தொண்டுள்ளமும் வெளிப்படுகிறது. உணர்ச்சிகளின் உச்சக்கட்டம் திருப்புமையத்தை ஏற்படுத்துகிறது. தன் கணவனைச் சொல்லறம் காக்கச் செய்யவேண்டும் என்ற அச்சத்தின் உச்சக்கட்டம் கைகேயி மனமாற காரணவாகிறது. தன்னிரக்கத்தால் தன் அண்ணன் துணையைச் சூர்ப்பணகை நாடுவதும் ஒருவகை உணர்ச்சி முதிர்வினால்தான். கம்பராமாயணம் நெடுகிலும் உணர்ச்சிக்குத் தகுந்த யாப்பும், ஒலிநயமும் சேர்ந்து மிளிருவதைக் காணமுடியும். சூர்ப்பணகைப்படலம் காவிய முக்கியத்

துவம் பெற்றிருப்பதோடு நகைச்சுவைக்கு ஏற்ற கருவூலமாக அமைந்திருக்கின்றது.

695. கம்பராமயண ஆராய்ச்சிக் கட்டுரை

வ. வே. சு. ஐயர்,

ஏப். 1971, ரூ. 75, 4+46

கம்பராமாயணத்தின் ஒருபகுதியைச் (பாலகாண்டம்) சந்தி பிரித்தும் குறிகளுடனும் 1917-ல் வெளியிடப்பட்ட பொழுது எழுதியது இக்கட்டுரை.

கம்பன் சாதியில் உவச்சன், தன் கவித்திறமையை முதலில் காட்டியது ஏரெழுபதிலாம். சரஸ்வதி அந்தாதியும், மும்மணிக் கோவை என்ற நூல்களும் கம்பனுல் பாடப்பட்டதாகச் சொல்லப் படுகின்றன. இப்பொழுது இறந்துபோய் விட்டாலும் இன்னும் எத்தனையோ பாட்டுகளும், நூல்களும் கம்பன் பாடியிருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் அவனுடைய வாக்கின் செழுமையைப் பார்த்துவிட்டுத்தான் சடையப்ப வள்ள லவனை ராமாயணத்தைத் தமிழில் பெருங்காப்பியமாகப் பாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருக்க வேண்டும் (11). இராமாயண அரங்கேற்றத்தின் முன் நம்மாழ்வார் மீது ஒரு அந்தாதி பாடி வைத்தான்(12);

கம்பன் ராமாயணத்தை அரங்கேற்றியது சாலிவாகன சகம் 807-ம் ஆண்டு(16). கம்பர் ஒட்டக்கூத்தரின் சமகாலத்தவரன்று என்பதற்குப் பலகாரணங்கள் கூறுகிருர். 1. கூத்தன் உலாவில் வரும் சேதிராயன், சடையன் என்பான் கம்பன் காலத்தவன் தான் என்று கூறமுடியாது. ஏனெனில் தந்தை பெயரை மகனுக்கு வைக்கும் பழக்கம் தொன்றுதொட்டு வருவதொன்று. 2. ஒட்டக்கூத்தரின் சமகாலத்தவரான புகழேந்தியார் பற்றிக் கம்பன் கதைகள் எதுவும் கூறவில்லை. 3. சோழ மண்டல சதகத்தில் ஒட்டக்கூத்தன் முதலாறு காண்டங்கள் பாடினுன் என்ற குறிப்பில்லை. அவன் உண்மையிலேயே பாடியிருந்தால் அபயன் சபையில் உத்தரகாண்டத்தை அரங்கேற்றக் கூசியிருப்பான்(24). 4. கம்பன் சகம் 1042க்குச் சமீபத்தில் பிறந்திருந்தால் 1059க்குள் ராமாயணத்தைப் பாடி அரங்கேற்றச் சீர்செய்திருப்பது அசாத்தியம்(26). 5. கம்பர் இக்காலத்தவராயின் 'உடையவர். பற்றிச் செய்யுள் ஒன்றும் எழுதாதது ஏன்?(27). 6. சோழவம்சம் இஷ்வாகு வமிசத்திலிருந்து பிரிந்தது என்ற கலிங்கத்துப்பரணிக் கதை பிறக்குமுன்னரே கம்பன் இராமாயணத்தைப் பாடியிருக்க வேண்டும். ஏனெனில் கலிங்கத்துப்பரணியில் ஸ்ரீ ராமனுடைய மூதாதைகளில் ஒருவனுல் சோழ இராச்சியம் ஸ்தாபிக்கப்பட்டது என்றும் சொல்லப்படுகிற போது கம்பன் ராமகதையில் குலமுறை கிளத்துப் படலத்திலாவது நாடவிட்ட படலத்திலாவது இதைப் பற்றிப் பேசாமலிரான்(28).

சடையப்ப வள்ளலைப் பாடிய அளவு சோழர்களைப் பாட வில்லையாகையால் அவன் பாடிய காலத்தில் சோழர்கள் தலைமை வகிக்கவில்லை என்றும் தோன்றுகிறது(31). கடிமணப்படலத்தில் 'என்றும் நான் குகன் முதல் யாரும்' எனும் பாட்டில் வரும் திரு நாமம் சாத்தும் பழக்கம் ஸ்ரீ நாதமுனிகள் காலத்ததாயின் கம்பன் காலம் அதற்குப் பின்னேதான் வரும். இவ்வுண்மையை ஆராய வேண்டும்(34). கம்பன் பாடல்களின் எண்ணிக்கை 10,569. கம்ப னுக்கும் வால்மீகிக்கும் எடுத்த எடுப்பில் தெரியக் கூடிய பேதம் கம்பனுக்கு இராமன் பரம்பொருளாக நிற்பதும், வால்மீகிக்கு அவன் கேவலம் மனிதனாக இருப்பதுமே(38).

பிரகிருதியின் தோற்றங்களை வருணிப்பதில் காடுகளில் சஞ் சரிக்கும் இயல்பினரான வால்மீகி கம்பனை முற்றிலும் வென்று விடுகிறார்(39). ஆனால் மனித இதயத்தின் உணர்ச்சிகளையும், பாவங்களையும், இயக்கங்களையும் வர்ணிக்கையில் கம்பன் வால்மீ கியைத்தனக்குப் பின்னே வெகு தூரத்தில் நிறுத்தி விடுகிறான் (40). இவ்விரு கவிகளின் நடையைச் சீர்தூக்கிப் பார்த்தால் வால்மீகியின் ராமாயணம் திராக்ஷா பாகமாகும். கம்பனின் உத் பிரேக்ஷைகளும் புராதனக் கதைகளை மிகச் சூக்ஷ்மமாக ருசிபார்க் கும் நடைகளும் மலிந்து கிடப்பதினால் அவனுடைய காவியம் அரைவாசிக்கு மதுபாகமாகச் செய்யப்பட்டது(40). கம்பனின் நாயகர் நாயகிகளின் உருவங்கள், அவரவர் குணங்களுக்கேற்ப மாசு, மறு, கோணல் முதலிய குற்றங்களின்றிச் சமாங்கமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. கம்பரின் கவிக்கு அவர் கூற்றான 'உழைகுலாம் நயனத்தார்' (448) எனும்பாடலே பொருந்தும்.(45).

696. கம்பன் காவிய மாண்பு (17-30)

புரட்சிக்காப்பியம்: சோ. ந. கந்தசாமி, அமராவதி பதிப்பகம், அண்ணாமலைநகர், மு. ப. 1972, ரூ. 3-50

தனிமனித வாழ்விலும் சமுதாய வாழ்விலும் அரசியல் வாழ் விலும் ஏற்படும் மோதல்களையும் முரண்களையும் விளக்கிக்காட்டி மனிதனை நல்வழிப்படுத்தும் நோக்கத்தில் எழுந்தது இராம காதை (17) இராமனை, சூரிய குலத்தவன், தென்சொல் கடந்தான் வடசொற்கலைக்கு எல்லை தேர்ந்தான் என்றது, அத்திமாலை சூடியது இவற்றால் தமிழன் என்கிறார். மன்னனை உடலாகவும், குடிகளை உயிராகவும் காட்டியது, சோசல நாட்டு வருணனை இவற்றைக் கம்பர் செய்த புரட்சியாகக் காட்டுகிறார். ஒவ்வொரு பாத்திரத்தையும் ஒரு பண்பின் விளக்கமாகக் காட்டியுள்ளான் கம்பன் என்னும் ஆசிரியர் அறம் வெல்லும் என்னும் காப்பியத் தின் குறிக்கோளையும் எடுத்துக் காட்டுகிறார்.

**697. பாரதியைக் கவர்ந்த கம்பன் (206-211)**

*நான்காவது கருத்தரங்குமலர்; ஆ. இராமசாமிப்பிள்ளை, கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு* 1972 ரூ. 20

*கம்பராமாயணத்தில் காணும் தியாகசீலமும் (சுமத்திரை, சடாயு), பெண் இன அறிவு மேம்பாடும் (மண்டோதரி, சூர்ப்ப ணகையைக் குறிப்பிடுகையில் 'ஆர்' விகுதி கொடாது குறிப்பிடு தல்) தத்துவ உள்ளீடும் (இராவணன் இறக்கவில்லை யென்பதை மண்டோதரி தன் புலம்பலில் வெளிப்படுத்தல்), சமுதாயப்பொது அறமுமே (ஆடவர் கற்பு) கவி பாரதியைப் பெரிதும் கவர்ந்துள் ளன என்று எடுத்துக் காட்டுகள் தந்து நிறுவியுள்ளார்.*

**698. கம்பன் யாப்பு (30-33)**

*இளவேனில்: அன்னிதாமசு (சிறப்பாசிரியர்), ச. வே. சுப்பிர மணியன் (பதிப்பாசிரியர்), க. ப. அறவாணன், அ. இராசேந் திரன், இளங்கோ மன்ற வெளியீடு* 1972

*எண்வகைப்பட்ட பாடல்கள் கம்பனால் பயன்படுத்தப்பட்டுள் ளன. இவற்றுள் கலிவிருத்தமே மிகுதியாகப் பயிலப்பெற்றது. வை. மு. கோ.வின் பதிப்புப்படி கம்பனிலமையும் கலிவிருத்தங் கள்* 5077, *அறுசீராசிரிய விருத்தம்* 3185, *கலித்துறை* 1805. *வஞ்சி விருத்தம்* 225. *எழுசீராசிரிய விருத்தம்* 178; *தரவு கொச்சகக் கலிப்பா* 86, *எண்சீராசிரிய விருத்தம்* 6, *வஞ்சித் துறைப்பாடல் கள்* 5, *வஞ்சி விருத்தம் வஞ்சித்துறையாகவும் அலகிட வாய்ப் பளிக்கிறது. கலிவிருத்தங்களில் சில வஞ்சி விருத்தமாகவும், வேறுசில தரவுக் கொச்சகமாகவும் நிற்கும் தன்மையைப் பதிப் பாசிரியர் சுட்டுகின்றனர்*(32). *இத்தகைய யாப்பு மயக்கம் மிகுதி யாகக் கம்ப இராமாயணத்தில் மட்டுமே அமைகின்றது. இம்மயக் கம் கம்பராலேயே ஏற்பட்டிருக்கலாம். அன்றிப் பதிப்பாசிரியர் களாலும் தோன்ற வாய்ப்புண்டு*(33).

**699. A Grammatical study of Kambaramaya.**

A. Govindankutty,

Ph. D. Thesis, Kerala University, 1972, 18+526+2398

Part I, 1. Introduction, 2. Phonology, 3. Suffix Sandhi, 4. Noun 5. Verb, 6. Adjective 7. Clitics, 8. Onomatopoeic words. Part II Index

**700. கம்பனது காப்பியத்தில் மூன்று முடிச்சுகள் (97-102)**

*ஐந்தாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை: இரேசு அலெக்சாந்தர் சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த்துறைச் சார்பு வெளியீடு* 1973 ரூ. 22

கைகேயி தசரதனிடம் வரம் கோர, தசரதன் அவளை நோக்கி 'நீ திகைத்ததுண்டோ, பொய்ந்நிலையோர்கள் புணர்த்த வஞ்ச முண்டோ' என்று வினவுகின்றான். அவளும் 'தகைத்ததுமில்லை யெனக்கு வந்து தீயோர் இசைத்ததுமில்லை' என்று மறுமொழி கூறுகின்றாள். ஆயின் நகர்நீங்கு படலம் 78ம் பாடலில் கூனி சூழ்ச்சி பற்றித் தசரதன் குறிப்பிடுகிறான். சுமந்திரன் தான் முன்பு காணாத குகனைப் பரதனுக்கு அறிமுகம் செய்து வைக்கிறான். சீதையைப் பிரித்தாலன்றிச் சூர்ப்பநகை தனது ஆசை நிறைவேறாது என்றெண்ணித் தானே அவளை வெளவ முற்பட்டு உறுப்புகள் குறைக்கப் பெற்றாள். ஆயின் இராமன் சீதையைப் பிரித்து பத்துத்திங்கள் தனித்திருந்தான்.

சூர்ப்பநகை பெரிதும் விரும்பி வேண்டிக் கிடந்த வாய்ப்பான சூழல் கைவரப் பெற்றிருந்த சூழலில் அவனை அடைந்தே தீர வேண்டும் என வெட்கம் விரதனையன்றி அத்துணை, தீவிரமாக இருந்தவள் எதனால் எவ்வாறு அவனை அணுகாது மறந்திருத்தல் இயலும்? சூர்ப்பநகை இராவணனைத் திட்டமிட்டுப் பழிவாங்கினாள் எனின் அதற்காக இராமன்பால் தாங்கொணா மையலும் விழிமூடவிடா விரக வேதனையும், உறுப்புகள் குலைக்கப்பெற்று மானமழிதலும் எற்றுக்கு? என்று இம்மூன்று குறிப்புகளை முடிச்சுகளாகக் காட்டுகிறார்.

**701. Essays on Kamban**

Bharathi Tamil Sangham, Calcutta, 1973, 2+185, Inland Rs. 3, Foreign U. K. 30 pence, U. S. A. 75 cents.

Essays: Kamban's Genius—P. S. V. Aiyar 1—4, The Tamil Voice of Beauty and Truth 5—11, P. Sri. Acharya, Kamban's Ramavataram 12—27, T. P. M., Kamban as an epic poet 28—38 M. Ramaswamy, Deviations from Valmiki 39—59 M. Srinivasan, The Ttragic Element in Kamban 60—74 N. Gopalasundaram, Kamban on the great Paradox 75—80 A. Srinivasaragavan, A note on the characterisation of Kamban 81—86 A. R. Indira, Kumbhakarna—A Study 87—99 O. S. V. Maniam, Kamban's similes—C. R. Myleru, Kamban—108—119 C. P. Ramaswami Aiyar, Rama of Kambar and Tulasi 120—125 Dr. S. Shankara raju Naidu, Sundara the dedicated 126—129 A. V. Subramanian. Translations Sarayu 132-133, A. Srinivasaraghavan, The Reign of love 134-136, R. S. Desikan, Rama wins Sita 137-141, Rajaji, The excursion 142-155, S. Maharajan, Guka 156-160, A. Srini

vasaraghavan. The brothers Meet 161-166, V. V. S. Aiyar, Two battle scenes from Kamban 167-185, P. N. Appuswami.

Kamban's uniqueness consists in the sense of justice he shows in handling his characters(3). The poct shows sense of proportion in his narration of events, description of scenes and his reflection on occasion(4). Kamban brought a new life, introducing new metres and new ideas as well as a new message of beauty and truth(5). Not only in story - construction and characterisation but in the detailed execution of the structure and in the dramatic development and gradations of the varions situation. Kamban differs from his great predeccessor in the most substansial manner imaginable(6).

The truth, though Sri vaishnavism, has assumed the form of imperishable beauty called Ramn in Kamban's epic(8). In the high-ways and in the bye-ways of the epic we feel life's sorrows and triumphs as well as the under-current of grace and compassion(9). In him beauty and truth have found their perennial music ,and Mantra and their authendic and most entrancing Tamil voice and vision(11). The grandeur and and nobility of the verse of Kamban, while it can never be judged from translation(31)

Woven into their life story of Rama are the customs, thoughts and idealogies of this land of ours. The Hindu conception of renouncement of the world at a certain stage in man's life is very pithily put in Dasaratha's words(32). Dasaratha's adherence to satya had to be established by the actions of his sons. The advantage which Aristotle. mentions as being possessed by the epic as compared to tragedy Viz the possibility of representing an action with number of parts going on simultaneonsly is fully expiorted in Kamban. This adds grandeur, variety of interest and episodes of different kinds(34).

The organic unity in an epic generally lies in the binding force of the character of the hero or perhaps in the fate of mankind. In Ramayana these two are closely interwoven(36).

Kamban was a great Bhaktha and he wanted to follow the path of the poet - saints of Saiva and Vaishnava sects and propagate the Bhakthi cult all over the land by his immortal songs(42). Tragedy in its profoundest state of pathos and

depicting the impulses of the inner mind of Ravana in all his perverted is grounded deep in Kamban's work(62).

Ravana can only be compared to Shakespeare's Antony in his passion for Cleopatra. The outcome of the 'Agniparisha' may be the noblest standing to uphold that Sita is the Chastest woman on earth, but the necessity of it and the manner in which it was done are the most tragic aspects of Ashoka-vanam(65). Sublimation of the tragic element in Kamban is not in the conquest of Ravana, but in the self destruction of the evil in the character(74).

What he says about the characters is always borne out convincingly by what the characters themselves say and do(81), Kamban indicate the nature of a character by describing or eschibiting his dress, expression by making the character impress his or her ideas and emotions in a speech, by telling us what is going on in the mind of the character, by telling us what other characters think of him and etc(87).

Kumbhakarna had not only the unbounded love for his younger brother but also the absolute and implict conficlence he had in the prowess of the trio - Rama, Lakshmana and Maruti - who alone can afford the much needed protection for Vibishana. This Soldier, brave and disciplined possessed in an abundant measure all the qualities of the human heart, the deep affections, unbounded love, a sense of duty - all feelings that heaven imparts to all living things(99).

Rama and Sita are in the know of their being incarnations according to Tulasidas but no where in Kamban do we find such an approach. Kambar's Rama is understood to be God-incarnate by the out side world alone(124) Sumantra has misread the mind of Kaikeyi very badly indeed. This mistake of him certainly adds to his personality as a dedicated man, but more, it sharply defines his character delineation and makes him highly scpredible character, despite the fact that he does not play a very significant role in epic poem.

**702. கம்பர் கவிநயம்**

கவிஞர். அ. கு. ஆதித்தர்

வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை - 17, மு. ப. பிப். 1974; 9+280 ரூ. 7-50

மன்னன் உயிர் 9—20, கோசலை அறிவு 21—33, இளையவளும் இளையவனும் 34—45, அறிஞர்பால் அடங்கினில் 46—59,

பெரியோரும் பிழைப்பர் 60—75, சீதையின்மையால் இருவர் பட்ட இடர் 76—90, கம்பர் சிற்றடிச் சிறப்பு 91—92, இராமனும் நகைத் தான் 93—102, ஒரு நீ 103—109, அரசியல் குறிப்புகள் 110—129, இராவணனும் சீதையும் 130—145, சீதையின் பெண்மை 146—168, கையடை 169—174, கம்பர் நேரடி நயம் 175—179, அரும் பொருட் செய்யுள் சில 180—209, ஒரு மாற்றம் இருக்கலாம் 210—212, சொல் நுட்பச் செய்யுள் சில 213—247, மானுடத்தின் மாண்பு 248—259, கம்பர் நெடுநல் வாக்கு 260—268, கம்பர் பெருமை 269—272, ஏற்றமுற்ற இருமுகங்கள் 273—280.

தசரதனுக்கு இராமன் உயிராக கம்பர் அமைத்துள்ள சிறப் பைக் காட்டுகிறார். சேக்ஸ்பியரின் அழுகைச் சுவை நாடகங்களி லும் கம்பரின் தசரத நாடகம் அதிக அழுகையும் ஒழுக்கமும் தந்து நிற்பதாகும்(20). கோசலை மகன் அரசனுவான் என்ற சொல்லைக் கேட்ட கணமே, 'இனி மன்னர் துறவு பூணுவார் என் கடமை?' என்று கணவனைப் பற்றியே நினைக்கின்றாள்(23). சொன்னவர்க்கு நற்பரிசு வழங்கித் தன் கடமையினின்றும் மாருதிருந்தாள்(24). பரதன் அரசாள்வான் என்றவுடன் கோசலை பிதற்றினுளல்லள். அறிவோடு பேசினுள். 'நம்பிக்கு நானிலம் நீ கொடுத்து' எனும் கோசலை கூற்றுக்கு, 'முதல்வனுகிய நீ முதலில் நாட்டைப் பெற்று அவனிடம் ஒப்படைத்த பின்னர்' என்று பொருள் கூறுகிருர்(26).

நைவீர் அல்லீர் மைந்திர் என்னும் கூற்று பரதனை நோக்கிக் கூறப்படுவதால் பரதனுக்கு மகிழ்ச்சி. காளை இவன் தன்னுெடு என்பதால் குகனுக்குக் களிப்பு. ஐவீரும் என்றதால், தன்னை உட் படுத்தியதால் சத்ருக்கனனுக்கு மகிழ்ச்சி. காடு நோக்கி வந்தது நலமாயிற்று என்றதால் கைகேயிக்கு மனநிறைவு. இவ்வாறு பலரும் மனமகிழப் பேசுகிருள்(31) சுமித்திரையின் தூய்மை நேர் மைகளே அவள் மக்கள் உள்ளத்திலும் ஒழுக்கத்திலும் விளங்கி வந்தன. எனவே இலக்குவன் வீரம் விளங்கும் இடங்களில் எல்லாம் 'சுமித்திரை சிங்கம்' என்கிருர் கம்பர்(37). இராமன் வாலிக்குத் தூது அனுப்பாததும், மறைந்திருந்து கொன்றதும் பிழையேயாகும். ஆனுல் இஃது கால தர்மத்தின் பாற்படும்.

இராமன் தன் பிழையுணர்ந்து கழுவாயும் தேடி நின்ருன்(75). சீதையைப் பிரிந்த இராமனுக்குத் தோன்றும் உருவெளி அறிவு நிலையில் மறைந்து சுத்தவெளி ஆகிறது. இராவணனுக்கு அது அறிவு நிலையிலும் மனத்துட் பாரமாக நிற்கின்றது(87). இராமா யணத்தில் இராமன் முறுவலிப்பதாகப் பல இடங்கள் உண்டு எனினும் நகைக்குமிடங்கள் நான்கே(94). (கங்கை: 58, சூர்ப்: 59, சூர்ப்: 64, வருணனை வழி: 9).

முதற்போர்: 143, 203, மாயசீதை: 33, அயோமுகி: 68, மாரீசன் வதை-இப் பாடல்களில் வரும் 'ஒரு நீ' எனும் தொடரின் பொருட்

செறிவை காட்டுகிறார். மருத்துமலை: 58-ல் தியாக விநோதன் என்னும் தொடரைக் கொண்டு கம்பர் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தவர்(113). அரச முறைமைகள், இயல்புகள், கொடை, வீரம், முறை, ஊக்கம், செருக்கு இவற்றைத் தொகுத்துரைக் கின்றார்(129). சீதையின் காதல் நிலை, கானகத்துக்கு உடன் செல்லல், அசோகவனத்து நிலை இவற்றைச் சுட்டி இதுவே பெண் மையெனக் காட்டுகிறார். 'ஏகும் நல்வழி அல்வழி என் மனம்' எனும் பாடலின் ஈற்றடி 'கன்னியே ஆகும் வேறிதற்கு ஐயுற வில்லையே' என்பது 'கன்னியெற்காகவே வரற்கு ஐயுறவில்லையே' என்று இருந்திருக்கலாம். அல்லது 'கன்னி எற்காகவே இதற்கு ஐயுறவில்லையே' எனவும் இருக்கலாம். அப்பொழுதுதான் சிறப்பு என்கிறார்(212).

குகனைக் கண்டு உலகத்தோடு ஒழுகும் முறையைக் கற்பித் தார் கம்பர்(230). இராமன் சீதையின் சிறப்பியல்புகளை மானிடத் தின் மாண்பாகத் தருகிறார். இராவணனும் கம்பர் கருத்தில் உயர்ந்தவரே. இராமன் நாட்டை விட்டுக் காடு நோக்கிய நாளில் அதிகப் பொலிவுற்றான் இராவணன் வாழ்வை நீக்கி வீடு நோக்கிய நாளில் அதிகப் பொலிவுற்றான்.

இடையிடையே உரையாடல்களையும் அமைத்துள்ளார். திருக்குறளுடன் பல இடங்களில் ஒப்பிட்டுள்ளார்.

கம்பர் பெருமை எனும் கவிதையில் கற்புக்கனல் என்னும் காவியத்தின் தலைவி இலக்கணி. அவள் அருக்குணன் என்னும் மன்னனால் வற்புறுத்திக் கற்பழிக்கப்பட்டாள். உருக்குலைந்து அறிவு மயங்கிக் கிடந்த அவள் தெளிந்து மேல் நோக்க ஆங்குற்ற சுவர்களில் நிறைய ஓவியங்களைக் கண்டாள் என முன்னுரை மொழிந்து அவ் ஓவியங்கள் கம்பனுடையதே எனத் தெளிந்து கம்பன் புகழுரைப்பதாகக் கவிதை அமைத்துள்ளார்.

எக்கவலையுற்றார்க்கும் இனிய பெருஞ் சஞ்சீவி கம்பன் ஆவான், முன்முனியே சொன்னாலும் முறை தவறு நெறி எலாம் முற்றும் நீக்கி நன்னயம் வேண்டுமென்னும் ஏற்குமொரு நாகரிகம் விளக்கி வைத்தான். மறங்கடியும் புதத சமண அறநெறியின் முறைமையெல்லாம் மல்கத் தந்தான். இங்கு எவரும் தனக்கு நிகர் இலரென்னப் பெருமிதஞ்சால் இலக்கியத்தின் இயல் வளமும் கற்பனையும் இருக்க வைத்தான். அறமுரைத்தான் ஏற்றம் உற்றான் என்று கூறும் புலவர் அப்பெண் கம்பன் ஓவியங் களில் தம் அவலம் மாறியதாகக் காட்டுகிறார். கம்பனின் புகழினை அழகிய கற்பனையால் நிறுவுகிறார்.

கம்பராமாயணத்துள் காணும் சிறந்த சொற்றொடர்களை அகர வரிசையில் தொகுத்து, கம்பர் நெடுநல் வாக்காகவும், சிற்

றடிச் சிறப்பாகவும் தருகிறார். கம்பனுக்குப் பெருமை தரும் பாடலடிகளின் அகரவரிசைத் தொகுப்பு கம்பர் நேரடி நயமாக மலர்ந்துள்ளது.

**703. தமிழில் வழங்கும் இராமாயணக் கதைகள் (444—449)**

ஆறுவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, அ. பாண்டுரங்கன் பாண்டிச்சேரி தாகூர் அரசினர் கலைக் கல்லூரித் தமிழ்த் துறைச் சார்பு வெளியீடு, 1974

தமிழில் வழங்கும் இராமாயணக் கதைகளைக் கதைக் கூறுகள், கதை வடிவங்கள் என்னும் இருபெரும் பிரிவாகப் பகுத்து, ஒவ்வொன்றையும் கம்பனுக்கு முன்தோன்றி கம்பனில் இடம்பெற்றவை கம்பனுக்கு முன் தோன்றி கம்பனில் இடம் பெறாதவை, கம்பனுக்குப் பின் தோன்றியவை, பிற மொழிகளிலிருந்து தமிழில் வழங்குவனவாகத் தோன்றுபவை என்று நான்கு பிரிவாகப் பிரித்து எடுத்துக்காட்டுகள் தருகின்றார். ஆயின் கதை வடிவங்கள் என்னும் பகுதியில் கம்பனுக்கு முன் தோன்றி கம்பனில் இடம் பெறாதவை, கம்பனுக்குப் பின் தோன்றியவை என்னும் பிரிவுகளுக்கு எடுத்துக்காட்டுகள் ஈண்டு கொடுக்கப்படவில்லை. கம்பனுடைய காலத்தை ஆராய இதுவும் ஒரு சான்று ஆகலாம் என்கிறார்.

**704. கம்ப நாடகக் காட்சிகள் (88—105)**

செவி நுகர் கனிகள் மு. மு. இஸ்மாயில்

வானதி பதிப்பகம், மு. ப. நவ. 1974, ரூ. 6

குகன் இராமனைச் சந்தித்து மீனும் தேனும் அருளியது, குகனுக்குப் பரதன் தாயர் மூவரை அறிமுகப்படுத்தும் பொழுது மெதுவாக நடந்து செல்லும் கதை, கைகேயியை அறிமுகப்படுத்துங்கால் துரிதமாகச் சென்று விடுவது, சீதையின் உருவெளித் தோற்றம் கண்டவுடன் தங்கையை அழைத்து உரையாடும் இராவணனின் காட்சி, அனுமன் குறிப்பால் சீதையைக் கண்டு வந்ததைத் தெரிவித்தது ஆகியவற்றைச் சிறந்த நாடகக் காட்சிகளாகக் காட்டுகிறார்.

**705. கம்பநாடர் (ஆய்வு நூல்)**

தி. செல்வக் கேசவராய முதலியார் எம். ஏ

கழகம்; 1974; 3+1+84, ரூ. 3

இந்நூல் 28 துணைத் தலைப்புகளுடன் ஒரே கட்டுரையாக முதலிலிருந்து முடிவு வரை அமைந்துள்ளது.

இளமையில் சடையப்ப முதலியாருடைய வீட்டில் வளர்ந்த படியால் அம் முதலியாருடைய மைந்தரோடு இவரும் ஒரு கணக்

காயரிடத்தில் சிறிது கல்விப் பயிற்சி பெற்றார். கம்பரின் குலம் பற்றிக் கூறும்பொழுது அறிவார் யார் நல்லார்குடி(12) என்கிறார். கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப்புலவர், ஔவையார் ஆகிய நால்வரும் குலோத்துங்க சோழன் காலத்தவர்கள். கல்வெட்டு களின்படி கம்பருக்கு நிலைக்கலம் கொடுத்த பிரதாபருத்திரன் கி. பி. 1162க்குச் சிறிது முன்னே தொடங்கி 1197க்குப் பின்னே சிறிது காலம் அரசாட்சி செய்தவன். ஆகவே அவன் இராசராசன் காலத்தில் இருந்தவன் என்பது தேற்றம்(17).

பெரிய வாச்சான் பிள்ளை ஆற்றுப்படலம் 10வது விருத்தத் தினைத் தன் பெரிய திருவாய்மொழி பாசுரத்து வியாக்கியானத் தில் காட்டியிருப்பதால் அவர் காலமாகிய கி. பி. 1228க்கு முற் பட்டவர் கம்பர்(19). கம்பர் காலத்திற்கு அடியார்க்கு நல்லார் பிற்பட்டவர்(20). நச்சினார்க்கினியர் உரையையும், சேனாவரையர் உரையையும் கம்பர் படித்திருக்கலாம்(21). இதன்பின் கம்ப ராமாயணத்தில் பிற நூல்களின் கருத்துகள் இடப் பெற்றுள்ள மைக்குச் சில சான்றுகள் தருகிறார். கம்பசூத்திரம், உவமை, உரு வகம், தற்குறிப்பேற்றம், பிற நலங்கள் முதலியவற்றுக்கும் காட்டுகள் தந்து செல்கிறார். இரட்டுற மொழிதலில் 'இந்திரன் சசியைப் பெற்றான்' எனும் பாடலின் இறுதி அடிக்கு, நன்மை அவர்க்கில்லை; உனக்கே என்றும் நன்மை அவர்க்கு, இல்லை உனக்கு என்றும் இரு பொருள் காட்டுகிறார்.

'பாகத்தில் ஒருவன் வைத்தான்' எனும் பாடலிலும் இதே போல் 'எங்ஙனம் வைத்து வாழ்தி'? என்பதற்கு 'நீ அவளை யாண்டு வைத்து வாழ்வாய் என்றும், நீ அவளைப் பெற்றால் எங்ஙனம் வாழ்தி வாழாயே' என்றும், தசரதன் முடிபுனைதற்காக (நாழிகையை) கடிகை பார்த்துச் சொல்லுங்கள் என்னும்போது கடிகை என்பதற்குத் தடை செய்தல்(42) என்னும் பொருளும் உண்டு என்றும் மேலும் சில சான்றுகளையும் நவில்கிறார். பெண் கல்வியின் தன்மையை அக்காலத்திலேயே உணர்ந்தவர் (பெருந் தடங்கண் பிறை நுதலார்...) வறுமையில் செம்மை கண்டவர் (துன்புள தெனினன்றோ சுகமுளது) வைணவர், என்று கம்பரைப் பற்றிக் கூறுகின்றார்.

இராமாயணம் பாடி முடித்த பிறகு கம்பர் கவிதா வல்ல மையை இழந்தாரென்றும், தாம் பாடின பாடல்களைப் பிறர் படிக்கும் பொழுது அவைதாம் பாடின என்பதறியாமல் அதிக ஊக்கத்துடன் கேட்டு மகிழ்வரென்றும் கூறி வருகின்றனர்(74). பிற்சேர்க்கையாக விநோத ரசமஞ்சரி, செந்தமிழ் கட்டுரைகள் முதலியவற்றிலிருந்து சில குறிப்புகளையும், கிருஷ்ணசாமி முதலி யார் 1861ல் அச்சிட்ட பாலகாண்ட உரையின் அவையடக்கம் அவ் வுரையின் சிறப்புப் பாயிரத்தில் அட்டவதானம் வீராசாமி செட்டி

யார் சொல்லியது, அந்தகக் கவி வீரராகவ முதலியார் இராமா யணப் போர் எப்படி செய்தது முதலியவற்றினின்றும் குறிப்பு களையும் தொகுத்துத் தந்துள்ளார்.

706 **கம்பன் கவிதை மலர்**

*கம்பன் கழகம், காரைக்குடி, ஏப். 1974 (36வது கம்பன் திருநாள் வெளியீடு) 135*

கம்பன் மலர் வணக்கம், கம்பன் யார், அடிமையென அடிமை கொள் அது எதுவோ? முதலிய கவிதைகளைக் கம்பன் அடிப் பொடியும், கவியரங்கின் தலைமை உரையை கி. வா. ஜ.வும் பாடி யுள்ளமை நூலின் முதலில் அமைந்துள்ளது.

கம்பனே, உபநிடதமுனிவர், அகத்தியர், வான்மீகி, அவ்வை யார், கபில - பரணர், கீர - மருதர், வள்ளுவர், இளங்கோ, கொங்குவேள், காரைக்காலம்மை, ஆழ்வார்கள் மூவர் முதலியோ ரைப் பற்றிப் பாடுவதுபோல் கம்பன் அவர்களைப் பின்பற்றிப் பாடியுள்ளமை கூறப்படுகிறது.

இக்கவிதைகளை முறையே, க. வெ. ரா. கிருஷ்ணசாமி ரெட்டியார், கம்பராமன், ஜனார்த்தனம், அரங்க சீனிவாசன், ரெ. முத்து கணேசன், தமிழண்ணல், அர. சிங்கார வடிவேலன், அப்துல் ரகுமான், ம. வே. பசுபதி, சித்தன். க. தேசிகன், சொ. சொ. மீ. சுந்தரம் ஆகியோர் பாடியுள்ளனர்.

707. **கம்பராமாயணம் - பால காண்டம்** (ஆற்றுப்படலம், நாட்டுப் படலம், நகரப்படலம், அரசியற்படலம்)*

என். நாகராஜன்

*முதுகலைப் பொருட்கட்டுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974; 83+10*

நூன்முகம், கம்பரின் காலமும் பெருமையும், பால காண்டத் தின் அமைப்பும் சிறப்பும், பொருட்பாகுபாடும் பொருட் சுருக்க மும், படலங்களின் இயல்பு, கம்பரும் ஏனைய கவிஞர்களும், கம்பரின் புலமைக் கூறுகள், யாப்பமைப்பு, பிற சிறப்புகள், பிற் சேர்க்கை.

708. **கம்பராமாயணம் - பால காண்டம்** (திருவவதாரப்படலம், கையடைப்படலம், தாடகை வதைப்படலம்)*

எஸ். செல்வகணபதி

*முதுகலைப் பொருட்கட்டுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974; 80+18*

முன்னுரை, இராமாவதாரம், காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட் பாகுபாடும், படலத்தின் இயைபு, பாத்திர ஆராய்ச்சி, அணிநலன்கள், யாப்பமைப்பு, பிற சிறப்புகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

709. **கம்பராமாயணம் - பால காண்டம்** (வேள்விப் படலம், அகலிகைப்படலம், மிதிலைக்காட்சிப்படலம், குலமுறை கிளத்துப்படலம்)*

ஏ. சுந்தரமூர்த்தி

முதுகலைப் பொருட்கட்டுரை. அ. ப. க., 1974; 107+13

முன்னுரை, காண்டச் சிறப்பும் அமைப்பும், படல இயைபு, பாத்திர ஆராய்ச்சி, கிளைக் கதைகள், அகத்துறைக் காட்சிகள், அணிநலன், யாப்பமைதி, முடிவுரை, பிற்சேர்க்கை.

710. **கம்பராமாயணம் - பால காண்டம்** (கார்முகப்படலம், எழுச்சிப் படலம், வரைக்காட்சிப்படலம்)*

வி. ஆர். சீனிவாசன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 3+147+8

முன்னுரை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட் பாகுபாடும், படலங்களின் இயைபுநிலை, பாத்திர ஆராய்ச்சி, அணிநலன்கள், யாப்பமைதி, கம்பனும் இயற்கையும், கம்பன் காட்டும் காதல்நெறி, முடிவுரை, பிற்சேர்க்கை.

711. **கம்பராமாயணம் - பால காண்டம்** (பூக்கொய்படலம், நீர் விளையாட்டுப்படலம், உண்டாட்டுப்படலம், எதிர்கொள் படலம், உலாவியற்படலம்)*

என். வெள்ளையன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 3+101+9

முன்னுரை, கம்பன் காலமும் வரலாறும், காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருளடக்கமும், படலங்களின் இயைபு, கம்பனும் இயற்கையும், அகத்துறை உவமைகள், யாப்பமைப்பு, கம்பனின் புலமை, பிற்சேர்க்கை.

712. **கம்பராமாயணம் - பால காண்டம்** (கோலங்காண்படலம், கடிமணப்படலம், பரசுராமப்படலம்)*

எஸ். எம். பால சுப்பிரமணியன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 70+17

கம்பன் வரலாறு, காலம், பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலங்களின் கதைச் சுருக்கம், படலங்களின் இயைபு, பாத்திர ஆய்வு, அணிகலன், அகத்திணைக் கூறுகள், யாப்பமைதி, பிற்சேர்க்கை.

713. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (மந்திரப்படலம், மந்தரை சூழ்ச்சிப்படலம், கைகேயி சூழ்வினைப் படலம்)*

ஜி. தேவநாயகம்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 108+7

முன்னுரை, கம்பர் வரலாறு, காலம்-பெருமை, அயோத்தியா காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலச் சுருக்கமும் பொருட் பாகுபாடும், முன்பின் படலங்களின் இயைபு, பாத்திர ஆய்வு, பாத்திர ஒப்புமை ஆய்வு: கூனி - சூர்ப்பணகை, யாப்பமைதி. கம்பனின் புலமைக் கூறுகள், பிறசிறப்புகள், முடிவுரை, பிற் சேர்க்கை.

714. **கம்பராமாயணம்-அயோத்தியா காண்டம்** (நகர் நீங்கு படலம்)

சி. அருணன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 3+96+9

முன்னுரை, கம்பர், காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட் பாகுபாடும், படலங்களின் இயைபு முறை, பாத்திர ஆராய்ச்சி, அணிநலன்கள், யாப்பமைதி, பிற சிறப்புகள், பிற்சேர்க்கை

715. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (தைலமாட்டுப் படலம், கங்கைப்படலம், வனம்புகுபடலம், சித்திரகூடப் படலம்)*

ஏ. அருள்சாமி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 94+10

ஆய்வுமுகம், கம்பர் வரலாறு - காலம் - பொருண்மை, பொருட்பாகுபாடும், கதைச் சிறப்புகளும், அயோத்தியா காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படல இயைபு, பாத்திர ஆய்வு, பாத்திர ஒப்புமை ஆய்வு, அணிநலன், யாப்பமைதி, பிற சிறப்புகள், ஆய்வுமுடிவு, பின்னிணைப்பு.

716. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (பள்ளியடைப் படலம், ஆறுசெல்படலம்)*

சி. நம்மாழ்வார்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 60+16

ஆய்வுமுகம், ஆராய்ச்சிக் கட்டுரைப் பொருள், கம்பர் வரலாறும் காலமும், காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், பொருட் சுருக்கம், படலங்களின் இயைபு, பாத்திர ஆராய்ச்சி, உவமை முதலிய நலன்கள், பிற சிறப்புகள், யாப்பமைதி, கம்பர் வேறுபடுமிடங்கள், முடிவுரை, பின்னிணைப்பு.

717. **கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம்** (கங்கை காண் படலம், திருவடி சூட்டுப்படலம்)*

வி. விஜயலட்சுமி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 129+12

முன்னுரை, ஆசிரியர் வரலாறு - காலம் - பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலங்களின் கதைச் சுருக்கமும்,

பொருட் பாகுபாடும், படலங்களின் இயைபு முறை, பாத்திரப் படைப்பு, ஒப்புமை ஆராய்ச்சி, யாப்பு அணி முதலியன, ஆசிரியரின் புலமைச் சிறப்பு, முடிவுரை, பின்னிணைப்பு.

718. **கம்பராமாயணம்—ஆரணிய காண்டம்** (விராதன் வதைப் படலம், சரபங்கன் பிறப்பு நீங்குபடலம், அகத்தியப்படலம், சடாயுகாண் படலம், பஞ்சவடி படலம்)*

வி. இளவரசி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க.; 1974; 113+6

முன்னுரை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட்பாகுபாடும், முன் படலங்களின் இயையு, பாத்திரப் படைப்பு, பாத்திர ஒப்பாராய்ச்சி; யாப்பமைப்பு, அணிகளும் நயங்களும், புலமைச்சிறப்புகள், பிற்சேர்க்கை

719. **கம்பராமாயணம்—ஆரணியகாண்டம்** (சூர்ப்பணகைப் படலம், திரிசிரா வதைப்படலம்)*

பி. சி. இளங்கோவன்

முதுகலைப் பொருட்கட்டுரை; அ. ப. க., 1974; 87+16

முன்னுரை, கம்பர் வரலாறு—காலம்—பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலங்களின் இயைபு, கதைச்சுருக்கமும் பொருட் பாகுபாடும், பாத்திர ஆய்வு, அணிநலன், யாப்பமைதி, முடிவுரை, பின்னிணைப்பு.

720. **கம்பராமாயணம்—ஆரணியகாண்டம்** (தூடணன் வதைப் படலம், கரன் வதைப்படலம், இராவணன் அணங்குறு படலம்)*

பி. இராமலிங்கம்

முதுகலைப் பொருட்கட்டுரை; அ. ப. க.; 1974: 88

முன்னுரை, கம்பர் வரலாறும் காலமும் பெருமையும், ஆரணிய காண்டத்தின் அமைப்பும் சுருக்கமும், கதைச்சுருக்கமும் பொருட்பாகுபாடும், பாத்திரங்களின் இயையுமுறை, பாத்திர ஆராய்ச்சியும் பாத்திர ஒப்புமை ஆராய்ச்சியும், உவமை முதலிய கூறுகள், யாப்பமைப்பு, பிற சிறப்புகள், பிற்சேர்க்கை.

721. **கம்பராமாயணம்—ஆரணிய காண்டம்** (மாரீசன் வதைப் படலம், இராவணன் சூழ்ச்சிப் படலம், சடாயு உயிர்நீத்த படலம்)*

ஆர். வெங்கட்ராமன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க.; 1974;79+13

முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பாகுபாடும், படலங்களின் இயைபுமுறை, பாத்திர ஆராய்ச்சி, புலமைக் கூறுகள், யாப்பமைதி, பிறசிறப்புச் செய்திகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

722. **கம்பராமாயணம்—ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம்** (அயோமுகிப்படலம், கவந்தன் வதைப்படலம், சபரி பிறப்பு நீங்கு படலம், பம்பைப்படலம், அனுமப்படலம்)*

சி. முனுசாமி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க.; 1974; 82+12

நான்முகம், கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட்பாகுபாடும், படலங்களின் இயைபு, பாத்திர ஆராய்ச்சி, உவமை முதலிய கூறுகள், காப்பமைப்பு, பிறசிறப்புகள் முடிவுரை, பிற்சேர்க்கை,

723. **கம்பராமாயணம்—கிட்கிந்தா காண்டம்***(நட்பு கோட்படலம்) மராமரப்படலம், துந்துபிப்படலம், கலன்பாண்படலம், வாலி வதைப்படலம்)*

என். முருகேசன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 75+8

முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், பொருட்பாகுபாடு, படலங்களின் இயைபு நெறி, பாத்திர ஆராய்ச்சி, கம்பர் கவித்திறன், யாப்பமைதி, பிற சிறப்புகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

724. **கம்பராமாயணம்—கிட்கிந்தா காண்டம்** (தாரை புலம்புறு படலம், அரசியற் படலம், கார்காலப் படலம்)*

கே. இராசேந்திரன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க.; 1974; 94+21

முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், ஆய்வுப் பகுதியின் கருத்துக்கோவை, காப்பியமொழி நோக்கின் தொடர்புநயம், காப்பிய உறுப்பினர் கள், காப்பியர் சூட்டிய அணிகள், ஆய்வுப்படலங்களின் யாப்பு, படலங்களின் சிறப்பு, மேற்கோள், பிற்சேர்க்கை.

725. **கம்பராமாயணம்—கிட்கிந்தா காண்டம்** (கிட்கிந்தைப்படலம், தானைகாண்படலம், நாடவிட்ட படலம்)*

ஏ. நலங்கிள்ளி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974; 2+94+8

முன்னுரை, கம்பர் காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பொருட்பாகுபாடும், படலவியைபு முறை, காப்பியமாந்தர், காப்பியநலன், யாப்பமைதி, சிறப்புக் கூறுகள், பிற்சேர்க்கை.

726. **கம்பராமாயணம் — கிட்கிந்தாகாண்டம்** (புலம்புக்கு நீங்கு படலம், ஆறு செல்படலம், சம்பாபதிப்படலம், மகேந்திரப் படலம்)*

தி. இராஜவன்னியன்
முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 11+114
முன்னுரை, கிட்கிந்தா காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், பொருட் பாகுபாடு, படலங்களின் இயைபு முறை, பாத்திர ஆராய்ச்சி, பாத்திர ஒப்புமை, உவமை முதலிய கூறுகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

727. **கம்பராமாயணம் - சுந்தரகாண்டம்** (கடல்தாவுப் படலம். காட்சிப்படலம்)*

வி. பிச்சை ராஜீ
முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 95+14
முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்- பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச்சுருக்கமும் பொருட்பாகுபாடும், படல இயைபு, பாத்திர ஆராய்ச்சி, கம்பரின் புலமைக் கூறுகள், பிற சிறப்புகள். யாப்பமைதி, முடிவுரை, பிற்சேர்க்கை.

728. **கம்பராமாயணம்-சுந்தரகாண்டம்** (ஊர்தேடு படலம்)*

ஆர். இராதாகிருஷ்ணன்
முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974. 96
முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலத்தின் கதைச்சுருக்கமும் பொருட்பாகு பாடும், படல இயைபு முறை, பாத்திர ஆராய்ச்சி, பாத்திர ஒப்புமை ஆராய்ச்சி, அணிநலன்கள். யாப்பமைதி, பிறசிறப்பு கள், முடிவுரை.

729. **கம்பராமாயணம் - சுந்தரகாண்டம்** (உருக்காட்டுப் படலம், சூடாமணிப்படலம்)*

ஆர். மகாராஜன்
முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 75+13
முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச்சுருக்கம், படலங்களின் இயைபு, பாத்திர ஆராய்ச்சி, பாத்திர ஒப்பாராய்ச்சி, உவமைகளும் நயங் களும், உறுப்பு வருணனை. யாப்பு அமைப்பு, பிற்சேர்க்கை.

730. **கம்பராமாயணம் - சுந்தரகாண்டம்** (பொழிலிறுத்த படலம்' கிங்கரர் வதைப்படலம், சம்புமாலி வதைப்படலம், பஞ்ச சேனுபதியர் வதைப்படலம்)*

பொன். அழகப்பன்
முதுகலைப் பொருட்கட்டுரை. அ. ப. க., 87+27
முன்னுரை, கம்பர், காண்டத்தின் அமைப்பும் சிறப்பும். கதைச் சுருக்கமும் பாகுபாடும், படலங்களின் இயைபு, பாத்திர ஆராய்ச்சி, உவமை முதலிய கூறுகள், யாப்பமைப்பு, பிறசிறப் புகள், முடிவுரை, பின்னிணைப்பு.

**731. கம்பராமாயணம் - சுந்தரகாண்டம்** (அக்ககுமாரன் வதைப் படலம், பாசப்படலம், பிணிவீட்டுப்படலம்)*

தி. பட்டாபிராமன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 3+137+8

முன்னுரை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச்சுருக் கமும் பொருட்பாகுபாடும், முன்படல இயைபு, பாத்திரஆராய்ச்சி அணிகள், யாப்பு நெறி, கம்பன் காட்டும் புறநெறி, பிறசிறப்பு கள், பிற்சேர்க்கை.

**732. கம்பராமாயணம் - சுந்தரகாண்டம் யுத்தகாண்டம்** (இலங்கை எரியூட்டுப் படலம். திருவடி தொழுத படலம். கடல் காண் படலம், இராவணன் மந்திரப் படலம்)*

கே. பழனி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 3+77

முன்னுரை, ஆய்வுக்குரிய காண்டப் பகுதிகளின் அமைப்பும் சிறப்பும், படலங்களின் கதைச் சுருக்கமும் பாகுபாடும், படலங் களின் இயைபு, பாத்திரங்கள், யாப்பமைதி.

**733. கம்பராமாயணம்-யுத்தகாண்டம்** (இரணியன் வதைப்படலம்)*

எஸ். அமிர்தலிங்கம்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 132+14

முன்னுரை, கம்பர். காண்டமும் படலமும், படல இயைபு, இரணியன், திருமால், பிரகலாதன், அணிநலன், யாப்பமைதி சமயம் பொதுமை, முடிப்புரை, பிற்சேர்க்கை.

**734. கம்பராமாயணம் - யுத்தகாண்டம்** (வீடணன் அடைக்கலப் படலம், இலங்கை வேள்விப்படலம்)*

பாலசுந்தரம்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1976, 91+7

முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பெருமை, யுத்தகாண் டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச் சுருக்கமும் பாகுபாடும், இயைபு முறை, பாத்திரப்படைப்பு, உவமைகள், பிற அணிகள், சொல்நயம், பொருள்நயம், யாப்பு அமைப்பு, பிற சிறப்புகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

**735. கம்பராமாயணம் - யுத்தகாண்டம்** (வருணனை வழிவேண்டு படலம்; சேதுபந்தனப்படலம், ஒற்றுக் கேள்விப்படலம்)*

எம். ராஜம்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 64

முன்னுரை, கம்பர் வரலாறு காலம் பெருமை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், படலத்தின் கதைச்சுருக்கமும் பொருட்பாகு பாடும், படலங்களின் இயைபு, பாத்திர ஒப்புமை, அணிகளும்

நயங்களும், இயற்கை வருணனை, யாப்பமைதி, பிறசிறப்புகள் முடிவுரை, பின்னிணைப்பு.

736. **கம்பராமாயணம் - யுத்தகாண்டம்** (இலங்கை காண்படலம் இராவணன் வானரத்தானை காண்படலம், அணிவகுப்புப் படலம்)*

என். தங்கமணி

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 80+8

முன்னுரை, கம்பர் வரலாறு-காலம்-பண்பாடு, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச்சுருக்கமும் பாகுபாடும், படலங்களின் இயைபு முறை, பாத்திர ஆராய்ச்சி. உவமை முதலிய புலமைக் கூறுகள், யாப்பமைப்பு, பிறசிறப்புகள், முடிவுரை, பிற்சேர்க்கை.

737. **கம்பராமாயணம்-யுத்தகாண்டம்** (முதற் போர்புரி படலம்)*

தி. திருஞானசம்பந்தன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 3+137+8

முன்னுரை, காண்டத்தின் அமைப்பும் சிறப்பும், கதைச்சுருக்கமும் பொருட் பாகுபாடும், முன்படல இயைபு, பாத்திர ஆராய்ச்சி, பாத்திர ஒப்புமை ஆராய்ச்சி, அணிகள், யாப்பு நெறி கம்பன் காட்டும் புறநெறி, பிறசிறப்புகள், பிற்சேர்க்கை,

738. **கம்பராமாயணம் - யுத்தகாண்டம்** (கும்பகர்ணன் வதைப் படலம்)*

ஏ. அர்சுணன்

முதுகலைப் பொருட்கட்டுரை, அ. ப. க., 1974, 75+13

739. **கம்பன் மணி மலர்**

கம்பன் கழகம், காரைக்குடி, 37-வது கம்பன் திருநாள் வெளியீடு, மார்ச் 1975, 148

முன்னுரை-கம்பனடிப்பொடி (5—8), கம்பர் கவிப்பெருமை - சு. கிருஷ்ணசுவாமி முதலியார் 9—10, வாழ்த்துப்பாக்கள் கவி மணி 11—12, கம்பராமாயண ரசனை - வ. வே. சு. ஐயர் 13—62, கம்பராமாயணத்தின் சிறப்பு - வெ. ப. சு. முதலியார் 63—68, கம்பரும் தமிழரும் - டி. கே. சி. 69—78, கம்பர் திருநாள் - சு. வையாபுரிப்பிள்ளை 79—94, இராமபிரானது மறக்கருணை 95-100, வாழ்த்துப்பாக்கள் - நாமக்கல் கவிஞர் 101—102, கம்பனின் நாடகத் தன்மை - ஏ. வி. சுப்பிரமணிய ஐயர் 103-114, இளவலின் இங்கிதம் - மு. மு. இஸ்மாயில் 115-122, கம்பன் கண்ட பக்தியும், அறமும்- அ. ச. ஞா' 123-136, கம்பன் கனவு - கம்பனடிப் பொடி 137-143 முதலிய கட்டுரைகள் உள்ளன,

கம்பன், விஜயாலயன் மகன் கோதண்டராமன் எனப்பெயர் சூடிக்கொண்ட ஆதித்தன் (கி. பி. 871-907) காலத்தில் அவனால்

பெரிதும் மதிக்கப் பெற்றவனாய் விளங்கியவன்(5). இயற்கைத் தத்துவம், கடவுட் டன்மை, அறநெறி இவற்றைச் சொல்லுமிடங் களில் கம்பரது பக்திப் பெருக்கமானது ஹோமரை மீறிச்சென்று மில்ட்டனோடு தோள் தட்டி நிற்கின்றது(9). அவரது சம்பாஷணை பாகங்களில் காட்டப் பெற்றிருக்கும் விரிவுரைகளும் இயற்கை வருணனை விஸ்தரிப்புகளும் அவரது உயர்ந்த கவிசாதுரியத்தால் பிரகாசித்து வர்ஜிலைவிடப் பூர்ணபக்குவத்தைக் காட்டி நிற்கின் றன(10). நகர சம்பந்தமான வர்ணனைகளில் கம்பர் ஒதீஸியத்தில் ஹோமர் சொல்லியிருப்பதைக் காட்டிலும் அழகாகவும் சுலப நடையாகவும் சொல்லிப் போகிறார். அன்றியும் வீரத்தைக்குறித்து நிற்கும் இடங்களில் ஹோமரைத் தூரத்தில் நிறுத்திச் செல்கிறார்.

திருவழுந்தூருக்குப் பக்கத்தில் இருந்திருக்கக் கூடிய ஒரு கிராம வட்டம் கம்பருக்குரியதாய் அவர் பெயராலே கம்பநாடு என்று வழங்கப்பட்டிருக்க வேண்டும்(70). கம்பன் பற்றிப் பல கதைகள் 'பேசப்படுவதையும் பாடபேதங்கள் மலிந்துள்ளமை பற்றியும் பேசப்படுகிறது. இராமனைக் காண வந்திருக்கும் முனி புங்கவர்களின் இடையே மீன்நாற்றம் வீசும் கலயத்தைத் தாங்கிய குகன் வருவதை, முரண் அழகாகக் கம்பன் கையாளுகிறான்(125). குகன் இராமனையும் தன்னையும் பிரித்து அறியவில்லை. அவன் அன்பு தாயன்பு(129). தான் கொண்டு வந்த உணவைக்காட்டி உணவைப் பக்குவப்படுத்திக் கொண்டு வந்திருக்கிறேன்.

இங்கு வந்து பக்குவப்படுத்துவதானால் காலம் கழியும் உனக் குப்பசிக்கொடுமை மிகும் என அஞ்சியே முன்னரே பகுவப்படுத் திக்கொண்டு வந்துள்ளேன். 'சுவாமியின் திருஉளம் என்கொல்' என்று கேட்கிறான். நாகரிகமற்ற சாதாரண மனிதன் என்று நாம் கருதும் ஒருவன் நாகரிகத்தின் உச்சத்தில் நின்று பேசிய பேச்சா கும் இது. அவன் பக்தியிலே அறிவு ஓடிவநது வேலை செய்கிறது (129), இலக்குவன் இராமனிடத்தில கொண்ட பக்தியில்தான் என்ற அகங்காரம் இழையோடி நிற்கிறது. இது அறிவால் வந்த வினை. பரதன் அற அடிப்படையில் செய்தாலும் பக்தி அடிப் படையில் செய்தாலும் அங்கே பரதன் என்ற தனி மனிதனைக் காணமுடியாது. இராமனைத்தான் காண்கிறோம். இது பரதனின் சிறப்பு. அறம், பக்தி எல்லாம் ஒன்றாக விளங்கும் காட்சியைத் தான் பரதனிடம் காண்கிறோம்(133). அறத்தின் அடிப்படையில் பக்தி தோன்றும். பக்தி முதிர்ந்தால் அறம் அதனுள் இழையோடி நிற்கும் என்ற உண்மையைக் கம்பன் தன் காப்பியத்தில் தெளி வாகக் காட்டுகிறான்(136). கங்கை பெருகி அலைமோதிக் கரை புரண்டு வருவதெனக் கவிபுனைந்த கம்பன் வாழ வாழ்த்துகிறார் கவிமணி(11). எத்தனைதரம் அதைப் படித்தாலும் எப்படிப் பொருள் கொண்டாலும் நித்தமும் புதுப்புது நினைவு தரும் நிரந்

தர இலக்கியக்கனி கம்பன் கவிதையென நவில்கிறார் நாமக்கல் கவிஞர்(101).

இந்நூலின் பிற கட்டுரைகள் ஆங்காங்கே காட்டப்பட்டுள்ளன.

740. கவியரங்கில் கம்பன் (கவிதை)

அரு. நாகப்பன்

கண்ணு பதிப்பகம், 82 ஹபிபுல்லா சாலை, சென்னை-17, மு. ப. மே. 1975, 86

கம்பன் என் தம்பி 1-14, மென்மையின (கம்பன் படைத்த பாத்திரங்களுள்) 17-29, அரசியல் மாண்பு 33-45, இராமன் பார்வையில் கைகேயி 49-62, கம்பன் கண்ட வண்ணம் கருணை 65-74, கம்பன் ஒருதெய்வம் 77-86 முதலிய கவிதைகள் உள. சா. கணேசன் ஆசியுரையும், க. கு. கோதண்டராமன் வாழ்த்தும் கண்ணதாசன் அணிந்துரையும் வழங்கியுள்ளனர்.

இராவணன் சீதையைத் தூக்கிச் சென்ற நிலையை வான்மீகியினின்றும் மாற்றியும் வேண்டுவனவற்றைக் கொண்டும் வேண்டாதவற்றைத் தள்ளியும் வான்மீகிக்குத் தம்பியானான்(7). விருத்தத்தில் திருத்தத்தைச் செய்து திருத்தக்க தேவருக்கும், பொருத்தமுடன் இளங்கோவையும், ஆழ்வார்களையும் தம் காப்பியத்தில் காட்டி அவர்களுக்குத் தம்பியானான்(9). பாரதிக்கும், பாரதிதாசனுக்கும் கருத்துகள் ஈந்தவன்(11). களை பறிப்போரின் மென்மை, கைகேயியின் மென்மை (இது கூனியால் திரிந்தது)(21). கம்பனின் மென்மை (கைகேயியின் மாற்றம் அரக்கர் அழிவிற்காக) திரிசடையின் மென்மை (சீதையிடம் அன்பு) சீதையின் மென்மை (அனுமன் அரக்கியரை அழிக்க வேண்டும் பொழுது அவர்களைக் காத்தல்) சூர்ப்பணகையின் மென்மை (காமத் தீ கொண்டு கரந்துவரல்) பரதனின் மென்மை (குகனைக் கண்டவுடன் அணைத்துத் தடுமாறல்) இராமனின் மென்மை (குகன் கையுரையேற்றல், இராவணனை இன்று போய் நாளைவா எனல்) முதலியவற்றைச் சுட்டி, வன்மையிலும் தீமையிலும், நன்மையிலும், கீழ்மையிலும், மென்மையினைக் கொண்டு வந்தான் கம்பன். அந்த மேன்மை காவியத்தில் செம்பொன் (29) என்று கூறுகிறார். இன்றைய அரசியலுடன் கம்பன் அரசியலை ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். தத்தி வரும் பிள்ளையிடம் அன்பு காட்டிடும் தாய்க்குலத்தார் அனைவருமே அன்னையென்ற தத்துவத்தை விளக்குவதற்கே கைகேயிக்குத் தனிப்பார்வை வீசுகிறான் இராமசாமி(56). தந்தை தந்த அரச பாரத்தை இறக்கி முகம்மலர வைத்தவள் கைகேயி. தேரை தாலாட்டும் பாடலில் கம்பனின் கருணையைக் காண்கிறார். தசரதன் கருணை - இராமன் செய்யும் செயல்கள். இராமன் கருணை - வாலியை மோட்சமடைய

செய்தது..., குகன் கருணை - இராம இலக்குவரைக் கரை சேர்த்தது, சடாயுவின் கருணை - சீதைக்காக உயிர் நீத்தது என்று கூறுகிறார். சடாயுவைத் தெய்வமாக்கியவன் கம்பன். அவையடக்கம் என்னும் கதவினைத் திறந்து கொண்டு அவனிருக்கும் ஆலயத்துள் நுழைந்து விட்டால் சுவை மிகுந்து வைத்துள்ள பிரசாதங்கள் கடச்சுடத்தான் தருகின்றான். தெவிட்டவில்லை (84) என்று பாடுகிறார்.

**741. கம்பனும் சேதுவும்** (245—248)

அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில். இராமேச்சுரம் மகாகும்பாபிஷேகச் சிறப்பு மலர். முதல் பகுதி: இரா. சேது, சூலை 1975; ரூ. 20. (பதிப்பாசிரியர்) சோமலே.

வானரங்கள் கடலில் அணை கட்டியது, அதனைக் கண்டு மகிழ்ந்தது. அச்சேதுவின் சிறப்பு முதலியவற்றைக் கம்பன் காட்டிய வழியில் கூறுகிறார். மரக்கலங்கள் கடலில் தங்கு தடையின்றிச் செல்ல இராகவன் தன் வில் நுனியால் சீறித் தள்ளிய அவ்விடவே தனுக்கோடியாகும். அத்தனுக்கோடியில் பஞ்ச பாதகர்கள் வந்து மூழ்கினாலும் அவர்கள் இருபத்தொரு பிறவியிலும் நோய் நீங்கப் பெற்றுப் பெருஞ் செல்வம் எய்தி நெடிது வாழ்வர் என்று கூறுகிறார்.

**743. கம்பன் கண்ட இராமன்**

எம். எம், இஸ்மாயில்

வானதி பதிப்பகம், தி. நகர்; சென்னை-17; மு. ப. 1976. ரூ. 7; 11+239.

தோரணவாயில் (கம்பன் அடிப்பொடி) 1—5, முத்தாரம் (ஏ. திருநாவுக்கரசு) 6—8, முகவுரை 9—11. கம்பன் கண்ட இராமன் 1—50, அடிமைக்கு உடைமையான ஆண்டான் 51—72, ஒரு பேச்சுடையான் 73—94, வாலி வதையும் தீக்குளிப்பும் 95—138, இளவலின் இங்கிதம் 139—148, கம்பன் கவிநயம் 149—179, கம்பனின் காப்பியத் தலைவி 180—239.

வால்மீகி முனிவர் தம்முடைய கேள்வியிலும் நாரத முனிவர் தம்முடைய பதிலிலும் எடுத்துக்காட்டிய குணங்களுக்கும் பண்புகளுக்கும் மேலான ஒரு மனிதனைப் பேசியும் நடந்தும் வாழ்ந்து காட்டிய முழுமுதற் பொருளே கம்பன்கண்ட இராமன் (5). இராமனுடைய ஒப்புயர்வற்ற வீரமே அந்த வீரத்தை நிகர்த்த கருணையையும், பெருந்தன்மையையும் அவனுக்குக் கொடுத்தது.(45). அன்புக்கும் அருளுக்கும் ஆதாரமாக இருப்பது விருப்பும் வெறுப்பும்சலனமும் அற்றமனநிலையே. இராமனுடைய 'இந்தமனநிலையை இரு இடங்களில் (நகர் நீங்கு: 141, திருவடி தொழுத: 115) காட்டுகிறார். களிர் இரும்பனிக்குத் தேம்பாக்கஞ்சம் ஒத்து அலர்ந்த செய்ய கண்களாக இராமனின் கண்கள் இருந்த

போதிலும், அவை மகளிர் மனத்திலே காமஉணர்ச்சி எழாவண்ணம் நஞ்சு போன்ற தன்மையுடையனவாக இருந்தன என்றே பொருள் கொள்ளவேண்டும் (57).

இராமன் அனுமனைப் பாராட்டும் இடங்களைச் சுட்டி இராமன் அனுமனைத் தழுவும் இடங்களையும் சுட்டி அவற்றின் வேறுபாடுகளையும் உயர்வினையும் சுட்டி, இதனால் தன்னை இறைவனுக்குத் தொண்டனாக அர்ப்பணித்துக் கொள்கிற பக்தனிடத்தில் இறைவனும் தன்னை அந்த பக்தனின் தொண்டனாக அர்ப்பணித்து விடுகிறான் என்னும் இறைப் பண்புதான் வெளிப்படுகிறது என்கிறார்.

நகர் நீங்கு படலம் 146ஆம் பாடலில் இராமன் நம் மன்னவன் என்னாது இராமன் அம்மன்னவன் என்று கூறுவதே இலக்குவனுக்கும் சுமித்திரைக்கும் ஒருங்கே பெருமையளிப்பதாகும். அதே பாடலில் சீதையைத் தாயார் என நினைப்பாயாக என்று கூறுவதன் மூலம் கையேயியையும் தாயாக எண்ண வேண்டும் என்ற பெருந்தன்மை வெளிப்படுகிறது.

வாலி சுக்கிரீவன் வரலாற்றைக் கேட்ட இராமன், வாலியைக் கொல்ல செய்த முடிவு, சந்தர்ப்பங்கள் உருவாக்கிய முடிவேயாகும் (111). அடைக்கலமான அங்கதனிடம் தன் வாளைக் கொடுக்கும் இராமன், 'நீ இது பொறுத்தி' என்பதற்கு வாலியைக் கொன்ற இச்செயலை மன்னிப்பாயாக என்பதே பொருளாகும் (114). அரசியற் படலம் 23, 24 முதலியவற்றால், வாலியை முறை தவறிக் கொன்ற போதிலும் இராமன் தன் தவற்றை உணர்ந்து அதனை வெளிப்படுத்தவும் செய்கிறான் என்கிறார். சீதையை, இராவணனைக் கொன்று மீட்ட ஞான்று அவளை இராமன் தூற்றியதெல்லாம் அவன் வேண்டுமென்றே சொன்ன பொய்யென்பது தெளிவாகும் (129). அக்கினியினுடைய சாட்சியினால் மாத்திரமே இராமன் சீதையைப் பழியற்றவள் என்று ஏற்றுக் கொள்கிறான் (133). சீதையைச் சமாதானப் படுத்தும் தசரதனின் கூற்றும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. இராமனின் புகழுக்கு மாசு ஊட்டுவதில் பெரிதும் இடம் பெறுவது வாலிவதை, தீக்குளிப்பு என்ற இரண்டில் தீக்குளிப்பே என்று முடிவு செய்கிறார் (138). தாடகையைக் கொன்ற இராமனிடம், பெண் என்பதால் அயோமுகியைக் கொல்லவில்லை என்று இலக்குவன் கூறுது அவளை அங்கபங்கம் படுத்தியதாகக் கூறுவது அவன் இங்கிதமாகும்.

நயம் என்னும் சொல் 'கம்பன் கவிநயம்' என்ற தொடரில் ஆளப்படும்பொழுது இனிமை, நன்மை, நுண்மை, நூற்பயன், மேம்பாடு என்ற பொருள்களில் பொருத்தமுடையதாகிறது (149). **நகர: 1, மிதிலைக் காட்சி: 23, பஞ்சவடி 1, பாயரம் 4, 1,**

இரணியன் வதை: 77. 124, முதற் போர் புரி: 249, கோலம் காண்: 12, திருவடி தொழுத: 30, தாடகை வதை: 6 முதலிய பாடல்களில் கம்பனின் கவிநயத்தினைக் காட்டுகிறார். சீதையின் கற்புக்கே சோதனை விளைத்தது அவளுடைய அழகுதான். எனவே சீதையின் கற்போடு அவளுடைய அழகையும் சேர்த்துத் தான் பார்க்கவேண்டும் (182). சீதையும் இராமனும் ஒருவருக் கொருவர் உரையாடுவதில்லை. அப்படி உரையாடும் கட்டங்கள் மகிழ்ச்சி நிறைந்தனவாக இல்லாத வெகு சில கட்டங்களே ஆகும் (198). காட்சிப்படலம் 112-ம் பாடலில் இராவணனுக்குச் சீதை கூறும் அறிவுரையில் அறிவின் வளர்ச்சி, மனோதத்துவம் அறிந்திருந்தமை காணலாம் (211).

**744. கம்பன் கண்ட சமுதாயம் (54—66)**

இலக்கிய நெஞ்சம்: மு. பி. பாலசுப்பிரமணியன், முத்து நிலையம்; ரூ. 4; மு. ப. செப். 1976.

கம்பன் கண்ட கற்பனைச் சமுதாயத்தினை அயோத்தி, இலங்கை நகர வருணனைகளில் காட்டுகிறார். குகன் படைப்பில் தீண்டாமை மடிந்து சகோதரத்துவம் பிறப்பதைக் காட்டுகிறார்.

**745. வாலிவதைப் படலம். பாடல்கள் ஒப்பாய்வு (15—25, 6—10)**

செந்தமிழ். தொகுதி 71. வை. தங்கமணி 1976.

வாலியை வீழ்த்த இராமன் எய்தகணை படலத்தின் இறுதியில் தான் இராமனிடம் வருவதாக உள்ளது. அதுவரை வாலியின் மார்பில் தான் குத்தி நின்றது, அதனைக் கை தடுத்து நிறுத்தியது என்றால், 1. ஊழிக்கால நீர்ப் பெருக்குப்போல் செந்நீர் பெருக் கெடுத்தோடியிருக்க முடியுமா? 2. இரு கரத்தாலும் பகழியைப் பற்றி முறிக்க முற்பட்டிருக்க முடியுமா? 3. சுக்கிரீவனை இருகரம் நீட்டி ஆரத்தழுவியிருக்க முடியுமா? 4. அங்கதனை ஆரப்புல்லி யிருக்க முடியுமா? 5. இருகரம் தூக்கித் தலைமேல் வைத்து இராகவனை வணங்கி இருக்க இயலுமா முதலிய வினாக்களை இக் கட்டுரையில் எழுப்பியுள்ளார்.

**746. கம்பனில் குழந்தை (280—285)**

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற கருத்தரங்கு ஆய்வுக் கோவை-தொகுதி-1. தாயம்மாள் அறவாணன், 1976.

குழந்தை என்ற சொல்லை முதன் முதல் கையாண்ட பெருமை கம்பனுக்கே உரித்து (280). நட்சத்திரம் கணித்தல் ராசி கணித்தல் குழந்தை பிறந்தவுடன் உண்டு. இரட்டைக் குழந்தைகள் பிறக்கும் செய்தியை முதலில் கூறுவது கம்ப ராமாயணம் (282). பெண் குழந்தை பிறந்தால் பெருந் துயரந் தான் என்று எண்ணி இருக்கிறார்கள் (285). (மாயாசனகப் படல

சீதை கூற்று). இராமன் முதலானோர் பிறந்து வளர்ந்ததைக் கூறுகிறார்.

**747. கம்பராமாயணத்தில் படலப்பிரிவு (231—241)**

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை. தொகுதி 1: மைசூர் இந்திய மொழிகள் மைய நிறுவனச் சார்பு வெளியீடு: 1976; நா. செயராமன்.

இராமாயணத்தில் உள்ள படலங்களை 1. இராமன் செயலாக அமைபவை, 2. அனுமன் செயலாக அமைபவை. 3. இராவணன் செயலாக அமைபவை, 4. பிற கதை மாந்தர் பெயரால் அமைபவை, 5. காப்பிய வருணனையாக அமைபவை, 6. கதைப் போக்கைக் கூறுபவை. 7. பிற பொருள்கள் பெயரால் அமைபவை என வகைப்படுத்துகிறார். இவைகளை மேலும் வகைப் படுத்துகிறார். சுந்தர காண்டத்தில் காப்பியத் தலைவன் வருகை இல்லாத குறையைப் போக்க அவனது அரும் பண்புகளைச் சீதையின் நினைவோட்டத்திலும் அவனது வடிவழகை அனுமன் கூற்றிலும் வைத்துப் பேசுகிறார் கம்பர் (235).

இராவணன் செயல்களுள், அவன் சீதையைத் தூக்கிச் சென்ற செயலைத் தனியே படலமாக அமைக்காது மாரீசன் வதைப் படலத்துள்ளேயே கூறியிருப்பது கம்பர் அதனைத் தனியே வீதந்தோத விரும்பவில்லை என்பதனையே காட்டுகிறது (235). சங்க அக இலக்கிய மரபுக்கேற்ப கார்காலத்தின் பின்னணியில் பிரிவுத் துயரைக் காட்டுகிறார் கம்பர் (238). துந்துபிப் படலமும் அயோமுகிப் படலமும் இலக்குவன் பெருமையைக் கூறுவதற்காகக் கம்பரால் தனிப்படலங்களாக விவரித்துக் கூறப் பட்டனவாகும். இராஜம் பதிப்பில் 127 படலங்களும், வை. மு. கோ., உ. வே. சா. பதிப்புகளில் 116 படலங்களும் உள்ளன.

**748. இராமாயணத் தும்பைப்போர் (252—256)**

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற எட்டாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை. தொகுதி - 1; தே. சொக்கலிங்கம்.

கம்பர் இராம இராவணப் போரைத்தான் தமிழ்ப் புறப் பொருள் நெறியில் பாடினார் (253); இராவணனை அழிப்பதே குறிக்கோளாகையால் இராமன் அடையாளப்பூ, போர்ப்பூ, சமயப்பூ என மூவகைப் பூக்களும் சூடி வருகிறார். இறுதிப் போரில் இராவணன் மட்டுமே தும்பை அணிய இராமன் அணிந்ததாகக் குறிப்பில்லை. இப்போர் தும்பைப் போராதலின் அத்திணைக்குரிய பல துறைகள் யுத்த காண்டத்தில் வருதலைக் காணலாம். வெருவருநிலை (8532), தூசிநிலை (8537), படையறுத்துப் பாழி கொள்ளும் ஏமம் (8704, 8705) எருமை மரம் (7185). தானை

நிலை, யானை நிலை, குதிரை நிலை, தேர் நிலை (7613—7616, 7719—7722) முதலிய தும்பைத் துறைகள் உளதாகக் காட்டுகிறார்.

**749. கம்பராமாயணத் தொடக்கம் பற்றிய ஓர் ஆராய்ச்சி (80—82)**
*செந்தமிழ்ச் செல்வி: தொகுதி-51 (1976—1977); கு. திருமேனி.*

வான்மீகி இராமாயணத்தோடு கம்ப ராமாயணத்தை ஒத்தும் உறழ்ந்தும் கண்டபோது அவை இரண்டிற்கும் உள்ள ஒற்றுமைகளைக் காட்டிலும் வேற்றுமைகளே மிகுதியாக உள்ளன (80). இராமன் சோழ மரபில் வந்துள்ள திருமால் வடிவிலுள்ள பரம்பொருள் என்பதைத் தெளிவாகத் தெரிந்துள்ளார் கம்பர். இராமனைப் பற்றியும் அவனது மரபு வழி, வாழ்க்கை நெறிமுறைகளைப் பற்றியும் கூறும் வைணவப் புராணங்களிலுள்ள நிகழ்ச்சிகளை அப்படியே ஒத்துள்ளனவாகக் கம்ப ராமாயண நிகழ்ச்சிகள் அமைந்துள்ளனவேயன்றி வான்மீகி இராமாயணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன போன்றவல்ல. இவையும் திவ்வியப் பிரபந்தமும், வான்மீகிக்கு முன்பிருந்த தமிழ்ச் சான்றோர் எழுதிய இராமாயணக் கதைகளுமே கம்பருக்கு உதவியிருக்கின்றன என்பது வெளிப்படை. அத்தியாத்ம இராமாயணம், ஆனந்த ராமாயணம், வாசிஷ்ட ராமாயணம், அற்புத ராமாயணம் போன்றவை வான்மீகருக்கு முந்தியவை. அவற்றின் துணை கொண்டே கம்பர் தம் காவியத்தை இயற்றியுள்ளார்.

சங்கப் புலவர்கள், இளங்கோ அடிகள், திருத்தக்கதேவர், வைணவ ஆழ்வார்கள் போன்ற ஆய்ந்தவிந்து அடங்கிய சான்றோர்கள் போற்றிப் பரவிய இராமனின் தெய்வீகத் தன்மையை வான்மீகி அலட்சியப்படுத்திவிட்டதால் அவர்களின் கருத்துகளை அடியொற்றிப் பாடி இராமனைத் தெய்வமாக்கியுள்ளார் தம் இராமகாதையில் கம்பர் (81). ஆரியர் என்ற ஒரு சொல்லைக் கம்பர் பயன்படுத்தியுள்ளார். எனினும் அது குறிப்பிட்ட எந்த ஓர் இனத்தையும் குறிப்பிடுவதாகாது. ஏனெனில் அக்காலத்தில் அப்படியொரு சாதிப் பாகுபாடு இல்லை. சான்றோன் அல்லது பேரறிவாளன் என்ற பொருளிலேயே அச்சொல்லைக் கையாண்டுள்ளமை இராமன், இராவணன் ஆகிய இருவருக்குமே அவர்களின் உயர்தனிச் செம்மையைக் காட்டுவதற்காக அச்சொல்லை அடைமொழியாக வைத்துப் பாடியுள்ளமையால் அறியக் கிடக்கின்றது (81).

நீதி நெறிகளுக்குத் திருக்குறளையும், நாட்டு நடப்பு, காதல், வீரம், வாழ்க்கைமுறை, இன்பதுன்ப நிகழ்ச்சிகள் ஆகியவற்றிற்குச் சங்க இலக்கியங்களையும், பாத்திரப் படைப்புகள், தத்துவக் கருத்துகள், கற்பனை, உவமை, கடவுள் பரம்பொருள் தன்மை ஆகியவற்றை விளக்கச் சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணியையும்

தேவாரம், திவ்வியப் பிரபந்தம் ஆகிய தெய்வீக நூல்களையும் துணையாகக்கொண்டே தம் காவியத் தலைவனுகிய இராமனை உலகின் எல்லா மதத்தினரும் போற்றி வணங்கத்தக்க ஒரே பரம் பொருளாக அமைத்துக் காட்டுகின்ருர் கம்பர்.

750. **கம்பரின் புறத்துறை - மகளிர்** (298 – 302)

*இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஒன்பதாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை; தொகுதி-1; தே. சொக்க லிங்கம்; 1977.*

*கம்பர் தன் காப்பியத்தில் வரும் தும்பைப் போர் நிகழ்ச்சி களில் பெண்கள் தோன்றுவதைப் பாடினுர்(298). போர்க்களத் திற்கு வரும் அரக்கியர் எல்லாம் கணவனைத் தேடும் காரிகையரே அன்றி மக்களைத் தேடும் தாயர் எவருமிலர். மண்டோதரியும், தானிய மாலியுமே விதிவிலக்கு. இத்தகு காட்சிகளைக் கம்பர் எல்லாப் படலங்களிலும் அமைக்கவில்லை. தன்னுயிர் வேட்டல், (அனந்தம் நூருயிரம், தரங்கநீர் வேலையில், தாவில் வெஞ்செரு, ஓடினுர் உயிர்கள் நாடு), தலையொடு முடிதல் (கண் திறந்தன). சிருங்கார நிலை (வெங்கணை திறந்த) முதலிய துறைகளைக் காட்டுகிருர். இராமன் பக்கத்தில் சீதையின் கையறுநிலை மட்டுமே (சீதை களங்காண் படலம்) காட்டுவதால் சிறப்பு பெறுகிறது. கம்பர், போர்க் களங்களில் காப்பிய அமைப்புக் கருதிப் பெண்கள் வருவதாக அமைத்துள்ளார்(302).*

751. **கம்பன் கவிதை** தொகுதி-2

*நவயுகப் பிரசுராலயம்: ஜி. டி. மதராஸ், 151-280 ரூ. 1-50*

*பாட்டு சி. தேசிக விநாயகம் பிள்ளை 151). மிதிலைக் காட்சி (ரா. பி. சேதுப்பிள்ளை 153-161) கோசலையின் உள்ளம் (மு: அருணைசலம் 162-168) கம்பராமாயணத்துள் ஒரு செய்யுட்குக் கூறப் படும் சிறப்புப் பொருள் (வை. மு. கோ. 169-172), பரதனும் குகனும் (ஊ. சா. வேங்கட ராமையா 173-182) இலக்குவன் சீற்றம் (ரா. ஸ்ரீ. தேசிகர் 183-192) கம்பனின் நாடகத் தன்மை (ஏ. வி. சுப்பிரமணிய ஐயர் 142-207) இராம பிரானது மறக் கருணை (மு. இராகவையங்கார் 208-216) கவிகளும் கும்பகருண னும் (பெ. நா. அப்புஸ்வாமி ஐயர் 217-258) மாயாசனகன் (அ.நா. மகாபூஷணம் 259-278) அனுபந்தம் 279-280 (சிறையின் எய்திய செல்வி)*

*இராமனும் சீதையும் மிதிலையில் பார்த்துக் காதல் கொண்டு மணம்புரிந்த நிகழ்ச்சியினைக் காட்டுகிருர் ரா. பி. சேதுப்பிள்ளை. கைகேயியின் கைம்மைக் கோலத்தைக் கண்ட கோசலைக்கு அவள் கொண்டிருந்த துயரமும் மறைந்து இரக்கம் உண்டாகிறது.*

(வடித்தாய் கூந்தல் கேகயன் மாதே!) 'அருப்பேந்திய கலசத் துணை யமுதேந்திய' என்னும் பாடலில் கருப்பேந்திரம் என்பதற்குச் சிங்கத்தை உண்ண வல்லதொரு விலங்கு எனக்கொண்டு, இவற்றைப் பார்த்தவிடத்தும் சீதை அஞ்சாது இராமன் உடன் இருப்பதால் விளையாடிக் கொண்டு சென்றாள் என்று கூறுகிறார் வை. மு. கோ. அடுத்த கட்டுரையில் பரதனும் குகனும் சந்திக்கும் நிகழ்ச்சியை முதநூலாசிரியரும் வழி நூலாசிரியரும் அமைத்துள்ள விதத்தினைச் சுட்டி, வேறுபாட்டைக் காட்டி, கம்பரின் சிறப்பினை நவில்கிறார் ரா. ஸ்ரீ. தேசிகர். கிட்கிந்தைப் படல நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு வால்மீகியுடன் வேறுபடுவதைக்காட்டுகிறார். நிந்தனை, உருக்காட்டுப் படலங்கள் நாடகத் தன்மையில் அமைந்துள்ளமாற்றை எடுத்தியம்பி வான்மீகியுடன் வேறுபடுவதை நவில்கிறார் ஏ. வி. சுப்பிரமணிய ஐயர். இராமன் 'இன்று போய் நாளை வா'வென இராவணனைக் கூறுவதை அவனின் மறக்கருணையாகக் காட்டுகிறார் ஆசிரியர். பாட்டிகதை, இராமோதந்தம் (வடமொழி) சம்பூரணராமாயணம், ரகுவம்சம், மகாபாரதம், வான்மீகி இராமாயணம் ஆகியவற்றில் கூறப்படும் கும்பகருணன் பற்றிக் கூறும் ஆசிரியர் தமிழில் உத்தரகாண்டத்தில் கூறப்படும் கும்பகருணன் பிறப்பையும் கூறி கம்பராமாயணத்தில் அவன் ஏற்றுள்ள பங்கை விவரிக்கிறார். தீமை செய்த இராவணனிடத்தும், சுற்றத்தை நாடும் விபீடணனிடத்தும் ஒரே மாதிரியான அன்பு கொண்டிருந்தது அவனது சிறந்த தெய்வீகத் தன்மையென்று குறிப்பிடுகிறார். கம்பனின் அற்புத சிருஷ்டியான மாயா சனகனை அடுத்த கட்டுரை நயம்பட நவில்கிறது. அனுபந்தத்தில் மிதிலைச் செல்விக்கும், சிறையிருந்த செல்விக்கும் இடையே உள்ள உடல் வேறுபாட்டைக் காட்டுகிறார்.

## 752. பின்னூல்களில் இல்வாழ்க்கை—கம்பராமாயணம் (90-97)

*இல்வாழ்க்கை— மா. இராசமாணிக்கனார்*

நன்மக்கட் பேறு அவசியம். கணவனும் மனைவியும் சிறந்த குணங்கள் செயல்கள் கொண்டவர்கள். (பட்டம்கட்ட நினைக்கும் போது இராமன் சீதையைப் புகழ்தல்) பிரிவு பொறுதவர் (இராமன், சீதை துயர்) பிறர் பாராட்டும்படி மனைவியின் மாண்பு வேண்டும் (அனுமன் சீதையைப் புகழ்தல்) தாரை இல்வாழ்க்கையை அவளது புலம்பல் மூலம் காட்டுகிறார். இராவணனை எச்சரித்து அவன் உயிர் விட்ட போது தானும் விட்டது மண்டோதரியின் மாண்பு. பிறன் மனைவியை விரும்பக்கூடாது என்பதற்கு இராவணனும், தவறான ஒழுக்கத்தைக் கற்புடை மனைவி கண்டிப்பாள் என்பதற்கு மண்டோதரியும் சான்று.

**753. கம்பனைத் துய்க்கும் முறை (82—94)**

பாஞ்சாலி சபதம் முதலிய கட்டுரைகள்: பொ. திரிகூடசுந்தரம் எம்.ஏ., பி.எல்., காந்திநிலையம், தியாகராய நகர், சென்னை.

கல்வியிற் பெரியவன் கம்பன் என்று கூறி மகிழ்வதை விட கல்வியிற் பெரியவன் கம்பன் என்று உணர்ந்து மகிழ்வது அவசியம்(87). கம்பனை நாமாகத் துய்க்க ஆரம்பிக்கு முன் ஆராய்ச்சிகளைக் கையில் எடுத்தல் கூடவே கூடாது(89). ஆரம்பத்தில் எந்த இடத்தில் விருப்பமோ அந்த இடத்தைப் படிக்கலாம். கம்பனைத் துய்க்க விரும்புவோர் காட்சிகளைப் படித்தலே அவசியம். அவன் உணர்த்த விரும்பும் உணர்வோடு கவியின்பத்தையும் அதனால் அடையலாம்(92). பின் பல படலங்களையும் காண்டங்களையும் ஒன்று சேர்த்துப் படித்து ராமாயணத்தின் கட்டுக் கோப்பு முழுமையையும் கண்டு ஆனந்திக்கலாம்.

**754. கம்ப சித்திரம் - சுந்தர காண்டம்**

பி. ஸ்ரீ.

நவபாரதி பிரசுராலயம் லிமிடெட். திருநெல்வேலி, சென்னை 8+440

கடல்தாவும் ஹனுமானில் ஆரம்பித்து சௌந்தரிய சிகரம் முடிய 29 தலைப்புகளில் நூலை அமைத்துள்ளார். இறுதியில் செய்யுளகராதியுமுண்டு. சீதையின் குண சௌந்திரியத்தை லட்சியமாக வெளியிடுகிறது கம்பனது சுந்தர காண்டம். சுந்தர காண்டத்தின் கதையை இடையிடையே கம்பரின் பாடல்களைக் கொடுத்து அவற்றைச் சிறப்புற விளக்கிச் செல்கிறார். கம்பரின் கவிநயத்தையும் ஆசிரியரின் சொல் வன்மையையும் புலப்படுத்துவதாக அவை அமைகின்றன. ஆங்காங்கே தன் கருத்துகளையும் இணைத்துச் சொல்லி வருவது மேலும் சிறப்பாயமைந்துள்ளது. சான்று: கடல் தாண்ட மகேந்திர மலைமீது நின்ற அனுமன் பேருருவில் தனது லட்சியத்தைக் கண்டதுபோல நாமும் மனக் கண்ணிலாவது நமது லட்சியத்தைப் பார்த்து உத்ஸாகத்தோடு முயற்சி செய்ய வேண்டுமென்பது படிப்பினை. அபாரமான தன்னம்பிக்கை சூட்சும உலகில் நமக்கும் விசுவரூபத்தை அளித்து விடுகிறது(6). சில இடங்களில் பாடல்களுக்குப் பதவுரை மட்டுமே கூறியுள்ளார். மொத்தம் 266 பாடல்கள் இந்நூலுள் எடுத்தாளப் பட்டுள்ளன.

**755. கம்பனும் டி. கே. சியும்**

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

கம்பன் கழகம், காரைக்குடி.

கம்பன் நலத்தை டி. கே. சி பிறரறிய உணர்த்தியமை, செருகு கவிகளைக் கண்ட விதம், பாடல்களைத் திருத்தியமை

ஆகியன பற்றிக் கூறுகிருர். தனிப்பாடல்களில் உள்ள 'காரென்று பேர் படைத்தாய்' எனும், காளமேகப் புலவர் பாடியதாக உள்ள பாடலை அதன் எளிமை நோக்கிக் கம்பர் பாடியதாகக் கூறுவர் டி. கே. சி.(15) என்று நவில்கிருர்.

**756. சொல்லினுல் சொலக் கற்றிலம் யாம்** (35 –38)

*நாம்ஆர்க்கும் குடியல்லோம்:* ராய. சொ. பாரதி பிக்ஸர் பேலஸ், காரைக்குடி; ரூ. 1

போர்க்களத்தில் கும்பகர்ணனுக்கும், இலக்குவனுக்கும் நடந்த உரையாடலைக் கூறுகிருர்.

**757. கம்பநாடகம்** (58—73)

*நீங்களும் சுவையுங்கள்:* தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர்

சிலம்பின் எதிரொலிகளைக் கம்பராமாயணத்தில் முழுதும் கேட்கலாம்(6). பாவைக் கூத்திற்கு இராமாயணம் உயிர்நிலையாக இருந்து வந்தது(63). சென்னைநாட்டினைச் சேர்ந்த மலையாள மாவட்டத்தில் உள்ள மக்கள் பத்திரகாளியோடு கம்பராமாயணம் நெருங்கிய தொடர்பு கொண்டது எனநம்பி வருகின்றனர். மலையாள நாட்டில் வழங்கும் கதையின் மூலமாகக் கம்பனைச் சிவபெருமானுக அவர்கள் போற்றிய பெருமையைக் காண்கிரும் (65). அங்குக் கம்பராமாயணம் மூன்றுவகையாக வழங்கி வருகிறது. பாவைக் கூத்து பற்றி, கம்பனைத் தொடர்புபடுத்திச் சிறிது விளக்குகிருர்.

**758. கம்பரும் சேக்கிழாரும்** (447—462)

*கவிதையும் வாழ்க்கையும்* அ. மு. ப.

*தமிழ்க்கலைப் பதிப்பகம்; சென்னை–30; விற்பனை உரிமை—பாரி நிலையம்; ரூ. 7*

குரங்கை. வேடனைச் சகோதரனுகவும், பறவையைத் தந்தையாகவும் ராமன் கொள்வதாகக் கம்பன் காட்டுவது உயிர்த் தத்துவத்தின் அடிப்படைக் காட்சி(452). அனுமனைச் சொல்லின் செல்வனுக்கிக் காட்டுவது குரங்குகளின் உயிர்த்தோற்ற வளர்ச்சியின் எல்லையே மனிதவாழ்வு என்பதைக் குறிக்கிறது(453). நெஞ்சினுல் பிழைப்பிலாளை அழைத்திடுக என்று கௌதமனுக்கு இராமன் ஆணையிடுவது வழுக்கி விழுந்தாரை வாழவைக்கக் கம்பன் கடைப்பிடித்த நெறியென இவற்றை நாம் கம்பனில் காணும் வாழ்வியலாகக் காட்டுகிருர். பிற்பகுதியில் சேக்கிழார் பற்றிக் கூறுகிருர்.

**759. Kaban and his epic** (77—78)

Tamil litrature: A. S. R.; Published by Tamil Writers Association, Calcutta

The study of his epic is, The last reward of consummated scholarship, with a remarkable knowledge of human nature, an unfailing sense of the dramatic, a keen mind reaching out towards profound truths with case and precision, and adiction rich and multitoned, Kamban has created a spacious poem and while expressing through it the highest achievements of the Tamil people has at the same time tried to probe and present the mystery of humanlife(77). Valmiki raised a man to the skies; Kamban captured with his matchless Poetry ineffable that came down to the earth,

**760. Social Philosophy of Kampan.***
N. Gopal; Ph. D. Thesis; Madras University

**761. கம்பன் பிள்ளைத்தமிழ்** (கவிதை)

நா. கனகராஜய்யர்

கம்பன் கழகம்; காரைக்குடி; 72

பதிப்புரை: சா. கணேசன்; கம்பன் சொற்களைக் கொண்டும் கம்பன் காட்டும் காவிய நிகழ்ச்சிகளைக் கொண்டும் எளியநடையில் அவன் கருத்துகளை இப்பிள்ளைத் தமிழில் வைத்துப்பாடுகிறார். இனிய நடையிலமைந்துள்ளது.

**762. A note on R. K. Narayan's translations of Kamba Ramayanam** (330—333)

ஏழாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை—(தொகுதி): N. Radhakrishnan, நாகர்கோவில் தென் திருவிதாங்கூர் இந்துக்கல்லூரித் தமிழ்த்துறை சார்பு வெளியீடு 1975 விலை ரூ. 18.

Narayan has not much deviation from his original. Narayan's Ramayana has 14 sections. Like Kamban Narayan also begins his narrative with a description of the land in which the story is set. But the essential difference that comes to the mind of a reader is that even a successful novelist like Narayan fails to recaptures the melody and richness of the poetry of Kamban. It is not encoveraging at all for a novelist who enjoys international reputation and certainly Narayan has not succeeded in his attempt to recreate one of the most popular epics of his country. He quotes 4 verses from Kamban and Narayan's translations.

# பிற்சேர்க்கை


1 அவளா இவள் (94-110)
தமிழ்ச் சுவை; வலம்புரி அண்ணாமலை; இன்பநிலையம்; மயிலாப்பூர்; சென்னை - 4; மு. ப. அக் 1961; ரூ. 2.

2 இயற்கைப் புலவர் கம்பர் (309-310; 346-350)
தமிழ்ப் பொழில்; கே. சோமசுந்தரம், 1973-1974

3 இராமாயணத்தில் ஊழிச் சந்திப்பு (112-116)
இலக்கியச் சிந்தனைகள், செ. வைத்தியலிங்கம்,
அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு, மு. ப. நவ 1973

4 இளைய செம்மல் (113-115)
வாழ்வும் இலக்கியமும், க. த. திருநாவுக்கரசு, மணியகம்,
கோட்டூர்த் தோட்டம். சென்னை - 18, மு. ப. டிச 1977
ரூ. 4-75

5 கம்பர் (45-48)
கட்டுரைத் தொகுதி, சருக்கை, இராமசாமி ஐயங்கார்,
சென்னை சென்ட்ரல் புக் டிபோ. 1901

6 கம்பர் உவமக் கவின் (387-397, 539-547)
தமிழ்ப்பொழில் தொகுதி - 7, ஆர். பி. அமிர்தலிங்கம் பிள்ளை
1931 - 32, (முற்றுப்பெறவில்லை)

7 கம்பர் கவிநயம் (1-9)
தமிழ்ப் பொழில்-தொகுதி 15,
வே. வேங்கடராசலு ரெட்டியார் 1939-40

8 கம்பர் வளர்ந்த வரலாறு (52-59)
சான்றோரின் சாதனைகள், ம. பொ. சிவஞானம்.

9 கம்பராமாயணக் கௌஸ்துப மணிமாலை (59-62)
செந்தமிழ்-தொகுதி 30, கே. என். சிவராஜபிள்ளை, 1932

10 கம்பராமாயணப் பதிப்பும் நிலைமையும் (124-, 137-)
தமிழ்ப்பொழில்-தொகுதி 30, நீ. கந்தசாமி, 1950

11 கம்பராமாயணம் (223-260)
தமிழ் இலக்கியக் கொள்கை-1, த. வே. வீரசாமி. உலகத்
தமிழாராய்ச்சி நிறுவனம், அடையாறு, சென்னை, 1975,
ரூ. 10

12 கம்பராமாயணம் (186-245)
இலக்கியங்களில் இனவுணர்ச்சி, ம. பொ. சிவஞானம்,
இன்ப நிலையம், மயிலாப்பூர், மு. ப. அக். 1976, ரூ. 15

13 கம்பரின் இனப்பற்று (21-30)
சான்றோரின் சாதனைகள், ம. பொ. சிவஞானம், பூங்கொடிப் பதிப்பகம், 34. வி. எஸ். வி. கோயில் தெரு, மயிலை.
மு. ப. செப். 1970, இ. ப. ஆக. 1973.

14 கம்பரின் வீரச் சுவை (11-18)
தமிழ்ப் பொழில், கே. சோமசுந்தரம், 1973-1974

15 கம்பரும் உடல் வனப்பும் (196-199)
தமிழ்ப் பொழில்-தொகுதி 16; தி. கு. சுதம்பரநாத முதலியார் 1940-41

16 கம்பரும் சபிப்பார் (38-44)
சான்றோரின் சாதனைகள்; ம. பொ. சிவஞானம்

17 கம்பரும் மக்கள் இயல்பும். (385-389)
தமிழ்ப்பொழில்-தொகுதி 15, டி. கே. சி; 1939-40

18 கம்பரும் மக்களுள்ளமும் (161-164)
தமிழ்ப்பொழில் - தொகுதி 2, நீ. க; 1926-27 (முற்றுப் பெறவில்லை)

19 கம்பரும் வான்மீகியும் (117-120)
இலக்கியச் - சிந்தனைகள்,
ப. சீ. இராமானுசாச்சாரி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

20 கம்பன் கற்பனை
டாக்டர். ச. வே. சுப்பிரமணியன், தமிழ்ப்பதிப்பகம்,
மே. 1978

21 கம்பன் கற்பனைத் திறன் (121-122)
இலக்கியச் சிந்தனைகள், க. இராமச்சந்திரன், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

22 கம்பன் காவியம் உதயம் (56) (கவிதை)
லண்டன் தமிழ்ச்சங்க ஆண்டுமலர், சங்கர், 1975-1976

23 கம்பன் நூலில் சில ஐயங்கள் (255-258)
தமிழ்ப் பொழில், பி. மா. சோமசுந்தர முதலியார், 1974-1975

24 காகுத்தன் கணை (16-19)
இலக்கிய இன்பம், ஞான வைத்தியநாதன், வைரம் பதிப்பகம், 5, பெல்சுரோடு, திருவல்லிக்கேணி, சென்னை,
மு. ப. அக். 1977, ரூ. 3

25 காரைக்குடி கம்பர் விழாவில் நிகழ்த்திய தலைமையுரை (353-380)
செந்தமிழ், மு. இராகவையங்கார், அக் - நவ 1955,

26 கிட்கிந்தா காண்டக்கதைப் போக்கு (77-79)
பங்களூர்த் தமிழ்ச் சங்க வெள்ளிவிழா மலர், இ. கி. இராம

